# தமிழர் சால்பு


பேராசிரியர்

டாக்டர் சு. வித்தியானந்தன்



பாரி புத்தகப் பண்ணை

576, பைகிராப்ட்ஸ் ரோடு,

திருவல்லிக்கேணி, சென்னை-5

# தமிழர் சால்பு

(சங்க காலம்)

பேராசிரியர்

சு. வித்தியானந்தன், *M.A., Ph. D.,*

தமிழ்த்துறைத் தலைவர்,

இலங்கைப் பல்கலைக் கழகம்,

பேராதனை.



**பாரி புத்தகப் பண்ணை**

576, பைகிராப்ட்ஸ் ரோடு,

திருவல்லிக்கேணி, சென்னை-5.

# முன்னுரை

சங்ககாலத் தமிழரின் சால்பினைக்கூற எழுந்தது இந் நூல். சங்கம் என்ற சொல்லின் பொருள் யாது என்பதை யும், சங்கநூல்கள் எனக் கொள்ளத்தக்கவை யாவை என்பதையும் இந்நூலிலுள்ள தோற்றுவாய் எடுத்துக் கூறும். சங்கநூல்கள் தோன்றிய காலத்தில் தமிழ் நாட்டில் ஆண்ட சோழ, சேர, பாண்டிய அரசரின் வரலாற்றைச் சுருக்கி முதலாம் இயலிற் கூறியுள்ளோம். அவ்வரசர் ஆட்சிக் காலத்தை வரையறுத்து, அவர் கி. மு. முதலாம் நூற்றுண்டு தொடங்கி கி. பி. மூன்றும் நூற்றுண்டின் முற்பகுதிவரை ஆண்டனர் என்பதை இரண்டாம் இயலில் நிறுவியுள்ளோம். அடுத்ததாகக் கூறப்படுவது அரசியலமைப்பு. திருக்குறள், சிலப்பதிகாரம் ஆகிய இருநூல்களைக் கொண்டே இதுவரை ஆராய்ச்சியாளர் சங்ககால அரசியலைப்பற்றி ஆராய்ந்தனர். இவ்விரு நூல்களும் பிற்காலத்தன. சங்கநூல்கள் சித்திரிக்கும் அரசியலமைப்பு இவற்றிற் காணப்படுவதினும் வேறுபட்டது. இவை யாவற்றையும் தெளிவுபடுத்தி அக்கால அரசியலை இயன்ற அளவு மூன்றும் இயலில் விளக்கியுள்ளோம்.

இயற்கையாகவே மறப்பண்பு படைத்த பண்டைத் தமிழரின் போர்முறை முதலியவற்றைப்பற்றிய செய்திகள் நான்காம் இயலில் இடம்பெற்றுள்ளன. சில ஆரியத் தெய்வங்களும் வேத யாகங்களும் சங்கநூல்களிற் குறிக்கப் பட்டமையை ஆதாரமாகக்கொண்டு சங்ககாலத்திலேயே தமிழரிடையே ஆரியச்சமயம் வேரூன்றியிருந்ததென அறிஞர் சிலர் கொள்வர். இது தப்பான கொள்கையென்பதனையும், தமிழருக்கே சிறப்பாக உரிய வழிபாட்டு முறைகள் பல அக் காலத்தில் இருந்தன என்பதையும் ஐந்தாம் இயல் விளக்கு கின்றது.

தமிழர் வழிபட்ட தெய்வங்களைப் பற்றிய வரலாற்றினைக் கொண்டது தெய்வங்கள் எனப் பெயரிய இயல். சங்க காலத்தில் வாழ்ந்த அந்தணர் முனிவர் முதலியோரைப் பற்றியும், நகர மக்களிடையே இடம் பெற்ற ஆரிய நம்பிக்கைகளைப் பற்றியும் அடுத்த இயல் கூறுகின்றது. அக்கால மக்களின் சமய வாழ்விலே சமண பௌத்தரின் செல்வாக்கு மிகவும் குறைவாகவே இருந்தது. இதனை எட்டாம் இயல் கூறுகின்றது. பண்டைத்தமிழர் சமய வாழ்க்கை தன்னலம் கருதாச் சேவையை அடிப்படையாகக் கொண்டு திகழ்ந்தது. இதனை விளக்குவதாக உள்ளது ஒன்பதாம் இயல். தமிழ்மக்களிடையே பரவியிருந்த நம்பிக்கைகள் சிலவற்றைப் பத்தாம் இயல் கூறுகின்றது.

சமூக அமைப்பினை ஆராயுமிடத்துப் பழந்தமிழர் சமுதாயத்திற் பிற்காலத்திற்போலச் சாதிப்பிரிவு இருக்க வில்லை என்பது புலனாகும். மக்கட் பாகுபாடு நில இயற்கை யையும் தொழிற் பண்பையும் அடிப்படையாகக்கொண்டே எழுந்தது. நில இயற்கைக்கு இயைய அமைந்த மக்கட் பாகுபாட்டைப் பதினோராம் இயல் கூறுபடுத்தி விளக்கு கின்றது. அடுத்த இயலில் மக்கள் தொழிலும் வணிகமும் இடம்பெறுகின்றன. இவ்வியலிற் பண்டைத் தமிழரின் வணிகத்தைப்பற்றிய விரிவான வரலாறு அடங்கியுள்ளது. பெண்களைப்பற்றிய இயலிற் சமுதாயத்தில் அவர்கள் அடைந்திருந்த நிலை, அவர்களின் பொழுதுபோக்கு, அவர்கள் அணிந்த ஆடை, அணி முதலியவற்றைப்பற்றிய செய்திகள் இடம்பெறுகின்றன. தமிழருக்குச் சிறப்பாக உரிய மண வினைகளே அக்காலத்தில் வழக்கில் இருந்தன. மணம்புரிந்த ஆணும் பெண்ணும் நடத்திய இல்லற வாழ்க்கை அன்பையே அடிப்படையாகக்கொண்டு திகழ்ந்தது. இவற்றையும் இவ் வியல் எடுத்து விளக்குகின்றது.

கடைசி இயலாகிய பதினான்காம் இயல் கல்வியும் கலைகளும் பற்றியது. நுண்பெருங் கலையாகிய வானநூல் அக் காலத்தில் ஒப்புயர்வற்ற நிலையில் இருந்தது. ஓவியக்கலையும்

சிற்பக்கலையும் நடனமும் இசையும் அதிக வளர்ச்சியுற்றிருந்தன. இவற்றை இவ்வியல் கூறுகின்றது. யாழ்க் கருவியின் உறுப்புக்களைப்பற்றிய குறிப்புக்கள் இவ்வியலில் அடங்கியுள்ளன. இலக்கியக் கலையைப்பற்றிக் கூறுமிடத்துச் சங்க இலக்கியம் வடமொழி இலக்கியத்திலிருந்து முற்றிலும் மாறுபட்டதென்று நிறுவப்பட்டுள்ளது. பொருளிலும் அமைப்பிலும் யாப்பமைதியிலும் சங்க இலக்கியம் தனிப் பண்புடன் விளங்கும் என்பதை இவ்வியலின் இறுதிப் பகுதி தெளிவாகக் காட்டுகின்றது.

இந்நூலுக்குரிய கையெழுத்துப்படி முழுவதையும் உள்ளன்போடு படித்துப் பல திருத்தங்கள் செய்து உதவிய பேராசிரியர் க. கணபதிப்பிள்ளை அவர்களுக்கு நான் என்றும் கடமைப்பட்டுள்ளேன். நண்பர் பலர் படி எழுதித் தந்தும் ஆயோலை தூக்கியும் உதவி புரிந்தனர். அவர் உதவி என்றும் மறத்தற்பாலதன்று.

நான் எழுதிய இலக்கியத் தென்றலை வெளியிட்ட தமிழ் மன்றத்தாரே இதனையும் வெளியிடுகின்றனர். அவர்களுக்கு எனது நன்றி உரியதாகுக.

இந்நூலினை நல்ல முறையில் விரைவில் அச்சிட்டுதவிய சாரதா விலாஸ அச்சகத்தார்க்கும் எனது உளம் நிறைந்த நன்றி.

இலங்கை,<br>பல்கலைக் கழகம்,<br>1—1—1954.

சு. வித்தியானந்தன்.

———

# இரண்டாம் பதிப்பு முன்னுரை

இந்நூலின் இரண்டாம் பதிப்பு சிற்சில திருத்தங்களுடன் இப்பொழுது வெளி வருகின்றது. நூலைச் செம்மையாக அமைப்பதற்கு ஆலோசனை கூறிய அன்பர்களுக்குப் பெரிதும் கடமைப்பட்டுள்ளோம். முதற் பதிப்பு வெளிவந்த காலத்திற் பத்திரிகைகள் பல மதிப்புரைகள் வழங்கின. ஈழத்திலும் தமிழகத்திலும் பிற நாட்டிலுமுள்ள அறிஞர் பலர் பாராட்டுரைகள் வழங்கினர். யாவருக்கும் எமது நன்றி உரித்தாகுக.

இரண்டாம் பதிப்பினை வெளியிட எம்மைத் தூண்டி, அதனை மிகக் குறுகிய காலத்திற் சிறந்த முறையில் அச்சிட்டுதவிய சென்னைத் தமிழ் புத்தகாலய உரிமையாளர் திரு. கே. என். முத்தையா அவர்களுக்கு நாம் பெரிதும் கடமைப்பட்டுள்ளோம்.

இலங்கைப் பல்கலைக் கழகம்,
பேராதனை, இலங்கை.
14—1—1971.

சு. வித்தியானந்தன்.

———

என் அருமைத் தந்தையார்

வழக்கறிஞர்

திரு. சி. சுப்பிரமணியம் அவர்களின்

அன்பார்ந்த நினைவுக்கு.

# பதிப்பாளர் உரை



புகழ் தரக்கூடிய செயலாயின் தம் உயிரையும் கொடுப்பவர் தமிழர். பழி ஈட்டக்கூடியதொன்ருயின் அதனுல் உலகம் முழுவதும் பெற முடியுமெனினும் அத் தொழிலை ஏற்றுக்கொள்ளமாட்டார் அவர். தமக்கென முயலாது பிறர்க்கென முயல்பவர் தமிழர். மக்கள் இனம் முழுவதும் நலம் பெறவேண்டும், அனைவரும் இன்புற்று வாழவேண்டுமென்ற கொள்கை படைத்தவர் தமிழர். இத்தகைய தமிழரின் சங்ககாலப் பண்பாட்டினை எடுத்து விளக்குவது 'தமிழர் சால்பு.'

எந்தப் பொருளை எவரிடத்துக் கேட்பினும் அப் பொருளின் மெய்ப் பொருளைக் காண்பதையே அறிவாகக் கொள்பவர் கலாநிதி சு. வித்தியானந்தன் அவர்கள். அத்தகைய பெரியாரின் இவ்வாராய்ச்சி நூல் தமிழ்மக்களுக்குப் பயன்படுமென்பதில் ஐயமில்லை.

பதினேழு ஆண்டுகட்கு முன் வெளிவந்த இந்த நூல் பெரும் பகுதியும் இலங்கையிலேயே செலவாகிவிட்டது. இந்த நல்ல நூலைப் படித்த சில தமிழ் அறிஞர்கள் இதன் ஒரு பதிப்பு தமிழ் நாட்டில் வெளிவந்தால் மிகவும் பயனுடையதாயிருக்கும் என்று கருதினர். தமிழக மக்களிடையே இந்த நூல் பரவவேண்டுமென்ற விருப்பத்துடன் இதன் இரண்டாம் பதிப்பை இங்கு வெளியிட நாங்கள் விரும்பியபோது மனமுவந்து அனுமதியளித்த ஆசிரியர் கலாநிதி வித்தியானந்தன் அவர்கட்கும், விரைவில் வெளிவர உதவிய நண்பர் சி. தில்லைநாதனவர்கட்கும் எங்கள் மனப்பூர்வமான நன்றி உரித்தாகுக.

பாரி புத்தகப் பண்ணை.

# பொருளடக்கம்

———

# தமிழர் சால்பு

---

## தோற்றுவாய்

இந்திய வரலாற்றிலே திராவிடருக்குரிய இடத்தைப் பற்றியும், இந்தியப் பண்பாட்டு வளர்ச்சிக்குத் திராவிடர் செய்த அரும் பெரும் தொண்டுகளைப் பற்றியும் அறிஞர் இதுவரை அமைவுற ஆராயவில்லை. பழைய இந்தியப் பண் பாட்டினது சிறந்த கூறுகள் யாவும் ஆரியருக்கே உரியன வென்று கூறுவது அத்துறை ஆராய்ச்சியில் ஈடுபட்ட பெரியோரின் பண்பாகி விட்டது. இந்திய நாட்டு மக்கள் பல்வேறு சாதிகளைச் சேர்ந்தவர்கள். அவ்வாறு பல்வகைக் குழுவினரின் கலப்பால் வளர்த்து ஆக்கப்பட்ட அரசியல் அமைப்பினையும் தத்துவக் கொள்கைகளையும் கலை வளத்தை யும் சட்டநூல் அமைதியையும் சமயக் கூறுகளையும் அவை போன்ற பிறவற்றையும் ஒரு குழுவினருக்கே சிறப்பாக உரியனவெனக் கொள்ளுதல் பொருந்தாது.

பாரத நாட்டில் திராவிடர் தனிப்பட்ட சால்பினை உடைய ஒரு குழுவினராக இருந்து, மக்கள் வாழ்வு சிறப் பதற்கும் கலைவளம் பெருகுவதற்கும் சிறந்த தொண்டுகளை ஆற்றினர். மிகப் பழைய காலத்தில் மேன்மையோடு விளங்கிய பிற நாடுகளிலும் இவர் புகழ் பரந்திருந்ததென அறியக் கிடக்கின்றது.

திராவிட மக்கள் தமக்கே உரிய பல உயரிய பண்பினையும் சிறப்பினையும் உடையராயிருந்தனர். ஆரிய மக்களின் பண்பாட்டு வளர்ச்சிக்கும் பெருமைக்கும் பலப்பல வழிகளில் துணைபுரிந்தனர். இவ்விரு கூட்டத்தாருக்கும் உரிய பண்புகள் யாவும் ஒருங்கு இயைந்தே இந்து நாகரிகம் எனும் உயரிய பண்பாடு உருவாகிற்று.

திராவிடர் நாகரிகத்தைப் பற்றிப் பல அறிஞர் கொண்ட புதுமையான கருத்துக்கள் வியப்பைத் தருவனவாகும். மிகப் பழைய காலத்திலும் திராவிடர் நாகரிகம் ஆரியர் நாகரிகத்துடன் கலந்திருந்தது எனக் கொண்டு அதற்குச் சான்று காட்ட முயன்றனர் இவர். பார்ப்பனரின் ஆதிக்கத்தினுல் திராவிடருக்கு உரிய பண்பாடு ஆரியருக்குரிய பண்பாட்டோடு தொடர்பு படுத்தப்பட்டது. இக்காரணத்தால் மிகவும் பழைய தென்னுட்டு நாகரிகத்தை விளங்கிக் கொள்வது மிகவும் கடினமாகிவிட்டது. எனினும் பழங் காலத்தில் தென்னுட்டவரின் பண்பாடு ஆரியக் கலப்பு அற்றிருந்ததென ஓரளவுக்கு நிறுவலாம். இப்பொழுது கூடத் தமிழ் நாட்டிலும் ஈழத்தின் வடக்குப் பகுதியிலும் கிழக்குப் பகுதியிலும் உள்ள மக்களின் சமூக அமைப்பும் பண்பாடும் வடநாட்டவர் சமூக அமைப்பிலிருந்தும் பண்பாட்டிலிருந்தும் வேறுபட்டு விளங்குவதைக் காணலாம். ஆரியப் பண்புகள் சிலவற்றை ஏற்றுக்கொண்ட திராவிடர் தம்முடைய பண்புகளிலும் பலவற்றை ஆரியருக்கு வழங்கினர் என்பதை நாம் மறத்தல் கூடாது.

தமிழர் சால்பினை ஆராய்வதற்கு முன்னர், திராவிடர் யாவர், திராவிடர் என்ற சொல்லின் பொருள் யாது என்ற கேள்விகளுக்கு யாம் விடை கூறவேண்டும். தமிழர், தெலுங்கர், கன்னடர், மலையாளிகள், மற்றும் தென்னுட்டின் பல பகுதிகளில் வாழும் சாதியினரின் மூதாதையரே பழந் திராவிடர் எனப்படுகின்றனர். இவ்வாறு கூறுவதற்குரிய சான்றுகள் மொழி ஆராய்ச்சியாலும் மக்கட் சாதிகளைப் பற்றிய ஆராய்ச்சியாலும் பெறப்படுவன. அதாவது, உடலமைப்பு, பழக்க வழக்கம், மரபு, மொழிப் பண்பு முதலியவற்றை ஆராய்வதனுல் கிடைக்கும் சான்றுகளே அவ்வை என்று கூறலாம். இந்திய நாட்டு மொழிகளை ஆராய்ந்த அறிஞர் இந்திய மக்கள் பல்வேறு வழக்கங்களையுடைய சாதிகளைச் சேர்ந்தவர் என்று முடிவு கொண்டனர். கோலர், முண்டர், சபரர் முதலியோரின் வளர்ச்சியுருத மொழிகளைத் தவிர்ந்த ஏனைய இந்திய மொழிகள் யாவும்

ஆரிய மொழிகள், திராவிட மொழிகள் என இருபெரும் பிரிவில் அடங்குவன என்பது பல அறிஞர் கொண்ட முடிவு.

தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம், துளு, கூர்க்கு, கோண்டு, துதம், கோதம், இராஜ்மகால், ஒராவோன், பிராகுவி ஆகிய பன்னிரண்டு மொழிகளும் ஒரு தாய் மொழியை உடையனவென்று கூறுவர். இறுதியில் தரப்பட்டுள்ள பிராகுவி என்னும் மொழி இந்தியாவின் வடமேற்குப் பகுதியிலுள்ள பலுக்கிஸ்தானில் இன்றும் வழங்கி வருகின்றதென்பது கவனித்தற்குரியது. இப் பன்னிரண்டு மொழிகளையும் பேசும் மக்களின் மூதாதை யரையே அறிஞர் திராவிடர் என அழைத்தனர். கால்டுவெல் ஐயர் தம்முடைய ஒப்பிலக்கண நூலில் 'திராவிடம்' என்ற சொல்லை வழங்கியதிலிருந்தே அச்சொல் பெருவழக்குப் பெற்றது. மேற்குறித்த மொழிகளைக் குறிப்பதற்கே அவர் அச் சொல்லினைத் தமது நூலினுள் வழங்கினர்.

பழந்திராவிடர் தனிப்பட்ட முறையிலே - ஆரியருக்குப் புறம்பாக—பண்பாட்டில் மேம்பட்டு விளங்கினர் என் பதற்குச் சான்றுகள் உள்ளன. பழந்தமிழ் அரசுகள் நிலவிய காலத்தில் இப்பண்பு சிறப்புற்றிருந்ததெனத் தெரிகின்றது. கிறிஸ்துவுக்கு முன் பல நூற்றுண்டுகளுக்கு முன்னரே அவர்கள் பினீசியர் முதலிய பழங்கால மக்களோடு தொடர்பு கொண்டிருந்தனர். ஈபுறுநாட்டு மன்னனுக்குக் கிடைத்த பொருள்களில் 'துகி' என்பதும் ஒன்றெனக் கால்டுவெல் ஐயர் கூறுகின்றனர். துகி என்பது மயிலைக் குறிக்கும் பழந்தமிழ்ச் சொல்லாகும்.

இத்தகைய திராவிடர் குழுவினைச் சேர்ந்த தமிழரின் சால்பு சங்ககாலத்திற்கு முற்பட்ட காலப் பகுதியில் எவ்வாறிருந்ததெனத் திடமாகக் கூற முடியாது. சங்க காலத்திலிருந்தே, அதனை வரலாற்று முறைப்படி, தக்க சான்றுகளுடன் ஆராயலாம். சங்ககாலச் சால்பினை அறி வதற்குச் சங்கநூல்களே முக்கிய கருவியாக அமைந்துள்ளன. இந்நூல்களை அடிப்படையாகக்கொண்டு தமிழர் சால்பினை

ஆராய்வதன் முன்னர் 'சங்கம்' என்றதன் பொருள் யாது என்பதையும், சங்கநூல்கள் யாவை என்பதையும் நோக்கு வாம்.

## (1) சங்கம்

தமிழ் நாட்டிலே, பாண்டிய அரசர் தலைநகரில் மூன்று கழகங்கள் பல ஆண்டுகளாக இருந்து வந்தன என்பது பொதுவழக்கு. இக்கழகங்கள் பிற்கால இலக்கியங்களில் சங்கங்கள் என்று வழங்கப்பட்டன.

சங்கம் என்பது தமிழ் உருவம் பெற்று வழங்கும் சங்கதச் சொல். இச்சொல் சமண பௌத்த சங்கங்கள் மூலமாகவே தமிழில் வழங்கத் தொடங்கியது என்றும், கி. பி. 470ல் வச்சிர நந்தி என்னும் சமணமுனி தனது சமயத்திற்குரிய திராவிட சங்கத்தை நிறுவிய பின்னரே இதன் வழக்குப் பரவிற்று என்றும் பலர் கருதுகின்றனர். இத் திராவிட சங்கத்தைப் பின்பற்றியே தமிழ்ச் சங்கம் சமயச்சார்பான ஒரு கழகமாக முதலில் நிறுவப்பட்டது என்று ஒரு சாரார் கருதுகின் றனர். புத்த சமண சமயங்களோடு கொண்ட பகையினுற் சைவர்கள் தங்கள் மேன்மையையும் தொன்மையையும் நிலை நிறுத்துவதற்காக, சிவனைப் பாடிய தம் புலவர்களைச் சங்கப் புலவர் எனக் கருதத் தொடங்கினர் எனவும் கூறப்படு கின்றது. அதன் மேல் அரசன் அவைக் களங்களைக் குறிக்கவும் சங்கம் என்ற சொல் கி. பி. எட்டாம் நூற்றுண்டளவில் வழக்கில் வந்ததென இவர்கள் கூறுவர்.

முதலில், சங்கம் என்ற சொல்லுக்குரிய கருத்தை அறிந்து கொள்ளவேண்டும். அதன்மேல் அப்பொருளுக்கு இயைந்தன வாகிய சங்கங்கள் ஆதிகாலத்தில் தமிழ் நாட்டில் இருந் தனவோ என்பதை ஆராய்தல் வேண்டும். ஏனெனில் நான்கு வகையான சங்கங்கள் அக்காலத்தில் இருந்தன.

(1) சமண பௌத்த சங்கங்களைப் போல நூல்களை ஆக்கு வதிலும் படிப்பதிலும் ஈடுபட்டிருந்த சமயச் சார்பான குழு அல்லது சங்கம்.

(2) இலக்கிய ஆர்வமுள்ள அரசன் ஒருவன் தன்னுடைய கவிதைகளையும் தன்னைச் சுற்றியுள்ள பெருமக்களின் கவிதைகளையும் கேட்டு மகிழ்ந்த கழகங்கள்.

(3) ஒரு பெரும் புலவனைத் தலைவனாகவும், அவனைப் பின்பற்றும் பல புலவரை உறுப்பினராகவும் கொண்ட கழகங்கள்.

(4) ஒரு தன்மைத்தான பண்புகளையுடைய இலக்கியங்கள் எழுந்த காலப் பகுதி.

சங்கநூல்கள் என்று கூறப்படுபவை, மேற்கூறிய நான்கு வகைச் சங்கங்களையும் சார்ந்தவை. சங்கநூல்களிற் சங்கம் என்ற சொல் மேற்கூறிய பொருள்களில் வழங்கப்படவில்லை என்பது உண்மையே. ஆனால் அது குறிக்கும் பொருளை உடைய தூய தமிழ்ச் சொற்களான தொகை, கூடல், அவை, புணர் முதலியன சங்கநூல்களில் வருகின்றன. புலவர் அவை என்ற கருத்துடன் சங்கம் என்ற சொல் முதன்முதல் வழங்கப் பட்டிருப்பது மணிமேகலையிலாகும். மணிமேகலை கி. பி. ஐந்தாம், ஆறும் நூற்றுண்டளவில் எழுந்த ஒரு நூலாகும். "புலம்புரிச் சங்கம் பொருளொடு முழங்க" என அது பாடுகின்றது.[1] மணிமேகலை பௌத்த நூலாதலின் அது கூறும் சங்கம் மேற்கூறியவற்றுள் முதலாம் வகையைச் சார்ந்ததாக இருத்தல் கூடும்.

நூலியற்றும் புலமை படைத்த அரசரின் ஆதரவிற் பல புலவர் கூட்டங்கள் அக்காலத்தில் இருந்தன என்பதற்குப் புறநானூறு 72-ம் பாடல் சான்றுக அமைகின்றது. மதுரைக் காஞ்சியின் பாட்டுடைத் தலைவனாகிய தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் தன் ஆதரவில் இருந்த ஒரு புலவர் அவைக்களத்தைத் தான் பாடிய இச் செய்யுளிற் குறிப்பிடுகின்றான். இது மேற்குறித்த கழக வகைகளுள் இரண்டாவதைச் சேர்ந்தது.

---

1. மணிமேகலை : துயிலெழுப்பிய காதை : 114.

"பொழுதுபடு முன்னர் பகைவரைப் புறங்கொடுத்து ஓடச் செய்யாவிடின் மாங்குடி மருதனைத் தலைவனாகக் கொண்ட புலவர் என்னைப் பாடாது விடுவாராக" என்று அவ்வரசன் வஞ்சினம் கூறுகின்றான்.[2] அக்காலத்து அரசன் தன் அவைக்களத்தில் தன் பாடல்களையும் தன் பெருமக்களின் பாடல்களையும் கேட்டு மகிழ்ந்தானென்பதை இதிலிருந்து அறியலாம். ஒரு பெரும்புலவனைச் சார்ந்து புலவர் செய்யுட்கள் இயற்றினர் என்பதையும் இதனால் அறியலாம். எனவே, இத்தகைய சங்கங்கள் மேற்கூறியவற்றுள் இரண்டாம் வகையையும் மூன்றாம் வகையையும் சார்ந்தன எனக் கூறலாம்.

இறையனார் அகப்பொருள் உரையுட் கண்ட முறையிற் சங்கங்கள் இருக்கவில்லை யென்பது உண்மையே. ஆனால் முன் காட்டியவற்றிலிருந்து, சில பொதுவான இயல்புகளைக் கொண்ட பாட்டுக்களை ஒரு காலப்பகுதியில் வாழ்ந்த நெருங்கிய தொடர்புடைய புலவர்கள் பாடினார்களென்றும், புலவர்கள் அரசரின் ஆதரவைப் பெற்றிருந்தார்களென்றும் திடமாகக் கொள்ளலாம். இவ்வாறு அப் புலவர்கள் இயற்றிய செய்யுட்களையே சங்கச் செய்யுட்களாகக் கொண்டு அச்செய்யுட்கள் அடங்கிய நூல்கள் எவை என்பதை அடுத்து ஆராய்வோம்.

---

2. சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை
அருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொ
டொருங்ககப் படேஎ னாயின்............

...................................................

ஓங்கிய சிறப்பி னுயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் றலைவ னாக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர் பாடாது வரைகவென் னிலவரை.

புறநானூறு 72. அடி 7-16.

## (2) சங்க நூல்கள்

தலைச்சங்க நூலாகக் கொள்ளப்படும் அகத்தியம், இப்பொழுது கிடைத்துள்ள இலக்கண நூலாகிய தொல்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகியன சங்க நூல்களென வழங்குகின்றன. திருக்குறள் நாலடியார் முதலிய பதினெண் கீழ்க்கணக்கு நூல்களையும் கடைச்சங்க நூல்களென்பர் சிலர். சிலப்பதிகாரம் மணிமேகலை ஆகிய இரு தொடர்நிலைச் செய்யுட்களும் சங்கத்தின் இறுதிக் காலத்தில் இயற்றப்பட்டனவெனக் கொள்வாருமுளர்.

மேற்குறித்த நூல்களுள் அகத்தியத்திற் சில சூத்திரங்களே கிடைத்துள்ளன. அவை பழைய உரை நூல்களுள் ஆங்காங்கு காணப்பட்டவை. அவை யாவற்றையும் தொகுத்துப் பேரகத்தியத்திரட்டென்னும் பெயருடன் பவானந்தம்பிள்ளை வெளியிட்டுள்ளார். அச்சூத்திரங்களின் மொழிநடை, அவை கூறும் பொருள் முதலியவற்றைக் கொண்டு அவை யாவும் சங்க காலத்துக்குப் பிற்பட்டனவெனக் கொள்ளலாம். தமிழ் மொழிக்கும் தமிழ் இலக்கியத்திற்கும் தொன்மையும் சிறப்பும் அளித்தற் பொருட்டு, பிற்காலத்தவர் ஒருவர் இயற்றிய இலக்கண நூலொன்றை அகத்தியர்மேல் சுமத்தி, அது சங்க காலத்தில் அகத்தியராற் செய்யப்பட்டதெனக் கூறினர் என்று கொள்ளுதலே பொருத்த முடையது.[3] ஆகையினுல் அகத்தியத்தைச் சங்க நூல்களில் ஒன்றாகக் கருதமுடியாது.

தொல்காப்பியத்தின் காலத்தைப்பற்றி அறிஞர் பலவாறுகக் கூறுவர். அது இரண்டாம் சங்கத்துக்குரிய இலக்கண நூலென இறையனுர் அகப்பொருள் உரை கூறுகின்றது. ஆனுல் இக்கால ஆராய்ச்சியாளர் அது சங்க நூல்களுக்குப்பின் ஐந்தாம் நூற்றுண்டு வரையில் இயற்றப்

3. *K. N. Sivaraja Pillai : Agastya in the Tamil Land.*

பட்டிருத்தல் வேண்டும் என்று கருதுகின்றனர்.[4] பின்னவர் கொண்ட கருத்தே பல காரணங்களால் ஏற்புடைத்து எனத் தோன்றுகின்றது. எனவே தொல்காப்பியத்தையும் சங்க காலத் தமிழர் பண்பாட்டு ஆராய்ச்சிக்குரிய நூல்களுள் ஒன்ருக நாம் கொள்ளமுடியாது.

திருக்குறள், நாலடியார் போன்ற பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுட் பல சமணரால் இயற்றப்பட்டவை. அந்நூல்கள் தோன்றிய காலத்திற் சமணமும் பௌத்தமும் தமிழ் நாட்டிற் செல்வாக்குப் பெற்றிருந்தன. சங்க நூல்கள் கூறிய அகப்பொருள் புறப்பொருளைக் கைவிட்டு இந் நூல்கள் பல, ஒழுக்கத்தை எடுத்துக் கூறின. மேலும் இவற்றின் மொழிநடையைப் புறநானூறு நற்றிணை முதலிய நூல்களின் மொழிநடையுடன் ஒப்பிட்டு நோக்கு மிடத்து இவை பிற்காலத்து நூல்களெனத் தெளிவாகப் புலனுகும். ஆகவே இந்நூல்களையும் இவ்வாராய்ச்சிக்குரிய நூல்களாகக் கொள்ள இயலாது.

சிலப்பதிகாரம் என்னும் சமணநூலும் மணிமேகலை என்னும் பௌத்தநூலும் சங்கத்தின் இறுதிக்காலத்தில் கி. பி. இரண்டாம் நூற்ருண்டின் பிற்பகுதியில் இயற்றப் பட்டன எனப் பலர் கொள்ளுவர். ஆனுல் இவை சங்க காலத் திற்கு அடுத்த சங்க மருவிய காலத்திற்குரியன. சிலப் காரத்தின் மொழி நடை, அது குறிக்கும் பண்பாடு, அதிற் காணப்படும் புராணக் கதைகள் முதலியவற்றைக்கொண்டு அது சங்க காலத்துக்குப் பிந்தியது எனத் திட்டமாகக்

4. எஸ். வையாபுரிப் பிள்ளை : தமிழ்ச் சுடர் மணிகள் பக். 26—28. (இரண்டாவது புதுக்கிய பதிப்பு 1952)

*K. N. Sivaraja Pillai : The Chronology of the early Tamils (1932) appendix XV.*

கொள்ளலாம்.[5] சிலப்பதிகாரத்துக்குப்பின் - காவிரிப்பூம் பட்டினம் கடலாற் கொள்ளப்பட்டதன்பின் மணிமேகலை இயற்றப்பட்டது.[6] எனவே இந்நூல்களையும் சங்க காலத் தமிழரின் சால்பை ஆராய்வதற்கு உரிய நூல்களென நாம் கொள்ளவில்லை.

ஆகவே சங்க நூல்களெனக் கொள்ளத்தக்கவை பத்துப் பாட்டு எட்டுத்தொகை நூல்களே. இப் பதினெட்டு நூல்களுள் பத்துப்பாட்டில் திருமுருகாற்றுப்படையும் எட்டுத் தொகையிற் கலித்தொகையும் பரிபாடலும் சங்க காலத்துக்குப் பிந்தியவை. திருமுருகாற்றுப் படையிற் காணப்படும் இலக்கண முடிபுகள் சில, சங்க நூல் வழக்கோடு மாறுபடுதலே அன்றி நக்கீரரின் சங்கச் செய்யுள் வழக்கோடும் முரணுகின்றன. சங்க கால நக்கீரர் வாழ்ந்த காலமும் திருமுருகாற்றுப்படை ஆசிரியர் நக்கீரர் வாழ்ந்த காலமும் வெவ்வேறானவை. சங்ககால நக்கீரர் அரசர், குறுநிலமன்னர் முதலியோர் ஆதரவில் வாழ்ந்தவர். புலவர் தமிழ்நாடு பரிசில்பெறும் பொருட்டே உள்ளது என்னும் மனப்பான்மை உடையவர் ; பரிசிலின் பொருட்டுப் புரவலரைப் பாடியவர்; மகளிர் பொற்கலத்தில் ஏந்திக்கொடுக்கும் கள்ளை உண்டு களித்தலையே சிறந்த வாழ்வென அரசருக்கு அறிவுறுத்தியவர். ஆனல், திருமுருகாற்றுப்படை பாடிய நக்கீரர் பரிசிலுக்காக வாழவில்லை; அரசர், சிற்றரசர் முதலியோரைப் பாடவில்லை. முத்தியாகிய பரிசிலைப் பெறுதற்கே முயன்றனர். மேலும் சங்க நூல்கள் அகப்பொருள் புறப்பொருள்களைக் கூற இந்நூல் தனியே சமயத்தைப் பொருளாகக்

---

5. *V. Chelvanayakam: Dates of Cilappathikaram and Manimekalai. University of Ceylon Review. Vol VI 1948.*

6. *S.* சோமசுந்தர பாரதியார் : மணிமேகலையின் காலமும் அதை இயற்றிய ஆசிரியரும். செந்தமிழ். தொகுதி 40. 1942—1943.

கொண்டது. எட்டுத்தொகை நூல்களுக்குப் பிற்காலத்தில் கடவுள் வாழ்த்துச் செய்யுள் அமைத்ததுபோற் பத்துப் பாட்டைத் தொகுத்தோர் திருமுருகாற்றுப்படையை முற்படச் சேர்த்துத் தொகுத்திருத்தல் வேண்டு . திருமுருகாற்றுப்படையின் காலத்தில் முருகக் கடவுளின் இயல்புகள் சுப்பிரமணியக் கடவுளின் இயல்புகளோடு பொருத்தப்பட்டன. இவைபோன்ற காரணங்களால் திருமுருகாற்றுப்படை சங்க காலத்திற்குப் பிந்தியதெனக் கொள்ளலாம்.[7]

கலித்தொகையிலும் பரிபாடலிலும் உள்ள செய்யுட்களின் மொழியமைப்பு, அவை குறிக்கும் பண்பாடு முதலியன புறநானூறு முதலிய நூல்களிலுள்ள செய்யுட்களிற் காணப்படுவனவற்றிலும் வேறுபட்டவை. மேலும் கலித்தொகையிலும் பரிபாடலிலும் வரும் இலக்கண வழக்குகள் பலவற்றைச் சங்க நூல்களிற் காண்பதரிது. இந்நூல்களில் இடம் பெற்றுள்ள சங்கதச் சொற்கள், வடநூற் கதைக் குறிப்புகள், உருவகங்கள் முதலியனவும் இவை பிற்காலத்தன என்பதற்குச் சான்றாக அமைந்துள்ளன. எனவே பொருநராற்றுப் படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப் பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம், புறநானூறு, அகநானூறு, நற்றிணை, பதிற்றுப்பத்து, குறுந்தொகை, ஐங்குறுநூறு ஆகிய பதினைந்து நூல்களையே சங்க நூல்களெனக் கொண்டு மேலே ஆராய்வோம்.

---

7. எஸ். வையாபுரிப்பிள்ளை : இலக்கியதீபம். முதற் பதிப்பு 1952.

———

## முதலாம் இயல்

# சங்ககால வரலாறு

சங்க காலத்தில் தமிழ் நாட்டிற் சேர சோழ பாண்டியர் ஆட்சி நிலவியது என்பதற்குச் சங்க நூல்களில் மிகுதியான சான்றுகள் உள. ஆனால் பிற்காலத்திலே, ஏழாம் நூற்றாண்டுக்குப் பின்னர், பல்லவ பாண்டிய சோழ மன்னர் பேரரசு செலுத்தியது போல இம் மன்னரின் ஆட்சி அவ்வளவு சிறப்பு அடையவில்லையென்பது தெளிவாகப் புலப்படுகின்றது. இம் மூவேந்தர் பற்பல குறுநில மன்னருடன் போராடி அவர்களைத் தம் ஆட்சிக்கு உட்படுத்தவேண்டிய நிலை அக்காலத்தில் இருந்தது. ஆய்போன்ற வலிமையுள்ள சிற்றரசர் பலர் நெடுங்காலமாக மூவேந்தர் ஆட்சியின் கீழ்ப் படாது தனியாட்சி செலுத்தினர். இவர்களைத் தம் ஆணைக்குள் அமைக்க மூவேந்தருக்கு நீண்டகாலம் கழிந்தது. இதனால் இவர்கள் தனியரசு செலுத்த முடியவில்லை.

## (1) சோழர்

சங்ககாலச் சோழ அரசர் தலைநகர் உறந்தையாகும். சங்க நூல்களில் இதற்குச் சான்றுகள் உள்ளன. புறநானூறு 58-ம் செய்யுளிற் சோழன் உறந்தைப் பொருநன் எனப்படுகின்றான். புறநானூறு 39-ம் செய்யுள் உறந்தையைச் "சோழர் உறந்தை" என்கின்றது.[1] பிற்காலத்தில் உறந்தை பெரும்பாலும் உறையூர் என வழங்கிற்று.[2] இவ்வூர்

---

1. புறநானூறு 69-ம் செய்யுளும் (அடி 12), பட்டினப் பாலையும் (அடி 285) உறந்தையைச் சோழர் தலைநகராகக் குறிப்பிடுகின்றன.
2. சிலப்பதிகாரம் 8-ம் காதை. அடி 3; 10-ம் காதை அடி 242.

இப்பொழுது திருச்சியில் உள்ளது.[3] உறந்தையைக் கைப்பற்றித் தலைநகராகக் கொண்ட முதல் மன்னன் வீரை வேள்மான் வெளியன் தித்தன் என்பவன். வேள்மான் என்பதற்கு வேள் எனப் பெயர்பெற்ற கூட்டத்தாருக்குத் தலைவன் அல்லது அக் கூட்டத்தாரில் ஒருவன் எனப் பொருள் கூறலாம். வேள் என்ற கூட்டத்தார் உழவுத் தொழிலில் ஈடுபட்டவர். இக் காலத்திலேயும் இத்தொழிலில் ஈடுபடுவோர் வேளாளர் எனப்படுவர். வெளியன்தித்தன் உறந்தை நகருள்ளே புகுந்து அதனைச் சேந்தன் என்பவனிடமிருந்து கைப்பற்றித் தனது தலைநகரமாக்கிக் கொண்டான்.[4] இவனின் மகன் தித்தன் வெளியன் எனப் புறநானூறு 80-ம் செய்யுள் கூறுகின்றது. இவ்வரசன் பழையன் என்பவனிடமிருந்து போர்வை என்னும் பதியைக் கைக்கொண்டதன் பின்னர், போர்வைக் கோப் பெருநற்கிள்ளி எனப்பெயர் பெற்றான். இவனுக்குப் பின் உறந்தையிலிருந்து ஆண்டவன் முடித்தலைக் கோப் பெரு நற்கிள்ளி என்பவன். இவன் உறையூரில் இருந்து ஆட்சி செலுத்திய காலத்தில் அழுந்தூர் என்னும் இடத்திலிருந்து முதலாம் கரிகாற் சோழனும் அரசு செலுத்தியதாகத் தெரிகின்றது.

முடித்தலைக் கோப் பெருநற்கிள்ளிக்குப் பின் உறந்தையில் அரசு செலுத்தியவன் வேல் பல்தடக்கைப் பெருவிரல் கிள்ளி என்பவன். இவ்வரசனின் பின் கிள்ளி வழியினர் ஆட்சி நிலை குலைந்தது. சென்னி வழியைச் சேர்ந்த உருவப்பல்தேர் இளஞ் சேட் சென்னி சோழ அரசுகட்டில் ஏறினான். நெய்தலங் கானல் இளஞ்சேட் சென்னி என்ற பெயரும் இவனுக்கு உண்டு. உறந்தையில் ஆட்சி செலுத்துமுன் இவன் கடற் கரைப் பகுதியில் இள அரசனாக இருந்தவன் என்பதை இப்பெயர் குறிக்கின்றது.

---

3. *K. A. Nilakanta Sastri, History of the Cholas. Vol. I Page 24 ; Madras Tamil Lexicon Vol. I. page 481.*

4. குறுந்தொகை, 258; அகநானூறு 122.

எனவே இருவழிச் சோழ அரசினர், தொடக்கத்தில் உறந்தையிலும் அழுந்தூரிலும் இருந்து ஆண்டுவந்தனரெனக் கூறலாம். உறந்தை அரசர் கிள்ளி என்ற பெயரையும், அழுந்தூர் அரசர் சென்னி என்ற பெயரையும் பூண்டிருந்தனர். சென்னி அரசர் நெய்தல் நிலப்பிரதேசத்தையே ஆண்டு வந்தனர். இதிலிருந்து ஆதிக்காலத்திற் சோழ அரசர் ஒரு தலைவனுக்கு உட்பட்டு வாழாது இருபிரிவினராக வாழ்ந்தனரென அறியலாம். இவ்விரு பகுதியினருக்கு மிடையில் நீண்ட காலமாய்ப் பகை இருந்ததாகப் புறநானூற்றுச் செய்யுட்கள் கூறுகின்றன. வேல்பல் தடக்கைப் பெருவிறல்கிள்ளிக்குப்பின் உறந்தையில் சென்னி அரசர் ஆளத்தொடங்கினர். அவ்வாறு முதன்முதல் உறந்தையிலிருந்து ஆண்ட சென்னி அரசனே உருவப்பல்தேர் இளஞ்சேட் சென்னி. இவனுடைய மகனே பட்டினப்பாலைப் பாட்டுடைத் தலைவன் இரண்டாம் கரிகாலன்.[5]

இரண்டாம் கரிகாலனுக்குப் பின்னர் ஆண்டவன் சேட்சென்னி நலங்கிள்ளி. சென்னி வழியைச் சேர்ந்த இவ்வரசன் அரசு கட்டிலேறியபொழுது அதனை எதிர்த்துக் கிள்ளி வழியைச் சேர்ந்த நலங்கிள்ளி என்பவன் போர் தொடுத்தான். இப்போரினைப் பற்றிப் புறநானூற்றுச் செய்யுட்கள் விரிவாகக் கூறுகின்றன. இப்போரின் விளைவாகச் சென்னி வழியினர் உறந்தையிலிருந்து ஆளத்தொடங்கினர். இவன் ஆட்சியுடன் இப்பகை தீர்ந்தது. சேட்சென்னி நலங்கிள்ளி என இவன் கிள்ளி என்ற பெயரைத் தன் பெயராகிய சேட்சென்னி என்பதுடன் சேர்த்துக்கொண்டதே இதற்குச் சான்று. சங்க காலத்திற் கடைசியாக ஆண்ட சோழ அரசன் கோச்செங்கணான் என்பவன். இவனுக்குப் பின் சங்க காலப் பகுதியில் ஆண்ட சோழ அரசர் பெயர் தெரியவில்லை.

---

5. உருவப் பல்தேர் இளையோன் சிறுவன். பொருந: 130.

## (2) சேரர்

சங்ககாலத்தில் ஆண்ட முதற் சேர அரசன் யார் எனக் கூற இயலாது. சேரர் வரலாற்றை அறிவதற்குப் பதிற்றுப் பத்து சிறந்த கருவி நூலாக உள்ளது. ஆனால் அந்நூலின் முதற்பத்தும் கடைசிப் பத்தும் இப்பொழுது கிடைக்கவில்லை. கிடைத்துள்ள எண்பது பாக்களிலிருந்து சேரர் ஆதிக்கம் கருவூர் அல்லது வஞ்சியில் நிலைநாட்டப்பட்டதெனத் தெரிகின்றது. கனகசபைப் பிள்ளை அவர்கள் கொச்சிக்கு வடகிழக்குப் பக்கமாக உள்ள பாழடைந்த திருக்காரூர் என்னும் கிராமமே கருவூர் எனக் கூறுகின்றார்.[6] சங்ககாலத்துக்குரிய வேறு நூல்களும் கருவூர் அல்லது வஞ்சி சேரரின் தலைநகராகத் திகழ்ந்ததெனக் குறிக்கின்றன.[7] கருவூர் ஏறிய ஒள்வாள் கோப்பெருஞ்சேரல் இரும்பொறை என்னும் அரசனே கருவூரைக் கைக்கொண்டான் என்று அவனது பெயரிலிருந்து அறியலாம். "கருவூரைக் கைப்பற்றிய ஒளி பொருந்திய வாளையுடைய அரசனாகிய மலை நாட்டு மன்னன் பெரும் சேரன்" என்பது இப் பெயரின் பொருளாகும். குடிமக்களை அன்புடன் பாதுகாத்து ஆள வேண்டுமென நரிவெரூஉத் தலையார் கூறுவதாகவுள்ள புறநானூற்று 5-ம் செய்யுளே இவனைப்பற்றியுள்ள பாடல். இதற்கு மேல் இவ்வரசனைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை. பதிற்றுப்பத்தில் இப்பொழுது கிடையாத முதலாம் பத்தின்பாட்டுடைத்தலைவன் இவனாக இருக்கலாம்.

இச் சேர அரசனுக்குப் பின் அந்துவன் சேரல் இரும்பொறை கருவூரிலிருந்தும் (புறநானூறு,13), உதியன் சேரல் குழுமூரிலிருந்தும் (புறநானூறு,2) ஆட்சி செலுத்தி வந்தனர். இவ்வாறு இருவழிச் சேர அரசர் ஒரே காலத்தில் ஆண்டு வந்தமை, உறந்தையிலும் அழுந்தூரிலுமிருந்து கிள்ளி பரம்பரையினரும் சென்னி பரம்பரையினரும் சோழ நாட்டை

---

6. *The Tamils One Thousand Eight Hundred Years ago p. 20*

7. அகநா. 93, புறநா. 11, 36, 39 முதலியன.

ஆண்டு வந்தமையோடு ஒப்பிட்டு நோக்கற்பாலது. சேரமான் குட்டுவன் கோதை என்பவனின் ஆட்சிக் காலந் தொடங்கிக் கருவூரிலிருந்தே சேர அரசர் ஆண்டுவந்தனர். இவர்கள் ஆதிக்கம் சேரமான் கணைக்கால் இரும்பொறையின் ஆட்சியோடு முடிவடைகின்றது. இச்சேர அரசனையே சோழன் கோச்செங்கணன் போரில் முறியடித்துச் சிறை செய்தான். இவ்வரசனுக்குப் பின் சங்க காலத்தில் ஆண்ட சேர அரசர் பெயர் தெரியவில்லை.

## (3) பாண்டியர்

வெளியன்தித்தன், தித்தன்வெளியன் ஆகிய சோழ மன்னர் காலத்தில் ஆண்ட பாண்டிய மன்னர் பெயர் தெரியவில்லை. பாண்டிய அரசர் கூடலைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தனர் என்பதை மாத்திரம் சங்க நூல்களிலிருந்து அறியலாம். அகநானூறு 296-ம் செய்யுள் 'நெடுந்தேர்ச் செழியன்......நெடுநகர்க் கூடலை'ப் பற்றிப் பாடுகின்றது. இதனை அகநானூறு 93-ம் செய்யுள் 'வேம்பின் வழுதி கூடல்' எனக் குறிக்கின்றது. வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பாண்டியன் புறநானூறு 58-ம் செய்யுளில் "தமிழ்கெழு கூடல் தண் கோல் வேந்தே" எனவிளிக்கப்படுகின்றான்.

சிறிது பிற்பட்ட காலத்திலே ஆண்ட தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் ஆட்சிக் காலத்திற் கூடலென்பது மதுரை யென்னும் வடமொழிப் பெயரைப் பெறுவதாயிற்று. மதுரைக் காஞ்சியிற் கூடல் என்ற பெயர் 429-ம் அடியிலும், மதுரை என்ற பெயர் 699-ம் அடியிலும் வருகின்றன. சமணர் செல்வாக்குப் பெற்றிருந்த வடநாட்டுப் பட்டணம் ஒன்றற்கு மதுரா என்ற பெயருண்டு. தென்னாட்டிலிருந்த சமணர் செல்வாக்கினால் இச் சொல் தமிழினுட் புகுந்தது. நெடுஞ்செழியன் காலத்துக்குப் பின்னர் கூடல் என்ற சொல் வழக்கொழிந்தது; மதுரை என்ற சொல்லே பாண்டியர் தலைநகரைக் குறிப்பதற்குப் பெரும்பாலும் வழங்கப்படலாயிற்று.

இவ்விடத்திற் கவனிக்கவேண்டியதொன்று உண்டு. செழியன், வழுதி என்ற பொதுப் பெயர்களையே பாண்டிய மன்னர் பெரும்பாலும் தம் பெயர்களுடன் சேர்த்துக்கொண்டனர். புறநானூறு 19-ம் செய்யுள் நான்காம் அடியிலும், 25-ம் செய்யுள் 9-ம் அடியிலும் பாண்டிய மன்னர் செழியர் என விளிக்கப்படுகின்றனர். புறநானூறு 3-ம் செய்யுள் 13-ம் அடியிலும், 59-ம் செய்யுள் 2-ம் அடியிலும், 388-ம் செய்யுள் 15-ம் அடியிலும் வழுதி என்ற பெயர் வருகின்றது.

முதன் முதலாகக் கூடலுட் புகுந்து அதனைக் கைப் பற்றியவன் கொற்கைப் பொருநன் நெடுஞ்செழியன் என் பவன். இப்போரைப் பற்றிய விவரமான செய்திகள் கிடைத்தில. பேராலவாயார் என்னும் புலவர் மாத்திரம் இப் போரைக் குறிப்பிட்டுள்ளார் (அகநானூறு 296) நெடுஞ் செழியனுக்குப் பின் ஆண்ட ஒல்லையூர் தந்த பூதப் பாண் டியன் காலத்தவர் இப் புலவர். இவர் கூடலைக் கைப்பற்றிய நெடுஞ்செழியன் காலத்திலும் இருந்தவரா, அல்லது அவன் வென்றியைப் பழைய காலத்து நிகழ்ச்சியாகக் குறிப்பிட் டாரா என்பது தெரியவில்லை. கூடலைக் கொண்டதனால் நெடுஞ்செழியனுக்குக் கிடைத்த பெரும் புகழைப் புலவர் அப் பாட்டில் குறிப்பிடுகின்றார்.[8] கூடல் கொள்வதன்முன் நெடுஞ்செழியன் ஆட்சி கொற்கையளவில் அமைந்து கிடந்த தென இப் பாட்டிலிருந்து புலனாகின்றது.[9] பாண்டியர் கூடலைக் கைப்பற்றுவதற்குமுன் அதனை ஆண்டவன் அகுதை என்பவனெனப் புறநானூற்று 347-ம் செய்யுளால் அறிய

---

8. பேரிசைக் கொற்கைப் பொருநன் வென்வேற்
கடும்பகட் டியானை நெடுந்தேர்ச் செழியன்
மலைபுரை நெடுநகர்க் கூடல் ஆடிய
மலிதரு கம்பலை போல அகநா. 296 : 10— 13.

9. கொற்கை தாமிரபரணியின் வாயிலில் இருந்தது
*Madras Tamil Lexicon Vol. II. Page 1166.*

லாம். அகுதைக்குரிய கடல் சூழ்ந்த கூடல் எனக் கூடல் இப் பாட்டிற் சிறப்பிக்கப்படுகின்றது.[10]

கொற்கைப் பொருநன் நெடுஞ்செழியனுக்குப் பின் ஆண்டவன் ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன். இவ்வரசன் ஒரு பெரும் புலவன். இவன் பாடிய பாக்களுள் ஒன்று புற நானூற்றிலும் (71-ம் செய்யுள்), ஒன்று அகநானூற்றிலும் உண்டு (25-ம் செய்யுள்). இப் பாக்களிலிருந்து இவன் ஆட்சி பரந்த தேசத்தை உட்படுத்தியதாகத் தெரியவில்லை. இவன் ஆட்சிக் காலத்திற் பொதியிலில் ஆண்ட ஆய் அரசன் தித்தன் என்பவன் இவனேடொத்த செல்வாக்குப் பெற்றிருந் தானெனவும் அப் பாக்களால் அறியலாம். ஆயைப் பாடிய ஏணிச்சேரி முடமோசியார் கூற்றிலிருந்து ஆய் அரசன் மூவேந்தர் ஆட்சிக்கு உட்பட்டிருக்கவில்லை யெனத் தெளி வாக அறியலாம். கழல் இடப்பட்ட வீர வளையையுடைய ஆய் என்பவனது முகில்படியும் பொதியின் மலை, ஆடச் செல்லும் மகள் அணுகினல்லது பெருமை பொருந்திய அரசர் அணுகுதல் அரிது" என இப் புலவர் அவனைப் பாராட்டுகின் ருர்.[11]

கொற்கைப் பொருநன் நெடுஞ்செழியனுக்குப் பின் பாண்டிய அரசு கட்டிலேறியவன் பசும்பூண் பாண்டியன். இவன் ஆய் நாட்டினைத் தனதாக்கிய செய்தியைப் பரணர் அகநானூற்றிற் கூறுகின்ருர். பசும்பூண் பாண்டியனது களிற்றின்மீது எடுத்த வெற்றிக் கொடிகள் ஆய் நாட்டரசன் அதியனின் வெற்பிற் பொலிவுற்றன என அப் பாட்டுக் குறிக்

---

10. அகுதை, குண்டுநீர் வரைப்பிற் கூடல் : புறநா. 347: 5—6.

11. கழருெடி யாஅய் மழைதவழ் பொதியில்
ஆடுமகள் குறுகி னல்லது
பீடுகெழு மன்னர் குறுகலோ வரிதே.
புறநா. 128 : 5—7

கின்றது.[12] இப் போரின் பின், அதியன் பாண்டிய அரச னுக்கு உட்பட்டு அவ்வரசன் சார்பாகக் கொங்கு நாட்டிற்கு எதிராக நடந்த போரிற் கலந்துகொண்டான். பசும்பூண் பாண்டியனுக்குப் பின் ஆண்ட பாண்டியருள் உக்கிரப் பெருவழுதியின் ஆட்சியோடு சங்க காலப் பாண்டியர் ஆட்சி நிலைகுலைந்தது.

---

12. கழல்தொடி அதிகன்
கோளற வறியாப் பயங்கெழு பலவின்
வேங்கை சேர்ந்த வெற்பகம் பொலிய
வில்கெழு தானைப் பசும்பூட் பாண்டியன்
களிறணி வெல்கொடி.

அகநா. 162 : 18—22.

## இரண்டாம் இயல்

## சங்க காலம்

முதலாவது இயலிற் சங்க காலத்தில் ஆண்ட சேர, சோழ, பாண்டியரின் வரலாற்றினைச் சுருக்கமாக நோக்கினேம். இவ்வியலில் அவர்கள் ஆட்சிக்காலத்தை வரையறுத்து, கி. மு. முதலாம் நூற்றாண்டு தொடங்கி கி. பி. மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதிவரை அவர்கள் ஆண்டனர் எனக் காட்டுவோம். பொதியமலை நாட்டரசனான ஆய் என்பவன் பசும்பூண் பாண்டியனுக்கு அடிபணிந்தமையையும், அவன் நாடு பாண்டிநாட்டின் பகுதியானமையையும் முன்னர்க் கூறினேம். எனவே இப் பாண்டியன் காலந் தொட்டுப் பாண்டிநாடு மலைநாட்டினையும் தன்னகத்தே கொண்டிருந்தது. பெரிப்புளுசு என்னும் நூலை இயற்றிய மேனாட்டு ஆசிரியர் திருவாங்கூரையும் பாண்டி நாடென்றே வழங்குகின்றார்.[1] இதிலிருந்து பெரிப்புளுசு ஆசிரியர் காலமாகிய கி. பி. 70-ல் ஆய் நாடு பாண்டி நாட்டின் ஒரு கூறாக விளங்கியதென அறிகின்றோம். கி. பி. 140-இல் தொலமி என்னும் மேனாட்டு ஆசிரியர் இந் நாட்டினை 'ஆயோயி' (*Aioi*) நாடென்று குறிப்பிடுகின்றார்.[2]

பசும்பூண் பாண்டியன் ஆட்சிக் காலத்திலேதான் ஆய் நாடு பாண்டியமன்னர் ஆட்சிக்கு உட்பட்டது. ஆகையால் பெரிப்புளுசிற் காணப்படும் குறிப்பு அம்மன்னனுக்குப் பிற்

---

1. *W. H. Schoff : The Periplus of the Erythraean Sea, Section 54; pp. 44 ; Section 59, pp. 46 and 211.*
2. *J. W. Mccrindle, Ancient India as described by Ptolemy : section 9, pp. 53-54.*

பட்ட எப் பாண்டியமன்னன் ஆட்சியையும் கருதுவதாக இருக்கமுடியாது. எனவே பெரிப்புளுசு ஆசிரியர் காலத்திலும் (கி. பி. 70) அதற்குப் பின்னரும் ஆய் நாடு பாண்டிநாடென வழங்கியது. ஆனுல் கி. பி. 140-ல் தொலமி என்பவர் அதனை ஆய் நாடெனவே குறிக்கின்ருர். இதற்கு ஒரு காரணம்தான் கூறமுடியும். பசும்பூண் பாண்டியனின் வெற்றிக்குப் பின்னரும் ஆய் பரம்பரையினர் ஆய் நாட்டைப் பாண்டிய மன்னரின் பேராட்சிக்கு உட்பட்டு ஆண்டு வந்திருக்கலாம். தனி ஆட்சியை இழந்ததன் பின்னும் ஆய் நாடு தன் பழம் பெயரால் வழங்கப்பட்டிருத்தல் கூடும். மக்களும் அப்பழம் பெயரையே மிகுதியும் வழங்கியிருக்கலாம். தொலமியும் பாண்டியர் ஆட்சிக்கு உட்பட்டிருந்த அந்நாட்டை மக்கள் வாயிலிருந்து தான் கேட்ட அப்பெயராலேயே வழங்கினர். பசும்பூண் பாண்டியன் காலத்திலேதான் ஆய் நாடு பாண்டிய ராட்சிக்குட்பட்டதனுல் பெரிப்புளுசு ஆசிரியர் வழங்கிய குறிப்பு அப் பாண்டியனுக்கு முற்பட்ட காலத்துக் குரியதன்று ; பசும்பூண் பாண்டியன் அல்லது அவன் வழித் தோன்றலார் காலத்திற்குரியது. மேலும், தொலமியின் குறிப்பும் பசும்பூண் பாண்டியனுக்கு மிகவும் பிற்பட்ட தமிழ் நாட்டைப் பற்றியதாக இருக்கமுடியாது. தொலமி திருவாங் கூரை ஆய் நாட்டின் ஒரு பகுதியெனக் கூறினர். எனவே, பசும்பூண் பாண்டியனுக்கு அண்மையான காலத்துத் தமிழ் நாட்டையே அவர் குறித்தனரெனக் கொள்ளல்வேண்டும். காலச் செலவில் ஆய் மன்னரின் பெருமை மங்கலாயிற்று.

எனவே பெரிப்புளுசு ஆசிரியர் குறித்தது பசும்பூண் பாண்டியன் ஆட்சியையேயெனக் கருதலாம். இப்பாண்டிய அரசன் சோழ வழியில் ஐந்தாம் அரசனுக ஆண்ட உருவப் பல்தேர் இளஞ்சேட் சென்னியின் காலத்தவன். பரணர் இவ்விரு அரசரைப்பற்றியும் பாடியிருப்பது இதற்குச் சான்ருகும்.[3] ஓர் அரசனுக்குரிய ஆட்சிக்காலம் இருபத் தைந்து ஆண்டுகளெனக் கொண்டால், சோழ வழியில் முதன்

3. அகநா : 162 ; புறநா : 4.

முதல் ஆண்ட வெளியன்தித்தன் கி. மு. 50-ம் ஆண்டில் அரசு கட்டிலேறியிருக்கலாம். சோழர் பரம்பரையில் கடைசியாக ஆண்டவன் கோச்செங்கணன் என முன்பு கூறினோம். இவன் அவ்வழியில் பத்தாவதாக ஆண்ட அரசன். பசும்பூண் பாண்டியனுடன் ஒத்த காலத்தவனாகிய உருவப்பல்தேர் இளஞ்சேட்சென்னிக்குப் பின் தொடங்கிக் கோச்செங்கணன் இறுதிக் காலம் வரை ஆண்ட சோழ அரசருக்கு இருபத்தைந்து ஆண்டுகள் வீதம் கணித்துப் பார்த்தால் சோழர் ஆட்சி கி. பி. 200-உடன் முடிவடையும். எனவே கி. மு. முதலாம் நூற்றாண்டு தொடங்கிக் கி. பி. மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதி வரையுள்ள காலப்பரப்பைச் சங்க காலமென ஒருவாற்றாற் கொள்ளலாம்.

இக்கொள்கை ஏற்புடைத்தோ என்பதைப் பழைய கிரேக்க உரோம ஆசிரியர் தரும் அரசியல் சமுதாயச் செய்திகளையும் சங்க இலக்கியங்களில் காணப்படும் அத்தகைய செய்திகளையும் ஒப்பிட்டுப் பார்ப்பதனால் அறியலாம். மேலை நாட்டு ஆசிரியரும், சங்கநூற் புலவரும் தமிழ்நாட்டு அரசியல் நிலையைப் பற்றித் தரும் செய்திகள் ஒத்திருக்கின்றனவோ என்பது முதலிற் கவனித்தற்குரியது. தொலமி என்பவர் தமிழ் நாட்டின் பல்வேறு பிரிவுகளையும் கூறி அவற்றுள் "*Paralia of the Soretai*" என்பதும் ஒன்று என்று கூறுகின்றார்.[4] இது கடற்கரையைச் சார்ந்த பகுதியென்றும் அவர் அவ்விடத்தில் குறிப்பிடுகின்றார். பெரிப்புளுசு ஆசிரியரும் இவ்வாறே கூறுகின்றார்.[5] தொலமியின் நூலையும் பெரிப்புளுசு என்னும் நூலையும் மொழிபெயர்த்தவர்கள் இது சோழர்க்குரிய கடற்கரைப் பகுதியைக் குறிக்கின்றதெனக் கூறுகின்றனர். கால்டுவெல் ஐயர் 'சொறற்றை' என்பது சோழரைக் குறிக்குமென்று காட்டியிருக்கின்றார்.[6]

---

4. *Section 13 p. 64 and section 91. p. 884.*
5. *Section 58 p. 46 and section 60. pp. 47 and 234.*
6. *Comparative grammar of the Dravidian Languages p. 96.*

சோழரைப்பற்றி முன்பு கூறிய பகுதியிற் சோழ அரசர் இரு வழியினைச் சேர்ந்தவர் என்றும், அவற்றில் ஒன்று உறந்தையில் இருந்து அரசாண்ட கிள்ளிவழியென்றும், மற்றது கடற்கரைப் பகுதியாகிய நெய்தலங்கானலை அழுந்தூரிலிருந்து ஆண்ட சென்னிவழி என்றும் கூறினோம். எனவே நெய்தலங்கானல் என்பது நெடுங்காலம் தனியரசாக இருந்து வந்ததென்பது பெறப்படும். பின்னர் கிள்ளி சென்னி வழிகளை ஒன்று சேர்த்த சேட்சென்னி நலங்கிள்ளி என்பவன் காலத்தில் தனியரசு என்ற பெருமையை இப்பகுதி இழந்தது. எனவே தொலமியின் கூற்று சேட்சென்னி நலங் கிள்ளி காலத்துத் தமிழகத்தையே எடுத்துக் கூறுகின்றது.

மேலும் கருவூர் ஏறிய ஒள்வாள் கோப்பெருஞ்சேரல் இரும்பொறை என்பவன் காலத்திற் கருவூரிற் சேரர் ஆட்சி நிறுவப்பெற்றதையும், கொற்கை வேந்தன் நெடுந்தேர்ச் செழியன் காலத்திற் பாண்டியராட்சி கூடல் அல்லது மதுரையில் நிறுவப்பட்டதையும் மேலே முதலாம் இயலிற் கூறினோம். இவ்விரு நகரங்களும் முறையே சேரருக்கும் பாண்டியர்க்கும் தலைநகரங்கள் எனத் தொலமியும் குறிப்பிடுகின்றார்.[7] மேலும் மாகூரும் (*Magour*) கர்மாரமும் (*Kamara*) சோழதேசத்து உள்நாட்டுப் பட்டணங்கள் என்று அவர் கூறுகின்றார்.[8] தொலமி காலம் கி. பி. 140-ஆக இருப்பதனால் அதற்கு முன்னர் இவ்விரு பட்டணங்களும் சோழர் ஆதிக்கத்திற்கு உட்பட்டிருந்திருத்தல் வேண்டும். மாகூர் என்பது சங்ககாலத்துப் பழையனது மோகூரே யென்று சிவராச பிள்ளை கருதுகின்றனர். சோழ பரம்பரையில் மூன்றாவது அரசனாக ஆண்ட முதலாம் கரிகாலனால் சோழத் தனியரசுடன் இணைக்கப்பட்ட கழுமலமே கர்மாரம் என்பது அவர் கருத்தாகும்.[9]

---

7. *Sec. 85. p. 180 and Sec. 88, pp. 183-184.*
8. *Sec. 91. p. 184.*
9. *K. N. Sivaraja pillai : The chronology of the Early Tamils p. 174.*

வேறுமொரு சான்று பதிற்றுப்பத்து இரண்டாம் பத்தின் பதிகத்திற் காணப்படும். நெடுஞ்சேரலாதன் என்ற சேர அரசன் யவனரைச் சிறையிருத்திக் கைகளை முதுகுப் புறத்திற் கட்டித் தலையிலே நெய்யூற்றிப் பங்கப்படுத்தின னென்று இப்பதிகம் கூறுகின்றது.[10] பெரிப்புளுசு ஆசிரியர் பைசாந்தியம் (*Byzantium*) என்னும் ஓர் இடம் தமிழ் நாட்டின் ஒரு பகுதியாக இருந்ததெனக் கூறுகின்றார்.[11] பெரிப்புளுசு நூலினைப் பதிப்பித்த சோப்பு (*Scyoff*) என்னும் அறிஞர், கிரேக்கர் தென்னிந்தியாவில் வாழ்ந்த இடமே பைசாந்தியம் எனப்பட்டது என்று கருதினர்.[12] இங்கே குறிக்கப்பட்ட கிரேக்கர் சங்க நூல்களிற் கூறப்படும் யவனரே யாவர். இவ் யவனர் தமிழ் மன்னருக்குச் செய்யும் பணிகளைப் பற்றிச் சங்கநூல்கள் விரிவாக எடுத்துக் கூறுகின்றன.[13]

பழந்தமிழ் நாட்டு ஊர்ப் பெயர்களிலும் நகர்ப் பெயர் களிலும்கூடக் கிரேக்க உரோம ஆசிரியர் நூல்களும் சங்க நூல்களும் ஒத்திருக்கின்றன. பெரிப்புளுசு என்னும் நூலின் பல பகுதிகளில் 'தமரிக்கா' (*Damirica*) என்னும் பெயர் காணப்படுகின்றது.[14] இந்நூற் பதிப்பாசிரியராகிய சோப்பு என்பவர் "தமரிக்கா என்பது தமிழர் நாடு எனப் பொருள் படும்; அதாவது கிறித்துவின் காலத்திற்கு முன்பின்னாக உள்ள தென்பகுதித் திராவிடரை அப்பெயர் குறிக்கும்" எனக் கூறுகின்றார்.[15] தொலமி இதனையே திமிரிக்கே

---

10. நயனில் வன்சொல் யவனர்ப் பிணித்து
நெய்தலைப் பெய்து கைபிற் கொளீஇ.
பதிற். 2-ம் பத்துப் பதிகம் : 8—9.

11. *Section 53. pp. 43 and 201.*

12. *p. 201.*

13. 'மேனாட்டு வணிகர் குழாங்கள்' என்னும் பகுதியை பார்க்க.

14. *Sec. 31, 32, 47, 51, 53, 57 and 60.*

15. *p. 205.*

(*Dimirike*) என்பர்.[16] இதற்குத் 'தமிழகம்' என்பதே கருத்து என்று கூறலாம். சிவராசபிள்ளை கூறுவதுபோல அக்காலத்தில் தென்னாடு தமிழகம் என்றும் வடநாடு ஆரியகம் என்றும் வழங்கப்பட்டிருக்கலாம்.[17] இந்தியக் குடாநாட்டின் வடபகுதியில் வாழ்பவரைத் தமிழர் ஆரியரென அழைத்தனர். ஆரியகத்தைப் பெரிப்புளுசு ஆசிரியர் 'ஆரியக்க' (*Ariacca*) என்று கூறுவதும் குறிப்பிடத்தக்கது.[18]

மேலும் கொட்டநாற என்று பெரிப்புளுசு ஆசிரியர் கூறுவது குட்டநாட்டையே.[19] குட்டநாடு என்பது சேரர் கருவூரைக் கைப்பற்றுமுன் ஆண்டுவந்த நிலப்பகுதியாகும்.

மேனாட்டு நூலாசிரியர்களும் சங்க காலச் சான்றோரும் குறித்த சில நகரங்களைப் பிற்காலத்து நூலாசிரியர்கள் குறிப்பிடாததும், கவனித்தற்குரியது. இந்நகரங்கள் சங்க காலத்தோடு சிறப்பொழிந்து அழிந்துபோயின. கருவூர், கொற்கை, காவிரிப்பூம்பட்டினம் ஆகிய நகரங்கள் சங்க இலக்கியங்களில் மிகுதியும் குறிப்பிடப்படுகின்றன. தொலமி 'கேரோ பொத்துரர்' (*Kerobothros*)க்குரிய தலைநகரான 'கருரா'வைக் (*Karoura*) குறிக்கின்றார்.[20] இது சேர நாட்டுத் தலைநகரான கருவூரையே உணர்த்தலாம் எனக் கால்டுவெல் ஐயர். கருதுவர்.[21] காவிரிப்பூம்பட்டினத்தைக் 'காபேரிசு' (*Khaberis*) எனத் தொலமி குறித்திருக்கின்றார்.[22] இந்தக் காபேரிசு காவிரிப்பூம்பட்டினந்தானென

---

16. *p*. 48.
17. *chronology of the Early Tamils. pp*. 175-176.
18. *Sec*. 6, 14 *and* 41.
19. *Sec*. 56. *p*. 45.
20. *Sec*. 86. *p*. 180.
21. *Comparative grammar of rhe Dravidian Languages p*. 92.
22. *p*. 63.

டாக்டர் பெர்ணல் கூறுகின்ருர்.[23] பெரிப்புளுசில் 'கொல்கி' (*Colchi*) என்று ஒரு நகரம் கூறப்படுகின்றது.[24] இது சங்க நூல்களிற் காணப்படும் கொற்கையே என்று சோப்புக் கூறுவர்.[25]

உரோம நாட்டுக்கும் தமிழ் நாட்டுக்கும் இருந்த வாணிபத் தொடர்பைப்பற்றி மேனுட்டு ஆசிரியர் கூறுவனவற்றிற்கும் சங்க நூலாசிரியர் கூறுவனற்றிற்குமிடையே ஏதேனும் ஒற்றுமை இருக்கின்றனவா என்பதை ஆராய்வோம். கிறித்துவுக்குப் பின்னுள்ள இரண்டொரு நூற்ருண்டுகளில் உரோமாபுரிக்கும் இந்திய நாடுகளுக்கும் நெருங்கிய வாணிபத் தொடர்பு இருந்ததென்பது வரலாற்று உண்மை. பெண்கள் அழகு செய்வதற்கான வாசனைத் திரவியங்களை இந்தியாவினின்றும் இறக்குமதி செய்வதனுல் உரோம நாட்டின் செல்வம் வீணுகச் செலவானதைத் தசித்தசு என்னும் மேனுட்டாசிரியர் குறிக்கின்ருர்.[26] உரோமரின் பொன் இவ்வகையில் வீணுக்கப்படுவதைப்பற்றிப் பிளினியும் கூறுகின்ருர்.[27] சோப்பு என்பவர் தமிழ்நாட்டு வியாபாரிகள் மிளகு வியாபாரத்தால் ஈட்டும் பெருஞ்செல்வத்தைப் பற்றிக் குறிப்பிடுகின்ருர்.[28]

மேலை நாட்டு நூலாசிரியர்கள் தரும் இச்செய்திகள் சங்க நூல்களுட் காணப்படும் செய்திகளோடு ஒத்திருக்கின்றன. அகநானூறு பொன்னேடு வந்து கறியொடு பெயரும்

---

23. *Dr. Burnell : Indian Antiquary Vol. 7. p. 40.*
24. *Sec. 59, p. 46.*
25. *pp. 211 and 237.*
26. *Tacitus : Annals iii 53.*
27. *Pliny : Nat. Hist. VI. 26.*
28. *p. 214.*

பிறதேயத்தவரைப் பற்றிக் குறிப்பிடுகின்றது.[29] கடலால் வந்த நிமிர்ந்த செலவினையுடைய குதிரைகளும் மிளகுப் பொதிகளும் வேறு அரிய பெரிய பொருள்கள் பலவும் திரண்டு, செல்வம் தலை தெரியாது அகன்றுள்ள இடங்களை உடைய தெருக்களைப்பற்றிப் பட்டினப்பாலை பாடுகின்றது.[30] நாட்டுப் பொருள்களை விற்றுப் பொன்னுடன் திரும்பிவரும் பெரும் நாவாய்களைப்பற்றி மதுரைக் காஞ்சி பாடுகின்றது.[31] இத்தகைய பல குறிப்புக்கள் சங்க நூல்களிற் காணப் படுகின்றன. அவற்றையெல்லாம் இந்நூலில் வியாபாரம் பற்றி வரும் பகுதியிற் கண்டுகொள்க. மேற் கூறியவற்றாற் சங்க நூல்களும் பெரிப்புளுசு போன்ற மேனாட்டு வரலாற்று நூல்களும் ஒரு காலத்தன என்பது புலனாகும். எனவே, சங்க நூல்களில் வியாபாரத்தைப்பற்றிக் காணப்படும் செய்திகள் இம்மேனாட்டு வரலாற்று நூலாசிரியர் வாழ்ந்த காலத்திற்கே உரியன. அதாவது கி. பி. மூன்றும் நூற் றாண்டுக்கு முற்பட்ட காலப்பகுதிக்கே அவை உரியன.

மேல்நாட்டு வணிகத்தின் பயனாகத் தமிழ்நாட்டில் வந்து குவிந்த உரோம நாணயங்களைப்பற்றி மேலே கூறினோம். கீழ் நாடுகளிலிருந்து அளவுக்கு மிஞ்சிய சுகபோக பொருட்களை

---

29. யவனர் தந்த வினைமாண் நன்கலம்
பொன்னொடு வந்து கறியொடு பெயரும்.
அகநா. 149 : 9—10.

30. நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்
காலின் வந்த கருங்கறி மூடையும்
........................................
அரியவும் பெரியவு நெரியவு ஈண்டி
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகின்.
பட்டினப் : 185—193.

31. பொன்மலிந்த விழுப்பண்ட
நாடார நன்கிழிதரு
மாடியற் பெருநாவாய். மதுரை : 81—83.

இறக்குமதி செய்தமையே உரோம நாட்டு நாணயம் மதிப் பிழந்ததற்குக் காரணம் என்று சோப்புக் கருதுகின்றனர்.[32] வெள்ளாளூர், கருவூர், மதுரை முதலிய இடங்களிற் கண்டெடுக்கப்பட்ட உரோமநாணயங்கள் சென்னை நூதன சாலையில் உள்ளன. இவை இந்தியாவுக்கும் மேல்நாடுகளுக்கும் வியாபாரத் தொடர்பு மிகுதியாக இருந்த காலப்பகுதிக் குரியன. அலெச்சாண்டிராவில் நடந்த படுகொலை காரண மாகவும் உரோமத் தனியரசின் வீழ்ச்சி காரணமாகவும் கி பி. மூன்ரும் நூற்ருண்டுக்குப் பின் இவ்வாணிபம் தடை பட்டது. எனவே உரோம நாணயங்கள் கி. பி. மூன்ரும் நூற்ருண்டுக்கு முற்பட்ட பகுதியிலேயே தமிழ்நாட்டிற்கு வந்திருத்தல் வேண்டும்.

மேலும் கி. பி. நான்காம் நூற்ருண்டுக்கும் ஏழாம் நூற் ருண்டுக்கும் இடையேயுள்ள காலப்பகுதியில் தமிழ்நாட்டின் அரசியல் நிலை மிகவும் குழம்பி இருந்தது. அந்நிலையில் வாணிபம் செழித்திருக்க முடியாது. பல்லவ அரசர் ஏழாம் நூற்ருண்டில் தமது ஆட்சியை நிறுவும் வரை தமிழ் நாட்டு அரசியலும் சமுதாய அமைப்பும் சீர்குலைந்து கிடந்தன. இதனுல் அக்காலப்பகுதியின் வரலாறே தெளிவாகத் தெரிய வில்லை. மேலும் பல்லவர் காலத்தில் எழுந்த நூல்களிலும் தமிழ் மக்களின் வெளிநாட்டு வாணிபத்தைப்பற்றிய செய்திகள் காணப்படவில்லை. எனவே மேற்குறித்த வியா பாரத் தொடர்புகள் யாவும் பல்லவர் காலத்துக்கு முன் தமிழ்நாட்டு அரசியல் நிலைமை சீருடன் சிறப்புற்றிருந்த ஒரு காலப் பகுதிக்கே உரியனவாக இருத்தல்வேண்டும். இது கிறித்துவுக்குப் பின் அடுத்து வந்த இரண்டு மூன்று நூற் ருண்டுகளைக் கொண்ட காலப்பகுதியாகும்.

சோப்பு என்பவர் தென்னுட்டில் கண்டெடுக்கப்பட்ட நாணயங்களைப்பற்றிப் பின் வருமாறு கூறுகின்ருர்: "இவற்றுள் தைபேரியசு, (*Tiberius*) கலிகுலன் (*Caligula*) குளோடியசு (*Claudius*) நேரோ (*Nero*) ஆகியோர் காலத்திற்

32. *p. 219.*

குரியன பல. வெசுப்பாசியன் (*Vespasian*) தைத்தசு (*Titus*) ஆகியோர் காலத்திற்குரிய நாணயங்கள் மிகச்சிலவே இந்தியா முழுவதிலுங் கண்டு எடுக்கப்பட்டன. தொமிசியன் (*Domitian*) நேவா (*Nerva*) திரேசன் (*Trajan*) கேத்திரியன் (*Hadrian*) முதலிய மன்னர் காலத்து நாணயங்களும் பல இடங்களில் உள. இவர்களுக்குப் பின்பு கொமோடசு (*Commodus*) காலத்து நாணயங்களே கிடைத்துள்ளன.''[33] இம்மன்னர் யாவரும் கி. பி. முதலாம் இரண்டாம் நூற்றாண்டுகளில் வாழ்ந்தவர். எனவே, பழந்தமிழ் நூல்களிலிருந்து பெறப்படும் செய்தியும் இந்திய வாணிகம்பற்றி மேலைத்தேய ஆசிரியர் எழுதிய வரலாற்றுக் குறிப்புகளும் ஒத்திருத்தலும், பழைய உரோம நாணயங்கள் தரும் சான்றும், சங்க காலத்தை வரையறுக்க உதவுகின்றன.

கி. மு. மூன்றும் நூற்றாண்டுக்கு முன்னரும், கி. பி. மூன்றும் நூற்றாண்டுக்குப் பின்னரும் சங்க நூல்கள் எழவில்லை என்பதற்கு இன்னும் சில சான்றுகள் உள்ளன. சங்கமருவிய காலத்திற் போலச் சங்க காலத்தில் ஆரியப் பண்பாட்டின் செல்வாக்கு அவ்வளவாக இருக்கவில்லை என்பது இந்நூலிற் காட்டப்படும். அவ்வாறாயினும் சங்க காலத்திற் சமண பௌத்த சமயக் கொள்கைகள் பரவத் தொடங்கிவிட்டன என்பதற்குச் சங்க நூல்களிலேயே சான்றுகள் உள. புத்த நெறியும் சமண நெறியும் கி. மு. மூன்றும் நூற்றாண்டில் அல்லது அதற்குப் பின்னரேதான் தமிழ் நாட்டிற் புகுந்திருத்தல் வேண்டுமென்று அறிஞர் கருதுகின்றார்கள்.[34] எனவே, சங்க நூல்கள் கி. மு. மூன்றும் நூற்றாண்டுக்கு முன்னர் எழுந்திருக்க முடியாது.

சங்க நூல்களின் மொழி அமைதியைப்பற்றிய இந்நூற் பகுதியில், பிற்கால நூல்களிலும் பார்க்கச் சங்க நூல்களில்

---

33. *p.* 220.

34. *M. S. Ramaswami Ayyangar : Studies in South Indian Jainism. Chs. II and III.*

வடமொழிச் சொற்கள் மிகவும் குறைவாக இருப்பதைக் காட்டுவோம். சங்க நூல்களுட் காணப்படும் சொல் உருவங் களுட் சில பிற்காலத்து நூல்களிற் காணப்படவில்லை. பிற்காலத்தில் வழக்கொழிந்த சில சொற்களும் சங்க நூல்களில் உள. சங்க நூல்களின் யாப்பும் தனிப்பட்ட பண்பு வாய்ந்தது. அந்நூல்கள் யாவும் ஆசிரியத்திலும் வஞ்சியிலும் அமைந்தவை. சங்க மருவிய காலத்து நூல்கள் பெரும்பாலும் வெண்பாவாலும் பல்லவர் காலத்து நூல்கள் பெரும்பாலும் விருத்தத்தாலும், துறையாலும், தாழிசையாலும் ஆனவை. இவ்வேற்றுமைகள் யாவும் சங்க நூல்களைப் பிற்காலத்து நூல்களிலிருந்து பிரித்து வைக்கின்றன.

சங்க நூல்கள் காதலையும் போரையும் பாடின. பிற்கால நூல்கள் ஒழுக்கத்தினையும், கடவுளையும், கடவுளை அடையும் வழியையும் பாடின. சங்க நூல்கள் ஆங்காங்கு சமய வழக்கங் களைப்பற்றிக் கூறிச்சென்ற போதும், ஒரு நூலாயினும் சமயச் சார்பான நூலாக அமையவில்லை. சமுதாய வாழ்வில் ஆரிய நாகரிகத்தின் செல்வாக்குச் சிறிது இருந்தபோதும் சாதிக்கட்டுப்பாடு சங்க காலத்தில் இருக்கவில்லை. முற்காலத் துக்கே சிறப்பாக உரிய சில சமூக மரபுகளும் சங்க நூல்களில் உள்ளன. சங்க மருவிய காலம் பல்லவர் காலம் ஆகிய பகுதி களில் வழக்கிலில்லாத ஆதிக்காலச் சமய கூறுபாடுகளையும் சங்க நூல்கள் கூறுகின்றன. இவ்வாறு தமிழர் சால்பிற் காணப்படும் பண்புகள் பல சங்க நூல்களைக் கி. பி. மூன்றாம் நூற்றாண்டுக்கு முற்பட்ட காலப்பகுதிக்கு உரியவாக்கு கின்றன.

அக்காலத்துத் தமிழ் நாட்டு வரலாற்றை ஆராயு மிடத்து, சங்க நூல்கள் பல்லவரைப்பற்றி ஓரிடத்திலாயினும் குறிப்பிடாதிருத்தல் நோக்கற்பாலது. அவர்கள் கி. பி. ஏழாம் நூற்றாண்டிலேயே செல்வாக்குப் பெற்று இருந்த போதும், கி. பி. நான்காம் நூற்றாண்டு வரையில் அவர்கள் அரசு நடத்தத் தொடங்கி விட்டனர். இதனை அவர்கள் வெளி யிட்ட பாகதச் சாசனங்களிலிருந்து அறிகின்றோம். முடியுடை

மன்னரையும் குறுநில வேந்தரையும் அடைந்து, அவர்கள் புகழையும் வீரத்தினையும் கொடைச் சிறப்பினையும் பாடிய சங்க காலப் புலவர் ஒருவராவது பல்லவரைப்பற்றிக் குறிப் பிடாதிருத்தல் சங்க நூல்கள் கி. பி. நான்காம் நூற்றுண்டுக்கு முற்பட்டவை என்ற கொள்கையை வலியுறுத்தும்.

இதுகாறும் கூறியவற்றைத் தொகுத்துத் பின்வருமாறு கூறலாம். பசும்பூண் பாண்டியன் ஆய் நாட்டைக் கைப் பற்றியது ஏறக்குறைய கி. பி. எழுபதாம் ஆண்டிலாகும். இவனுக்கு முன்பும் பின்பும் ஆண்ட அரசர் ஒவ்வொருவரும் இருபத்தைந்து ஆண்டுகள் வரை ஆண்டனர் எனக்கொண்டு கணக்கிட்டால் கி. மு. ஐம்பது தொடக்கம் கி. பி. இருநூறு வரையுள்ள காலப் பகுதியைச் சங்க காலம் எனக் கொள்ள லாம். எனவே பொதுவாகக் கூறுமிடத்துச் சங்க நூல்களைக் கி. மு. முதலாம் நூற்றுண்டு தொடக்கம் கி. பி. மூன்றும் நூற்றுண்டின் முற்பகுதி வரையுள்ள நூற்றுண்டுகளுக்கு உரியன என வரையறுக்கலாம். தமிழ் நாட்டின் அரசியல் நிலை, பூகோள அமைப்பு, வாணிகம் முதலியவற்றைப்பற்றிச் சங்க நூல்கள் தரும் செய்திகள் அக்காலத்து மேனுட்டு ஆசிரியர் குறிப்புக்களுடன் ஒத்திருத்தலும் இதனை வலி யுறுத்துகின்றது. மேலும் சங்க நூல்களின் மொழி யமைப்பு, அவை எடுத்துக் கூறும் சமூக அமைப்பு, சமய வாழ்க்கை முதலியன அவற்றை மேலே குறித்த காலப் பகுதிக்கே உரியனவாக்குகின்றன.

———

## மூன்ரும் இயல்

# அரசியல் அமைப்பு

சங்ககாலத்தில் முடியாட்சியே வழக்கிலிருந்தது. அக் காலத்தில் அரசாண்ட மன்னர் மிகுந்த வலிமை படைத்தவ ரெனக் கொள்ளுதல் பொருந்தாது. பிற்காலத்திற் பல்லவ பாண்டிய சோழ மன்னர் ஆண்ட அளவு நிலப்பரப்பைச் சங்க காலச் சேர சோழ பாண்டிய அரசர் ஆளவில்லை. ஏனெனில், அக்காலத்திற் பல குறுநில மன்னர் குன்று சார்ந்த நாடுகளில் வாழ்ந்தனரெனத் தெரிகின்றது. பாண்டி நாட்டிலே பழனி மலையைப் பேகனும், பறம்புமலையைப் பாரியும், கோடைமலை யைக் கடியநெடுவேட்டுவனும், பொதியமலையை ஆயும் ஆண்டு வந்தனர். இதுபோலவே சோழ நாட்டிலே கொல்லி மலையை வல்வில் ஓரியும், குதிரைமலையை அதிகமானும், தோட்டிமலையைப் பெருநள்ளியும் ஆண்டு வந்தனர்.

சங்க காலத்தில் அரசு செலுத்திய பேரரசரும் தொடக் கத்திற் சிறு கூட்டத்தினருக்குத் தலைவராக இருந்திருத்தல் வேண்டும். சங்க காலத்தின் நடுப்பகுதியில் அவர் பேரரச ராய் மாறும் நிலையை அடைந்தனரென அக்கால நூல்கள் வாயிலாக அறிகின்ருேம். தமிழ்நாடு சங்க காலத்தில் மக்கள் ஒழுக்கங்களை அடிப்படையாகக் கொண்டு ஐந் நிலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. கடற்கரையைச் சார்ந்த நெய்தல் நிலத்தில் உள்ளவர் பரதவர் எனப்பட்டனர். மலைகளிலும் மலை சார்ந்த நிலமுமாகிய குறிஞ்சியில் வாழ்ந்தவர் குறவர் எனப் பட்டனர். காட்டு நிலமாகிய முல்லையில் வாழ்ந்தவர் ஆயர் எனப்பட்டனர். அவர்கள் இடையர்கள். ஆற்ருேரங்களைக் கொண்ட மருதநிலத்தில் உழுதுண்டு வாழ்ந்தவர் உழவர். பாலைவனப் பகுதிகளில் வேட்டையாடியும் கொள்ளையடித்தும் வாழ்ந்து வந்தவர் எயினர்.

இந்த ஐந்திணை மக்களுள் ஆயர் தமக்கு ஒரு தலைவனை அமைத்து அவனைக் கோ என்னும் பெயரால் அழைத்தனர்.

உழுதுண்டு வாழ்ந்தோர் தம் தலைவனை வேள் என அழைத்தனர். தமிழ் மக்களுடைய பண்பாட்டு வளர்ச்சியில் முல்லை நிலமும் அந்நில வாழ்க்கையும் ஒரு சிறந்த நிலையை அடைந்திருந்தன. ஆடு, மாடு, எருமை முதலிய காட்டு மிருகங்களைப் பழக்கி, அவற்றை வளர்த்து, அவை அளித்த பால், தயிர், வெண்ணெய் முதலியவற்றை விற்று இடையர் பொருள் ஈட்டினர். எண்ணிறந்த ஆடு மாடுகளை வைத்திருந்த குடும்பத்தவரின் தந்தை, செல்வ மிகுதியால் முதன்மை பெற்றான். பல குடும்பங்களுக்கு அவன் தலைவனானான். கோன் என்னும் இடையரைக் குறிக்கும் சொல்லே அரசனையும் குறித்தது. எனவே நாட்டிற்குத் தலைவனாயிருக்கும் அரசனின் தலைமை முல்லை நிலத் தலைவனிடமே தோன்றியிருத்தல் வேண்டும். ஈற்றில், பொருளாதாரத்திலும் தொகையிலும் சிறந்த உழவர் (மருதநிலத்) தலைவனே தமிழ் நாட்டு அரசியலில் வலிமை சிறந்து விளங்கினான். அதன் மேல் ஆயர், குறவர், பரதவர் எயினர் முதலிய ஏனைய பிரிவினர் அவனுக்கு அடிபணிந்து வாழ்ந்தனர்.

இவ்வுண்மையைச் சங்ககாலச் சோழ மன்னர் மூவருடைய பெயர்கள் விளக்க வல்லன. உறையூரைக் கைக்கொண்டு சோழ அரசை நிலைநாட்டியவன் வீரை வேள் மான் வெளியன் தித்தன். 'வேள்மான்' என்பதிலிருந்து இவன் மருதநிலத்து மக்களுக்குத் தலைவனாய் விளங்கினான் என்பது போதரும். இரண்டாம் அரசன் பெயர் போர்வைக்கோ தித்தன் வெளியன். இங்கும் 'கோ' என்பதிலிருந்து இவன் முல்லை நிலத்திற்கு மட்டும் தலைவனாகத் திகழ்ந்தான் என அறியலாம். மூன்றாவது மன்னன் முடித்தலைக்கோ என்பவன். 'முடித்தலைக்கோ' என்னும் தொடரிலிருந்து ஐந்திணை மக்களின் தலைவரை வென்று, அவர் யாவர்க்கும் மேலான ஒப்புயர்வற்ற தலைவன் என்பதற்கு அறிகுறியாக முடிசூடி, ஆட்சிசெலுத்தினான் என்று கொள்ளலாம். இங்கே காட்டியவற்றிலிருந்து குறுநில மன்னர் படிப்படியாக முடிவேந்தரான வரலாற்றை அறியலாம்.

## (1) அரச உரிமை

அரச உரிமை வழி வழியாக வந்தது. தேர்தல் இருந்த தாகத் தெரியவில்லை. தந்தைக்குப் பின்னர் மகன் பட்டத்துக்கு வருவதே முறைமை.[1] அரசருக்கு ஆண் குழந்தை இல்லாத காலத்திற்றான் இவ்வழக்கம் தவறியது. எடுத்துக்காட்டாகச் சோழ பரம்பரையில் வேல் பல் தடக்கைப் பெருவிறல் கிள்ளியின் ஆட்சி வரை கிள்ளி பரம்பரையினரே உறந்தையிலிருந்து ஆண்டு வந்தனர். அவனுக்குப் பின் சென்னி பரம்பரையைச் சேர்ந்த உருவப் பல் தேர் இளஞ்சேட் சென்னியே அரசனானான். இம் மாற்றம் வேல் பல் தடக்கைப் பெருவிறல் கிள்ளிக்கு ஆண் மகவு இன்மையால் ஏற்பட்டிருத்தல் வேண்டும். அந் நிலைமையைப் பயன்படுத்தி உருவப்பல்தேர் இளஞ்சேட் சென்னி உறந்தைக்கு அரசனானான்.

இதனால் ஒருவன் அரச பட்டத்துக்கு வருவது எப்பொழுதும் அமைதியாக நிகழ்ந்தது என்று கொள்ளக்கூடாது. சேர பாண்டிய அரச பரம்பரையில் அரசுரிமையைப்பற்றித் தகராறு ஏதேனும் நிகழ்ந்ததாகத் தெரியவில்லை. ஆனால் சோழநாட்டில் பல உள்நாட்டுக் கலகங்களும் பட்டத்துக்கு உரிமை பற்றிய பல தகராறுகளும் நடந்தன. இரண்டாம் கரிகாலன் அரசு கட்டிலேறிய வரலாறு இதற்கு ஏற்ற எடுத்துக்காட்டாகும். சென்னி பரம்பரையைச் சேர்ந்த அவன் தகப்பனாகிய உருவப் பல்தேர் இளஞ்சேட் சென்னி தனது பரம்பரையினரைச் சோழ அரசுரிமைக்கு உரியவராக்கிய அன்றே, கிள்ளி வழியினருக்கும் சென்னி வழியினருக்கும் தீராத பகையையும் போட்டியையும் உண்டாக்கி விட்டான். எனவே இரண்டாம் கரிகாலன் பட்டமேற்றல் அமைதியான சூழ்நிலையில் நடைபெறவில்லை. அவன் சிறையிலிருந்து தப்பி ஓடித் தன் உரிமையைப் பெறவேண்டி

---

1. மூத்தோர் மூத்தோர்க் கூற்ற முய்த்தெனப்
பாறர வந்த பழ விறற் றாயம். புறநா. 75 : 1–2.

யிருந்தது. கரிகாலன் வீரத்துடன் தன் அரசுரிமையைப் பெற்ற வரலாற்றைப் பட்டினப்பாலை விரிவாக எடுத்துக் கூறுகின்றது[2].

இன்னும், நலங்கிள்ளியும் நெடுங்கிள்ளியும் பகைமை கொண்டு பலகாலம் போர் புரிந்தனர். அவர்கள் பகைமையைத் தீர்ப்பதற்குப் புலவர்கள் செய்த முயற்சிகள் யாவும் வீணாகவே ஒழிந்தன. நெடுங்கிள்ளியை முற்றுகை யிட்ட நலங்கிள்ளிக்குச் சமாதானத்தின் சிறப்பினை அறிவுறுத்துவது புறநானூறு 45-ம் செய்யுள். "உன்னுடைய பகைவன் பனைமாலை சூடிய சேரனுமல்லன், வேம்பினது தாரையுடைய பாண்டியனுமல்லன்; உன்னைப்போல் ஆத்தி யாற் கட்டப்பட்ட கண்ணியையுடைய சோழனே. எனவே இவ்வுள்நாட்டுக் கலகம் சோழ மரபுக்கே தீமை விளைவிக்க வல்லது" என்று கோவூர்கிழார் பாடுகின்றார்.[3]

தந்தையர் காலத்திலேயே இளவரசர் மாகாணங் களுக்குத் தலைவராக நியமிக்கப்பட்டனர் என்பதற்கு நேரடியான சான்றுகள் இல்லை. ஆனால் இவ்வாறு

---

2. பிறர், பிணியகத் திருந்து பீடுகாழ் முற்றி
யருங்கரை கவியக் குத்திக் குழிகொன்று
பெருங்கை யானை பிடிபுக் காங்கு
நுண்ணுதி னுணர நாடி நண்ணார்
செறிவுடைத் திண்காப் பேறி வாள்கழித்
துருகெழு தாய மூழி னெய்தி.

பட்டினப். 222—227.

3. இரும்பனை வெண்டோடு மலைந்தோ னல்லன்
கருஞ்சினை வேம்பின் றெரியலோ னல்லன்
நின்ன கண்ணியு மார்மிடைந்தன்றே, நின்னொடு
பொருவோன் கண்ணியு மார்மிடைந் தன்றே
ஒருவீர் தோற்பினுந் தோற்பதுங் குடியே
இருவீர் வேற லியற்கையு மன்றே, அதனால்
குடிப்பொரு ளன்றுநுஞ் செய்தி. புறநா. 45 : 1-7.

நிகழ்ந்தமைக்கு ஒரு சோழனுடைய விருதுப்பெயர் குறிப்பாக அமைந்துள்ளது. இரண்டாம் கரிகாலனுடைய தந்தை பெயர் உருவப் பல்தேர் இளஞ்சேட் சென்னி என முன்பு கூறப்பட்டது. இத்தொடருக்குக் கருத்து 'பல உருவங்கள் கொண்ட தேர்களை உடைய தூரத்து மண்டலத்துக்குத் தலைவனாகிய இளமை வாய்ந்த சென்னி' என்று கூறலாம். தூரத்திலுள்ள மாகாணம் ஒன்றனை ஆண்டமையாலேதான் இப்பெயரை அவன் பெற்றான் போலும்.

## (2) அரசர்கள்

சங்க காலத்தில் நடைமுறையிலிருந்த அரசியல் முறைமையைப்பற்றி ஆராய்ந்த அறிஞர்கள் யாவரும் தம்முடைய ஆராய்ச்சிக்கு அடிப்படியாகச் சிலப்பதிகாரத்தையும் திருக்குறளையுமே கொண்டனர்.[4] இவ்விரு நூல்களும் சங்கமருவிய காலத்தனவென முன்பு காட்டியுள்ளோம். ஆதலினால் இவற்றைச் சங்ககாலத் தமிழ் மக்கள் வாழ்க்கையைப் பற்றிய ஆராய்ச்சிக்கு அடிப்படையாகக் கொள்ளுதல் பொருந்தாது. பத்துப் பாட்டு, எட்டுத்தொகை நூல்களுட் காணப்படும் தமிழர் சால்புக்கும் இவ்விரு நூல்களிற் காணப்படும் தமிழர் சால்புக்கும் உள்ள வேறுபாடு பெரிது. எனவே திருக்குறளையும் சிலப்பதிகாரத்தையும் சங்க காலப் பண்பாட்டினை அறிவதற்கு அடிப்படையான கருவிகளாகப் பயன்படுத்துவது பிழையாகும்.

நாட்டின் உள்நாட்டுப் பிரிவுகளைப் பற்றியோ அல்லது அரசியல் ஆதிக்கத்தினைப் பற்றியோ சங்க நூல்களிற் செய்திகள் கிடைக்கவில்லை. அந் நூல்களிலிருந்து அக்காலத்து அரசர் பண்புகளைப் பற்றிச் சிறிது அறிந்து கொள்ளலாம். வேற்று மன்னரோடு பகை மூண்டகாலங்களிற் படையின் முன்னணியில் நின்று போரை நடாத்தியும், மற்றைய காலங்

4. *K. A. Nilakanta Sastri: Colas. Vol. I. pp. 183-208.*
*V. R. Ramachandra Dikshitar: Studies in Tamil Literature and History pp. 78—83.*

களில் நாட்டை ஆண்டும் வந்தனர் சங்ககால மன்னர். தமது உள்ள அமைதிக்கு ஏற்றவாறு தமது ஆட்சியை நடாத்தினர். ஆனால் அவர் அறிவிலும் கல்வியிலும் சிறந்த அறிஞரின் அறிவுரைகளையும் புலவரின் பொன்னுரைகளையும் போற்றி நின்றே ஆட்சி செலுத்தினர். அரசன் விருப்பத்திற்கு மாறாக மக்கள் கிளர்ந்து எழுந்ததாகச் சங்க நூல்களில் யாங்கணும் இல்லை. மன்னர் யாவரும் மக்கள் வாழ்க்கையில் அமைதி நிலவவேண்டும் என்பதை உணர்ந்து அதைப் போற்றிப் பாது காத்தனர்.

மக்களின் தந்தையாக அரசன் கருதப்பட்டான்.[5] மன்னனே மலர்தலையுலகத்து உயிராக இருந்தான்; நெல்லும் நீரும் இப் பெருமையைப் பெறவில்லை.[6] புலி தன் குருளைகளைப் பேணுவதுபோல் அரசன் மக்களைப் பேணி நடந்தான்.[7] தாய்ப் புலி தான் உயிரோடு வாழும்வரை தன்னுடைய குட்டியைப் பிறர் கொண்டுபோக விடாது ; அதன் உயிர் போந்த பின்னரே குட்டி பிறர் கைப்புகும் ; அவ்வாறே அரசரும் தாம் உயிருடன் வாழும்வரை தம் குடிமக்களைப் பிறருக்கு அடிமையாகப் போகவிடார்.

இத்தகைய பண்புகள் படைத்தவனாய் அரசன் விளங்கியமையால் மக்கள் அரசனின் இன்றியமையாமையை உணர்ந்தனர். அரசர் யாம் என்ற தலைவீக்கமும் குடிகள் பிறர் என்ற இழி நோக்கமும் சங்க காலத்தில் தலைகாட்டவில்லை.

---

5. காவல்
குழவி கொள்பவரி னோம்புமதி. புறநா. 5 : 6-7.

6. நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே
மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்
அதனால், யானுயி ரென்ப தறிகை
வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே. புறநா. 186.

7. புலிபுறங் காக்குங் குருளை போல
மெலிவில் செங்கோ லீபுறங் காப்ப.
புறநா. 42 : 10—11.

இதனாலேயே குறுங்கோழியூர் கிழார் இரும்பொறையை நோக்கிப் பாடும்பொழுது "உலகத்தின் கண்ணே நிலைபெற்று வாழ்கின்ற உயிர்களெல்லாம் தாம் தரம் அரசனிடத்து வைத்த காதலால் அவனுக்கு ஏதேனும் துன்பம் வருமோ என்று அஞ்சுகின்றன" எனக் கூறினர்.[8]

அக்கால அரசர் கல்வி அறிவும் படைத்தவராக விளங்கினர். மூவேந்தருட் பலர் பாடிய பாக்கள் புறநானூற்றில் உள. பாண்டியன் ஆரியப் படைகடந்த நெடுஞ்செழியன், "தன்னாசிரியர்க்கு ஓர் ஊறுபாடுற்ற விடத்து அது தீர்த்தற்கு வந்து உதவியும், மிக்க பொருளைக் கொடுத்தும் வழிபட்டு நின்று வெறாது கற்றல் அழகிது" என்று கல்வியின் மேம்பாட்டை விளக்குகின்றான்.[9] பிறப்பினும் பார்க்க அறிவினால் வரும் பெருமையே சிறந்ததென்றும், அறிவுடையோர் கூற்றே அரசு முறையை நெறிப்படுத்துவதென்றும் மேலும் அவன் செவ்வனே எடுத்து இயம்புகின்றான்.[10]

கடற்கரையிடத்துள்ள உப்பங்கழி நீரால் விளைந்த உப்பை முகந்துகொண்டு, மலை நாட்டை நோக்கிச் செல்கின்றன சகடைகள். அப்பொழுது சகடையின் ஆரைகள் மண்ணுள் குழி பாய்ந்து இழுத்துச் செல்லும் எருதுகளின் செலவைத் தடை செய்கின்றன. மேலும் இழுத்துச் செல்ல இயலாது என்று உட்கொண்டு எருதுகள் வாளா நில்லாது,

---

8. மன்னுயி ரெல்லா நின்னஞ் சும்மே.

புறநா. 20 : 21.

9. உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்ற னன்றே.

புறநா. 183 : 1—2.

10. ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக வென்னா தவருள்
அறிவுடை யோனா றரசுஞ் செல்லும்.

புறநா. 183 : 5—7.

தம் உடல் வலிமை முழுவதினையும் பயன்படுத்தி முன் செல்லுகின்றன. இவ்வாறு செல்கின்ற பகட்டை ஒத்தான் அரசன். அவனுடைய அரசியலாகிய சகடை மேல்நோக்கிச் செல்லும் பொழுது தன்னை அழுத்தி முன்னேற விடாது நசுக்கினாலும், அஞ்சாது தன் முழு ஆற்றலுடனும் முன்னேறுவான்.[11]

நீர்வளம் பெருக்குதலைத் தமது கடனாகக் கொண்டனர் அரசர். ஒரு நாடு நன்னாடாக விளங்குவதற்கு மக்கள் உணவுக் குறைவின்றி வாழ்தல் வேண்டும்; இயற்கைப் பகையாகிய பசி ஒழிதல் வேண்டும். உணவுப் பொருளைப் பெருக்குவதற்கு நிலத்தை வளம்படுத்தல் முறையாகும். இதற்கு ஏரி குளங்கள் முதலிய நீர் நிலைகளைச் செப்பனிட்டுக் கரையை உயர்த்தி நீரைத் தேக்கவேண்டும். சோழன் நலங்கிள்ளியை "ஈன்றணிமை பொருந்தி அது தீர்ந்த குழவிக்குச் சுரக்கும் முலை போல நீர் மிக்க காவிரியினது கரையிலுள்ள மரத்தைச் சாய்க்கும் மிக்க வெள்ளம் உலகத்து உயிர்ப்பன்மையைப் பாதுகாக்கும் நல்ல சோழநாட்டையுடைய வேந்தன்" எனக் கோவூர்கிழார் போற்றுகின்றார்.[12] காவிரி பல கால்வாய்களாய் ஓடி நிலத்துப் பாய்ந்து பயிருக்கு உயிர் கொடுக்கின்றது. இவ்வண்ணம் நீர்நிலையைப் பெருக்கினர் அரசர். இந்த நீர்ப்பெருக்கால் உணவு ஆக்க வேலைகளைச் செய்யவேண்டுமெனக் குடபுலவியனார் என்னும் புலவர் பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு மிக அழகாகச் சொல்லுகிறார். "நீரை இன்றியமையாத உடம்பிற்கெல்லாம் உணவு கொடுத்தவர் உயிரைக் கொடுத்தார்; உணவை

---

11. கழியுப்பு முகந்து கன்னாடு மடுக்கும்
ஆரைச் சாகாட் டாழ்ச்சி போக்கும்
உரனுடை நோன்பகட் டன்ன வெங்கோன்.
புறநா. 90 : 7—9.

12. புனிறுதீர் குழவிக் கிலிற்றுமுலை போலச்
சுரந்த காவிரி மரங்கொன் மலிநீர்
மன்பதை புரக்கு நன்னாட்டுப் பொருந.
புறநா. 68 : 7—10.

முதலாக உடையது அவ்வுணவால் உளதாகிய உடம்பு; ஆதலால் உணவென்று சொல்லப்படுவது நிலத்தொடு கூடிய நீர்; அந்நிலத்தையும் நீரையும் ஒருவழிக் கூட்டினவர்கள் இவ்வுலகத்து உடம்பையும் உயிரையும் படைத்தவராவர்; நெல் முதலாயவற்றை விதைத்து மழையை எதிர்நோக்கி இருக்கும் புல்லிய நிலம், இடம் அகன்ற நிலத்தை உடைய தாயினும் அது அரசனது முயற்சிக்குப் பயன்படாது. ஆகவே பாண்டியனே நிலம் குழிந்த இடத்தில் நீர்நிலை மிகும்படி தளைத்தோர், இவ்வுலகத்துத் தம் பேரோடு தளைத்தோராவர்: அவ்வாறு செய்யாதோர் தளையாதோர்".[13]

நீர்வளம் நிலவளம் சிறந்து நாடு உயர்ந்து நின்றது. ஒரு களிறு படுத்துத் தூங்கும் சிறிய இடத்தில் விளைந்த விளை பொருள்கள் ஏழு யானைகளுக்கு வேண்டும் உணவாயின என்று ஆவூர்மூலங்கிழார் கூறுவதால் நாட்டின் நலம் நன்கு விளங்குகின்றது.[14] இவ்வாறு நெல்லும் நீரும் எல்லோர்க்கும்

---

13. நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்
உண்டி கொடுத்தோ ருயிர்கொடுத் தோரே
உண்டி முதற்றே யுணவின் பிண்டம்
உணவெனப் படுவது நிலத்தொடு நீரே
நீரு நிலனும் புணரி யோரீண்
டுடம்பு முயிரும் படைத்திசி னோரே
வித்திவா னோக்கும் புன்புலங் கண்ணகன்
வைப்பிற் றாயினு நண்ணி யாளும்
இறைவன் றாட்குத வாதே யதனால்
அடுபோர்ச் செழிய விகழாது வல்லே
நிலனெளி மருங்கி னீர்நிலை பெருகத்
தட்டோ ரம்ம விவட்டட் டோரே
தள்ளா தோரிவட் டள்ளா தோரே.

புறநா. 18 : 18—30.

14. ஒருபிடி படியுஞ் சீறிடம்
எழுகளிறு புரக்கு நாடுகிழ வோயே.

புறநா. 40 : 10—11.

எளியனவாக நிறைந்து செழித்தமையால் விருந்ினருக்கு வேண்டும் உணவைக் கொடுத்து அவர்கள் உண்டு மகிழ மக்கள் கண்டு மகிழ்ந்தனர். இது, "வன்புலத்திநின்றும் வந்த சுற்றத்தார்க்கு விருந்தாக விரும்பிக் கொடுக்கும் மென் புலத்தூர்களை யுடைய நல்ல நாட்டுக்கு வேந்தே" என்று சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனைக் கோவூர் கிழார் பாடியதிலிருந்து பெறப்படும்.[15] இங்ஙனம் நாட்டு வளம் பெருக்கி, விருந்தருத்தி, மக்கள் துன்பம் அகற்றி மன்னர், பிறர் வாழ வாழ்ந்தனர்.

அரசன் தன் ஆதரவு தேடிவந்த புலவரைத் தன் அவைக் களத்துக்கு வரவேற்று வேண்டிய சிறப்புக்களை எல்லாம் செய்தான்; தன்னுடன் இருக்கும்பொழுது அவர்களுக்கு எல்லா வசதிகளையும் அளித்தான்; பிரியும்பொழுது அவர் களுக்குப் பல பரிசில்களை வழங்கினான். அரசன் அவைக் களத்தில் எந்நேரமும் புகும் உரிமையுடையவர்கள் புலவர்கள். புகுந்து தங்களுக்குரிய இடம் போலச் செம்மாந்து நடப்பர்.[16] புலவர்கள் தன்னைப் பாடாதுவிடுதல் இகழ்ச்சி யெனக் கருதினான் அக்காலத்து மன்னன்.[17]

---

15. வன்புலக் கேளிர்க்கு வருவிருந் தயரும்
மென்புல வைப்பி னன்னாட்டுப் பொருந.
புறநா. 42 : 17—18.

16. உடையோர் போல விடையின்று குறுகிச்
செம்ம லுளவை யண்ணாந்து புகுதல்
எம்மன வாழ்க்கை யிரவலர்க் கெளிதே.
புறநா. 54 : 2—4.

17. அருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொ
டொருங்ககப் படேஎ னாயிற்..............
.............................................
ஓங்கிய சிறப்பி னுயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் றலைவ னாக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர் பாடாது வரைகவென் னிலவரை.
புறநா. 72 : 8—16.

கன்றைப் பார்த்து இரங்கும் பசு போல் அரசன் புலவரைப் பார்த்து இரங்கினான்; அவன் கண்களில் அவர் துன்பங்களைப் போக்கவேண்டுமென்ற ஆர்வம் எழுந்தது.[18] பொருநராற்றுப்படை அரசன் புலவனைப் பேணும் முறையை அழகாகக் கூறுகின்றது. வேர்வையினால் நனைந்த; ஈரும் பேனும் உலவும், கந்தையை நீக்கி, நுண்ணிதான துணியை உடுக்க நல்கினான் அரசன் புலவனுக்கு. தேறலை மழையென வார்த்தனர் அரிவையர். புலவன் களைப்பு மாறத் தேறலை மாந்தி மாளிகையிலே துயின்றான். துயில் நீங்கிய பின்னர் அளவுக்கு மிகுதியாகத் தான் தேறல் மாந்தியதை நினைந்து வியப்புற்றான்.[19]

---

18. பழுதின்
நீற்றா விருப்பிற் போற்றுபு நோக்கி.
பொருந. 150—151.

19. ஈரும் பேனும் மிருந்திறை கூடி
வேரொடு நனைந்து வேற்றிழை நுழைந்த
துன்னற் சிதாஅர் துவர நீக்கி
நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்கனிந்
தரவுரி யன்ன வறுவை நல்கி
மழையென மருளு மகிழ்செய் மாடத்
திழையணி வனப்பி னின்னகை மகளிர்
போக்கில் பொலங்கல நிறையப் பல்கால்
வாக்குபு தரத்தர வருத்தம் வீட
வார வுண்டு பேரஞர் போக்கிச்
செருக்கொடு நின்ற காலை மற்றவன்
றிருக்கிளர் கோயி லொருசிறைத் தங்கித்
தவஞ்செய் மாக்க டம்முடம் பிடாஅ
ததன்பய மெய்திய வளவை மான
வாறுசெல் வருத்த மகல நீக்கி
யனந்தர் நடுக்க மல்ல தியாவது
மனங்கவல் பின்றி மாழாந் தெழுந்து
மாலை யன்னதோர் புன்மையும். பொருந:79—96.

இவ்வாறு அரசன் புலவனைப் போற்றியது வடநாட்டு அரசரிடம் காணப்படாத தமிழ்மன்னரின் சிறந்த பண்பொன்றைப் புலனுக்குகின்றது. தமிழ்மன்னர் புலவரை நண்பராகக் கருதி அவரோடு நெருங்கிப் பழகினர். சோழநாட்டு அரசனுகிய கோப்பெருஞ்சோழன் சிறப்பிலும் செல்வத்திலும் தனக்கு நேரான ஒருவனைத் தோழனுகக் கொள்ளாது பிசிர் என்னும் சிற்றூரில் வாழ்ந்த வறிய புலவன் பிசிராந்தையாரையே தனது உயிர்த்தோழனுகக் கொண்டான். அவன் வடக்கிருந்து உயிர்நீத்தபொழுது அவன் உள்ளம் புலவரை நாடிற்று; தன் ஆருயிர் நண்பன் வருவான் என்று வழிமேல் விழிவைத்து உயிர்விடாது காத்திருந்தான். "எப்படியும் என் தோழன் பிசிராந்தையார் வந்தேதீருவார்" என்று தன்னருகே இருந்த சான்ருேர்க்குக் கூறினுன்.[20] இந்நிலையில் உயிரும் நீங்கிற்று. இச்செய்தி கேட்டுப் பிசிராந்தையார் விரைந்துவந்து அவன் அருகிலே தாமும் இருந்து உயிர் துறந்தார். இக்கோப்பெருஞ்சோழனேடு பொத்தியார் என்னும் புலவரும் வடக்கிருக்க முற்பட்டனர். அப்பொழுது கருவுற்றிருந்த அவரது மனைவி மகவு ஈன்றபின் வருகெனக் கூறிக் கோப்பெருஞ் சோழன் அவரை நிறுத்தி விட்டான். தன்மகன் பிறந்தபின், பொத்தியார் சோழனது நடுகல்லையடைந்து "என்நிழலினும் ஒரு பொழுதும் நீங்காத என்னுடைய மனைவி புகழமைந்த பிள்ளை பெற்ற பின் வருமாறு சொல்லி என்னை இவ்விடத்திலிருந்து போக்கிய என்னேடு உறவில்லாதவனே! நீ எனக்குக் குறித்த இடம் யாது? சொல்லுவாயாக" என்று அன்பு ததும்ப வினவிய பாடல்

---

20. தென்னம் பொருப்ப னன்னுட் டுள்ளும்
பிசிரோ னென்பவென் னுயிரோம் புநனே
செல்வக் காலை நிற்பினும்
அல்லற் காலை நில்லலன் மன்னே.

புறநா. 215 : 6—9.

அரசர்களுக்கும் புலவர்களுக்குமிருந்த நட்பினை விளக்கிக் காட்டுகின்றது.[21]

. பாரி என்னும் சிற்றரசனும் கபிலர் என்னும் புலவனும் நெருங்கிய நண்பராக வாழ்ந்தனர். பாரியின் இன்பதுன்பங்களிற் கபிலரும் கலந்துகொண்டார். மூவேந்தரின் சூழ்ச்சியாற் பாரி இறந்தபோது கபிலர் பெருந்துயர் எய்தினர்; ஆதரிப்பாரில்லாத பாரியின் பெண்மக்களைப் பேணும் நோக்கத்துடனேயே அவர் உயிர் வாழ்ந்திருந்தார். பாரியின் மகளிரை மணம் முடித்துக் கொடுக்கக் கருதி இருங்கோவேள் என்னும் குறுநில மன்னனிடம் சென்று, ''இப்பெண்கள் கொடை வள்ளல் பாரியின் மகளிர்; யான் இவர் தந்தையின் தோழன்; அம்முறையால் இவர் என் மகளிர்'' என்று உருக்மாக உரைத்ததிலிருந்து பாரிக்கும் இவருக்குமிடையே இருந்த நட்பின் தன்மை புலனாகின்றது.[22]

அதியமான் ஔவையாரிடத்தில் மிகுந்த அன்பு கொண்டவன். இவன் போரில் மாண்டபோது ஔவையார் உள்ளம் கலங்கிப் பின்வருமாறு பாடினார்: "சிறிய அளவினை உடைய மதுவைப் பெறின், யாம் அவற்றைப் பெற்றபின்,

---

21. அழலவிர் வயங்கிழைப் பொலிந்த மேனி
நிழலினும் போகாநின் வெய்யோள் பயந்த
புகழ்சால் புதல்வன் பிறந்தபின் வாவென
என்னிவ ணொழித்த வன்பி லாள
எண்ணா திருக்குவை யல்லை
என்னிடம் யாதுமற் றிசைவெய் யோயே
புறநா. 222.

22. இவரியா ரென்குவை யாயி னிவரே
ஊருட னிரவலர்க் கருளித் தேருடன்
முல்லைக் கீத்த செல்லா நல்லிசைப்
படுமணி யானைப் பறம்பிற் கோமான்
நெடுமாப் பாரி மகளிர் யானே
தந்தை தோழ னிவரென் மகளிர்.
புறநா. 204: 1—6.

எஞ்சியதைத் தான் விரும்பிப் பெறுவான்; உணவருந்தும் போதும் எமது பாட்டைக் கேட்டு இன்புறுவான். சுவை மிகுந்த உணவுப் பகுதிகளைத் தான் விரும்பாது புலவருக்கே கொடுப்பான்; எம்மேற் கொண்ட அன்பினுல் நரந்தப்பூ நாறும் தன்கையினுற் புலால் நாறும் எம் தலையைத் தடவு வான். அவன் இறந்தது இசைப்பாணருக்கும் இரவலர்க்கும் சுற்றத்தாருக்கும் புலவர்க்கும் பெருந்துயர் விளைப்பதாயிற்று. அதனுல் அவன் மார்பில் தைத்த வேல் மார்போடு நில்லாது. பாணரது மண்டையை ஊடறுத்து சுற்றத்தாரது கண்ணிற் பார்வை ஒளி மழுங்க, இரப்போரது கையையும் துளைத்துப் புலவர்களது நாவிற்பட்டது. எனவே இனிப்பாடுவோரு மில்லை; பாடுவோரைப் பேணுவோருமில்லை.''[23]

---

23. சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே
சிறுசோற் ருனு நனிபல கலத்தன் மன்னே
பெருஞ்சோற் ருனு நனிபல கலத்தன் மன்னே
என்பொடு தடிபடு வழியெல்லா மெமக்கீயு
[மன்னே
அம்பொடு வேனுழை வழியெல்லாந் தானிற்கு
[மன்னே
நரந்த நாறுந் தன்கையாற்
புலவு நாறு மென்றலை தைவரு மன்னே
அருந்தலை யிரும்பாண ரகன்மண்டைத் துளையுரீஇ
இரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண் பாவை சோர
அஞ்சொனுண் டேர்ச்சிப் புலவர் நாவிற்
சென்று வீழ்ந் தன்றவன்
அருநிறத் தியங்கிய வேலே
ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
இனிப், பாடுநரு மில்லைப் பாடுநர்க்கொன் றீகுநரு
[மில்லை. புறநா. 235 : 1—17.

சேர நாட்டை ஆண்ட தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும் பொறை ஒரு முறை வெளியே சென்றிருந்தபோது, வறுமை யால் வருந்திய மோசிகீரனுர் என்னும் புலவர் அவனேக் காணச் சென்ருர்; களேப்பு மிகுதியினுல் எண்ணெயினது நுரையை முகந்தாற் போன்ற மெல்லிய பூவையுடைய கட்டிற்கண்ணே, அதனே முரசு கட்டில் என அறியாது, ஏறி உறங்கிவிட்டார். மன்னன் திரும்பி வந்தபோது கட்டிலிற் கண் துயின்ற புலவரைக் கண்டான். புலவன் செய்த குற்றத் திற்குப் புலவனே இருகூருக வாளினுல் வெட்டாது, அவர் நன்ருகத் துயிலுமாறு கட்டிலின் அருகே நின்று தன் கையாற் கவரி வீசினுன். துயில் எழுந்த புலவர், அரசன் தன் மேல் வைத்த அன்பினுல் தனக்குப் பணி செய்துகொண் டிருந்தமையை மனமாரப் போற்றி வாயார வாழ்த்தினுர்.[24]

அரசன் தன் முன்னிலேயிற் புலவரை இருத்தி அவர்களே அன்போடு பார்ப்பான் என்றும், அவ்வாறு பார்க்கும் பொழுது புலவருடைய எலும்புகள் மெழுகென உருகு மென்றும் பொருநராற்றுப்படை கூறுகின்றது.[25] இவ்வாறு அரசருக்கும் புலவர்க்கும் இடையே இருந்த நெருங்கிய

---

24. குருதி வேட்கை யுருகெழு முரசம்
மண்ணி வாரா வளவை யெண்ணெய்
நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை
அறியா தேறிய வென்னேத் தெறுவர
இருபாற் படுக்குநின் வாள்வா யொழித்ததை
அதூஉஞ் சாலுநற் றமிழ்முழு தறிதல்
அதனெடு மமையா தணுக வந்துநின்
மதனுடை முழவுத்தோ ளோச்சித் தண்ணென
வீசி யோயே.......... புறநா. 50 : 5—13.

25. கண்ணிற் காண நண்ணுவழி யிரீஇப்
பருகு வன்ன வருகா நோக்கமோ
டுருகு பவைபோ லென்பு குளிர்கொளீஇ.
பொருந. 76—78.

தொடர்பு தமிழ் நாட்டு அரசரின் சிறந்த பண்புகளில் ஒன்று. அதனை வடநாட்டு அரசரிடம் காணுதல் அரிது.

## (3) அமைச்சர்

அரசன் நாட்டில் அமைதியும் அறமும் நிலவுவதற்குச் செய்ய வேண்டியவற்றை ஒரு குழுவுடன் கலந்து எண்ணியே செய்வான். அக் குழுவினரின் அறிவுரையைக் கேட்டபின்பே முறையை வழங்குவான். சங்க இலக்கியங்கள் இக்குழுவினைச் சுற்றம் என்று கூறும். சுற்றம் என்ற சொல் பொதுவாக இனத்தவரைக் குறிக்கும். அதற்கு நேரான பொருள் சுற்றி யிருப்பவர் எனக் கூறலாம்; பக்கத்திலே இருப்பவர் என்றும் கருத்துக் கொள்ளலாம். எனவே இடைவிடாது எக் காலத்தும் அரசனைச் சுற்றியோ அல்லது அவன் அருகிலோ இருந்து நீதியெனக் கண்டவற்றை எடுத்துக்கூறும் உறுதித் துணையாளர் சுற்றம் எனப்பட்டனர். இவ்வாறு துணையாக நின்றவருள் அவனுடைய இனத்தவர்களும் இருந்தார்கள். கொடுமை இல்லாத சுற்றமெனப் பெரும்பாணாற்றுப்படை கூறுகின்றது.[26] தம் நிலையினின்றும் சிறிதும் மாறுபடாப் பெருமையினால் இவர் 'திரியாச் சுற்றம்' எனச் சொல்லப் படுகின்றனர். பால் இனிமை யொழிந்து புளிப்பினும், ஞாயிறு தன் விளக்கமொழிந்து இருளினும், நான்கு வேதத் தினது ஒழுக்கம் வேறுபடினும் வேறுபாடில்லாத சூழ்ச்சியை உடையவர்கள் இவர்கள்.[27] தலைவர் செய்த காரியங்களைப் பின் சிதையாது தாம், அவற்றை மேவுதலை உடைய அத் தலைவரோடு மனம் பொருந்தின சுற்றமெனப் பதிற்றுப் பத்துக் கூறும்.[28]

---

26. உரும்பில் சுற்றம். பெரும்பாண். 447.

27. பாஅல்புளிப்பினும் பகலிருளினும்
நாஅல்வேத நெறிதிரியினும்
திரியாச் சுற்றமொடு. புறநா. 2 : 17—19.

28. செய்த மேவ லமர்ந்த சுற்றமொடு.
பதிற். 15 : 28.

சுற்றத்தின் நடுவிலிருந்த நெடுஞ்செழியனை மாங்குடி மருதனார் கடல் நடுவே தோன்றும் ஞாயிற்றுக்கும் பல மீன்களுக்கு நடுவே தோன்றும் நிறைமதிக்கும் உவமிக்கின்றார்.[29] பதிற்றுப்பத்தும் பல நட்சத்திரங்களுக்கு நடுவே திங்களைப் போலப் பொலிவு பெற்ற சுற்றத்தோடு விளங்கித் தோன்றும் அரசன் எனச் சேர மன்னனைப் புகழ்கின்றது.[30] அரசன் விரும்புவனவற்றையே தாமும் விரும்பிக்கூறி அவனைத் தீநெறிக்கண் உட்படுத்திய சுற்றத்தினர் மக்களால் இகழப்பட்டனர்.[31] எனவே இக்குழுவினர் அடிக்கடி கூடித் தாம் சிறந்த அறம் என்று கருதுவதை, அஞ்சாது எடுத்துரைத்தனர். இதனைத் தங்கள் கடமையெனக் கருதினர். வேள்விகள் இயற்றித் துறக்கம் நண்ணும் முனிவரைப்போற் சிறந்த இத்தகைய காவிதி மாக்களைப் பற்றி மதுரைக்காஞ்சி கூறும். அவர் அரசனிடத்துள்ள நன்மையையும் தீமையையும் ஆராய்ந்து கண்டு, அரசன் தீயவழியிலே ஒழுகாமல் அவனைக் காத்து, பழி தம்மேல் வராமல் நீக்கி, எங்கும் புகழ் பரந்து நிறைந்த தலைமை வாய்ந்த காவிதிப்பட்டம் பெற்ற அமைச்சராக விளங்கினர்.[32]

---

29. முந்நீர் நாப்பண் ஞாயிறு போலவும்
பன்மீ னடுவட் டிங்கள் போலவம்
பூத்த சுற்றமொடு பொலிந்தினிது விளங்கி.
மதுரை. 768—780.

30. பன்மீ னுப்பட் டிங்கள் போலப்
பூத்த சுற்றமொடு பொலிந்து தோன்றலை.
பதிற். 90 : 17—18.

31. வரிசை யறியாக் கல்லென் சுற்றம்.
புறநா. 184 : 8.

32. ஆவுதி மண்ணி யவிர்துகின் முடித்து
மாவிசும்பு வழங்கும் பெரியோர் போல
நன்றுந் தீதுங் கண்டாய்ந் தடக்கி
யன்பு மறனு மொழியாது காத்துப்
பழியொரீஇ யுயர்ந்து பாய்புகழ் நிறைந்த
செம்மை சான்ற காவிதி மாக்களும்.
மதுரை. 494—499.

அரசனுக்கு அறிவுரைகள் கூறும் அவையங்கள் பல அக் காலத்தில் இருந்தன. ஒவ்வொரு குழுவினரும் ஒவ்வொரு கடமை உடையவராக இருப்பர். அறிவுரைகள் சொல்ல வல்ல அறிஞரைக் கொண்ட நாற் பெருங் குழுவொன்றினைப் பற்றி மதுரைக்காஞ்சி கூறுகின்றது.[33] பூண் அணிந்தவரும் புகழ் சிறந்தவரும் ஆகிய ஐவரைப்பற்றி அதே நூல் வேறோரிடத்திற் கூறுகின்றது.[34] இவ்வவையங்களிலுள்ள உறுப்பினர் யாவர், அவர் கடமைகள் யாவை என்பனபற்றிய செய்திகள் கிடைக்கவில்லை. பத்துப்பாட்டிற்குச் சிறந்த உரைகண்ட நச்சினார்க்கினியர் மதுரைக்காஞ்சியுட் கூறப் பட்ட ஐவர் குழுவைச் சிலப்பதிகாரத்துட்கண்ட ஐம்பெருங் குழுவாகவே கருதி உரை வகுத்தார்.[35] அமைச்சர், புரோகிதர், சேனதிபதி, தூதன், ஒற்றன் ஆகியோரே ஐம்பெருங்குழுவினர். மேலே கூறப்பட்ட நாற்பெருங் குழுவும் ஐம்பெருங்குழுவில் அமைச்சரைத் தவிர்ந்த ஏனையோரைக் கொண்ட ஒரு குழுவென்றே அவர் கருது கின்றார்.[36]

ஆனல் சிலப்பதிகாரமும் பத்துப் பாட்டும் வெவ்வேறு காலத்தனவாதலின் நச்சினார்க்கினியர் கருத்து ஏற்றுக் கொள்ளத் தக்கதன்று. சங்க காலத்தின் பிற்பகுதியிற் சமயத் தொடர்பான அலுவல்களிற் பார்ப்பனர் ஓரளவுக்குச் செல்வாக்குப் பெற்றிருந்தனர் என்பது உண்மை. ஆனல் அரசியல் அலுவல்களில் அவர் ஆதிக்கம் மிகவும் குறை வாகவே இருந்தது. இச்சபைகள் யாவும் உண்மையை

33. தாமேஎந் தோன்றிய நாற்பெருங் குழுவும்.
மதுரை. 510.

34. பொலம்பூ ணைவர். மதுரை. 775.

35. பத்து. நச். உரை. சாமிநாதையர் மூன்ரும் பதிப்பு 1931. பக்கம் 430.

36. பத்து. நச். உரை. சாமிநாதையர் மூன்ரும் பதிப்பு 1931. பக்கம் 396.

அஞ்சாது எடுத்துரைக்கும் பண்பினவாய் விளங்கின என்பதைத் தவிர, இவற்றின் கடமைகளைப்பற்றிய விரிவான செய்திகள் ஒன்றும் கிடைத்தில. ஆயினும் மிகவும் வளர்ச்சி அடைந்த ஒரு வருமானக் களரி, சுங்கவரிக் களரி ஆகியவற்றைப் பற்றிச் சங்க நூல்கள் கூறுவதால் அக்காலத்திலே அரசியல் முறைகளை மேற்பார்வை இடுவதற்கு ஒவ்வொரு தொழிலிலே திறமை சான்ற அமைச்சர் இருந்திருக்கவேண்டுமென ஊகித்து அறியலாம்.

## (4) நீதி

அரசன் நால்வகைப்படையும் வீறு கொண்டிருப்பினும் அவன் கொற்றமெல்லாம் அறத்தையே அடிப்படையாகக் கொண்டது என்ற உண்மை அக்காலத்தில் நிலைநாட்டப் பட்டது. அதனால் தமது சுற்றத்தார் என்றதனாற் பேணியும், தமது சுற்றமல்லாதார் என்றதனால் குணம் கொள்ளாதும் நடத்தல் கூடாதென அரசர் அறிந்திருந்தனர்.[37] கீழ்க் கடலாகிய எல்லையிடத்துக் கதிரவன் கதிர்களைச் சொரிவது போல நீதி தவறாது அரசு செலுத்தினான் மன்னன் என்று பெரும்பாணாற்றுப்படை கூறும்.[38] அரசர் ஏந்திய வெண் கொற்றக்குடை வெயிலை மறைத்தற்குக் கொண்டதன்று; வருத்தமுற்ற குடியை நிழற் செய்தல் காரணத்தாற்

---

37. கடுஞ்சினத்த கொல்களிறுங் கதழ்பரிய கலிமாவும்
நெடுங்கொடிய நிமிர்தேரு நெஞ்சுடைய
[புகன்மறவருமென
நான்குடன் மாண்ட தாயினு மாண்ட
அறநெறி முதற்றே யரசின் கொற்றம்
அதனால், நமரெனக் கோல் கோடாது
பிறரெனக் குணங்கொல்லாது.

புறநா. 55 : 7—12.

38. குணகடல் வரைப்பின் முந்நீர் நாப்பட்
பகல்செய் மண்டிலம் பாரித் தாங்கு.

பெரும்பாண். 441—442.

கொண்டது.[39] அரசன் நெறி தவறுது ஆண்டுவந்தாற் குடிகளுக்கு எவ்வகைக் கவலையும் இல்லை. அறநெறி தவறிய அரசன் ஆளும் நாட்டில் மழை பருவத்திற் பெய்யாது ; பசியும் பிணியும் மக்களை வாட்டி வருத்தும் ; இவற்றிற்கெல்லாம் குடிகள் அரசரையே நோவார் என்பது தமிழ் நாட்டார் கொள்கை.[40] எனவே அரசன் வெற்றியை விரும்பினுனுகிற் குடிபுறந்தருதலே அவன் சிறப்பாய் எண்ணிச் செய்யற் பாலது.[41]

நண்ணுவார்க்கு எளியனுய் இருத்தல் அரசனுக்கு வேண்டிய அரிய பண்பு என்பதையும் சங்க நூல்கள் அடிக்கடி கூறுகின்றன. அறக்கடவுள் தாமே வந்து ஆராய்ந்தாற் போன்ற, செங்கோல் ஆராயும் ஆராய்ச்சியுடைய நீதியை வேண்டுவோர், அரசனை இலகுவிற்காணும் வாய்ப்புப் பெறின், இவ்விடத்துத் துளி வேண்டுங்காலத்து மழை பெற்றவராவார் எனப் புறநானூறு கூறும்.[42] முறைப் பாட்டை விரும்புவார்க்கும் குறை விரும்புவார்க்கும் அவரவர்

---

39. கண்பொர விளங்குநின் விண்பொரு வியன்குடை
வெயின்மறைக் கொண்டன்றோ வன்றே வருந்திய
குடிமறைப் பதுவே கூர்வேல் வளவ.
புறநா. 35 : 19—21.

40. மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்
இயற்கை யல்லன செயற்கையிற் றோன்றினும்
காவலர் பழிக்குமிக் கண்ணகன் ஞாலம்.
புறநா. 35 : 27—29.

41. குடிபுறந் தருகுவை யாயினின்
அடிபுறந் தருகுவ ரடங்கா தோரே.
புறநா. 35 : 33—34.

42. அறம்புரிந் தன்ன செங்கோ னாட்டத்து
முறைவேண்டு பொழுதிற் பதனெளி யோரீண்
டுறைவேண்டு பொழுதிற் பெயல் பெற்றோரே.
புறநா. 35 : 14—16.

விரும்புவனவற்றை அருளிச் செய்பவன் தொண்டைமான் இளந்திரையன் என உருத்திரங்கண்ணனார் பாடுகின்றார்.[43] அரசன் இவ்வாறு மக்கள் குறைகளைக் கேட்டு ஆவன செய்வதற்குக் காலை நேரத்திற் கொலு வீற்றிருப்பான். இத்தகைய கொலு வீற்றிருக்கை நாள் மகிழ் இருக்கை[44] எனவும் நாளவை[45] எனவும் வழங்கும்.

நீதி வழங்குவதிற் பொதுமன்றங்களும் பங்கு பற்றின. நீதி வழங்கும் இடம் அறங்கூறு அவையம் எனப்பட்டது.[46] அவை புகுந்தவுடன் தம் தகராறுகளைத் தவிர்த்துக் கொள்ளும் முதியோரைப்பற்றிப் பொருநராற்றுப்படை கூறுகின்றது.[47] அறவோர், ஞெமன் கோலன்ன நடுநிலைமை பெற்றுச் சிறந்தவர். இவர் கூடிய இவ்வவை 'அறமறக் கண்ட நெறிமாண் அவையம்' என்றும் பேசப்படுகின்றது.[48] 'அறிவானமைந்தோர் தொக்கிருந்த அவை'[49] என்றும் 'மறம் பொருந்திய சோழரது உறையூர்க்கண் அவைக்களத்து அறம் நின்று நிலைபெற்றது'[50] என்றும், 'அறந்தங்கும் உறையூர்'[51]

---

43. முறைவேண்டு நர்க்குங் குறைவேண்டு நர்க்கும்
வேண்டுப வேண்டுப வேண்டினர்க் கருளி.
பெரும்பாண். 443—444.

44. புறநா. 29 : 5.

45. புறநா. 54 :3.

46. சிறந்த கொள்கை அறங்கூ றவையம்.
மதுரை. 492.

47. அவைபுகு பொழுதிற்றம் பகைமுரண் செலவும்.
பொருந. 188.

48. புறநா. 224 : 4.

49. சான்றோ ரிருந்த வவையத்து. புறநா. 266 : 8.

50. மறங்கெழு சோழ ருறந்தை யவையத்
தறநின் று நிலையிற்று. புறநா. 39 : 8—9.

51. அறந்துஞ் சுறந்தை. புறநா. 58: 9.

என்றும் கூறப்படுபவற்ருல் அக்காலத்தில் அறங்கூறவையங்கள் இருந்தமை புலனுகும். இக்குழுவினர் அரசனுல் தேர்ந்தெடுக்கப்படுவார் என்பதும், அவர் நீதியினின்றும் வழுவின் அவ் வழுவினுல் வரும் பழி அரசனையே சாரும் என்பதும், அத்தகைய சார்ச்சி அரசனின் செங்கோலைக் கொடுங்கோலாக்கும் என்பதும் ஒல்லையூர் தந்தபூதப் பாண்டியனின் வஞ்சினக் கூற்ருல் அறியப்படும்.[52]

இத்தகைய அறவோர் கூடிய அறங்கூறவையம் நீதி வழங்குவது மல்லாமல் மக்கள் உள்ளத்திலே உள்ள அச்சத்தையும் வருத்தத்தையும் பொருட்கள் மேற்ருேன்றின பற்றினையும் நீக்கி, செற்றமும் உவகையும் செய்யாமற் பாது காக்குமென மதுரைக் காஞ்சி கூறுகின்றது.[53] இராமச்சந்திர தீட்சிதர் அவர்கள் அவையத்திலுள்ள நடுவோர் பார்ப்பனர் என்று கூறுகின்ருர்.[54] இவ்வாறு கொள்வதற்குச் சங்க நூல்களிற் சான்றுகள் இல்லை. நீதியிலும், அனுபவத்திலும், நாட்டு வழக்கங்களைப் பற்றிய அறிவிலும் சிறந்த கிராம முதியோரே நடுவராக இருந்திருக்கலாம்.

## (5) ஊர் அவைகள்

ஊரிலே நடைபெறும் தகராறுகளை நீக்கி விடுதலே இவற்றின் முக்கியமான கடமை. மத்திய அரசுக்கும் இவற்றிற்குமுள்ள தொடர்பைப்பற்றிச் சங்க நூல்களிலிருந்து ஒன்றும் அறிய முடியாது. ஊரிலுள்ள முதியோரே ஒன்ருகக்

---

52. அறனிலை திரியா வன்பி னவையத்துத்
திறனி லொருவனை நாட்டி முறைதிரித்து
மெலிகோல் செய்தே னாகுக.

புறநா. 71 : 7—9.

53. அச்சமு மவலமு மார்வமு நீக்கிச்
செற்றமு முவகையுஞ் செய்யாது காத்து.

மதுரை. 489, 490.

54. *Studies in Tamil Literature and History.* p. 218.

கூடி ஊருக்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்தனர். இவர்களைக் கொண்ட அவை பொதியில் அல்லது மன்றம் எனப்பட்டது. பொது என்ற சொல்லும் இல் என்ற சொல்லும் சேர்ந்து பொதியில் என்று அமைந்தது. பொதுவான வீடு என்பது அதற்குப் பொருள். இத்தகைய அறங்கூறுதற்கான பொதியில்கள் ஊரின் நடுவிலே அமைந்திருந்தன.[55] மதுரைக் காஞ்சி இத்தகைய பொதியில் ஒன்றனைக் குறிக்கின்றது.[56] சில பொதியில்கள் ஊரின் முற்பக்கத்தில் அமைந்திருந்தன.[57]

பொதியில் வணங்கும் இடமாகவும், வம்பலர் தங்கும் இடமாகவும் இருந்தது என்பதைப் பட்டினப்பாலையிலிருந்து அறியலாம். 'பகைவர் மனையோராய்ப் பிடித்து வந்த மகளிர் பலரும் நீருண்ணுந் துறையிலே சென்று முழுகி மெழுகும் மெழுக்கத்தினையும், அவர்கள் அந்திக் காலத்திலே கொளுத்தின அவியாத விளக்கினையுமுடைய பூக்களைச் சூட்டின தெய்வம் உறையும் தறியினையுடைய பொதியில்' என்று பட்டினப்பாலை பாடுகின்றது.[58] இத்தகைய பொதியில்களிலுள்ள கற்சிலைகளிலே தெய்வங்கள் குடிகொண்டிருப்பனவென்று புறநானூறும் கூறுகின்றது.[59]

---

55. இப்பொழுது கோயில் முன்றிலில் இத்தகைய அவைகள் கூடுவதுண்டு.

56. அவையிருந்த பெரும் பொதியில். மதுரை. 161.

57. முன்னூர்ப் பொதியில். புறநா. 390 : 19.

58. கொண்டி மகளி ருண்டுறை மூழ்கி
யந்தி மாட்டிய நந்தா விளக்கின்
மலரணி மெழுக்க மேறிப் பலர்தொழ
வம்பலர் சேக்குங் கந்துடைப் பொதியில்.
பட்டினப். 246—249.

59. கலிகெழு கடவுள் கந்தம்............
.................................பொதியில்.
புறநா. 52 : 12—13.

இரத்தி,[60] விளா,[61] பலா,[62] வேம்பு[63] முதலிய மரங்களுக்கடியிற் கூடுவது மன்றம்.[64] இத்தகைய மரங்கள் ஊர் நடுவேயிருந்தனவென நச்சினர்க்கினியர் கூறுவர்.[65] மன்றம் என்ற சொல்லமைதியைப்பற்றி ஒன்றும் தெளிவாகத் தெரியவில்லை. எனினும் ஊரவைகள் கூடும் இடங்களை உணர்த்தச் சங்க நூல்கள் மன்றம் என்ற சொல்லை வழங்குகின்றன. ஊர்க் களியாட்டங்களிற் பங்கு பற்றும் பெண்களும் இம்மன்றங்களின் நிகழ்ச்சிகளிலே கலந்துகொள்வர். கைம்பெண்கள் இம் மன்றத்திற்கு வருவதில்லை. இதனைப் புறநானூற்றிலிருந்து அறியலாம்.[66]

இந்த மன்றம் என்பதோடு தொடர்புபட்டதே மன்று என்பதும். இம் மன்றிலே கிராம நடனங்கள் நடைபெறும்[67]

---

60. இரத்தி நீடிய வகன்றலை மன்றத்து.
புறநா. 34 : 12.
61. மன்ற விளவு. புறநா. 181: 1.
62. மன்றப் பலவு. புறநா. 128 : 1.
63. மன்ற வேம்பு. புறநா.76 : 4; புறநா. 371: 7.
64. பிற்காலத்திற் சோழப்பெருமன்னர் காலத்திலிருந்த கிராமச்சங்கங்கள் செய்த சேவைகளை இக் காலப் பகுதியிலிருந்த பொதியில் மன்றம் முதலிய ஊரவைகள் செய்தனவாகத் தெரியவில்லை. இவற்றின் கடமை சங்க காலத்தில் ஊரில் நீதி நிலவச் செய்வதளவில் அமைந்து கிடந்தது. காலப் போக்கில் இவற்றின் கடமைகள் அதிகரித்தன.
65. பத்துப்பாட்டு. நச்சினர்க்கினியர் உரை. வே. சாமிநாதையர் பதிப்பு மூன்றும் பதிப்பு. 1931. பக்கம் 67.
66. நெடுஞ்சுவர் நல்லில் புலம்பக் கடைகழிந்து
மென்றோண் மகளிர் மன்றம் பேணார்.
புறநா. 373:11—12.
67. மன்றுதொறு நின்ற குரவை. மதுரை. 615.

இம் மன்றுகள் பசுக்களைக் கட்டுவதற்கு உதவின எனக் குறிஞ்சிப்பாட்டுக் கூறுகின்றது.[68]

ஊரவையங்களுக்கு உறுப்பினரை அக்காலத்திலும் தேர்ந்தெடுத்தனர். இதனை அகநானூற்றுச் செய்யுள் ஒன்று தெளிவாக எடுத்துக் கூறும். வாக்குச்சீட்டுக்கள் ஓலையால் ஆனவை; பானையே வாக்குச்சீட்டுக்களைப் போடும் பெட்டியாக வழங்கியது; "கயிற்றினாற் பிணித்தலையுற்ற குடத்தினுள்ள ஓலையை எடுத்துக் கொள்வதற்கு அக்குடத்தின் மேலிட்ட இலச்சினையை ஆய்ந்து நீக்கும் மாக்கள் அவற்றை வெளியே ஈர்த்தெடுத்தல் போல" என அப்பாட்டுப் பேசுகின்றது.[69]

## (6) பட்டங்கள்

அரசியலிலும் படையிலும் சேர்ந்து நாட்டின் நலனுக்காகச் சிறப்பாக உழைத்தவருக்குப் பட்டங்களும் பரிசிலும் வழங்கும் முறை சங்க காலத்தில் இருந்தது. அரசாங்கச் செயலாளருக்கு வழங்கப்படும் காவிதி என்ற பட்டத்தினை மதுரைக்காஞ்சி குறிக்கின்றது. சில காவிதி மாக்கள் நடுவராக இருந்தனரெனவும் இப்பாட்டிலிருந்து அறியலாம்.[70] காவிதி மகளிர் பொற்றொடி அணிந்து ஒளி சிறந்து

---

68. மான்கண மரமுதற் றெவிட்ட வான்கணங்
கன்றுபயிர் குரல மன்றுநிரை புகுதர.

குறிஞ்சி. 217—218.

69. கயிறுபிணிக் குழிசி ஓலை கொண்மார்
பொறிகண் டழிக்கும் ஆவண மாக்களின்.

அகநா. 77 : 7—8.

சோழப் பெருமன்னன் முதலாம் பராந்தகன் காலத்தில் கிராமவாரியங்களுக்குச் செயலாளரைத் தேர்ந்தெடுத்த முறையுடன் இது ஒப்பிடற்பாலது. *See K. A. Nilakanta Sastri : Studies in Cola History and Administration, p. 140.*

70. மதுரைக் காஞ்சி : 494—499.

விளங்கினரென்று பெருங்கதை கூறுவதாற் 'பிற்காலத்திற் பெண்களுக்கும் இப்பட்டம் வழங்கினரென அறியலாம்.[71] பெண்கள் இப்பட்டம் பெற்றதாகச் சங்க நூல்கள் கூறவில்லை. பிற்காலத்தில் இப்பட்டம் பெற்றவர் வரிநீக்கம் பெற்றூர் என்று சிலப்பதிகார உரையாசிரியர் கூறுவர்.[72] ஆனல் அத்தகைய வரி நீக்கம் சங்க காலத்தில் இருந்ததாகத் தெரியவில்லை. காவிதி என்ற சொல்லின் பொருள் விளங்கவில்லை. சங்க மருவிய காலத்திற்குரிய கலித்தொகை என்னும் நூலில் ஏனுதி என்ற பட்டம் கூறப்படுகின்றது.[73] இது போருக்குரிய பட்டமாகும். இச்சொல் 'சேனுபதி' என்னும் வடமொழிச் சொல்லினின்று பிறந்திருக்கலாம். சங்க நூல்களில் இப்பட்டம் குறிக்கப்படவில்லை.

## (7) நகர்க் காவலும் ஊர்க் காவலும்

தன் மக்களைப் பலவகைத் தீங்குகளினின்றும் காத்தல் அரசன் கடமையாகும். கள்ளர், கொள்ளைக்காரர் முதலியோரிடமிருந்து நாட்டைப் பாதுகாக்க வேண்டியவன் அவன். எனவே தெருக்காவலை அமைத்தான்; நகரையும் ஊரையும் காவல் செய்வதற்குக் காவற் படைகளையும் அமைத்தான்.

### நகர்க் காவலர்

நகரைக் காவல் செய்வதும் ஒற்றறிதலுமே இவர்களுடைய முக்கிய கடமைகள். இராக்காலத்திற் கொள்ளைக்காரர் நகர் வீதிகளிலே திரிந்தார்கள். அக் கொள்ளைக்காரரின் தோற்றத்தையும் அவர்கள் தொழிலையும் மதுரைக் காஞ்சி விரிவாக எடுத்துக் கூறுகின்றது. "அவர்களின் நிறம் கரிய பிடியின் தோலைப் போன்று கரிதாயிருந்தது. அவர்கள் கல்லையும் மரத்தையும் அறுக்கும் கூர்மையுடைய நிலத்தை யகழும் உளியை உடையவர்; தூங்குகின்ற வாளை உடையர்;

---

71. பெருங். 2. 5: 144—145.

72. சிலப்ப. அடியார்க்கு நல்லார் உரை. 22: 9.

73. கலி. 81: 17.

செருப்புக் கோத்த அடியை உடையர்; அவர்கள் ஆடை நுண்ணிதான வேலைப்பாடு உடையது; அச் சேலைக்கட்டின் மருங்கில் தொடையருகே கண்ணுக்குத் தெரியாமற் கிடக்கும்படி அழுத்திய கூரிய முனையினையுடைய வளைவுக் கத்தியை உடையர். அக் கத்தியின் மேலே பல நிறங்களைக் கொண்ட பட்டிகளை உடையர். மெல்லிய நூலால் ஆக்கிய நூல் ஏணியை அரையிலே சுற்றிய சுற்றினை உடையர். பேரணிகலன்களை விரும்பி அவற்றைக் களவாடுதற்கு இடம் பார்த்து அலைந்து திரிபவர்; விழித்த கண் இமைக்குமளவிலே மறைந்து கொள்ளும் பண்பினர்.[74]

இக் கொள்ளைக்காரரை அடக்குவதற்கு அரசன் காவலரை நியமித்தான். அக்காவலரை மதுரைக் காஞ்சி பின்வருமாறு வருணிக்கின்றது:—“அவர்கள் இலகுவாகக் கள்வரைக் கண்டுபிடிப்பர்; கள்வரைத் தேடும்பொழுது வலிய களிற்றை இரையாகக் கொள்வதற்குப் பார்க்கும் வலிய புலியைப் போன்றவர்; துயில்கொள்ளாத கண்ணை உடையவர்; களவுத் தொழிலின் நுண்மையை அறிந்த அறிஞராலே புகழப்பட்ட களவுத் தொழிலைத் திறமையுடன் கையாளும் தன்மை உடையவர்; நுண்மை செறிந்த நூலின் வழியைத் தப்பாத நுண்ணிய ஆராய்ச்சியையுடைய ஊர்க்காவலர்; எவரும் தப்புதற்கரிய அம்பினை உடையர்; தேர் ஓடுகின்ற தெருவின் கண்ணே நீர் திரண்டு ஒழுகும்படி

---

74. இரும்பிடி மேஎந்தோ லன்ன விருள்சேர்பு
கல்லு மரனுந் துணிக்குங் கூர்மைத்
தொடலை வாளர் தொடுதோ லடியர்
குறங்கிடைப் பதித்த கூர்நுனைக் குறும்பிடிச்
சிறந்த கருமை நுண்வினை நுணங்கற
னிறங்கவர்பு புனைந்த நீலக் கச்சினர்
மென்னூ லேணிப் பன்மாண் சுற்றினர்
நிலனக ழுளியர் கலனசைஇக் கொட்குங்
கண்மா ருடவர். மதுரை. 634—642.

மழை மிகப் பெய்த நள்ளிரவிலும் கடமை பிழையாது உலாவித் திரிபவர்."[75]

**ஊர்க்காவலர்**

இவர்கள் இராக்காலங்களில் ஊரைக் காவல் செய்பவர்கள். நள்ளிரவில் இவர்கள் சூலமேந்திய கையுடன் திரிவார்கள்.[76] இக்காவலர் நெடிய நாவமைந்த மணிகளை ஒலிப்பதுண்டு.[77] இம்மணிகள் "காவலை உடைய தலைக்கடை புழைக்கடை வாயில்களைப் பாதுகாத்துக்கொள்ளுக, ஓ" என்று ஒலிக்குந் தன்மையன.[78] மனைகள்தோறும் இக் காவல் மணிகள் ஒலித்தவண்ணம் இருக்கும்[79]

**தெருக்காவலர்**

வழிப்போக்கரை வழியலைக்கும் கள்ளரிடமிருந்து காப்பாற்றுவதே இவர்களுடைய முக்கியமான கடமையாகும்.

---

75. கண்மா ருடவ ரொடுக்க மொற்றி
வயக்களிறு பார்க்கும் வயப்புலி போலத்
துஞ்சாக் கண்ண ரஞ்சாக் கொள்கைய
ரறிந்தோர் புகழ்ந்த வாண்மையர் செறிந்த
நூல்வழிப் பிழையா நுணங்குநுண் டேர்ச்சி
யூர்காப் பாள ருக்கருங் கணையினர்
தேர்வழங்கு தெருவி னீர்திரண் டொழுக
மழையமைந் துற்ற வரைநா ளமயமு
மசைவில ரெழுந்து நயம்வந்து வழங்கலின்.
மதுரை. 642—650.

76. யாமங் கொள்பவர் சுடர்நிழல். புறநா. 37 : 9.

77. நெடுநா வொண்மணி நிழத்திய நடுநாள்.
முல்லை. 50.

78. காப்புடை வாயில் போற்றோ என்னும்
யாமங் கொள்பவர் நெடுநா ஒண்மணி.
நற். 132 : 8—9.

79. நெடுநா வொண்மணி கடிமனை இரட்ட.
நற். 40 : 1.

இளந்திரையன் நாட்டிலே வழியலைக்கும் கள்ளர் இல்லை யென உருத்திரங்கண்ணனார் பாடுகின்றார். அவன் அமைத்த காவலர் படையின் சிறப்பே இதற்குக் காலாக இருந்திருத்தல் வேண்டும்.[80]

சிறந்து விளங்கிய உள்நாட்டு வியாபாரத்தின் பாதுகாவலுக்காகச் சந்திகளில் வீரர் நிறுத்தப்பட்டனர். கழுதையில் மிளகெடுத்துக் கொண்டுபோவோருடன் வம்பலர் வழங்கும் பெரிய வழியிலுள்ள கவர்த்த வழிகளைக் காவல் செய்வோரைப் பற்றிப் பெரும்பாணாற்றுப்படை கூறுகின்றது.[81] வில்லை உடைய கையினராய்ப் பல வழிகளில் ஆறலை கள்வரைக் காப்பர் இளைஞர். இவர்கள் குழையால் வேய்ந்த குடிசையிலிருக்கும் மான் தோலாகிய படுக்கையினையும், தழை விரவின கண்ணியினையும், கடிய சொல்லினையுமுடையவரென்று மதுரைக் காஞ்சி பேசுகின்றது.[82] "அணுக முடியாத கவர் நெறிகளை அம்பு வில்லுடன் நின்று காக்கும் கல்லா வீரர்" என நற்றிணை குறிக்கின்றது [83]

80. அத்தஞ் செல்வோ ரலறத் தாக்கிக்
கைப்பொருள் வௌவுங் களவேர் வாழ்க்கைக்
கொடியோ ரின்றவன் கடியுடை வியன்புலம்.
பெரும்பாண். 39—41.

81. ......மிரியற்
புணர்ப்பொறை தாங்கிய வடுவாழ் நோன்புறத்
தணர்ச்செவிக் கழுதைச் சாத்தொடு வழங்கு
முல்குடைப் பெருவழிக் கவலை காக்கும்.
பெரும்பாண். 78—81.

82. இலைவேய் குரம்பை யுழைதட் பள்ளி
யுவலைக் கண்ணி வன்சொ லிளைஞர்
சிலையுடைக் கையர் கவலை காப்ப.
மதுரை. 310—312.

83. கல்லா மழவர் வில்லிடை விலங்கிய
துன்னரும் கவலை அருஞ்சுரம். நற். 387 : 4—[illegible].

வணிகர்களே தாம் வழங்கும் வழிகளைப் பாதுகாக்கும் பொறுப்பை ஏற்றிருந்தனர். அவர்கள் சட்டையும் செருப்பும் அணிந்து, தோளிலே வாளைத் தொங்கவிட்டுச் சென்றார்கள். "அவர்கள் காலன்போல ஈட்டியை எய்வார்கள். அவர்களுடைய இருமருங்கும் வரிகள் விரவிய கச்சிலே வாள்கள் கட்டப்பட்டுத் தொங்குவன. அவ்வாள்கள் வெள்ளை நிறப் பிடியை உடையன; மலையிலூர்ந்து செல்லும் பாம்பைப் போன்றன. அவர்கள் உள்ளங்காலைப் பாதுகாக்கச் செருப்பு அணிந்திருப்பர்; சட்டைகளும் அணிந்திருப்பர்," என்று பெரும்பாணாற்றுப்படை கூறுகின்றது.[84]

## (8) வரிகள்

### நிலவரியும் சுங்கவரியும்

அரசரின் கடமை மக்களைப் புரத்தல். மக்களைக் காத்தற் பொருட்டுப் படை முதலியவற்றை அரசர் அமைத்தனர். அரசாங்கத்திற்குரிய வேறு செலவிற்கும் அரசர் குடிமக்களை எதிர்பார்த்தனர். இத்தகைய செலவிற்கென வரிக்கப்பட்டு அரசனுக்குத் தரப்படுவதே வரி. அது குடிமக்களைப் புரத்தல் காரணமாய் இறுக்கப்பட்டமையின் சங்ககாலத்திற் புரவு எனப்பட்டது. இறுக்கும் இறையன்றி மிக்க இறை பெறுவதை அக்கால அரசர் வெறுத்தனர். "நான் பகைவரை வெல்லேனாகில் எம் அரசன் கொடிய வரி பெறும் அரச

---

84. ......திருந்துதொடை நோன்றா
ளடிபுதை யரண மெய்திப் படம்புக்குப்
பொருகணை தொலைச்சிய புண்டீர் மார்பின்
விரிவுவரிக் கச்சின் வெண்கை யொள்வாள்
வரையூர் பாம்பிற் பூண்டுபுடை தூங்கச்
சுரிகை நுழைந்த சுற்றுவீங்கு செறிவுடைக்
கருவி லோச்சிய கண்ணக னெறுழ்த்தோட்
கடம்பமர் நெடுவே ளன்ன மீளி
யுடம்பிடித் தடக்கை யோடா வம்பலர்.
பெரும்பாண். 68—76.

னென்று குடிமக்கள் கருதிக் கண்ணீர் பரப்பிப் பழிதூற்றும் கொடுங்கோலை உடையேனுகுக" என்று பாண்டியன் நெடுஞ் செழியன் வஞ்சினம் கூறுகின்ருன்.[85] முறைமைக்கு மேலான இறை பெறும் அரசனை "மிகுதி இல்லாத ஆண்மையை யுடைய உள்ளஞ் சிறியோன்" எனச் சோழன் நலங்கிள்ளி இகழ்ந்து கூறுகின்ருன்.[86]

குடிகளிடத்து அரசன் வரிபெறும் வகையினைப் பாண்டியன் அறிவுடைநம்பிக்குப் பிசிராந்தையார் பின் வருமாறு தெளிவாக எடுத்து விளம்புகின்ருர். "காய்த்த நெல்லை அறுத்துக் கவளமாகக் கொண்டால் ஒரு மா அளவிற் குறைந்த நிலத்தில் விளைந்த கதிராயினும் அது ஒரு யானைக் குப் பல நாளைக்கு ஆகும்; நூறு வயல்களாக இருந்தாலும் யானை தனித்துப் புகுந்து உண்ணுமாயின் அந்த யானையின் வாயினுட் புகுந்த நெல்லினும் மிகுதியான பகுதி கெடும். அதுபோலவே அறிவுடைய அரசன் இறைகொள்ளும் நெறியை அறிந்துகொள்ளின் அவன் நாடு கோடிக்கணக் கான பொருளினை ஈட்டிக்கொடுத்துத் தானும் மிகவும் தழைக்கும்; அரசன் அன்பு கெடக்கொள்ளும் பொருட் டொகுதியை விரும்பின் அந்த யானை புக்க புலம்போலத் தானும் உண்ணப் பெருன்; உலகமும் கெடும்."[87]

---

85. கொடியனெம் மிறையெனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றுங் கோலே னுகுக.
புறநா. 72 : 11—12.

86. குடிபுர விரக்குங் கூரி லாண்மைச்
சிறியோன். புறநா. 75 : 4—5.

87. காய்நெல் லறுத்துக் கவளங் கொளினே
மாநிறை வில்லதும் பன்னுட் காகும்
நூறுசெறு வாயினுந் தமித்துப்புக் குணினே
வாய்புகு வதனினுங் கால்பெரிது கெடுக்கும்
அறிவுடை வேந்த னெறியறிந்து கொளினே
கோடி யாத்து நாடுபெரிது நந்தும்
....................................
பரிவுதப வெடுக்கும் பிண்ட நச்சின்
யானை புக்க புலம்போலத்
தானு முண்ணு னுலகமுங் கெடுமே. புறநா. 184.

நிலத்திலும் வணிகத்திலும் இருந்தே அரசன் தன் செல்வத்துள் பெரும்பகுதியைப் பெற்ருன். அக்காலத்தில் நில அளவைகள் வழக்கிலிருந்தன என்பதைச் சங்க நூல்களிலிருந்து அறியலாம். இந்நூல்களில் வேலி,[88] மா[89] என்ற நில அளவைகள் கூறப்பட்டுள்ளன. தமிழ்ப் பேரகராதியின்படி ஒரு வேலி 6·74 ஏக்கரும் ஒரு மா 1/20 வேலியும் கொண்டன.[90] கலாநிதி உ. வே. சாமிநாதையர் நூறு குழீ கொண்டது ஒரு மா எனக் கொள்வர்.[91] இந்த நில அளவைகள் அக்காலத்து இருந்தபோதும் அரசனுக்கு வரியாக இறுக்கப்பட்ட பகுதி எவ்வளவு என்று அறிய முடியவில்லை. மேலும் அவன் அவ்வரியைக் காசாகப் பெற்ருனே அல்லது தானிய வகையாகப் பெற்ருனே என்றும் கூற இயலாது. பெரும்பாலும் தானிய வகையிலேயே பெற்றிருக்கலாம். அவன் தனக்குச் சேரவேண்டிய வரிகளைப் பெற்றுக்கொண்ட முறைகளும் தெரியவில்லை. தென்னுட்டு நடைமுறைகள் யாவற்றையும் வடநாட்டு நடைமுறைகளோடு பொருத்திக்காட்டவிழையும் இராமச்சந்திர தீட்சிதர் வடமொழி நூல்களிற் கண்ட ஆறிலொரு (1/6) பகுதியையே தமிழ்மன்னரும் இறையாகப் பெற்றனர் என்கின்ருர்.[92] சங்க நூல்களில் இக் கொள்கைக்கு ஆதரவான சான்றுகள் ஒன்றும் கிடைக்கவில்லை.

நிலங்கள் மானியமாக விடப்பட்டமைக்குச் சான்றுகள் சங்க நூல்களிற் காணப்படவில்லை. சிலருக்குக் காணிகள் இறையிலியாகக் கொடுக்கப்பட்டமைக்கும் அகச் சான்றுகள் இல்லை. புறநானூற்றைத் தொகுத்த ஆசிரியர் நாகனூர்

---

88. வேலி—புறநா. 394 : 21 ; பொருந. 246.

89. மா—புறநா. 184 : 2 ; பொருந. 180.

90. *Madras Tamil Lexicon Vol. VI. p. 3839 and Vol. V. 3142.*

91. பத்து. நச். உரை. சாமிநா. மூன்ரும் பதிப்பு. 1931. பக்கம் 121.

92. *Studies in Tamil Literature and History p. 209.*

என்னும் புலவர் தன் நிலைமையைக் கூறிக் கிள்ளிவளவனிடம் நிலத்திற்கு வரி நீக்கம் பெற்றூர் என்று புறநானூறு 35-ம் செய்யுள் இறுதியிற் கூறுகின்றூர்.

வாணிபத்திலிருந்தும் அரசனுக்கு மிகுதியான வருமானம் கிடைத்தது. எவ்வளவு வரி நிலத்திலிருந்து வந்ததோ அவ்வளவு வரி வாணிபத்திலிருந்தும் வந்ததெனக் கூறலாம். மேற்கே உள்ள நாடுகளோடு வாணிபம் மிகுதியாக நடைபெற்றது. இவ் வாணிபத்தில் ஈடுபட்டுப் பொருள் பெற்ற வணிக மக்களிடமிருந்து அரசர் வரிபெற்றனர். பட்டினப் பாலையிற் கூறப்படுகின்ற சுங்கப் பகுதிச் செயலாளரைப் பற்றிய செய்திகள் இதற்கு ஆதாரமாக அமைந்துள்ளன. காவிரியாறு பூ மணங்களைக் கொண்டுவந்து திரட்டுகின்ற மணலிலே துயின்று, அரசனின் பொருளைக் காக்கின்ற தொழில் மாக்கள் ஞாயிற்றின் தேர் பூண்ட குதிரைபோல நாள்தோறும் ஒழுங்காக வரிகளை இறுத்துத் தம் கடமைகளைச் செய்வார்களென்று அந்நூல் கூறுகின்றது.[93] இதிலிருந்து சுங்க வீடுகளில் வரிகளை இறுப்பதற்கு அலுவலாளர் பலர் நியமிக்கப்பட்டனரென அறிகின்றேம். சந்திகளிலும் உள்நாட்டு வணிகத்தோடு தொடர்புள்ள வரிகள் இறுக்கப்பட்டன.[94] இவ்வாறு இறைபெறு நெறி அறிந்து பெற்று, அறநெறி தவருது ஆண்டு வந்தனர் சங்ககால அரசர்.

93. மாஅகாவிரி மணங்கூட்டுந்
தூஉவெக்கர்த் துயின்மடிந்து
வாலிணர் மடற்றுழை
வேலாழி வியன்றெருவி
னல்லிறைவன் பொருள்காக்குந்
தொல்லிசைத் தொழின்மாக்கள்
காய்சினத்த கதிர்ச்செல்வன்
றேர்பூண்ட மாஅபோல
வைகறொறு மசைவின்றி
யுல்கு செய. பட்டினப். 116—125.

94. உல்குடைப் பெருவழி. பெரும்பாண். 81.

———

## நான்காம் இயல்

# போரும் போர்முறைகளும்

## (1) மறப்பண்பு

சங்க நூல்கள் தமிழரின் போரையும் போர்முறையையும் பற்றி விரிவாகக் கூறுகின்றன. அக்காலத்திலே வாழ்ந்த தமிழர் இயற்கையாகவே மறப்பண்பு படைத்தவராக விளங்கினர். அவருடைய பழக்கவழக்கம், தொழில், விளையாட்டு யாவும் போர்ப் பண்புடன் திகழ்ந்தன. தமது பிள்ளைகளின் மார்பில் ஐம்படைத் தாலி அணிவித்து இன்புற்றனர். சங்கு, சக்கரம், தண்டாயுதம், வாள், வில் ஆகிய ஐந்து கருவிகளின் உருவங்கள் அமைந்த இத் தாலியைப் பிறந்த ஐந்தாம் நாளில் பிள்ளைகளுக்கு அணிவித்தனர். இத் தாலியை அணிந்த சிறு பிள்ளைகளைப்பற்றி அகநானூறும் புறநானூறும் எடுத்துக் கூறுகின்றன.[1] புலியின் பல்லைக் கோத்துச் செய்த தாலிகளையும் இவர்கள் அணிந்தனர்.[2] விளையாட்டுக் காலங்களிற் சேவற்கோழி, ஆட்டுக்கடா, ஏறு முதலியவற்றைத் தம்முள் ஒன்றோடொன்று மோதிப் போர் செய்யும்படி பயிற்றிப் போர் செய்ய விட்டு அதனைப் பார்த்து மகிழ்வர். வளவிய இதழை உடைய குளவியும் குறிஞ்சியும் வாடும்படி ஏறுகள் தம்மிற் பொருகின்ற

---

1. பொன்னுடைத் தாலி யென்மகன். அகநா. 54 : 18.

தாலி களைந்தன்று மிலனே. புறநா. 77 : 7.

2. புலிப்பற் றாலிப் புதல்வன். குறு. 161 : 3.

புலிப்பல் கோத்த புலம்புமணித் தாலி. அகநா. 7 : 18.

புலிப்பற் றாலிப் புன்றலைச் சிறாஅர். புறநா. 374 : 9.

ஆரவாரத்தை மலைபடுகடாம் குறிக்கின்றது.[3] ஏறுகள் பொருவதனுற் சேருகும் இடத்தைப் பற்றிப் பட்டினப்பாலை பாடுகின்றது.[4]

போரென்று கேட்டால் அதனை விரும்பி ஆரவாரிக்கும் சிவந்த கண்ணையுடைய வீரர் தமிழர்.[5] ஊரிலுள்ள மன்றின்கண் தூங்கும் முழவினது காற்றெறிந்த தெளிந்த ஓசையையுடைய கண்ணின் ஒலியைக் கேட்பின் அது போர்ப் பறையென மகிழ்வர்.[6] போரென்று கேட்பின் விரும்பும் மறவரை[7] அரசன் பறவைகள் மூலம் போருக்குக் கூடாத நிமித்தம் கண்டால் பகையிடத்து ஏவான். அதனுல் மனம் உடைந்து தம்முடைய பூரித்த தோள்களைத் தட்டி ஒருவரோ டொருவர் பொருது மடிய வேண்டுமென்னும் மறப்பண்பு கொண்டு நிற்பர்.[8] இவர்கள் போரினைத் தமது பொழுது போக்காகக் கொண்டனர் எனலாம். இதனுலேயே சோழன் நலங்கிள்ளி வெல்லும் போரினைச் செய்யும் பாசறையின் கண்ணே இருத்தலல்லது தன் நகரின்கண் இருத்தலை

---

3. வள்ளிதழ்க் குளவியுங் குறிஞ்சியுங் குழைய
நல்லேறு பொரூஉங் கல்லென் கம்பலை.
மலைபடு. 334—335.

4. ஏறு பொரச் சேருகி. பட்டினப். 46.

5. செருவேட்டுச் சிலைக்குஞ் செங்க ணுடவர்.
அகநா. 157 : 4.

6. பொதுவிற் றூங்கும் விசியுறு தண்ணுமை
வளிபொரு தெண்கண் கேட்பின்
அதுபோ ரென்னு மென்னையு முளனே.
புறநா. 89 : 7—9.

7. போரெனிற் புகலும் புனைகழன் மறவர்,
புறநா. 31 : 9.

8. உட்பகை யொருதிறம் பட்டெனப் புட்பகைக்
கேவா னுகலிற் சாவேம் யாமென
நீங்கா மறவர் வீங்குதோள் புடைப்ப.
புறநா. 68 : 11—13.

விரும்பான் எனப் புலவர் பாடினர்.[9] அடுகின்ற போரை விரும்புதலால் அரசர் இரவிற் கண்ணுறக்கமும் பெறுரென முல்லைப் பாட்டுப் பாடுகின்றது.[10]

இத்தகைய மறப்பண்பு படைத்த தமிழரின் பெண்பாலாரும் வீரம் செறிந்த குணத்துடன் விளங்கின ். தம் வயிற்றிற் பிறந்து தம் முலைப்பாலுண்ட மக்கள் மறம் குன்றுத மானமும், வீரம் செறிந்த வீருப்பும் உடையராதல் வேண்டுமென்பது தமிழ்த் தாய்மாரின் குறிக்கோள். புறங் காட்டி ஓடாத மேற்கோளையுடைய வீரனின் தாய், தன் மகனின் மாண்பைக் கண்டபொழுது அவளுடைய வாடிய முலைகள் பால் ஊறிச் சுரந்தன எனப் புறநானூறு கூறுகின்றது.[11] "போரின்கண் என் மகன் புறமுதுகிட்டு ஓடியிருப்பின் அவனுக்குப் பாலூட்டிய இம் முலையை அறுத்திடுவேன்" என்று வஞ்சினம் கூறிப் போர்க்களம் புகுந்து, தன் மகன் இறந்து கிடப்பது கண்டு, ஈன்றபொழுதிலும் பெருமகிழ்ச்சி கொண்டாள் தமிழ் மகள் ஒருத்தி.[12] நின் மகன் யாண்டுளன் என்று வினவியவர்க்குப் "புலிகிடந்து

9. நல்லிசை வேட்டம் வேண்டி வெல்போர்ப்
பாசறை யல்லது நீயொல் லாயே. புறநா. 31: 5—6.

10. மண்டமர் நசையொடு கண்படை பெறுஅது.
முல்லை. 67.

11. இடைப்படை யழுவத்துச் சிதைந்துவே றாகிய
சிறப்புடை யாளன் மாண்புகண் டருளி
வாடுமுலை யூறிச் சுரந்தன
ஓடாப் பூட்கை விடலை தாய்க்கே.
புறநா. 295 : 5—8.

12. சிறுவன்
படையழிந்து மாறின னென்றுபலர் கூற
மண்டமர்க் குடைந்தன னாயி னுண்டவென்
முலையறுத் திடுவென் யானெனச் சினைஇக்
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களந் துழவுவோள் சிதைந்துவே றாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே.
புறநா. 278.

போகிய கல்முழைபோல அவனைப்பெற்றவயிறே இ ; அவன் போர்முனையிடத்துத் தோன்றுவான் ; அவனைக் காண வேண்டின் ஆண்டுச்சென்றே காண்'' என்று விடையிறுத் தாள் இன்னொருத்தி.[13] பிள்ளையைப் பெற்றுவளர்த்தல் தாயின் கடனென்றும், தன்குலத்துக்குரிய படைக்கலப் பயிற்சியாகிய கல்வி அதற்குரிய அறிவு முதலியவற்றால் நிறைந்தவனாகச் செய்தல் தகப்பன் கடன் என்றும், படைக் கலத்தைத் திருத்தமாகச் செய்து கொடுத்தல் கொல்லன் கடன் என்றும், போர்க் களத்தில் மதயானைகளை வெட்டி வெற்றியுடன் மீளுவது அவ்வீரன் கடன் என்றும் கொண் டனர் அக்காலத்துத் தாய்மார்.[14] முதல் நாள் நடந்த போரில் தமையனையும், மறுநாட் போரிற் கணவனையும் இழந்தும் உள்ளம் சோராத தாய், தன்குடியைக் காப்பதற்கு ஒரு மகனையே பெற்றிருந்தாள் எனினும் அம்மகனைப் போருக்கு அனுப்ப அவள் தயங்கவில்லை. தன் மகனை அன்போடு அழைத்து வெள்ளிய ஆடையை உடுத்தாள்; தலையில் எண்ணெய் தேய்த்துச் சீவி முடித்தாள்; வேலை அவன் கையிலே கொடுத்தாள். நீயும் போய் வா போருக்கு என்று கூறி வழி அனுப்பி வைத்தாள் அவள்.[15]

---

13. புலிசேர்ந்து போகிய கல்லளை போல
ஈன்ற வயிறோ இதுவே
தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே.
புறநா. 86 : 4—6.

14. ஈன்றுபுறந் தருதல் என்றலைக் கடனே
சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே
ஒளிறுவா ளருஞ்சமம் முருக்கிக்
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே.
புறநா. 312.

15. இன்றும், செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிதுவிரித் துடீஇப்
பாறுமயிர்க் குடுமி யெண்ணெய் நீவி
ஒருமக னல்ல தில்லோள்
செருமுக நோக்கிச் செல்கென விடுமே.
புறநா. 279 : 7—11.

வஞ்சினங் கூறுதலும் அச்காலத்து மக்களின் மறப் பண்பினை விளக்குகின்றது. எந்த வீரச்செயலிலும் இன்னது செய்யாது விடின் இவ்வாறு ஆவோமென்று துணிவுடன் கூறி, அவ்வஞ்சினப்படியே செய்து முடிப்பது அவர்களின் சிறந்த இயல்புகளுள் ஒன்றாக இருந்தது. ''சிங்கம்போலச் சினந்து மீளாத மேற்கோள் பொருந்திய உள்ளத்தினையும் விரைந்து செல்லும் படையினையுமுடைய அரசர், தம்மில் ஒப்பக் கூடிவந்து என்னோடு பொருவோமென்று சொல்லுவர்; அவ்வரசரைப் பொறுத்தற்கரிய போரின் கண்ணே அலறப் பொருது, தேருடனே அவர் உடைந்தோடும் புறக் கொடையை காணேனாயின், எனக்குச் சிறந்த என் தேவியை விட்டு நீங்குவேனாக; அறம் நிலைகலங்காத அன்பினையுடைய அவைக்களத்து அறத்தின் திறப்பாடில்லாத ஒருவனை வைத்து முறைகலங்கிக் கொடுங்கோல் செய்தேனாகுக'' என்பது ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியனின் வஞ்சினப்பாட்டு.[16] ''என்னை இளையன் எனப் புல்லிய மொழி மொழிந்த சினம் பொருந்திய அரசரைப் போரின் கண்ணே சிதறப் பொருது அவர்தம் முரசத்தோடுகூட அவரைக் கைக் கொண்டிலே னாயின், எனது குடை நிழற்கண் வாழ்வார், தாங்கள் சென்ற டையும் நிழல் காணாதே, கொடியன் எம்முடைய அரசன் என்று கருதிக் கண்ணீரைப் பரப்பிப் பழி தூற்றும் கொடுங்கோலை உடையேனாகுக'' என்று தலையாலங்

---

16. மடங்கலிற் சினைஇ மடங்கா வுள்ளத்
    தடங்காத் தானை வேந்த ருடங்கியைந்
    தென்னொடு பொருது மென்ப வவரை
    ஆரம ரலறத் தாக்கித் தேரொ
    டவர்ப்புறங் காணே னாயிற் சிறந்த
    பேரம ருண்க ணிவளினும் பிரிக
    அறனிலை திரியா வன்பி னவையத்துத்
    திறனி லொருவனை நாட்டி முறைதிரிந்து
    மெலி கோல் செய்தே னாகுக.

புறநா. 71 : 1—9.

கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் போர்க்களத்தில் நின்று வீரமொழி புகலுகின்றான்.[17]

சோழன் நலங்கிள்ளி போர்செய்யப் புகுமுன் "என் உள்ளத்தை இகழ்ந்த அறிவில்லாதோன், துயில்கின்ற புலியை இடறிய குருடன் போலப், பிழைத்துப் போதலோ அரிது; அவன் வருந்தும்படி பொரேறுயின் தம்நெஞ்சிலே காதல் கொள்ளாத பொதுப் பெண்டிர் மார்பில் என் மாலை புரளுவதாக" என்று வஞ்சினம் மொழிந்தான்.[18] இவ்வாறு பின்னர் நடக்கும் நிகழ்ச்சியின் உறுதிப்பாட்டை முன்னரே தெரிவித்து வீரத்துடன் வாழ்ந்தனர் தமிழர்.

மானக்கேட்டுடன் வாழ்வதிலும் உயிர் துறத்தல் சிறந்தது என்ற உயரிய பண்புடையவர் அவர். இவ்வியல்பு அவரது இரத்தத்துடன் கலந்து வளர்ச்சியுற்ற இயற்கையான குணம் எனலாம். உயிரை விட்டால் மானம் நிலைக்குமெனின் உயிரை விட்டு மானத்தைக் காக்கும் சீரிய கொள்கை

---

17. இளைய னிவனென வுளையக் கூறி
......................................
சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை
அருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொ
டொருங்ககப் படேஎ னாயிற் பொருந்திய
என்னிழல் வாழ்நர் சென்னிழற் காணாது
கொடியனெம் மிறையெனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றுங் கோலே னாகுக.
புறநா. 72 : 2—12.

18. ஆற்ற லுடையோ ராற்றல்போற் றாதென்
உள்ள மெள்ளிய மடவோன் றெள்ளிதிற்
றுஞ்சுபுலி யிடறிய சிதடன் போல
உய்ந்தனன் பெயர்தலோ வரிதே.........
..................................................
..................................சென்றவண்
வருந்தப் பொரேஎ னாயிற் பொருந்திய
தீதி னெஞ்சத்துக் காதல் கொள்ளாப்
பல்லிருங் கூந்தன் மகளிர்
ஒல்லா முயக்கிடைக் குழைகவென் றாரே.
புறநா. 73 : 5—14.

உடையவர் அவர். தன்னேடு ஒத்த வீரஞ்செறிந்த அரசனுகிய சோழன் கரிகாற் பெருவளத்தான் எறிந்த வேல் முதுகுப்புறத்தே பட அப்புண்ணுக்கு நாணி, மறக்கூறுடைய சேரமான் பெருஞ்சேரலாதன் வாளோடு வடக்கிருந்தான்.[19] இவ்வாறு, வென்ற சோழனிலும் வடக்கிருந்த சேரன் மிகுந்த புகழை உடையவன் என்று வெண்ணிக்குயத்தியார் கூறுகின்றார்.[20] தன்னுடைய மக்கள், முறைக்கு மாருகத் தன்னை எதிர்த்துப் போர் தொடுத்ததைப் பொருத கோப்பெருஞ் சோழன் தன் மானத்தை நிலை நாட்டுவதற்காகப் பட்டினி கிடந்து வடக்கிருந்து மாய்ந்தான்.

சேரமான் கணைக்கால் இரும்பொறை சோழன் செங்கணுனேடு பொருது சிறையிற் கிடந்தான். சிறையிலே நீர் விடாய் எடுத்ததனுல் அது தீரத் தண்ணீர் தாவென்று கேட்டான்; அவர்கள் உடனே கொடுக்காது சிறிது தாமதித்துக் கொடுத்தனர். சேரன் மானங்கெட வந்த அதனைக் குடிப்பதா என்ற எண்ணத்துடன் தண்ணீரைக் கையில் வைத்துக்கொண்டே உயிர் நீக்கும்பொழுது பின்வருமாறு பாடினுன்: "பகைவராற் கொல்லப்படாது, சங்கிலியாற் பிணிக்கப்பட்ட நாய் போலப் பிணித்துத் துன்பத்தைச் செய்து இருத்தியவருடைய உபகாரத்தால் வந்த தண்ணீரை இரந்துண்ணுதல் மாண்புடையதன்று எனக் கொள்ளாது, வயிற்றுத்தீத் தணிதற் பொருட்டுத் தண்ணீரை இரந்துண்ணும் பண்புடையோம் யாம்; எம் பெற்ருேர் இவ்வாறு இரந்துண்டு உயிர் வாழும்

---

19. தன்போல் வேந்தன் முன்புகுறித் தெறிந்த
புறப்புண் ணுணி மறத்தகை மன்னன்
வாள்வடக் கிருந்தனன். புறநா. 65 : 9—11.

20. சென்றமர்க் கடந்தநின் னுற்ற ருேன்ற
வென்ருேய் நின்னினு நல்ல னன்றே
கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை
மிகப்புக ழுலக மெய்திப்
புறப்புண் ணுணி வடக்கிருந் தோனே.
புறநா. 66 : 4—8.

மக்களைப் பெற்றூர்காண்.[21]'' அரசருக்கு மானத்தின் மிக்க அறனும் பொருளும் இல்லையென்பது இவற்றூற் பெறப்படுகின்றது.

போர்க்களத்தில் வீழ்ந்தோரே வீரர் எனக் கருதப் பட்டனர். இதனுல் பிள்ளை இறந்து பிறப்பினும், தசைத் தடியாகிய மணை பிறப்பினும், அவற்றையும் ஆளல்ல வென்று கருதாது வாளால் வெட்டி அடக்கம் செய்வர்.[22] நோய் காரணமாக இறந்த ஒருவனின் உடம்பைத் தமது ஆண்மையே பற்றுக்கோடாகப் போரிலே பட்ட வீரர் செல்லும் உலகத்திலே செல்கவென்று வாளால் வெட்டிய பின்பே அடக்குவர்.[23] இவை யாவும் பண்டைத் தமிழரின் மறப் பண்பின் அறிகுறிகள்.

## (2) போர்க்குக் காரணம்

இத்தகைய மறப் பண்பு படைத்த தமிழரிடையே அடிக்கடி போர்கள் நிகழ்வது இயற்கையே. இப்போர்கள் எழுந்தமைக்குப் பல காரணங்கள் உண்டு. அளவுகடந்த மண்ணுசையால் போர் நிகழ்வதுண்டு. தன்னுட்டில் வாழும் குடிகள் வளத்துடன் வாழ்வதற்குப் போதிய இடமில்லாதத ஞல் இடம் சிறிதென்னும் ஊக்கமேலீட்டினுல் மன்னர் போர்

---

21. தொடர்ப்படு ஞமலியி னிடர்ப்படுத் திரீஇய
கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்
மதுகை யின்றி வயிற்றுத்தீத் தணியத்
தாமிரந் துண்ணு மளவை
ஈன்ம ரோவிவ் வுலகத் தானே. புறநா. 74 : 3—7.

22. குழவி யிறப்பினு மூன்றடி பிறப்பினும்
ஆளன் றென்று வாளிற் றப்பார்.
புறநா. 74 : 1—2.

23. நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇ
..........................................
மறங்கந் தாக நல்லமர் வீழ்ந்த
நீள்கழல் மறவர் செல்வுழிச் செல்கென
வாள் போழ்ந் தடக்கலும். புறநா. 93 : 5—11.

தொடுப்பர். பூமி பிற வேந்தருக்கும் பொதுவென்னும் சொல்லைப் பொருது, தன் நாடு இடம் சிறிதென்னும் மேற்கோள் செலுத்தப் போர் புரியும் மன்னனாக விளங்கினான் சேரமான் கடுங்கோவாழியாதன்.[24] அக்காலத்தில் தமிழ் நாட்டு மூவேந்தரும் ஓயாது தம்முள்ளும் குறுநில மன்னருடனும் நிகழ்த்திய போர்களை நோக்கின், தம் படைவலி, தம் செங்கோல், தம் ஆணை முதலியவற்றை யாவரும் ஒப்புக்கொண்டு தமது ஆட்சிக்கு உட்பட்டிருக்கத் தாம் அரசருக்கு அரசராகத் திகழவேண்டும் என்ற உட்கோளே அக்கால அரசரின் போர்கள் பலவற்றிற்குக் காரணமாக இருந்ததென அறியலாம். வெண்ணிப்பறந்தலை, கருவூர், கூடல், வாகைப் பறந்தலை, நெய்தலங்கானல், தலையாலங்கானம், கானப்பேர் முதலிய இடங்களில் இக்காரணம் பற்றியே போர்கள் எழுந்தன.

அரசுரிமைக்குத் தடையேற்படும் பொழுதும் போர் மூளும். உருவப் பல் தேர் இளஞ்சேட் சென்னியின் மகன் கரிகாற்பெருவளத்தான் பகைவருடைய காவலினின்றும் தப்பி ஓடித் தன் அரசுரிமையைப் பெறுவதற்குப் போர் புரிந்தமையைப் பட்டினப்பாலையும், பொருநராற்றுப்படையும் விரிவாகக் கூறுகின்றன.[25] அரசுரிமை காரணமாகச் சோழன் நலங்கிள்ளிக்கும் நெடுங்கிள்ளிக்குமிடையே பிணக்கு ஏற்பட்டது.[26] அரசரின் புதல்வர் தமக்கு வரும் அரசுரிமையைத் தந்தையர் அரசபதவியைத் துறக்கு முன்பே பெறுவதற்குத் தந்தையருடன் போர் புரிவதும் உண்டு.[27]

---

24. வையங் காவலர் வழிமொழிந் தொழுகப்
போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறாஅ
திடஞ்சிறி தென்னு மூக்கந் துரப்ப.

புறநா. 8 : 1—3.

25. பட்டினப். 220—228.
பொருந. 130—138.

26. புறநா. 45.

27. புறநா. 213.

சொல்லில் அல்லது செயலில் மானக்குறைவு ஏற்பட்டாலும் போர் நிகழும். "எம்மாற் சிரிக்கத்தக்கவர் இவன் ஆளும் நாட்டை மிகுத்துச் சொல்லுவோர்" என்றும், "இவன் இளையன்" என்றும் வெறுப்பப் புல்லிய சொல் மொழிந்த அரசருடன் போர் செய்தான், பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்.[28] தன்னுடைய வலியைப் போற்றாது தன் உள்ளத்தை இகழ்ந்த அறிவில்லாதானைச் சோழன் நலங்கிள்ளி போருக்கு அறைகூவி அழைத்தனன்.[29]

பிறன் ஒருவனுடைய மகளிரைத் தனக்கு மணம் செய்து கொடுக்குமாறு அரசன் ஒருவன் வற்புறுத்திய இடத்து, அம்மகளிரை உடையான் மறுத்த காலத்தும் போர் எழும். தமிழ்நாட்டு மூவேந்தரும் பாரியின் மகளிரை வேண்டிப் பறம்பு மலைக் கோட்டையை முற்றுகையிட்டு, அவனைக் கொன்று, பறம்பு மலையைப் பாழ்படுத்தி, அப்பெண்மணிகளைத் திருமணமின்றி அரசர் பலரிடம் அலையவிட்டனர்.[30] இத்தகைய போர்கள் புற இலக்கணத்தில் மகட்பாற் காஞ்சி என்பதின் பாற்படும். புறநானூறு 336-ம் செய்யுள் தொடங்கி 354-ம் செய்யுள் வரை இத் துறைக்குரியன. இப் பாக்களில் ஒன்று மகட்பாற் காஞ்சியின் இலக்கணத்தைப் பின்வருமாறு தெளிவாக உணர்த்துகின்றது. "அரசன் மகளை மணம் செய்துகொடுப்பதில்லையென மறுத்தான்; அதனைக் கேட்ட அரசன் மிகுந்த சினமுற்று, வீரரைப் போருக்கு எழுக என ஆணையிட்டுத் தான் போருக்கு போக முன் நீராடினன். நாளை அவ்வடிவழகியைத் தான் மணமுடிப்பதாகவும், மணவாதுவிட்டால் அம்பு பொருந்திய தன் உடலை மண்ணில்

28. புறநா. 73 : இவ்வியல் 17 ம் அடிக் குறிப்புரையைப் பார்க்க.

29. புறநா. 73 : இவ்வியல் 18 ம் அடிக் குறிப்புரையைப் பார்க்க.

30. புறநா. 110—120.

வீழ்த்திப் பேரின்ப உலகம் புகுவதாகவும் வஞ்சினம் கூறி அவ்வரசன் படையைக் கைக்கொண்டான்.''[31]

## (3) புலவரும் போரும்

அரசருக்கு வீர உணர்ச்சி ஊட்டிப் போர் செய்யத் தூண்டும் வாயிலாகப் புலவர்கள் அமைந்தனர். "உன் தலையில் உள்ள மாலை நீ பகைவர் நாட்டைச் சுடுகின்ற தீயினால் வாடுவதாக'' எனப் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் காரிகிழார் பாடுகின்றார்.[32] 'சோழன் உருவப் பஃறேரிளஞ்சேட்சென்னியின் பகைவர் நாடு, தாயிழந்து உணவின்றிக் கூப்பிடும் குழவிபோல ஓயாது அலறிப் பாழாகும்' என்று அவனைப் பரணர் பாராட்டுகின்றார்.[33] "புலவர்கள் எல்லாரும் உன்னை நோக்கினார்கள். நீயோ உயிரை வாங்கும் கூற்றம் சினந்தாற் போலும் வலியுடன் உனக்கு மறுதலையாகிய இரு வேந்தருடைய நிலத்தைக் கொள்ள நோக்கினாய்'' என்பது சோழன்

---

31. வேந்துகுறை யுறவுங் கொடாஅன்......
......................................................
......................................................
..........................மறலிய சினத்தன்
பூக்கோ ளெனவேஎய்க் கயம்புக் கனனே
விளங்கிழைப் பொலிந்த வேளா மெல்லியற்
சுணங்கணி வனமுலை யவளொடு நாளை
மணம்புகு வைக லாகுத லொன்றோ
ஆரம ருழக்கிய மறங்கிளர் முன்பின்
நீளிலை யெஃக மறுத்த வுடம்பொடு
வாரா வுலகம் புகுத லொன்றெனப்
படைதொட் டனனே. புறநா. 341 : 1—16.

32. வாடுக விறைவநின் கண்ணி யொன்னார்
நாடுசுடு கமழ்புகை யெறித்த லானே.
புறநா. 6 : 21—22.

33. தாயி றூவாக் குழவி போல
ஓவாது கூஉநின் னுடற்றியோர் நாடே.
புறநா. 4 : 18—19.

கிள்ளி வளவனைக் கோவூர்கிழார் பாடிய பாட்டின் பகுதி.[34] "நின் ஏவல் செய்து வாழாமையினாலே நின்னோடு பகைத்தலைச் செய்தவருடைய நாடுகள் கெட்டுப் பாழாகி விட்டன" என நெடுஞ்செழியனின் வீரச்செயலை மாங்குடி மருதனார் பாராட்டுகின்றார்.[35] பாண்டியன் மாறன் வழுதி போரையேற்றுத் திறையை வேண்டுவானாயின், கொள்க என்று சொல்லி முன்னே கொடுத்த மன்னர் நடுக்கம் தீர்ந்தார்; கொடாதோர் புற்றீசல்போல ஒரு பகல் உணவிற்கும் வழி யில்லாமல் வாடுவர் என்று ஐயூர்முடவனார் பாடுகின்றார்.[36] "முன்னே வளஞ்செறிந்த உன் பகைவருடைய நாடு இன்று காடாயிற்று" என அப்பாண்டிய அரசனை வாழ்த்துகின்றார் மருதனிளநாகனார்.[37] இவ்வாறு புலவர் பாடிய பாக்கள்

---

34. புலவ ரெல்லா நின்னோக் கினரே
நீயே.................................
கூற்று வெகுண் டன்ன முன்பொடு
மாற்றிரு வேந்தர் மண்ணோக் கினையே.
புறநா. 42 : 21—24.

35. வாழா மையின் வழிதவக் கெட்டுப்
பாழா யினநின் பகைவர் தேஎம்.
மதுரை. 175—176.

36. தண்டமிழ் பொதுவெனப் பொறாஅன் [போரெதிர்ந்து
கொண்டி வேண்டுவ னாயிற் கொள்கெனக்
கொடுத்த மன்னர் நடுக்கற் றனரே
.........................அளியிழந் தோரே
நுண்பல சிதலை யரிதுமுயன் றெடுத்த
செம்புற் றீயல் போல
ஒருபகல் வாழ்க்கைக் குலமரு வோரே.
புறநா. 51 : 5—11.

37. காடாகி விளியு நாடுடை யோரே.
புறநா. 52 : 17.

அரசரின் போர் உணர்ச்சியைத் தூண்டுவதற்குக் கருவியாக இருந்தன.

அக்காலத்து அரசரிடையே புலவர்க்கு மிகுந்த மதிப்பு இருந்தமையாலேயே அவர்கள் புலவரைத் தூதராகவும் அனுப்பினர். அதியமான் நெடுமான் அஞ்சி ஔவையாரைத் தொண்டைமானிடம் தூதுவிட்டதாகப் புறநானூறு 95-ம் செய்யுளால் அறிகின்றோம். புலவர்கள் இத்தொழிலைச் செவ்வனே செய்துமுடிக்கும் ஆற்றல் உடையவர் என்பதற்கு அச் செய்யுள் தக்க சான்றாக உள்ளது. தன்னுடைய அரசனது மேம்பாட்டை வேற்று அரசனிடம் ஔவையார் பின்வருமாறு நயம்பெற வன்மையுடன் எடுத்துக் கூறுகின்றார் : "இவ் வேல்கள், பீலி அணியப்பட்டு, மாலை சூட்டப்பட்டு, திரண்ட காம்பு அழகு பெறச் செய்யப்பட்டு, நெய்யிடப்பட்டுக் காவலுடைய அகன்ற கோயிலிடத்தன ; அதியமானின் வேல்கள் பகைவரைக் குத்துதலாற் கைப்பிடியும் நுனியும் முரிந்து கொல்லனது குறிய கொட்டிலிடத்தன எந் நாளும்."[38] இவ்வாறு தொண்டைமானின் படைக்கலக் கொட்டிலைப் புகழ்வதுபோல் அவன் வீரத்தைப் பழித்துக்கூறி அவனது செருக்கை அடக்கினார் ஔவையார்.

பகைத்த இருவேந்தருக்கிடையே குறுக்கிட்டு இருவரையும் ஒற்றுமைப்படுத்தும் செயலிலும் புலவர் ஈடுபட்டனர். சோழன் நெடுங்கிள்ளி உறையூர் புக்கிருந்த காலத்திற் சோழன் நலங்கிள்ளி அவ்வூரை முற்றுகையிட்டான். அதனை அறிந்த கோவூர் கிழார் ஒரு குலத்திலே தோன்றிய அவ்விருவரும் போர் செய்தல் அக்குலத்திற்கே பெரும்பழியாகும் என்றும், ஏனை அரசர் அதனைக்கண்டு

---

38. இவ்வே, பீலி யணிந்து மாலை சூட்டிக்
கண்டிரள் நோன்காழ் திருத்திநெய் யணிந்து
கடியுடை வியனக ரவ்வே யவ்வே
பகைவர்க் குத்திக் கொடுநுதி சிதைந்து
கொற்றுறைக் குற்றில மாதோ வென்றும்.
புறநா. 95 : 1—5.

நகைப்பர் என்றும் கூறி இருவரையும் ஒற்றுமைப் படுத்தினார்.[39] சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன் மலயமான் மக்களை யானையின் காலால் இடறச் செய்ய முயற்சித்தவிடத்துக் கோவூர்கிழார் அதனைத் தடுத்து, புலவரின் வறுமை இன்னல்களை நீக்குவதற்குத் தன்னிடம் உள்ள பொருள்கள் யாவற்றையும் பகுத்துக்கொடுக்கும் அம் மலயமானின் மக்களுடைய உயிரைப் பாதுகாத்தனர்.[40]

புறத்தே வந்து போர் செய்யாது அஞ்சி நடுங்கி, நாட்டுப் பாதுகாவலைக் கவனியாது, மானமின்றி மகிழ்வோடிருந்த ஒரு சேர மன்னனின் தலைநகராகிய கருவூரைச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் முற்றுகையிட்டு, அவனது காவல் மரத்தை வெட்டினான். வெட்டும் ஓசை ஊரிலுள்ள மன்னனின் காவலை உடைய கோயிற்கண்ணே சென்றொலித்தது. அதற்கும் வெளிப்படாது நாணமின்றி இருந்தான் மன்னன். அத்தகைய மன்னனோடு நீயும் முரசொலிப்பப் பொருதாய் என்பது கேட்டார்க்கு நாணும் தகுதியை உடைத்து என்று கூறிச் சோழமன்னனின் போர்ச் செயலைத் தடுக்க முயன்றார் ஆலத்தூர் கிழார்.[41]

---

39. புறநா. 45 : மூன்றாம் இயல் 3ம் அடிக் குறிப்புரையைப் பார்க்க.

40. இவரே, புலனுழு துண்மார் புன்க ணஞ்சித்
தமதுபகுத் துண்ணுந் தண்ணிழல் வாழ்நர்
களிறுகண் டழூஉ மழாஅன் மறந்த
புன்றலைச் சிறாஅர் மன்றுமருண்டு நோக்கி
விருந்திற் புன்கணோ வுடையர்
கேட்டனை யாயினீ வேட்டது செய்ம்மே.

புறநா. 46 : 3—8.

41. கடிமரந் தடியு மோசை தன்னூர்
நெடுமதில் வரைப்பிற் கடிமனை யியம்ப
ஆங்கினி திருந்த வேந்தனோ டீங்குநின்
சிலைத்தார் முரசங் கறங்க
மலைத்தனை யென்பது நாணுத்தக வுடைத்தே.

புறநா. 36 : 9—13.

கோப்பெருஞ் சோழன் தன்னுடைய மக்கள்மேற் படை யெடுத்துச் சென்றபொழுது புல்லாற்றூர் எயிற்றியனூர் என்னும் புலவர், "உன் மக்கள் தோற்பின் உனது பெரிய செல்வத்தை அவர்க்கொழிய வேறு யாவர்க்குக் கொடுப்பாய்? நீ அவர்க்குத் தோற்பின் உன்னை இகழும் பகைவர் உவப்பப் பழியை உலகத்தே நிறுத்துவாய்; ஆதலால் ஒழிவதாக உன்னுடைய மறன்" என்று அறிவுரை கூறினர்.[42] இவ்வாறு அரசரிடையே நிகழ்ந்த பல பூசல்களைத் தீர்த்துத் தொண் டாற்றினர் புலவர்.

போர் மூளுங்காலத்து வீரமின்றிப் பதுங்கிக் கிடக்கும் அரசரை இடித்துரைத்து அவரைப் போருக்குத் தூண்டுதலி லும் புலவர் ஈடுபட்டனர் சோழன் நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி யின் ஆவூரை முற்றுகையிட்டபொழுது நெடுங்கிள்ளி போரை நிறுத்தாமலும் போருக்கு வராமலும் வாளா இருந்ததைக் கண்ணுற்ற கோவூர்கிழார் ஊரில் ஏற்பட்ட குழப்பங்களை அவனிடம் விளக்கிக் கூறி "அரசே! அறத்தை உடையையா யின் போரை நிறுத்து; மறத்தை உடையையாயின் களத் திற்குச் சென்று போர் செய்; அவ்வாறன்றி அறத்தையும் மறத்தையும் உடையை யல்லையாய், அடைக்கப்பட்ட திண்ணிய நிலையையுடைய கதவு பொருந்திய நீண்ட மதிலுள் ஒரு பக்கத்தே ஒதுங்குதல் நாணும் தன்மையை உடைத்து" என்று இடித்துக் கூறினர்.[43]

---

42. நிற்குறித் தெழுந்த
எண்ணில் காட்சி யிளையோர் தோற்பின்
நின்பெருஞ் செல்வம் யார்க்கெஞ் சுவையே
அமர்வெஞ் செல்வ நீயவர்க் குலையின்
இகழுந ருவப்பப் பழியெஞ் சுவையே
அதனால் ஒழிகதி லத்தைநின் மறனே.
புறநா. 213 : 14—19.

43. வினைபுனை நல்லி லினைகூஉக் கேட்பவும்
இன்னா தம்ம வீங்கினி திருத்தல்
துன்னருந் துப்பின் வயமான் றோன்றல்

## (4) போர் நிகழ்ச்சிகள்

போருக்குச் செல்லுமுன் அரிய காவலையுடைய பழைய ஊர்ப்பக்கத்தே படைத்தலைவர் ஏவலால் நற்சொற் கோடற் குரியோர் போய், நறிய பூக்களை நெல்லுடனே தூவிக் கைதொழுது வணங்கி, நற்சொற் கேட்டு நிற்பது வழக்கம். நெல்லும் நீரும் சொரிந்து விரிச்சி கேட்கும் செம்முது பெண்டிரைப் பற்றிப் புறநானூறு கூறுகின்றது.[44] நிமித்தம் பார்த்துப் படைக்கலங்களை அமைத்துக்கொண்டெழுந்த பெரிய வீரச் செயல்களைச் செய்யும் ஆடவரைப் பற்றி அகநானூற்றிலிருந்து அறியலாம்.[45]

நிமித்தம் பார்த்ததும் அரசன் தண்ணுமையை முழக்கித் தன் போர்வீரரை அழைப்பான். அழைத்து, அவர்களுக்கு அடையாளப் பூக்களை வழங்குவான். தான் குளத்தில் நீராடிப் போருக்குரிய கோலங்கொள்வான். தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் இத்தகைய கோலம் கொண்டிருந்தான்.[46] போர்ப்பறை அச்சத்தைத்

---

அறவை யாயி னினதெனத் திறத்தல்
மறவை யாயிற் போரொடு திறத்தல்
அறவையு மறவையு மல்லை யாகத்
திறவா தடைத்த திண்ணிலைக் கதவின்
நீண்மதி லொருசிறை யொடுங்குதல்
நாணுத்தக வுடைத்திது காணுங் காலே.

புறநா. 44 : 8—1[illegible].

44. நென்னீ ரெறிந்து விரிச்சி யோர்க்கும்
செம்முது பெண்டின். புறநா. 280 : 6—7.

45. புள்ளோர்த்துப்
படையமைத் தெழுந்த பெருஞ்சே யாடவர்.

அகநா. 207 : 3—4.

46. மூதூர் வாயிற் பனிக்கய மண்ணி
மன்ற வேம்பி னொண்குழை மலைந்து
தெண்கிணை முன்னர்க் களிற்றி னியலி
வெம்போர்ச் செழியனும் வந்தனன்.

புறநா. 79 : 1—4.

தரக் கூடியது.[47] குருதிப் பலி கொள்ளும் விருப்பத்தையும் அச்சம் தரும் தன்மையையும் கொண்ட இவ்வீர முரசத்தை நீராட்டி, மெல்லிய பூவையுடைய கட்டிற் கண்ணே வைப்பர்.[48]

விரைய வரும்படி வேந்தன் விட்ட பெரிய தூதுவர் வீரர் உறையும் இடந்தோறும் ஆங்காங்குச் சென்று தெரிவிப்பர்.[49] இவ்வாறெல்லாம் அழைக்கப்பட்ட வீரர் தமக்குரிய பூக்களைச் சூடுவர். வெண்ணிப்பறந்தலையிற் கரிய பனங்குருத்தில் அலர்ந்த ஓலையையும், கரிய கொம்பினையுடைய வேம்பின் அழகிய தளிரால் செய்த மாலையையும், அடையாளப் பூக்களாகச் சிறப்புறச் சேரனும் பாண்டியனும் சூடினர். கண்ணுக்கு அழகு நிறைந்த ஆத்திமாலையைச் சோழர் சூடினர்.[50] மேலும் அரசர் தமக்குரிய அடையாளப் பூவோடு புறத்திணைப் பூக்களையும் விரவித் தொடுத்துத் தாம் சூடிக்கொள்ளுதலும் வீரர்க்குச் சூட்டுதலும் மரபு. பொன்னாற் செய்யப்பட்ட இதழையுடைய பசிய தும்பையுடன் பனந்தோட்டைச் செருகிச் சினத்துடன் விளங்கும் சேரவீரரைப் பற்றிப்

---

47. வெரூஉப் பறை. பொருந. 171.

48. குருதி வேட்கை யுருகெழு முரசம்
மண்ணி வாரா வளவை யெண்ணெய்
நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை.
புறநா. 50 : 5—7.

49. வருகதில் வல்லே வருகதில் வல்லென
வேந்துவிடு விழுத்தூ தாங்காங் கிசைப்ப.
புறநா. 284 : 1—2.

50. இரும்பனம் போந்தைத் தோடுங் கருஞ்சினை
யரவாய் வேம்பி னங்குழைத் தெரியலும்
.................................................
கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்.
பொருந. 143—148.

புறநானூறு பாடுகின்றது.[51] இளைய பனையினது உச்சிக் கண்ணே கொள்ளப்பட்ட வெளிய தோட்டையும் வெட்சியினது பெரிய மலரையும் வேங்கைப் பூவுடனே அரசர் அணிவர்.[52]

போருக்குச் செல்லுமுன் அரசர் குறுநில மன்னர் முதலியோரைத் தமக்குத் துணையாக்கிக் கொள்ளுவதுமுண்டு. காரி என்னும் சிற்றரசனின் துணையை மூவேந்தரும் தனித்தனி வேண்டினர். இதனால் அவர்களின் தூதுவர் இவனைப் புகழ்ந்து இவனுக்குப் பரிசில் வழங்கினர்.[53] வெற்றி தரும் யானையையுடைய வேந்தன் இறப்பின் அவனொடு உடன் இறக்கும் பெற்றி வாய்ந்த துணையரசனைப் பற்றி ஆலத்தூர் கிழார் புகழ்ந்து பாடியிருக்கின்றார்.[54] தாம் உண்ட செஞ்சோற்றுக் கடனுக்காகப் பலர் அரசனுக்குத் துணையாகச் செல்வது வழக்கம்.[55]

இக் குறிக்கோளுடன் வந்து திரண்ட மக்கள் போருக்குச் செல்ல வேண்டுமென்ற ஊக்கத்தினால் உந்தப்பட்டு நிற்பர்.

---

51. பொலந்தோட்டுப் பைந்தும்பை
மிசையலங் குளைய பனைப்போழ் செரீஇச்
சினமாந்தர். புறநா. 22 : 20—22.

52. வட்கர் போகிய வளரிளம் போந்தை
உச்சிக் கொண்ட வூசி வெண்டோடு
வெட்சி மாமலர் வேங்கையோடு விரைஇ.
புறநா. 100 : 3—5.

53. மூவரு ளொருவன் றுப்பா கியரென
ஏத்தினர் தரூஉங் கூழே. புறநா. 122 : 5—6.

54. பாணரொ டிருந்த நாணுடை நெடுந்தகை
வலம்படு தானை வேந்தற்
குலந்துழி யுலக்கு நெஞ்சற் றுணையே.
புறநா. 324 : 12—14.

55. சோறுவாய்த் தொழிந்தோர். முல்லை. 72.

கோட்டினது நுனைமுகந் தேயப் பகைவரது காவலையுடைய மதிலைக் குத்தும் யானைகள் வீராவேசத்தோடு கட்டுக்கடங்காமல் நிற்கும்; பூசலென்று கேட்பின் மகிழ்ச்சியுறும் மறவர் காட்டின் நடுவே கிடந்த நாடு மிகவும் சேய்மைக்கண் உள்ளதாகையால் யாம் போவேமல்லேமென்று கருதார். எனவே படையோடு யாவரும் ஆரவாரத்துடன் புறப்பட்டுச் செல்வர். செல்லும்பொழுது வழியிலுள்ள பகைவர் ஊர்களைத் தீயிட்டுக் கொளுத்தி, அகப்பட்ட பொருளை வாரிக் கொள்வர். சோழன் கரிகாற் பெருவளத்தான் பகைவரின் ஊரைச் சுட்டுக் கொள்ளையை விரும்புவானெனக் கருங்குழலாதனார் கூறுகின்றார்.[56] நாடு சுடு நெருப்பினது ஒளி ஞாயிற்றினது செக்கர் நிறம் போலத் தோன்றும்.[57]

அரசர், வழியிலுள்ள பகைவரின் ஊர்களைப் பாழாக்கிச் சென்று பகைவர் நாட்டை அடைவர்; அடைந்து கோட்டையை முற்றுகையிடுவர். பழந்தமிழரசர் கட்டிய கோட்டைகள் பல. இவற்றுள் ஒன்று கானப்பேரெயில். இது நில எல்லையைக் கடந்து பாதலத்தேயுற்ற ஆழ்ந்த இடத்தையுடைய அகழியினையும், உயர்ச்சியால் வானைப் பொருந்துவது போன்ற மதிலையும், அவ்வானிடத்து மீனைப் பூத்தாற்போன்ற வடிவையுடைய சூட்டினையும், வெயிற் கதிர் நுழைதற்கரிய மரஞ்செறிந்த காவற் காட்டினையும் உடையது.[58] இக்

---

56. எல்லையு மிரவு மெண்ணாய் பகைவர்
ஊர்சுடு விளக்கத் தழுவிளிக் கம்பலைக்
கொள்ளை மேவலை யாகலின்.

புறநா. 7 : 7—9.

57. எல்லுப்பட விட்ட சுடுதீ விளக்கம்
செல்சுடர் ஞாயிற்றுச் செக்கரிற் றோன்ற.

புறநா. 16 : 7—8.

58. நிலவரை யிறந்த குண்டுகண் ணகழி
வான்றோய் வன்ன புரிசை விசும்பின்
மீன்பூத் தன்ன வுருவ ஞாயிற்
கதிர் நுழை கல்லா மரம்பயில் கடிமிளை.

புறநா. 21 : 2—5.

கோட்டைக்கு அண்மையில் ஏமெழயில் எனப் பெரிய ஒரு கோட்டையும் இருந்தது.[59] நல்லியக்கோடனது நாட்டிலே பெரிய மதில் சூழ்ந்த அரண் இருந்தது. இதனுல் அப் பட்டணம் எயிற்பட்டணம் எனப் பெயர் பெற்றது.[60]

கோட்டையின் பல கூறுகளும் உறுப்புக்களும் சங்க நூல் களினின்று புலப்படுகின்றன. பகைவர் சேர்தற்கரிய திரண்ட காவற்காடும், ஆழத்தினையுடைய கிடங்கும், நெடிய மதிலும், நிரையாகவுள்ள ஞாயிலும் அரணின் உறுப் புக்கள்.[61] இவ்வுறுப்புக்களில் மதிலைக்குறிப்பதற்கு எயில், இஞ்சி, நொச்சி, புரிசை என்ற சொற்கள் வழங்கப்படு கின்றன. ''திருமகள் நிலைபெற்ற பெரிய ஆக்கத்தையுடைய உறந்தையிலுள்ள எயில்'' எனப் பட்டினப்பாலை கூறு கின்றது.[62] மலையையொத்த உயர்ச்சியையுடைய வானைத் தீண்டும் மதில்கள் இவை.[63] ''தேவருலகிலே செல்லும்படி உயர்ந்த பல கற்படைகளையுடைய மதில்'' என்பது மதுரைக் காஞ்சி.[64] மலைகளோடு மாறுபட வளைந்த இடங்களையுடைய

---

59. ஏமெழயில். புறநா. 33 : 8.

60. மணிநீர் வைப்பு மதிலொடு பெயரிய
பனிநீர்ப் படுவிற் பட்டினம்.
சிறுபாண். 152—153.

61. அருங்குழுமிளைக் குண்டுகிடங்கி
னுயர்ந்தோங்கிய நிரைப்புதவி
னெடுமதி னிரைஞாயி
லம்புமி ழயிலருப்பம். மதுரை. 64—67.

62. திருநிலைஇய பெருமன்னெயில்.
பட்டினப். 291.

63. வரைபுரை நிவப்பின் வான்றோ யிஞ்சி.
மலைபடு. 92.

64. விண்ணுற வோங்கிய பல்படைப் புரிசை.
மதுரை. 352.

புறமதில்கள் கட்டப்பட்டனவெனப் பதிற்றுப்பத்திலிருந்து அறிகின்ருேம்.[65] மதில்களிற் செப்புத் தகடுகளைச் செறித்துத் திண்மை செய்யும் வழக்கமும் இருந்தது. செம்புறழ் புரிசைகளைப் பற்றிப் புறநானூறும் அகநானூறும் குறிப் பிடுகின்றன.[66]

மதிலின் உறுப்புக்களில் மிகவும் சிறந்தது ஞாயில் என்று புறநானூற்றுச் செய்யுள் ஒன்ருல் அறியக்கிடக்கின்றது. பாழாய்க்கிடந்த ஒரு கோட்டையின் தன்மையை எடுத்துக் கூறும் அப்பாட்டு. கோட்டையைச் சூழ்ந்த அகழியில் தண்ணீர் இல்லாமையால் அங்குக் கன்றுகள் மேய்ந்து திரியும் என்றும், மதில்கள் தமக்குரிய சிறந்த உறுப்பாகிய ஞாயில் இல்லாது பாழ்பட்டிருக்கின்றன என்றும் அது குறிக் கின்றது.[67] ஞாயில் என்பது படையெடுத்து வரும் பகைவர் மீது மறைந்து நின்று அம்பு எய்வதற்குரிய அறையாகும். இது பிற்காலத்தில் ஏவறை, சூட்டு, குருவித்தலை என்ற பெயர் களால் வழங்கியது.

அகழி சூழ்ந்த இடம் கிடங்கில் எனப்படும். இடம் கரிதாகிய ஆழத்தின்கண் சேரத் திரண்டோடி இடை யாமத்தில் ஊரைக் காப்பவருடைய விளக்கு நிழலைக் கவரும், கடிய மாறுபாடு பொருந்திய முதலையையுடைய நீர் மிக்க இலஞ்சியைப் பற்றிப் புறநானூறு பாடுகின்றது.[68] இரைதேடி

---

65. கோடுறழ்ந் தெடுத்த கொடுங்க ணிஞ்சி.
பதிற். 16 : 1.

66. செம்புறழ் புரிசைச் செம்மன் மூதூர்.
புறநா. 37 : 11.
செம்புறழ் புரிசை. அகநா, 375 : 13.

67. மதிலு ஞாயி லின்றே கிடங்கும்
நீஇ ரின்மையிற் கன்றுமேய்ந் துகளும்
ஊரது நிலைமையு மிதுவே. புறநா. 355 : 1—3.

68. இடங்கருங் குட்டத் துடன்றொக் கோடி
யாமங் கொள்பவர் சுடர்நிழற் கதூஉம்
கடுமுரண் முதலைய நெடுநீ ரிலஞ்சி.
புறநா. 37 : 8—10.

உலாவும் வளைந்த காலினையுடைய முதலைகளை உடையனவாய்த் திரை உண்டாகும்படி கல் அகழப்பட்டிருந்தன கிடங்குகள்.[69] மண்ணுள்ள அளவிற்கு ஆழமானதும் நீலமணிபோன்ற நீர் உடையதுமான கிடங்கு என்றும்[70] கற்றரையைப் பொளிந்து வெட்டிய சிறிது சிறிதாக நீர்வரும் வாயையுடைய, கிடங்கு என்றும் மதுரைக் காஞ்சி கூறுகின்றது.[71]

மேற்கூறிய உறுப்புக்களைக்கொண்ட அரணைப் படையெடுத்து வந்த அரசர் தாக்குவர். காட்டரணை அழித்து, கிடங்கினைப் பெரும்போர் செய்து கலக்கி, அரசர் முன்னேறுவர். முன்னேறும்பொழுது காவலாக அமைந்துள்ள கதவுகளைத் தகர்த்தெறிவர். இக்கதவுகளில் அரசரின் அடையாளம் பொறிக்கப்பட்டிருக்கும். புலியாகிய அடையாளத்தையும் பலகைகள் தம்மிற் சேருதலையுமுடைய கதவுகளைப் பற்றிப் பட்டினப்பாலையிலிருந்து அறியலாம்.[72] சோழன் நலங்கிள்ளி பாண்டியனின் அரண் கதவை அழித்துக் கைக்கொண்டு புலியை அதிற் பொறித்தான்.[73] இக்கதவுகள் நெய் பலகாலும் இடுதலாற் கருகி இருப்பன.[74]

---

69. இரைதேர்ந் திவருங் கொடுந்தாண் முதலையொடு
திரைபடக் குழிந்த கல்லகழ் கிடங்கு.
மலைபடு. 90—91.

70. மண்ணுற வாழ்ந்த மணிநீர்க் கிடங்கு.
மதுரை. 351.

71. கல்லிடித் தியற்றிய விட்டுவாய்க் கிடங்கு.
மதுரை. 730.

72. புலிப்பொறிப் போர்க்கதவிற்
றிருத்துஞ்சுந் திண்காப்பில். பட்டினப். 40—41.

73. தென்னம் பொருப்ப னன்னாட் டுள்ளும்
ஏழெயிற் கதவ மெறிந்துகைக் கொண்டுநின்
பேழ்வா யுழுவை பொறிக்கு மாற்றலை.
புறநா. 33 : 7—9.

74. நெய்படக் கரிந்த திண்போர்க் கதவு. மதுரை. 354.

தமது நாட்டை நோக்கிப் பகைவர் படையெடுத்து வருவதை ஏற்கனவே அறியும்பொருட்டு மிக உயரமான இடங்களிற் பார்வையாளரை அமைப்பர். அவ்வுயர்ந்த இடம் 'பார்வல் இருக்கை' எனப்படும். உயரப் பறக்கும் பருந்துகளும் பறந்தடையமுடியாத உயர்ச்சியையுடையன இவ்விருக்கைகள்.[75] ஊரில்லாதனவும், பொறுத்தற்கரிய உயங்குதலை உடையனவும், நீரில்லாதனவும், நீண்ட வழியின வும், வம்பலரை நலியச் சேய்மைக்கண்ணே உள்ளனவுமாகிய பார்வல் இருக்கைகளைப்பற்றிப் புறநானூறு கூறுகின்றது.[76]

அம்புக்கட்டுகள் உள்ள அறைகளிலிருந்து பகைவர்மீது அம்புகளை ஏவிவிட்டு மறைந்துகொள்வர் முற்றுகையிடப்படு வோர். மதில்மீது ஏணியைச் சார்த்தி வீரர் உடும்புபோல அதனைப் பிடித்து ஏறுவர். வாளும் வில்லும் ஈட்டியும் வேலும் அவர்கள் செலவைத் தடைசெய்வன. பகைவனின் படை யெடுப்பை அறிந்த அரசன் தன் வீரரைத் திரட்டிப் போர் முனைப் பாதுகாப்பிற்குப் புறப்படுவான். இவ்வாறு சென்று போர் செய்யாமல் அஞ்சி, நடுங்கிய உள்ளத்துடன் அரண்மனையில் அரசர் பதுங்கிக் கிடப்பதுமுண்டு. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் கருவூரை முற்றுகை யிட்டபொழுது சேர அரசன் வெளிவராது உள்ளே அடைத் திருந்தமையை இவ்வியலில் முன்பு கூறினோம்.[77]

போர் தொடுத்து வந்த அரசன் பகை அரசனின் காவல் மரத்தை வெட்டி வீழ்த்துவது போர் மரபு. வேங்கை, புன்னை, வேம்பு முதலிய மரங்களை அரசர் தம் வெற்றியைச் சிறப் பிக்கும் மரங்களாக மேற்கொண்டு சிறப்பாய் ஓம்பி வருவர். அம்மரத்தினை வீரர் இரவு பகலாகக் காத்து நிற்பர். இதனால்

---

75. பருந்துபறக் கல்லாப் பார்வற் பாசறை.
மதுரை. 231.

76. ஊரில்ல வுயவரிய
நீரில்ல நீளிடைய
பார்வ லிருக்கை. புறநா. 3 : 17--19.

77. இவ்வியல் 41ம் அடிக் குறிப்பைப் பார்க்க.

இம்மரம் 'கடிமரம்' எனப்படும். இம்மரம் பகைவர் கைப் பட்டு வெட்டப்படாதவாறு போற்றுதல் மானமுடைய வேந்தரின் மறப்பண்பாகும். பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் தன் பகைவரின் காவல் மரத்தை அழித்தான்.[78] இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன் தன் பகைவரின் காவல் மரமாகிய கடம்பினது அடிமரத்தை வெட்டினன் என்றும், வீரர்கள் இறந்துபட, வாள் வீரரது நெருக்கத்தைக் கலக்கிப் பகையரசனின் கடம்பைத் தடிந்தான் என்றும் பதிற்றுப்பத்துக் கூறு கின்றது.[79] வடித்த கோடாலி வெட்டுதலால் ஊர்தோறும் காவல் மரங்கள் நிலைகலங்கின எனப் புறநானூறு பாடு கின்றது.[80] பாண்டியன் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறனைக் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் பாடியபொழுது, "காவல் மரத்தை வெட்டுதலை ஓம்பு வாயாக" என்று அறிவுறுத்துகின்றார்.[81]

போர் தொடங்கும்பொழுது மழைக்குன்று என மருளத் தகும் களிற்றின் கூட்டத்தை முன் செல்லவிட்டுப் பகைவ ரிடையே குழப்பத்தை உண்டாக்கி, அப்பெரும் பிளவுக

---

78. கடிகாவி னிலை தொலைச்சி. மதுரை. 153.

79. பலர்மொசிந் தோம்பிய திரள்பூங் கடம்பின்
கடியுடை முழுமுத றுமிய வேஎய்.
பதிற். 11 : 12—13.

வயவர் வீழ வாளரின் மயக்கி
இடங்கவர் கடும்பி னரசுதலை பனிப்பக்
கடம்புமுத றடிந்த கடுஞ்சின வேந்தே.
பதிற். 12 : 1—3.

80. வடிநவில் நவியம் பாய்தலி னூர்தொறும்
கடிமரந் துளங்கிய காவும். புறநா. 23 : 8—9.
வீகமழ் நெடுஞ்சினை புலம்பக் காவுதொறும்
கடிமரந் தடியு மோசை. புறநா. 36 : 8—9.

81. கடிமரந் தடித லோம்பு. புறநா. 3 : 17—19.

ளிடையே வேலேந்திய வீரர் விரைந்து நுழைந்து அமருழக்கிப் படையை அழிப்பர். பகைவரின் செறிந்த படை நடுவே களிறுகள் செல்வதை நீரைக் கிழித்துச் செல்லும் மரக் கலங்களுக்கு உவமை கூறுவர்.[82] கடுங்காற்றடிப்பதனுற் கல்லோடு மோதி உரோஞ்சி, நெடிய சுழியில் அகப்பட்டுச் சுழலும் மரக்கலத்தைப்போல, முன்னும் பின்னும் சங்கொலிப்ப, சினம் மிகுந்து, பரிகோற்காரரைக் கொன்று, பாகரைக் கீழே வீசித் தறியை முறித்துக் கம்பத்தைக் கை விட்டுச் சுழலும் கடாத்தையுடைய மதம் பொருந்திய யானை களின் தன்மையைப்பற்றி மதுரைக்காஞ்சி கூறும்.[83] கணைய மரத்தால் தடுக்கப்பட்ட கதவைப் பொருது அரணையழித்த லால் களிறுகளின் பூண்கள் கழன்றன.[84] யானையணி பொருத இடமகன்ற பாசறை புறநானூற்றில் குறிக்கப்படுகின்றது.[85]

---

82. நளிகட லிருங்குட்டத்து
வளிபுடைத்த கலம்போலக்
களிறுசென்று களனகற்றவும்
களனகற்றிய வியலாங்கண்
ஒளிறிலைய வெஃகேந்தி
அரைசுபட வமருழக்கி. புறநா. 26 : 1—6.

83. கடுங்காற் றெடுப்பக் கல்பொரு துரைஇ
நெடுஞ்சுழிப் பட்ட நாவாய் போல
விருதலைப் பணில மார்ப்பச் சினஞ்சிறந்து
கோலோர்க் கொன்று மேலோர் வீசி
மென்பிணி வன்றொடர் பேணாது காழ்சாய்த்துக்
கந்துநீத் துழிதருங் கடாஅ யானையும்.
மதுரை. 378—383.

84. களிறே, எழூஉத்தாங்கிய கதவுமலைத்தவர்
குழூஉக்களிற்றுக் குறும்புடைத்தலிற்
பரூஉப்பிணிய தொடிகழிந்தனவே.
புறநா. 97 : 8—10.
கடிமதிற் கதவம் பாய்தலின் தொடிபிளந்து
நுதிமுகம் மழுகிய மண்ணைவெண் கோட்டுச்
சிறுகண் யானை. அகநா. 24 : 11—13.

85. களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறந்தலை.
புறநா. 64 :3.

யானையினது துணையைக்கொண்டு, மாற்றார் அரணுள் புகும் காலாட்படை அக்காலத்தில் மிகவும் புகழுடன் விளங்கியது. முன் செல்லும் படையோர் பனையின்கண் உளதாகிய நுங்கினது இனிய செறிவை அயின்றனர்; இடையிற் சென்றோர் பழத்தினது செவ்விக் கனியை நுகர்ந்தனர்; பின் சென்றோர் நீங்கிய வாயையுடைய பிசிருடனே சுடப்பட்ட கிழங்கினை அயின்றனர்.[86] இவ்வாறு ஒழுங்குடைத்தாகிய சேனையைப் பெற்றிருந்தனர் அரசர். முன் செல்லும் தூசிப் படை தார் எனப்பட்டது.[87] பின்படை கூழை எனப் பட்டது.[88] இப்படைவீரர் வில்லை நிரம்ப வலித்து அம்பின் விசையைத் தாங்கும் மார்பினையும், குதிரையைச் செலுத்தி வேண்டுமளவிலே பிடிக்கும் வலி பொருந்திய தோளினையு முடையவர்; நெருப்பு நடந்தார் போன்ற பகைவரின் படைக்கு நடுவே சென்று நல்ல யானையைப் போர்க்களத்தே படும் வண்ணம் வெட்ட வல்லோர் இவர்.[89]

'எரிகோலஞ்சாத அரவுபோன்ற, இவ்வீரரின் ஆற்றலும் சிறப்பியல்புகளும் பலவிடங்களிற் கூறப்படுகின்றன. படை முகப்பில் நின்று தன் பக்கத்தினர்க்கு வீர உணர்ச்சி ஊட்டு கின்றான் ஒருவன். அவன்மேற் பகைவர் வேலைச் செலுத்து

---

86. தலையோர் நுங்கின் றீஞ்சோறு மிசைய
இடையோர் பழத்தின் பைங்கனி மாந்தக்
கடையோர் விடுவாய்ப் பிசிரொடு சுடுகிழங்கு
[நுகர. புறநா. 225 : 1—3.

87. பதிற். 49 : 6.
புறநா. 62 : 1.
மலைபடு. 227.

88. புறநா. 88 : 1.

89. எரிநிமிர்ந் தன்ன தானை நாப்பட்
பெருநல் யானை போர்க்களத் தொழிய
விழுமிய வீழ்ந்த குரிசிலர்.
மதுரை. 734—736.

கின்றனர். மடல்களையுடைய வலிய பனைபோன்று தன்னுடல் முழுவதும் வேல்கள் பாய அவன் சலியாது நிற்கின்றான்.[90] போர்க்களத்தில் இருதிறத்துப் படை வீரரும், தமரென்றும் பிறரென்றும் பாராது கடும்போர் புரிகின்றனர். அப்பொழுது ஒரு வீரன் "நும்பெயரையும் நுங்கள் இறைவன் சிறப்பையும் விளக்கி, வாழ்க்கையில் வெறுப்புற்றவர் எவராயினும் இங்கு எம்மோடு போர்செய்ய வருக" என்று நோக்கி அழைக்கின்றான். பாம்பு உமிழ்ந்த மணியை எவ்வாறு எவரும் குறுகுதற்கு அஞ்சுவரோ அவ்வாறே அவனைக் குறுகுவதற்கு அஞ்சுவர் மாற்றார்.[91] போரணியில் நின்று போர் புரியும் வீரருள் ஒருவன், தான் பகைவரை எதிர்த்தற்குச் செல்லும் முறை வரும்வரையும் பொறுத்து இராணுய் முன்னேறித் தனக்கு முன்னே எழுகின்ற பெரிய படையைக் குறுக்கிட்டு விலக்கி நிற்கின்றான்.[92]

ஒருவீரன் தன் முன்பிறந்தோனை முன்னாட்போரில் மாற்றார் படையிடத்து மறவன் ஒருவன் கொன்றானென்று வெஞ்சினங்கொண்டு, கண்சிவந்து, பேரூரில் காய்ச்சிய

---

90. வைந்நுதி
நெடுவேல் பாய்ந்த மார்பின்
மடல்வன் போந்தையி னிற்கு மோர்க்கே.
புறநா. 297 : 8—10.

91. தமர்பிற ரறியா வமர்மயங் கழுவத்
திறையும் பெயருந் தோற்றி நுமருள்
நாண்முறை தபுத்தீர் வம்மி னீங்கெனப்
போர்மலைந் தொருசிறை நிற்ப யாவரும்
அரவுமிழ் மணியிற் குறுகார்.
புறநா. 294 : 4—8.

92. என்முறை வருக வென்னான் கம்மென
எழுதரு பெரும்படை விலக்கி
ஆண்டு நிற்கு மாண்டகை யன்னே.
புறநா. 292 : 6—9.

பெருங்கள்ளைப் பெறுதற்குத் தன் மனைக்கண் நுழைந்து ஒரு கலத்தைத் தேடுவானைப் போலப் பகைவனைத் தேடி வந்தான்.[93] முன்னணிப் போரிலே பகைவரை நேர்பட்டு அவரால் வளைப்புண்டிருந்தான் ஒருவீரன். அந்நிலையைக் கண்ட அவனுடைய நண்பன் பகைவரின் நிலை கெடுமாறு தனது வடித்து மாட்சியுற்ற வேலை ஏந்தி, "இவனை இவ்விடத்தே செல்லாதபடி தடுங்கள், தடுங்கள்" என்று மற்ற வீரர் தடுக்கவும், சங்கிலியாகிய தளை பூண்டு செல்லும் யானை போலக் கொலையுண்டு வீழ்ந்த மறவர் குடர் தன் காலைத் தளைக்கவும், கன்றினை நோக்கி ஓடும் பசுப்போலத் தன் தோழனிடத்து ஓடிச் சென்றான்.[94]

இத்தகைய வீரருடன் அரசன் பாசறையில் இருத்தல் சங்க நூல்களிற் சிறப்புறக் கூறப்படுகின்றது. போருக்குத் தகுந்த காலமாகிய வேனிற் காலத் தொடக்கத்திற் பகை யரசன் மேற் படையெடுத்துச் சென்ற அரசர், நகரத்துக்குப் பாதுகாவலாக இருந்த காடுகளை வெட்டி, வேட்டுவச் சாதி யினரின் சிறு வாயில்களையுடைய அரண்களை அழித்து, காட்டின் கண்ணுள்ள முள்ளிட்ட மதிலைக் காவலுறும்படி வளைத்து, திரை ஒலிக்கின்ற கடல்போல் அகன்ற பெரிய பாடி

---

93. நெருநல் எல்லைநீ யெறிந்தோன் றம்பி
அகற்பெய் குன்றியிற் சுழலுங் கண்ணன்
பேரூ ரட்ட கள்ளிற்
கோரிற் கோயிற் றேருமா னின்னே.
புறநா. 300 : 3—6.

94. வடிமா ணெஃகங் கடிமுகத் தேந்தி
ஓம்புமி னோம்புமி னிவணென வோம்பாது
தொடர்கொள் யானையிற் குடர்கா றட்பக்
கன்றமர் கறவை மான
முன்சமத் தெதிர்ந்ததன் றோழற்கு வருமே.
புறநா. 275 : 5—9.

வீடொன்று அமைப்பர்.[95] தெருக்கள் ஒழுங்காக அமைந் திருக்கின்ற பாசறையில் வீடுகள் தழையால் வேயப் பட்டிருக்கும். சந்தியிலே காவலாக நின்ற யானைகள் உணவை உண்ணுது தம் துதிக்கையால் நெற்றியைத் துடைத்துக் கொண்டும், வளைந்த கொம்பிலே தும்பிக்கையைத் தொங்க விட்டுக்கொண்டும் நிற்கும். இதனுல் யானைப்பாகர் துரட்டியாற் குத்திக் கவளம் ஊட்டுவர்.[96] வலிய வில்லை வரிசையாக ஊன்றி அவற்றின் மேல் அம்புக்கட்டுகள் தொங்கவிடப்பட்டிருக்கும். எறிகோல்களை ஊன்றி அவற்றின்மேல் கேடயங்கள் படல்கள் போலச் சார்த்தப் பட்டிருக்கும். இவ்விற் கோட்டையே பாதுகாவலாக உள்ள பல கூடாரங்களின் நடுவில் அரசனுக்குத் தனியே கோயில் ஒன்று உண்டு.[97]

---

95. கான்யாறு தழீஇய வகனெடும் புறவிற்
சேணுறு பிடவமொடு பைம்புத லெருக்கி
வேட்டுப்புழை யருப்ப மாட்டிக் காட்ட
விடுமுட் புரிசை யேமுற வளைஇப்
படுநீர்ப் புணரியிற் பரந்த பாடி. முல்லை. 24—28.

96. உவலைக் கூரை யொழுகிய தெருவிற்
கவலை முற்றங் காவ னின்ற
தேம்படு கவுள சிறுகண் யானை
யோங்குநிலைக் கரும்பொடு கதிர்மிடைந் தியாத்த
வயல்விளை யின்குள குண்ணுது நுதறுடைத்
தயினுனை மருப்பிற்றங் கையிடைக் கொண்டெனக்
கவைமுட் கருவியின் வடமொழி பயிற்றிக்
கல்லா விளைஞர் கவளங் கைப்ப. முல்லை. 29—36.

97. ஓடா வல்விற் றூணி நாற்றிக்
கூடங் குத்திக் கயிறுவாங் கிருக்கைப்
பூந்தலைக் குந்தங் குத்திக் கிடுகுநிரைத்து
வாங்குவி லரண மரண மாக
வேறுபல் பெரும்படை நாப்பண். முல்லை. 39—43.

இக் கோயிலில், இராப் பொழுதையும் பகற் பொழுதாக்கக் கூடிய ஒளி பொருந்திய வாளை இடையிலே கட்டிய பெண்டிர், நெய் தோய்த்த திரிக் குழாயைக் கொளுத்திக் கொண்டு, ஒழுங்காயமைந்த விளக்குகள் அவியுந்தோறும் தம் கையிலுள்ள பந்தங்களால் கொளுத்துவர்.[98] தூக்கம் நிறைந்த முகத்தோடு மெய்காப்பாளர் உலாவித்திரிவர். அவர் மயிர்க் கட்டுக் கட்டிச் சட்டையிட்ட தோற்றத்தை உடையவர்; நல்லொழுக்கம் வாய்ந்தவர்.[99] யவனர் வெளிச்சம் காட்ட, உள் அறையிலுள்ள பள்ளியறைக்கு அரசன் செல்லுவன். அவ் யவனர் உடையினுள் குதிரைச் சம்மட்டி வளைந்து கிடக்கும். அவர் சட்டை அணிந்த அச்சம் வரும் தோற்றத்தினையும், இயல்பான வலிபொருந்திய மெய்யினையும் உடையவர்.[100] மொழி பேசாத நாவினையுடையராய்க் கையாலும் முகத்தாலும் சைகை காட்டித் தம் கருத்தை உணர்த்தும் மிலேச்சர், புறவறைக் கண்ணே உட்பாகத்திற் காவல் செய்து, அங்கும் இங்கும் அலைந்து திரிவர்.[101]

---

98. இரவுபகற் செய்யுந் திண்பிடி யொள்வாள்
விரிவுவரிக் கச்சிற் பூண்ட மங்கையர்
நெய்யுமிழ் சுரையர் நெடுந்திரிக் கொளீஇக்
கையமை விளக்க நந்துதொறு மாட்ட.
முல்லை 46—49.

99. துகின்முடித்துப் போர்த்த தூங்க லோங்குநடை
பெருமூ தாள ரேமஞ் சூழ. முல்லை. 53—54.

100. மத்திகை வளைஇய மறிந்துவீங்கு செறிவுடை
மெய்ப்பை புக்க வெருவருந் தோற்றத்து
வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்
புலித்தொடர் விட்ட புனைமா ணல்லிற்
றிருமணி விளக்கங் காட்டி. முல்லை. 59—63.

101. உடம்பி னுரைக்கு முரையா நாவிற்
படம்புகு மிலேச்ச ருழைய ராக.
முல்லை. 65—66.

பாசறையிலுள்ள மன்னனின் வீரத்தைச் சங்க நூல்கள் பல திறப்படக் கூறுகின்றன. இரவில் அரசன் பாசறையிற் படுக்கையில் படுத்திருக்கின்றான். அவனுக்கு உறக்கம் வரவில்லை. படுக்கையிற் புரண்டு புரண்டு உறக்கம் இல்லாது அடுத்தநாட் போரை எண்ணியவண்ணம் கிடக்கின்றான். மேலும், முன்னாள் நடந்த போரில் மாண்ட யானைகளையும், யானைகளை வெட்டி வீழ்த்திக் கொற்ற முரசம் முழங்கிய வீரரையும் நினைந்து வருந்துகின்றான். அம்பு தைத்த வலியால் உணவு கொள்ளாது காதுகளைக் கவிழ்த்து நிற்கும் குதிரைகளை எண்ணி எண்ணி மனம் நோகின்றான். ஒரு கையைப் படுக்கையின் மேலே வைத்து, ஒரு கையிலே தலையை வைத்துக்கொண்டு கண் வளர்கின்றான். இத்தகைய பண்பு படைத்தவன் முல்லைப் பாட்டில் வரும் அரசன்.[102]

மன்னனின் பகைமுக வாழ்க்கையை நெடுநல்வாடை அழகுற விளக்குகின்றது. பொலிவு பெற்ற போர்த் தொழிலைப் பயின்ற யானையினுடைய நீண்ட திரண்ட பெரிய கை அற்று நிலத்தே புரளும்படி யானையைக் கொன்றனர் வீரர். அவ் வீரருடைய வாளினாற் போழ்ந்த சீரிய புண்ணைக் கண்டு பரிகரித்தற்குத் தான் இருக்கின்ற இடத்திற்குப் புறம் போந்து திரிகின்றான் அரசன். வேப்பந் தாரைத் தலையிலே கட்டின வலிய காம்பினையுடைய வேலோடு முன் செல்

102. மண்டமர் நசையொடு கண்படை பெறாஅ
தெடுத்தெறி யெஃகம் பாய்தலிற் புண்கூர்ந்து
பிடிக்கண மறந்த வேழம் வேழத்துப்
பாம்புபதைப் பன்ன பரூஉக்கை துமியத்
தேம்பாய் கண்ணி நல்வலந் திருத்திச்
சோறுவாய்த் தொழிந்தோ ருள்ளியுந் தோறுமிபு
வைந்நுனைப் பகழி மூழ்கலிற் செவிசாய்த்
துண்ணா துயங்கு மாசிந் தித்து
மொருகை பள்ளி யொற்றி யொருகை
முடியொடு கடகஞ் சேர்த்தி நெடிதுநினைந்து.
முல்லை. 67—76.

கின்றான் சேனைத் தலைவன்; சென்று, புண்பட்ட வீரரை முறை முறையாகக் காட்டுகின்றான். அரசனுக்குப் பின்னாகப் பாய்ந்து செல்லும் செலவினை உடைய செருக்குற்ற குதிரைகள், கரிய சேற்றையுடைய தெருவிலே தம்மேல் படும் துளிகளை உதறுகின்றன. அரசனது இடத் தோளிலிருந்து அவனுடைய மேலாடை நழுவி விழுகின்றது. அதனை இடப் பக்கத்தில் அணைத்துக்கொள்கின்றான். வாளைத் தோளிலே கோத்த தறுகண்மையை உடைய வாளெடுப்பாளின் தோளிலே தன்னுடைய வலக்கையை வைத்திருக்கின்றான். புண்பட்ட வீரர்க்கு அக மலர்ச்சி தோன்ற முக மலர்ச்சியுடன் ஆறுதலளிக்கின்றான். நூலினாற் சட்டத்தே கட்டின முத்து மாலையையுடைய வெற்றிக்குடை தவ்வென்னும் ஓசை பட்டு அசைந்து, பார்க்கின்ற நீர்த்துளிகளைக் கரக்கிறது.[103] இவ்வாறு நள்ளென்னும் நடுயாமத்தும் பள்ளி கொள்ளானாய்ப் பிடியும் பரியும் பின்தொடர்ந்து செல்ல, தன் ஆணைக்கு உட்பட்ட வீரனை அன்பு கொண்ட நண்பன் போலக் கருதித் தோள் மிசைவைத்த வலக்கை யுடன், புண்பட்ட வீரர் அகம் குளிருமாறு அவன் முகம் மலர்ந்து இன்னுரை மொழிந்தமை அக்கால அரசரின் பெருமைக் குணத்தையும், மாண்பினையும், வீரர்பால் அவர் கொண்ட பேரன்பையும் தெளிவாக எடுத்துக்காட்டும்.

---

103 முன்னோன் முறைமுறை காட்டப் பின்னர்
மணிபுறத் திட்ட மாத்தாட் பிடியொடு
பருமங் களையாப் பாய்பரிக் கலிமா
இருஞ்சேற்றுத் தெருவி னெறிதுளி விதிர்ப்பப்
புடைவீ ழந்துகி லிடவயிற் றழீஇ
வாடோட் கோத்த வன்கட் காளை
சுவன்மிசை யமைத்த கையன் முகனமர்ந்து
நூல்கால் யாத்த மாலை வெண்குடை
தவ்வென் றசைஇத் தாதுளி மறைப்ப
நள்ளென் யாமத்தும் பள்ளி கொள்ளான்
சிலரொடு திரிதரும் வேந்தன். நெடுநல். 177—187.

அரசர் தம் வீரர் போர் முனையிற் போர் புரியும்பொழுது தம்மைப் பாதுகாத்தற்குத் தனியிடம் புகார். தாமும் போர்க் களம் புகுந்து போரிற் கலந்து கொள்வர். பாண்டியன் தலை யாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் போர்க்களத் தில் காட்டிய வீரம் சிறப்பித்துப் புறநானூற்றிற் கூறப்படு கின்றது. "முறை முறையாக வெகுண்டு மேல் வந்த புதிய வீரரை மதித்ததும் அவமதித்ததும் இலன்; அவரை இறுகப் பிடித்து ஒலி எழ நிலத்தின் கண்ணே கவிழ்ந்து விழும்படி ஆகாயத்தில் எறிந்து கொன்றதற்கு மகிழ்ந்ததும், அவ்வாறு செய்தேமென்று தன்னை மிகுத்ததும் அதனிலும் இலன்."[104]

கரந்தை சூடிப் போருக்குச் சென்ற மறவருள் ஒருவன் தான் முந்துற்றுச் செல்ல விரும்பினான். அரசன் அவனைத் தடுத்துத் தானே முன்னின்று போரை நடத்தினன். அதனால் அவ் வீரன் "உண்டாட்டுக் காலங்களிலே முன்பு அரசன் சிறப் புடைய கலங்கற் கள்ளையே எமக்குத் தந்து, வெறியில்லாத தெளிந்த கள்ளைத் தானுண்பான். அத்தகையோன் போரில் முந்திச் செல்க என்று ஏவுகின்றான் இல்லை. அதனால் எம்மிடத் துத் தெளிவாக அன்பிலனாயினான்" என்று குறை கூறுமுகத் தால் அரசனது வீரத்தை புலவர் ஆலியார் மெச்சுகிறார்.[105]

---

104. வயின்வயின்
உடன்றுமேல் வந்த வம்ப மள்ளரை
வியந்தன்று மிழிந்தன்று மிலனே யவரை
அழுந்தப் பற்றி யகல்விசும் பார்ப்பெழக்
கவிழ்ந்து நிலஞ் சேர வட்டதை
மகிழ்ந்தன்று மலிந்தன்று மதனினு மிலனே.
புறநா. 77 : 9-13.

105. எமக்கே கலங்க றருமே தானே
தேற லுண்ணு மன்னே நன்றும்
இன்னான் மன்ற வேந்தே யினியே
நேரா ராரெயின் முற்றி
வாய்மடித் துரறிநீ முந்தென் னனே.
புறநா. 298.

இருபக்கத்து வீரரும் போரிடும்பொழுது வீரர் யாவரும் உயிர் நீப்பின், உயிருடன் வாழும் இரு திறத்து அரசரும் போர்க்களம் புகுந்து ஒருவரை ஒருவர் எதிர்த்துப் போர் புரிந்து உயிர்விடுவர். இது அறத்தின் மண்டல் எனப்படும். சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும் சோழன் வேல்பல் தடக்கைப் பெருவிறற் கிள்ளியும் இவ்வாறு பொருது வீழ்ந் தனர்.[106]

போர்முனையில் இருவேந்தர் பொருமிடத்து வென்றோன் தனது வெற்றிக்குக் காலாகவிருந்த துணையரசனைப் போற்றுதல் மரபு. தோல்வியுற்ற அரசன் வென்ற அரசனின் வீரச் சிறப்பினைப் பாராட்டுதலும் உண்டு. தேர்வண் மலையன் என்னும் அரசனைப் பெருஞ்சாத்தனார் என்னும் புலவர் பாடியபொழுது "மலை போன்ற யானைபட எதிர் நின்று கொன்று வென்றவனும், தம்மை வெல்வித்தோன் நீயென உன்னையே மகிழ்ந்து சொல்லும்; விரைந்து வந்து போரைத் தடுத்த வலிய வேலை உடைய மலையன் அல்லனாயின் நல்ல போரை வெல்லுதல் தமக்கு எளிதெனத்தோற்றவனும் தம்மைத் தொலைவித்தோன் நீயென உன்னையே புகழ்ந்து சொல்லும்" என்று கூறியதிலிருந்து இதனை அறிந்து கொள்ளலாம்.[107]

அம்பு தைப்பினும், வேல் வந்து பாயினும், களிறுகள் கோடுகொண்டு தாக்கினும் அஞ்சிப் புறங்காட்டி ஓடாத

---

106. அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர்
தாமாய்ந் தனரே. புறநா. 62 : 7—8.

107. குன்றத் தன்ன களிறு பெயரக்
கடந்தட்டு வென்றோனு நிற்கூ றும்மே
..........................................
விரைந்து வந்து சமந்தாங்கிய
வல்வேன் மலைய னல்ல னாயின்
நல்லமர் கடத்த லெளிதும னமக்கெனத்
தோற்றோன் றானு நிற்கூ றும்மே.
புறநா. 125. 9—16.

மறவர்க்குப் போர் முடிந்ததும் அரசர் ஊர்களைப் பரிசிலாக வழங்குவர். ஆழ்ந்த பொய்கையிடத்துத் துள்ளி மேலெழும்பும் வாளைமீன், நெல்லை உடைய நெடு மனையின் புறத்தே நிறுத்தப்பட்ட கூட்டினுள்ளே வீழ்ந்து புரளும் மருத நில ஊர்களையே இவர் பரிசிலாகப் பெறுவாரென்று புகழ்ந்து கூறுவர்.[108] பனைமரம்போற் சலியாது நிற்கும் தானை வீரர்க்குப் பசிய பயறு விளையும் சீறூர்கள் இறையிலி நிலங்களாக வழங்கப்படின் அவர்கள் அதனை விரும்பி ஏற்கார். மருதநிலத்து ஊர்களையே விரும்பிப் பெறுவர்.[109]

அரசர் பகைவரைக் கொன்று அவர் முடியாகச் செய்யப்பட்ட பசும் பொன்னால் அடிபொலிய வீரக்கழல் செய்து புனைந்து கொள்வர்.[110] பகைவரது காவலையுடைய மதில்களை அழித்து ஆங்கு இருந்த அரசருடைய முடிக்கலம் முதலியவற்றை வாங்கிக்கொண்டு வீரமுடி புனையும் வெற்றியைப் பற்றிப் பெரும்பாணாற்றுப் படை பாடுகின்றது.[111] பகைவருடைய யானைப் பட்டத்திலுள்ள பொன்னைக்கொண்டு, பாணரது தலை பொலியும்படிசெய்து, வாடாத பொற்

---

108. நெடுநீர்ப் பொய்கைப் பிறழிய வாளை
நெல்லுடை நெடுநகர்க் கூட்டுமுதற் புரளும்
தண்ணடை பெறுதல். புறநா. 287 : 8—10.

109. பைம்பய றுதிர்த்த கோதின் கோலணைக்
கன் றுடை மரையாத் துஞ்சும் சீறூர்க்
கோளிவண் வேண்டேம்.................
.......................................
தண்ணடை பெறுதலு முரித்தே......
புறநா. 297 : 3—8.

110. முடிபுனைந்த பசும்பொன்னின்
அடிபொலியக் கழறைஇய. புறநா. 40 : 3—4.

111. கடிமதி லெறிந்து குடுமி கொள்ளும்.
பெரும்பாண். 451.

ருமரையைச் சூட்டுவர் அரசர்.[112] போர் வீரரை ஒன்று கூட்டிப் போர் விருந்து அளிப்பதும் வழக்கமாக இருந்தது. இவ்விருந்தில் அரசன் தன் வீரருடன் ஒருங்கு இருந்து உண்பான். வீரர் கள்ளுண்டு களிப்பர். இவ்விருந்தில் வீரன் வாள்பற்றி நிற்பது குற்றமாகும்.[113]

போரில் வெற்றி பெற்ற அரசர் பகைவருடைய முரசைக் கவர்ந்து கொள்வர்.[114] இவ்வாறு தம்மொடு பகைத்தெழுந்த மன்னரை முரசத்தோடு கைக்கொள்ளுதல் அக்கால அரசரின் வீரத்தின் அறிகுறியாக இருந்தது.[115] முரசைக் கவர்ந்ததன் மேல் களவேள்வி செய்வது மரபு. பகைவருடைய முரசு களுடன் வெண்கொற்றக் குடைகளைப் பற்றிக்கொண்டு, தன் புகழுரை எங்கும் பரவ அவர்தம் படைகளைக் கொன்று, களவேள்வி செய்த அரசனைப்பற்றி அகநானூறு

---

112. ஒன்னார் யானை யோடைப்பொன் கொண்டு
பாணர் சென்னி பொலியத் தைஇ
வாடாத் தாமரை சூட்டிய. புறநா. 126 : 1—3.

113. இவற்கீத் துண்மதி கள்ளே. புறநா. 290 : 1.

வேந்தற் கேந்திய தீந்தண் ணறவம்
யாந்தனக் குறுமுறை வளாவ விலக்கி
வாய்வாள் பற்றி நின்றனெ னென்று
சினவ லோம்புமின். புறநா. 292 : 1—4.

114. பிணியுறு முரசங் கொண்ட காலை.
புறநா. 25 : 7.

விசிபிணி முரசமொடு மண்பல தந்த.
புறநா. 179 : 4.

முரசு கொண்டு. பதிற். 31 : 13.

115. சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை
அருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொ
டொருங்ககப் படேஎனாயில்.
புறநா. 72 : 7—9.

பாடுகின்றது.[116] முடித்தலையை அடுப்பாகக்கொண்டு, இரத்தப் புனலாகிய உலையின்கண் தசை மூளை முதலியன வற்றைப் பெய்து, வீரவளையையுடைய தோளாகிய துடுப்பால் துழாவி அட்டுக் களவேள்வி வேட்பர்.[117] "அரசன் நாற் படையையும் கொன்று களத்திற் குவித்து எருது களிருக வாள் மடலோச்சி, அதரிதிரித்துப் பிணக்குவையை நிணச்சோற் ருேடு உதிரப் பேருலைக்கண் ஏற்றி, 'ஈனுவேண்மான் இடந் துழந்தட்ட' கூழ்ப்பலியைப் பலியாகக் கொடுத்து எஞ்சி நின்ற யானை குதிரைகளையும் ஆண்டுப் பெற்றன பலவற்றையும் பரிசிலர் முகந்து கொள்ளக் கொடுத்தலாம்" என இதனை நச்சி னுர்க்கினியர் தெளிவுபடுத்துவர்.[118] "அஞ்சுதல் உண்டாகும் போர்க்களத்திடத்தே, ஆண்மக்கள் தலையாகிய அடுப்பின் கண்ணே, வலியினையுடைய வேந்தரின் ஒள்ளிய குருதியாகிய உலை, சினமாகிய தீயின் மறுகிப் பொங்குகையினுல், வீர வளையை யுடையவாகிய தோளையுடைய கைகளைத் துடுப் பாகக் கொண்டு துழாவி அடப்பட்ட ஊனுகிய சோறு" என்று மதுரைக் காஞ்சி இதனைக் குறிக்கின்றது.[119]

---

**116.** முரசொடு வெண்குடை அகப்படுத் துரைசெலக்
கொன்றுகளம் வேட்ட. அகநா. *36 : 21—22.*

**117.** பொருந்தாத் தெவ்வ ரரிந்ததலை யடுப்பிற்
கூவிள விறகி னுக்குவரி நுடங்கல்
ஆனு மண்டை வன்னியந் துடுப்பின்
ஈனு வேண்மா ளிடந்துழந் தட்ட
மாமறி பிண்டம் வாலுவ னேந்த
வதுவை விழவிற் புதுவோர்க் கெல்லாம்
வெவ்வாய்ப் பெய்த பூதநீர் சால்கெனப்
புலவுக் களம் பொலிய வேட்டோய்.
புறநா. *372 : 5—12.*

**118.** தொல். புறத்திணையியல். சூ. 21. உரை.

**119.** ஆண்தலை யணங்கடுப்பின்
வயவேந்த ரொண்குருதி
சினத்தீயிற் பெயர்புபொங்கத்

படையெடுத்துச் சென்ற அரசர் பகைவர் நாட்டைப் பல விதத்திற் பாழாக்கினர். மதுரைக் காஞ்சிப் பாட்டுடைத் தலைவன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் காற்றென்னும்படி கடிதாகப் பரந்து சென்று பகைவர் நாடு கெடும்படி நெருப்பைப் பரப்பினன்.[120] போரில் எரிபரப்பு தலைப் பற்றிப் பதிற்றுப்பத்தும் பல இடங்களிற் குறிப்பிடுகின்றது.[121] பகைவர் ஊர்களைச் சுடுகின்ற கமழ்கின்ற புகை திசைகளை மறைப்பதைப்பற்றி இந்நூல் ஓரிடத்திற் கூறுகின்றது.[122] நாட்டைச் சுடும் பல மணம் நாறும் புகை உறைதலாற் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியின் கண்ணி வாடிற்று.[123] ஒன்றோடொன்று கலந்த வள்ளையையும், மலர்ந்த ஆம்பலையும், குளிர்ச்சியையுடைய பகன்றையையும், பழத்தையுடைய பாகலையும் கொண்ட கரும்பல்லது பிறிது காடறியாத, பகைவரது மருத நிலத்தைச் சோழன் இராச சூயம் வேட்ட பெருநற்கிள்ளி

---

தெறலருங் கடுந்துப்பின்
விறல்விளங்கிய விழுச்சூர்ப்பிற்
றொடித்தோட்கை துடுப்பாக
வாடுற்ற வூன்சோறு. மதுரை. 29—35.

120. காலென்ன கடிதுரா அய்
நாடுகெட வெரிபரப்பி
யாலங்கானத் தஞ்சுவரவிறுத்
தரசுபட வமருழக்கி. மதுரை. 125—128.

121. முனையெரி பரப்பிய. பதிற். 15 : 2.
பசும்பிசி றொள்ளழ லாடிய மருங்கின்.
பதிற். 25 : 7.

122. போர்சுடு கமழ்புகை மாதிர மறைப்ப.
பதிற். 71 : 10.

123. வாடுக விறைவநின் கண்ணி யொன்னார்
நாடுசுடு கமழ்புகை யெறித்த லானே.
புறநா. 9 : 21—22.

ஒள்ளிய தீயை ஊட்டி அழித்தான்.[124] பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனுடன் பகைத்தவருடைய, வளப்பங் குன்றுதலை ஒருகாலத்தும் அறியாத, பெரிய மருத நிலங்களை நெருப்பு உண்டது ; நாடு என்னும் பெயர் போய்க் காடென்னும் பெயர் வழங்கிற்று. பசுத்திரள் தங்கின இடமெல்லாம் பாழாய்க்கிடந்தன. விளங்குகின்ற வளையினையும் மடப்பத்தினையுமுடைய மகளிர் துணங்கைக் கூத்தினையும் குரவைக் கூத்தினையும் மறந்தனர். சான்றோர் இருந்த பெரிய அம்பலங்களில் இரட்டையான அடிகளையும் கடிய பார்வையையுமுடைய பேய்மகளிர் உலாவி ஆடினர். மனக்கவற்சியையுடைய பெண்டிர் வருந்திக் கூப்பிட்டனர். வளவிய ஊர்களிடத்தனவாகிய குடிக ளெல்லாம் பசியால் உலர்ந்து நிற்க, புறநாட்டிலிருக்கும் வளவிய சுற்றத்தார் அவர்களுக்குப் பாதுகாவலாகச் சென்று சேர்ந்தனர். பெரிய மாளிகைகளில் வெந்து வீழ்ந்த கரிய குதிரிடங்களிலே கூகைச் சேவல் பேட்டுடன் இருந்து கதறிற்று. செங்கழுநீர் மிக்க இடமகன்ற பொய்கை களிடத்தே, யானை நின்றால் மறையும் வாட்கோரையும் சண்பங்கோரையும் நெருங்கி வளர்ந்தன. எருதுகள் உழுத விளைவயலிடத்தே பல மயிரினையுடைய பெண் பன்றியுடனே ஆண் பன்றி ஓடித்திரிந்தன.[125]

---

124. மயங்குவள்ளை மலராம்பற்
பனிப்பகன்றைக் கனிப்பாகற்
கரும் பல்லது காடறியாப்
பெருந்தண்பணை பாழாக
ஏம நன்னா டொள்ளெரி யூட்டினை.

புறநா. 16 : 13—17.

125. இழிபறியாப் பெருந்தண்பணை
குரூஉக்கொடிய வெரிமேய
நாடெனும்பேர் காடாக
வாசேந்தவழி மாசேப்ப
வூரிருந்தவழி பாழாக

பகைவர் மதிலை அழித்துக் கழுதை ஏரால் உழுது வெள்ளைவரகும் கொள்ளும் விதைத்தல் மரபு.[126] விரைந்த தேர் ஓடிய தெருவின் கண்ணே வெளிய வாயையுடைய கழுத்தை நிரையைப் பூட்டி உழுது பகைவருடைய அகன்ற இடத்தையுடைய நல்ல அரண்களைப் பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி அழித்தானெனப் புறநானூறு கூறும்.[127] அசைந்த பெரிய கழுத்தினையும், பரந்த அடியினையும், வெகுட்சி பொருந்திய பார்வையினையும், விளங்கிய கோட்டினையுமுடைய களிற்றைப் பகைவரின் காவலையுடைய

---

விலங்குவளை மடமங்கையர்
துணங்கையஞ்சீர்த் தழூஉமறப்ப
வவையிருந்த பெரும்பொதியிற்
கவையடிக் கடிநோக்கத்துப்
பேய்மகளிர் பெயர்பாட
வணங்குவழங்கு மகலாங்க
ணிலத்தாற்றுங் குழூஉப்புதவி
னரந்தைப் பெண்டி ரினைந்சுன ரகவக்
கொழும்பதிய கொடிதேம்பிச்
செழுங்கேளிர் நிழல்சேர
நெடுநகர் வீழ்ந்த கரிகுதிர்ப் பள்ளிக்
குடுமிக் கூகை குரலொடு முரலக்
கழுநீர் பொலிந்த கண்ணகன் பொய்கைக்
களிறுமாய் செருந்தியொடு கண்பமன் றூர்தர
நல்லேர் நடந்த நசைசால் விளைவயற்
பன்மயிர்ப் பிணவொடு கேழ லுகள
வாழா மையின் வழிதவக் கெட்டுப்
பாழாயினநின் பகைவர் தேளம்.

மதுரை. 154—176.

126. வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டி
வெள்ளை வரகுங் கொள்ளும் வித்தும்.

புறநா.392 : 9—10.

127. கடுந்தேர் குழித்த ஞெள்ள லாங்கண்
வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப்
பாழ்செய் தனையவர் நனந்தலை நல்லெயில்.

புறநா. 15 : 1—3.

வாவிக்கண் படிவித்தலும் உண்டு.[128] சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி பகைவரின் காவற் பொய்கைகளின் நீரிலே களிற்றைப் படிவித்தான்.[129] வெண்மையில்லாத வலிய வயிரக்கம்பத்தையுடைய கூடத்தில் நிற்றலை வெறுத்துச் சென்று, யானை வாவியிற் படிந்து நீருண்டனவெனக் கல்லாடனார் கூறுகின்றார்.[130]

சேரன் செங்குட்டுவன் பகைவர் ஊரை அழித்து அவ்வூர்ப் பெண்களின் கூந்தலைக் கயிறாகத் திரித்து அவனால் யானையைப் பூட்டிச் செலுத்தினான்.[131] அன்னிஞிமிலி என் பாளின் தந்தையின் கண்களைக் கோசர்கள் கெடுத்தனர்.[132] பகைவரின் பல்லைப் பிடுங்கி அவற்றைக் கோட்டை வாயிலிற் பதித்தலும் வழக்கில் இருந்தது.

அக்காலத்திற் கடலிலும் பல போர்களைத் தமிழ் அரசர் நடத்தினர். சோழன் கரிகாற் பெருவளத்தானின் முன்னோர் நீர்செறிந்த கடலின் கண்ணே கப்பல்களையோட்டிப் போர்

---

128. துளங்கியலாற் பணையெருத்திற்
பாவடியாத செறனோக்கின்
ஒளிறுமருப்பிற் களிறவர
காப்புடைய கயம்படியினை. புறநா. 15 : 7—10.

129. கடிதுறைநீர்க் களிறுபடீஇ.
புறநா. 16 : 6.

130. வெளிறி ேனேன்காழ்ப் பணைநிலை முனைஇக்
களிறுபடிந் துண்டெனக் கலங்கிய துறையும்.
புறநா. 23 : 1-2.

131. பல்லிருங் கூந்தன் முரற்சியாற்
குஞ்சர வொழுகை பூட்டி.
பதிற். 5ம் பதிகம். 16—17.

132. கண்கவின் அழித்ததன் தப்பற் றெறுவர
ஒன்றுமொழிக் கோசர். அகநா. 496 :9—10.

செய்தனர்.[133] சேரன் செங்குட்டுவன் கடல் நடுவிற் கப்பலைச் செலுத்தித் தன் அரசுக்கு இடையூறு செய்துவந்த பகைவரைப் போரில் வென்றானெனச் சங்கநூல்கள் கூறும். இக் கடற்போர்கள் காரணமாகச் சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவன் என்ற பெயர் இவனுக்குச் சிறப்புப் பெயராக அமைந்தது. வெளிநாட்டுப் போர்களில் வடநாட்டிற்குச் சென்று தமிழ் அரசர் ஆரியரோடு நடத்திய போர்கள் சங்கநூல்களிற் பல இடங்களிற் கூறப்படுகின்றன. வெகுண்டெழுந்து, ஆரிய மன்னர் அலறுமாறு அவரைத் தாக்கிப் பெரிய புகழை உடைய பழைய இமய மலையின்மீது வளைந்த விற்பொறியைப் பதித்துக் கொடிய சினம் பொருந்திய பகை வேந்தரைப் பிணித்து வந்த சேரனைப் பற்றிப் பரணர் அகநானூற்றில் பாடியுள்ளார்.[134]

இவ்வாறு தரையிலும் கடலிலும் பெரும்போர்கள் நிகழ்த்தித் தமது வெற்றிக் கொடியைப் பிற நாடுகளில் நாட்டினர் தமிழ் மன்னர். போரில் வேட்கையும் இறப்பில் அச்சமின்மையும் பெற்றிருந்தனர் தமிழர். எதிர்த்து வரும் வீரர்க்கு அஞ்சாது மேன்மேலும் பொருகின்ற வீரர் மலிந்த நாடாகத் தமிழ் நாடு திகழ்ந்தது. அம்பும் வேலும் நுழையும் போர் முனைகளைத் தேடிச்சென்று, அங்கு நின்று போர் புரியும் வீரர் பலர் அக்காலத்தில் இருந்தனர்.[135] அடிக்கின்ற கோலுக்கு அஞ்சாது மேன்மேலும் சீறி வரும் பாம்பைப் போன்ற வீரரைக் கொண்டு எங்கும் புகழ் பரந்து திகழ்ந்தது தமிழ் நாடு.[136]

---

133. நளியிரு முந்நீர் நாவா யோட்டி
வளிதொழி லாண்ட வுரவோன் மருக.
புறநா. 66 : 1—2.

134. ஆரியர் அலறத் தாக்கிப் பேரிசைத்
தொன்றுமுதிர் வடவரை வணங்குவிற் பொறித்து
வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்.
அகநா. 396 : 16–18.

135. அம்பொடு வேலுழை வழியெல்லாந் தானிற்கு
[மன்னே. புறநா. 235 : 7.

136. எறிகோ லஞ்சா வரவி னன்ன
சிறுவன் மள்ளரு முளரே. புறநா. 89 : 5—6.

## ஐந்தாம் இயல்

# தமிழ் மக்களுக்குச் சிறப்பான சமயக் கோட்பாடுகளும் வழிபாட்டு முறைகளும்

சங்க நூல்களிலிருந்து தமிழ் மக்களுடைய பண்டைய சமய வாழ்க்கையின் இயல்பை அறியலாம். தென்னாட்டில் நிலவிய சமய வாழ்க்கை பழங்காலத்தில் ஒரு தனிமையான பண்போடு இருந்ததாகத் தெரிகிறது. பிற்காலத்தில் ஆரியர் சமயக் கொள்கைகளும் வழிபாட்டு முறைகளும் அவர் சமய வாழ்விற் புகத்தொடங்கின. எனினும் பல காலமாகத் தமிழர் சமயம் தனக்குரிய சிறப்பியல்புகளை உடையதாகவே இருந்து வந்தது. வரலாற்றுக்கு எட்டாத பழைய காலத்தில் வெறியாட்டு முதலிய விழாக்களினால் தெய்வங்களை வழுத்தி மகிழ்விக்கும் அளவிலேயே தமிழர் சமயம் அமைந்திருத்தல் கூடும். இவ்வெறியாட்டு முதலிய விழாக்களைப்பற்றிச் சங்க நூல்களிற் பரக்கக் காணலாம்.

சில அறிஞர் சங்க நூல்களிற் சில ஆரியத் தெய்வங்கள் கூறப்பட்டுள்ளமையை அடிப்படையாகக் கொண்டு, சங்க காலப் பகுதியில் தமிழ் நாட்டில் ஆரியர் சமய வாழ்க்கைப் பண்பே சிறப்புற்றிருந்தது என்று கொண்டனர். இக்கூற்று ஏற்கத்தக்கதொன்றன்று. சங்கநூல்களில் விட்டுணு இந்திரன் முதலிய ஆரியத் தெய்வங்கள் இடையிடையே கூறப்பட்டுள் ளமை உண்மையே. ஆனால் நில இயற்கைக்கு ஏற்ப அமைந்த முருகன், கொற்றவை போன்ற திராவிடத் தெய்வங்களே மிகவும் சிறப்புடன் வணங்கப்பட்டு வந்தனர் என்பதையும் அதே நூல்களிலிருந்து அறியலாம். தமிழருக்கே தனியாக அமைந்த வழிபாட்டு முறைகளையும் அந் நூல்களிற் காண்

கின்றோம். காலப் போக்கில் ஆரியத் தெய்வங்களுடன் தமிழ்த் தெய்வங்கள் யாவும் ஒன்றுபடுத்தப்பட்டன. இப்பொழுது அவற்றைப் பிரித்து வெவ்வேறாகக் காணுதல் அரிதாய்விட்டது. சில தெய்வங்களை மட்டும் அவ்வாறு பிரித்துக் காணமுடியும். காலஞ் செல்லச் செல்லத் தமிழருக்கே சிறப்பான வெறியாட்டு முதலிய வழிபாட்டு முறைகளும் ஆரியருக்குரிய கிரியை முதலியவற்றால் மறைக்கப்பட்டு ஒழிந்தன.

## (1) வெறியாட்டு முதலியன

மந்திரங்கள் கூறி யாகங்கள் செய்வதே ஆரியருக்குச் சிறப்பாக உரிய வழிபாட்டு முறை. தமிழருடைய வழிபாட்டிலே வெறியாட்டு முதலிய ஆட்டங்கள் முக்கிய இடம் பெற்றன.[1] முருக வழிபாடு கூறப்படும் இடங்களில் இத்தகைய கூத்துக்கள் வருணிக்கப் படுகின்றன. இவ்வழிபாடுகளிற் பூசாரிகள் இல்லை. வழிபடுவோர் இறைவன் தம்மிலே வந்து வெளிப்படுவான் என்னும் நம்பிக்கையுடன் கூத்தாடினர். குறமகள் கோடும் மணியும் ஒலிக்க யாவரும் அஞ்சத்தக்க முறையில் இசைக்கு ஏற்ப ஆடுதல் பல இடங்களிற் கூறப்படுகின்றது.

சங்க காலத்திற் பெரு வழக்காயிருந்த இவ்வெறியாட்டைச் சங்கமருவிய காலத்தில் இலக்கணம் வகுத்த தொல்காப்பியர் பொருளதிகாரத்தில் ஒரு சூத்திரத்திற் குறிப்பிடுகின்றார்.[2] இவ்வாட்டத்திற் கையில் வேலைக்கொண்டு கூத்தாடுவதனால் வேலனெனப் பெயரிய ஒருவன் முருகனை வாழ்த்தி விளிப்பான். இடுக்கண் யாவற்றிற்கும் முருகனே

---

1. தமிழர் இசை வளர்ச்சியும் இதுவும் மிகவும் தொடர்புடையன.

2. வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்
வெறியாட் டயர்ந்த காந்தளும்.
தொல். பொருள். 60 : 1—2.

காலாக உள்ளவன் என்று கொண்டு அவனை வழிபட்டு அவனை வேண்டுவான் வேலன். இம்மரபை மதுரைக் காஞ்சியுட் காணலாம். "அரிய அச்சத்தைச் செய்யும் வேலன் இடுக்கண் முருகனால் வந்ததெனக் கூறினான். தான் கூறிய அச் சொல்லின் கண்ணே கேட்டோரை வளைத்துக்கொண்டு, அரித்தெழும் ஓசையையுடைய இனிய வாத்தியங்கள் ஒலிக்க, கார்காலத்து மலராகிய குறிஞ்சியைச் சூடி, கடம்பு அணிந்த முருகனைச் செவ்விதாகத் தன் மெய்க்கண்ணே நிறுத்தி வழி படுவான். அவ்வாறு வழிபட, மகளிர் தம்முட்டழுவிக் கை கோத்து மன்றுகள் தோறும் நின்று குரவைக் கூத்து ஆடுவர்."[3]

ஐங்குறுநூற்றில் வெறிப்பத்து என ஒருபகுதி உண்டு.[4] அப்பகுதியில் தலைமகளின் பொலிவற்ற நிலைக்கு முருகனே காரணமெனக் கொண்டு, நோயின் காரணத்தை அறிவதற்கு வேலன் முருகனைப் பேணுவான் எனக் கூறப்படுகின்றது.[5] குறுந்தொகையிலும், "மெல்லிய தோளை மெலியச் செய்த துன்பம் வெற்றியையுடைய முருகக்கடவுளால் வந்ததென்று வேலன் சொல்லுவான்" என வருகின்றது.[6] அவ்வாறு சொல்லி வெள்ளிய பனந்தோட்டினைக் கடப்பமலரோடு சூடி, இனிய சீர் அழகிதாக அமைந்த தாளத்தோடு பொருத்தி,

---

3. அருங்கடி வேலன் முருகொடு வளைஇ
அரிக்கூ டின்னியங் கறங்கநேர்நிறுத்துக்
கார்மலர்க் குறிஞ்சி சூடிக் கடம்பின்
சீர்மிகு நெடுவேள் பேணித் தழூஉப்பிணையூஉ
மன்றுதொறு நின்ற குரவை. மதுரை. 613—615.

4. ஐங். 241—250.

5. கறிவளர் சிலம்பிற் கடவுட் பேணி
யறியா வேலன் வெறியெனக் கூறும்.
ஐங். 243 : 1—2.

6. மென்றோ ணெகிழ்த்த செல்லல் வேலன்
வென்றி நெடுவே ளென்னும்.
குறுந். 111 : 1—2.

முருகக் கடவுளின் பெரும் புகழினைத் துதித்து, வேலன் வெறியாடுவான்.[7]

வெறியாடும்பொழுது கழற்காயை மெய்யிலணிந்து படிமக் கலத்தைத் தூக்கிக்கொண்டு முருகணங்கின் குறையென வேலன் கூறுவான்.[8] கழங்கு பார்த்தல், நெற்குறி பார்த்தல் போன்றது. அது வெறிக்களத்திலே பரப்பியிட்டுப் பார்க்கும்பொழுது மூன்றும் இரண்டும் ஒன்றும் படுகை.[9] இவ்வாறுபடின் முருகணங்கினால் ஆயிற்று எனக் கொள்வர். வெறியாடும் களம் பொன்னகர் போன்றது.[10] இடப்பட்ட மணல் முற்றத்திலேயே இவ் வெறியாட்டு நிகழும்.[11] வெறியாட்டெடுக்கும் இடந்தோறும் செந்நெல்லினது வெள்ளிய பொறி சிதறியிருக்கும்.[12] இது, விளங்கிய கடற் பரப்பினிடத்து நறிய ஞாழற் பூவோடு புன்னை மலரும் பரவி இருத்தல் போலத் தோன்றும்.[13] இவ் வெறியாட்டில்

---

7. வெண்போழ் கடம்பொடு சூடி இன்சீர்
ஐதமை பாணி இரீஇக்கை பெயராச்
செல்வன் பெரும்பெயர் ஏத்தி வேலன்
வெறியயர் வியன்களம். அகநா. 98 16 :—19.

8. பொய்யா மரபி னூர்முது வேலன்
கழங்குமெய்ப் படுத்துக் கன்னந் தூக்கி
முருகென மொழியும். ஐங். 245 : 1—3.

9. மூன்று-மயில் ; இரண்டு-கோழி ; ஒன்று-வேல்;
இதனை அடிகொடி உவகை என்று பெயர் கூறுப.

10. பொன்னகர் வரைப்பு. ஐங். 247 :2.

11. பெய்ம்மணன் முற்றம். ஐங். 248 : 1.

12. வேலன் புனைந்த வெறியயர் களந்தொறும்
செந்நெல் வான்பொரி சிதறி யன்ன.
குறுந். 53 : 3—4.

13. எறிசுறுக் கலித்த விலங்குநீர்ப் பரப்பின்
நறுவீ ஞாழலொடு புன்னை தாஅய்
வெறியயர் களத்தினிற் றோன்றும்.
குறுந். 318 : 1—3.

தெய்வம் ஏறியதனுல் அசைகின்ற அசைவு, உலாவி அசைந்து ஆடுகின்ற மடப்பத்தினையுடைய விறலியின் ஆட்டத்திற்கும் அரிய மணியையுடைய பாம்பின் ஆட்டத்திற்கும் ஒப்பிடப் படும்.[14]

இவ் வெறியாட்டில் ஆட்டின் கழுத்தை அறுத்து, தினையையுடைய பிரப்பை வைத்து வழிபடுவர்.[15] "சிறிய தினை அரிசியைப் பூக்களோடே கலந்து பிரப்பரிசியாக வைத்து மறியை அறுத்து" எனத் திருமுருகாற்றுப்படையும் பாடுகின்றது.[16] பலவாகிய வேறுபட்ட நிறம் பொருந்திய சோற்றையுடைய பலியுடன் சிறிய ஆட்டுக் குட்டியைக் கொன்று, நோய் உள்ள பெண்ணின் நறிய நெற்றியைத் தடவி, முருகக் கடவுளை வணங்கிப் பலியாகக் கொடுப்பான் வேலன் என்பது குறுந்தொகை.[17] வெறியாடும் களத்தினை நன்கு அமைத்து வேலிற்கு மாலை சூட்டி, வளம் பொருந்திய கோயிலில் ஒலியுண்டாகப் பலி கொடுத்து, அழகிய சிவந்த தினையை இரத்தத்துடன் கலந்து தூவி முருகனை அச்சம் பொருந்திய நடு இரவில் வேலன் வரவழைப்பானென அகநானூற்றிலிருந்து அறிகின்றோம்.[18] முருகனுல் வருத்த

14. இயலின ளொல்கின ளாடு மடமகள்
வெறியுறு நுடக்கம் போலத் தோன்றிப்
பெருமலை வயின்வயின் விலங்கு மருமணி
அரவழங்கும். பதிற். 51 : 10—13.

15. மறிக்குர லறுத்துத் தினைப்பிரப் பிரீஇ.
குறுந். 263 : 1.

16. சிறுதினை மலரொடு விரைஇ மறியறுத்து.
திருமுருகு. 218.

17. பல்வே றுருவிற் சில்லவிழ் மடையொடு
சிறுமறி கொன்றிவ ணறுநுத னீவி
வணங்கினை கொடுத்தி யாயின். குறுந். 362: 3—5.

18. களநன் கிழைத்துக் கண்ணி சூட்டி
வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத்
துருவச் செந்தினை குருதியொடு தூஉய்
முருகாற்றுப் படுத்த உருகெழு நடுநாள்.
அகநா. 22 : 8—11.

முற்ற மகளிர்க்கு ஆடு அறுத்தாடும் களத்திற் குருதி பாய்தல், புள்ளியினையும் புகரினையுமுடைய மத்தகம் அழிய அம்பு பட்டு உருவின புண்களிலிருந்து குருதி பாய்தலுக்கு உவமை கூறப்படும்.[19] வெறியாட்டம் மேவிய மகளிரின் தோற்றப் பொலிவு முதலியனவற்றை குறுந்தொகைச் செய்யுட்களும் அகநானூற்றுச் செய்யுட்களும் குறிக்கின்றன.[20] பட்டினப்பாலையிலும் இவர்களைப் பற்றிய குறிப்பு உண்டு.[21] இம் மகளிர் வெறியாடுகின்ற அழகு, தெய்வத்திற்குப் பலியாக இட்ட செழுமையான கதிரைத் தெரியாமல் உண்ட மயில் வெம்மையுற்று நடுங்குவதற்கு ஒப்பிடப்படும்.[22]

இத்தகைய கூத்தாட்டுக்கள் நிகழும்பொழுது முருகன் வழிபடுகின்ற ஒருவரில் வெளிப்படுவான். அவன் எவரிலேனும் இவ்வாறு வெளிப்பட்டுத் தான் கூறவேண்டியவற்றைக் கூறுவான். தமிழ் நாட்டிலும் ஈழத்து வடக்குக் கிழக்குப் பகுதியிலும் இவ்வாறு தெய்வங்கள் வெளிப்பட்டுத் தோன்றும் என்ற நம்பிக்கை மக்களிடையே இன்றும் இருக்கின்றது. பேதி அம்மை முதலிய நோய்கள் நிலவுகின்ற காலங்களில் மக்கள் யாவரும் ஒன்று சேர்ந்து கடவுளைப் பரவி நிற்பார்கள். திடீரென அவர்கள் ஒருவரில் தெய்வம் வெளிப்பட்டுத் தான் கூறவேண்டியதைக் கூறும்.

---

19. புண்ணுமிழ் குருதி முகம்பாய்ந் திழிதரப்
புள்ளி வரிநுதல் சிதைய.....................
.............................................
அணங்குறு மகளி ராடுகளங் கடுப்ப.
குறிஞ்சி. 172—175.

20. குறுந். 366 ; அகநா. 370 : 14.

21. பட் : 154-155.

22. கடியுண கடவுட் கிட்ட செழுங்குரல்
அறியா துண்ட மஞ்ஞை யாடுமகள்
வெறியுறு வனப்பின் வெய்துற்று நடுங்கும்.
குறுந். 105 : 2—4.

## (2) நடுகல் வழிபாடு

போரில் வீழ்ந்த வீரரைக் கல்லில் அமைத்து வழிபடும் வழக்கமும் இக்காலப் பகுதியில் இருந்தது. வீரரின் நினைவுக் காகக் கற்கள் நிறுத்தப்பட்டு அவற்றின் அருகில் கேடயங் களும் ஈட்டிகளும் வைக்கப்பட்டன.[23] இத்தகைய கற்கள் நடு கற்கள் எனப் பெயர் பெற்றுத் தெய்வங்களாகவே வணங்கப் பட்டு வந்தன. கல்லை வெட்டி எடுத்து, அதனிடத்தே 'இவ் வாறே பொருது பட்டான் இன்னன்' என்று அவன் பெயரை உலகமறிய எழுதி, மராமரத்தின் நிழலிலே நட்டு, அதனைத் தெய்வமாகப் போற்றுவரென மலைபடுகடாம் எடுத்துக் கூறு கின்றது.[24] குற்றமில்லாத தொடையையுடைய மறவரின் அம்பினால் இறந்தவரது பெயர் பொறிக்கப்பட்ட நடு கல்லைப் பற்றிய செய்தி ஐங்குறுநூற்றிலும் உண்டு.[25] வீரரது பெயரினையும் சிறப்பினையும் பொறித்து வழிதோறும் மயிற் றோகை அணிந்து விளங்கும் நடுகற்களைப்பற்றி அகநானூறும் புறநானூறும் பல இடங்களிற் குறிப்பிடுகின்றன.[26]

---

23. கிடுகுநிரைத் தெஃகூன்றி
நடுகல்லி னரண்போல. பட்டினப். 78—79.

24. பெயர்மருங் கறிமார்
கல்லெறிந் தெழுதிய நல்லரை மராஅத்த
கடவுள். மலைபடு. 394—396.

25. விழுத்தொடை மறவர் வில்லிடத் தொலைந்தோர்
எழுத்துடை நடுகல். ஐங். 352 : 1—2.

26. நல்லமர்க் கடந்த நாணுடை மறவர்
பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்
பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்
வேலூன்று பலகை. அகநா. 67 : 8—11.
பரலுடை மருங்கிற் பதுக்கை சேர்த்தி
மரல்வகுந்து தொடுத்த செம்பூங் கண்ணியொ
டணிமயிற் பீலி சூட்டிப் பெயர்பொறித்
தினிநட் டனரே கல்லும். புறநா. 264 : 1—4.

நடுகற் கடவுளை வழிபடுவதற்கு அக்கல்லில் மயிற்றோகை களைச் சூட்டி, துடியை அடித்து, நெல்லாலாக்கிய கள்ளோடு செம்மறிக் குட்டியைப் பலி கொடுப்பர்.[27] கல்லின் நாரால் அரிக்கப்பட்ட தேறலைச் சிறிய கலத்தால் உகுத்தல் வழக்கில் இருந்தது.[28] மேலே கூறியவற்றிலிருந்து நடுகற்களுக்கு மலரும் மதுவும் சோறும் படைக்கப்பட்டனவென அறிய லாம். இன்று தாழ்ந்த சாதியினர் எனக் கருதப்படுவோர் வணங்கும் தெய்வங்களான மதுரைவீரன், இருளன், கறுப்பன், நொண்டி முதலியன நடுகல் வகுப்பைச் சேர்ந் தவை எனக் கருதலாம்.

நடுகல் அமைத்தல் அக்காலத்தில் பெருவழக்கில் இருந்த மையால் அவற்றை அமைத்தற்குரிய முறைகள் யாவும் ஒழுங் காகப் பின்பற்றப்பட்டன. அம்முறைகளைத் தொல்காப் பியரும் ஒழுங்குபடுத்தி இலக்கணமாக வகுத்தார்.[29] அந் நூலின்படி நடுகல் அமைப்பதற்கு உரிய வினையமைதிகள் ஆறு. அவையான :—

(*i*) **காட்சி :** அளவும் அமைதியும் நோக்கிக் கல் தெரிந் தெடுத்தல். இவ்வாறு தெரிந்தெடுக்கப்பட்ட பின்னர் அக் கல்லிலே ஓர் உருவம் செதுக்கப்படும். அவ்வுருவம் சில விதிகளுக்கேற்ப அமைந்திருத்தல் வேண்டும்.

(*ii*) **கால்கோள் :** அக்கல்லை நடுதற்குரிய நல் நிமித்தம் பார்த்தல்.

---

27. நடுகற் பீலி சூட்டித் துடிப்படுத்துத்
தோப்பிக் கள்ளொடு துரூஉப்பலி கொடுக்கும்.
அகநா. 35 : 8—9.

28. நடுகற் பீலி சூட்டி நாரரி
சிறுகலத் துகுப்பவுங் கொள்வன்.
புறநா. 232 : 3—4.

29. காட்சி கால்கோள் நீர்ப்படை நடுதல்
சீர்த்தகு சிறப்பிற் பெரும்படை வாழ்த்தலென்
றிருமூன்று வகையிற் கல்லொடு.
தொல். பொருள். 60 : 19-21.

(*iii*) **நீர்ப்படை :** அக்கல்லை நீராட்டுதல்.

(*iv*) **நடுதல் :** ஏற்ற இடத்தில் கல்லை நடுதல்.

(*v*) **விழா :** கோயிலுக்கு வேண்டிய கட்டிடங்கள் கட்டுவதும், வீரன் செயல்களைக் கல்லிற் பொறிப்பதும் இவ் விழாவில் நடைபெறுவன.

(*vi*) **வாழ்த்துதல் :** கல்லை வணங்குதல்.

இக்கற்றெய்வங்களைச் சங்க நூல்கள் அடிக்கடி கூறுகின்றனவாதலின் அக் காலத்திலே அவை சிறப்புற்றிருந்தன வென்றே கொள்ளவேண்டும். மேலே கூறியவாறு, இப்பொழுது தமிழ் நாட்டிற் பல இடங்களிலும் காணப்படுகின்ற ஐயனர் கோயில்கள் வீரர்க்குக் கல்லமைக்கும் இவ் வழக்கத்தோடு தொடர்புடையனவாய் இருக்கலாம்

## (3) பழைய வழிபாட்டு முறை ஒன்று

நெய்தல் நிலமக்கள்—பெண்கள் குழந்தைகள் உட்பட யாவரும்—முழுநிலா நாளிலே கடற்கரையிற் கூடுவார்கள். கடற்றெய்வத்திற்கு மீனும் இறைச்சியும் படைத்து வணங்குவார்கள். கடற்றெய்வத்தின் அடையாளமாக அவர்கள் அமைத்து வணங்குவது சுறுவின் கொம்பே. இவ் விழாவினைப் பட்டினப்பாலை பின்வருமாறு கூறும் : "சிவந்த தலையையுடைய பெரிய பரதவர் உவாநாளிலே தம்முடைய மகளிரோடு கூடி, குடியிருப்பு நடுவிலுள்ள மனையிடத்தே சினையையுடைய சுறவின் கொம்பை நட்டு, அதனிடத்தே ஏறிய வலிய தெய்வங் காரணமாக மலர் மாலைகளைச் சூடிப் பனையின் கள்ளையும் நெற்கள்ளையும் உண்டு விழா எடுப்பர்".[30] இதிலிருந்து அக்கால மக்கள் ஒருங்கு சேர்ந்து

---

30. சினைச்சுறவின் கோடுநட்டு
மனைச்சேர்த்திய வல்லணங்கினன்
மடற்றாழை மலர்மலைந்தும்
பிணர்ப்பெண்ணைப் பிழிமாந்தியும்
புன்றலை யிரும்பரதவர்
பைந்தழைமா மகளிரொடு
பாயிரும் பனிக்கடல் வேட்டஞ் செல்லா
துவவுமடிந் துண்டாடியும் பட் 86—93.

தெய்வத்தை வணங்கிக் கள்ளைக் குடித்து வெறியாட்டயர்ந் தார் என்பதை அறிகின்றோம்.

## (4) கற்களில் உறையும் தெய்வங்கள்

சங்ககாலப் பகுதியில் உருவ வழிபாடு இருந்ததாகத் தெரியவில்லை. எனினும் மன்றங்களில் மக்கள் வணக்கத்திற் காகக் கற்கள் நிறுவப்பட்டன. இத்தகைய கற்கடவுளைப் பற்றிப் பட்டினப்பாலை பின்வருமாறு கூறுகின்றது: "கொண்டி மகளிர் துறையிலே சென்று முழுகி மன்றத்தினை மெழுகுவர்; அந்திக்காலத்திலே அவியாத விளக்கினை ஏற்றுவர்; கற்றெய்வத்தை மலரால் அணிபெறச் செய்வர்."[31] தாம் உறைந்த கற்களை விடுத்துத் தெய்வங்கள் நீங்கப் பாழடைந்த அம்பலத்தைப் பற்றிப் புறநானூறு பாடு கின்றது.[32] புதர்கள் படரப் பெற்ற பொதியிலிடத்தே தெய்வம் கைவிட்டுப்போன வலிய தாளினையுடைய தூணைப் பற்றி அகநானூறு கூறுகின்றது.[33]

---

31. மூன்றும் இயல் 58ம் அடிக் குறிப்பைப் பார்க்க.

32. கலிகெழு கடவுள் கந்தம் கைவிடப்
பலிகண் மாறிய பாழ்படு பொதியில்.
புறநா. 52 : 12—13.

33. புற்றுடைச் சுவர புதலிவர் பொதியிற்
கடவுள் போகிய கருந்தாட் கந்தத்து.
அகநா. 307 : 11—12.

## ஆறும் இயல்

# தெய்வங்கள்

நிலங்களுக்குரிய தெய்வங்களைத் தொல்காப்பியனார் பொருளதிகாரத்தில் வகுத்துக் கூறியுள்ளார்.[1] இச் சூத்திரத்தில் வருணன் என்ற தெய்வத்திற்கே பெயர் தந்துள்ளார். ஏனைய தெய்வங்களை அவற்றிற்குரிய பண்புகளைச் சுட்டியே குறித்திருக்கின்றார். தொல்காப்பியத்திற்கு உரை கண்ட உரையாசிரியர்கள் மாயோன் என்பது விட்டுணுவையும், சேயோன் என்பது முருகனையும், வேந்தன் என்பது தேவர்க்குத் தேவனான இந்திரனையும் குறிக்குமெனக் கொண்டனர்.

முருகனைத் தவிர மற்றைய திராவிடத் தெய்வங் களுடைய பெயர்கள் இப்பொழுது நமக்குக் கிடைக்கவில்லை. சங்க காலத்திலே அவை யாவும் ஆரியத் தெய்வங்களோடு தொடர்புபடுத்தப்பட்டுத் தமக்குரிய சிறப்புத் தன்மைகளை இழந்திருத்தல் கூடும். சங்க காலத்தின் பிற்பகுதியிலே முருகன் சிவனின் மகனான கந்தனோடு ஒன்றுபடுத்தப்படு கின்றான். சிலப்பதிகாரம் மணிமேகலை ஆகிய நூல்களின் காலத்திற்குப் பின்னர் வருணனும் இந்திரனும் அறவே மறைந்து விடுகின்றனர். சிவன் ஒரு நிலத்துக்கேனும் உரிய தெய்வமாகக் கருதப்படாதது கவனிக்கத்தக்கது. சங்க

---

1. மாயோன் மேய காடுறை யுலகமுஞ்
சேயோன் மேய மைவரை யுலகமும்
வேந்தன் மேய தீம்புன லுலகமும்
வருணன் மேய பெருமண லுலகமும்
முல்லை குறிஞ்சி மருத நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே.
தொல். பொருள். 5.

நூல்களில் மிகச் சில இடங்களிலேயே சிவனைப்பற்றிய குறிப்புக்கள் உள்ளன. ஆனால் ஓரிடத்திலேனும் ஒரு நிலத்திற்குரிய தெய்வமாகக் கூறப்படவில்லை.

## (1) முருகன்

குறிஞ்சி நிலக் கடவுளாகிய முருகனே மக்களின் உள்ளத்தை மிகவும் கொள்ளை கொண்டவன். அவன் போரிற் சிறந்த திராவிடத் தெய்வம். அவன் சேயோன் எனப்பட்டான். "வெல்லும் போரை வல்ல முருகன்" என மலைபடுகடாம் அவனைச் சிறப்பிக்கின்றது.[2] வெற்றித் தெய்வமான கொற்றவையே அவனுடைய தாய்.[3] அவன் கடப்பம் தாரை அணிந்து கடம்பின் கீழ் வீற்றிருப்பான்.[4] திருத்தகு சேய் எனப்படுவான்.[5] போரை விரும்புவான்.[6] போர் வன்மை மிக்க முருகன் என அகநானூறும் புறநானூறும் கூறுகின்றன.[7] போருக்குச் செல்லும் அரசனின் சீற்றம் முருகனின் வெகுட்சிக்குப் பல இடங்களில் ஒப்பிடப்படுகின்றது.[8]

---

2. வெல்போர்ச் சேஎய். மலைபடு. 493.
3. வெல்போர்க் கொற்றவைச் சிறுவ. திருமுருகு. 258.
4. கடம்பமர் நெடுவேள். பெரும்பாண். 75.
5. திருத்தகு சேஎய். புறநா. 125 : 20.
6. செருவெஞ் சேஎய். புறநா. 120 : 21.
7. செருமிகு சேஎய். அகநா. 266 : 21.
   செருமிகு சேஎய். புறநா. 14 : 19.
8. முருகு டன்று கறுத்த. பதிற். 26 : 12.
   முருகு உறழப் பகை. மதுரை. 181.
   முருகற் சீற்றத் துருகெழு குருசில். பொருந. 131.
   முருகற் சீற்றத் துருகெழு குருசில். புறநா. 16 : 12.
   முருகி னன்ன சீற்றத்து. அகநா. 158 : 16.

வருத்துதலையுடைய முருகனின் கோயில் ஒன்று புறநானூற்றில் குறிப்பிடப்படுகின்றது.[9] அழகிய மணி விளக்கு ஒளிரும் திருச்சீரலைவாயில் முருகன் கோயில் கொண்டிருப்பதாக அகநானூற்றிலிருந்து அறிகின்றோம்.[10] தாழ்ந்த நீரையுடைய கடலின்கண் வெளிய தலையையுடைய திரை அலைக்கும் திருச்செந்திலிடத்து உறையும் நெடுவேள் என்று புறநானூறு இதனைக் கூறுகின்றது.[11] சங்க நூல்களிற் பல இடங்களில் முருகு என்ற சொல்லே முருகனைச் குறிப்பதற்கு வழங்கப்படுகின்றது.[12] முருகு என்பதன் பொருள் தெய்வத் தன்மை என்றும் அது முருகக் கடவுளுக்கு ஆகு பெயராக அமைந்த தென்றும் நச்சினார்க்கினியர் கருதுவர்.[13]

முருக வழிபாட்டில் ஆரவாரம் மிக்க ஆடல்களும் பாடல்களும் சிறந்து விளங்கின. இளம் மகளிர்க்குக் காதல் நோய் கொடுப்பவன் முருகன். அம்மகளிர் முருகன் மேற்கொண்ட மயக்கத்தைத் தீர்ப்பதற்கு வேலன் வெறியாட்டயர்வான்.[14]

---

9. அணங்குடை முருகன் கோட்டத்து.
புறநா. 299 : 6.

10. திருமணி விளக்கின் அலைவாய்ச்
செருமிகு சேஎயொடு. அகநா 266 : 20—2..

11. தாழ்நீர்
வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தில்
நெடுவேள். புறநா. 55 : 17—19.

12. ஐங். 245, 247, 249.
குறுந். 362.
பதிற். 26.
மதுரை. 181.

13. பத்துப்பாட்டு மதுரைக் காஞ்சி 181 அடி உரை.

14. இதைப் பற்றிய விரிவான செய்திகளை ஐந்தாம் இயலில் வெறியாட்டு என்ற பகுதியிற் கண்டு கொள்க.

மயக்கங்கொண்ட அம்மகளிரும் இசைக்கமைய வெறியாடுவர். "விழாவயரும் வியலாவணத்துள் செவ்வேள் வெறியாட்டு மகளிரொடு சேர்ந்தமையக் குழல் அகவின ; யாழ் முரன்றன; முழ்வு அதிர்ந்தன ; முரசு இயம்பின" என்று பட்டினப்பாலை பாடுகின்றது.[15]

### திருமுருகாற்றுப் படையுட்கண்ட முருகன்

ஆறுபடை வீடுகளிற் குடிகொண்ட முருகன் புகழைத் திருமுருகாற்றுப்படை கூறுகின்றது. இப்பாட்டு காலத்தாற் சங்க நூல்களுக்குப் பிந்தியதாயினும், இதிற் பல இடங்களில் திராவிடத் தெய்வமாகிய முருகனின் இயல்புகள் கூறப்படுவதால், அவ்வியல்புகளையும் ஈண்டு நோக்குதல் பொருத்தம் உடைத்து. இப்பாட்டிலே முருகன் பல பெயர்களால் அழைக்கப்படுகின்றான். அவற்றுட் சில ஆரியப் பெயர்கள் ; சில திராவிடப் பெயர்கள். மறுவில் கற்பின் வாணுதல் கணவன்,[16] சேய்,[17] அறுவர் பயந்த ஆறமர் செல்வன்,[18] ஆல்கெழு கடவுட் புதல்வன்,[19] கொற்றவைச் சிறுவன்,[20] இழையணி சிறப்பிற் பழையோள் குழவி,[21] வானோர் தானைத் தலைவன்,[22] குறிஞ்சிக் கிழவன்[23] முதலியன அப்பெயர்கள்.

---

15. செறிதொடி முன்கை கூப்பிச் செவ்வேள்
வெறியாடு மகளிரோடு செறியத் தாஅய்க்
குழலகவ யாழ்முரல
முழவதிர முரசியம்ப
விழவறு வியலாவணத்து. பட்டினப். 154—158.

16. அடி 6.

17. அடி 61.

18. அடி 255.

19. அடி 256.

20. அடி 250.

21. அடி 259.

22. அடி 260.

23. அடி 267.

இப்பாட்டின் 'திருப்பரங்குன்றம்' என்ற பகுதியிலே தமிழ்க் கடவுளாகிய முருகனுக்குத் தமிழ் முறையிலே பேய் மகள் ஒருத்தி ஆடிய துணங்கைக் கூத்து சித்திரிக்கப்படு கின்றது. "அச்சம் தரும் பேய்மகள் துணங்கைக் கூத்து ஆடினுள். அவள் தலைமயிர் காய்ந்து கிடந்தது. பல், நிரை ஒவ்வாது கிடந்தன. வாய் திறந்து கிடந்தது. கோபத்தாற் சுழலும் விழியையுடைய பசிய கண்ணை உடையளாயிருந் தாள். அவள் பார்வை கொடுமை செய்யும் தன்மையோடு விளங்கியது. பிதுங்கிய கண்ணையுடைய கூகையும் பாம்பும் தூங்குவதனுல் முலைகளை வருத்தின அவள் காதுகள். உட்குதல் பொருந்தும் நடையினையும் பெரிய வயிற்றையும் உடையவளாயிருந்தாள். உதிரத்தை அளைந்த நகத்தை யுடைய கொடிய விரலாலே தோண்டி உண்ணப்பட்ட முடை நாற்றம் மிக்க கருந்தலையை வளைகள் நிரம்பிய கையினுலே ஏந்தியுள்ளாள் எதிர் நின்று கொல்கின்ற வெற்றிக் களத்தைப் பாடித் தோளை அசைத்து நிணத்தைத் தின்கின்ற வாயினை உடையளாய் ஆடினுள் அவள்."[24]

குன்றுதோருடல் என்ற பகுதியில் முருக வழிபாட்டுடன் தொடர்புடைய குரவைக் கூத்துக் கூறப்படுகின்றது. "வேலன் பைங்கொடியாலே தக்கோலமென்னும் கொடியின் காயோடு சாதிக்காய், காட்டு மல்லிகை, வெண்கூதாளி முதலியன

---

24. உலறிய கதுப்பிற் பிறழ்பற் பேழ்வாய்ச்
சுழல்விழிப் பசுங்கட் சூர்த்த நோக்கிற்
கழல்கட் கூகையொடு கடும்பாம்பு தூங்கப்
பெருமுலை யலைக்குங் காதிற் பிணர்மோட்
டுருகெழு செலவி னஞ்சுவரு பேய்மகள்
குருதி யாடிய கூருகிர்க் கொடுவிரற்
கண்டொட் டுண்ட கழிமுடைக் கருந்தலை
யொண்டொடித் தடக்கையி னேந்தி வெருவர
வென்றடு விறற்களம் பாடித்தோள் பெயரா
நிணந்தின் வாய டுணங்கை தூங்க.

திருமுருக. 47—56.

கட்டிய கண்ணியை அணிந்திருக்கின்றான். அவன் மார்பு சந்தனச் சாந்து பூசப்பெற்று ஒளியுடன் திகழ்கின்றது. கொடுந் தொழிலையுடைய வில்லினால் கொல்லும் கானவர் மூங்கிலில் விளைந்த தேறலைச் சிறுகுடிமக்களுடன் மகிழ்ந்து மாந்திச் சிறு பறைக்கேற்பக் குரவை அயர்கின்றனர். அவர்கள் அருகில் மயிலைப்போன்ற மடநடை மகளிர் காணப் படுகின்றனர். அம்மகளிர் சுனை பூத்த வண்டுபடு பூக்களினா லாய கண்ணி அணிந்துள்ளனர். அப்பூக்கள் அவரின் விரல் களின் அலைப்பாலே வேறுபடுகின்ற நாற்றத்தை உடையன. அவர்கள் கூந்தல் கோதையோடு விளங்குகின்றது. பெருந் தழையைச் சிறந்த மேகலை விளங்கும் அல்குல் திளைக்க உடுத் திருக்கின்றார்கள். அத்தழை கஞ்சங் குல்லையினையும், இலையை யுடைய நறிய பூங்கொத்துக்களையும், மராத்திடத்தன வாகிய வெள்ளிய கொத்துக்களையும் நடுவே வைத்துச் சுரும்பு தேனை உண்ணும்படி தொடுக்கப்பட்டது ; பெருமையும் குளிர்ச்சியும் பொருந்தியது. செய்யன் சிவந்த ஆடையை உடுத்துள்ளான். அவன் காதிலே அசோகின் குளிர்மை பொருந்திய தளிர் அசைகின்றது. அவன் கச்சினையும் கழலினையும் அணிந்திருக்கின்றான். அவன் வெட்சிக் கண்ணியன் ; குழலை ஊதுகின்றான் ; கோட்டையும் பல்லியத் தையும் இயம்புகின்றான். கிடாயைப் பின்னிட்டு மயில் ஏறுபவன் அவன் ; தொடியணி தோளன் ; வீணையின் ஓசை ஒத்த மிடற்றையுடைய மகளிர் அவனைச் சூழ்ந்து நிற்கின்றனர். அவன் இடையிலே இறுகக் கட்டிய அரைக் கச்சையின்மேலே நறிய குளிர்ந்த மென்மையான துகிலை நிலத்தைப் பொருந்தும்படி உடுத்தியுள்ளான். மென்மை யான தோள்களை உடைய மயிலெனப் பயிலும் மகளிரோடு குன்றுகளில் அவன் கூத்தாடுகின்றான்.''[25]

---

25. பைங்கொடி நறைக்கா யிடையிடுபு வேல
னம்பொதிப் புட்டில் விரைஇக் குளவியொடு
வெண்கூ தாளந் தொடுத்த கண்ணிய
னறுஞ்சாந் தணிந்த கேழ்கிளர் மார்பிற்
கொடுந்தொழில் வல்விற் கொலைஇய கானவர்

திருமுருகாற்றுப்படையின் இறுதிப் பகுதியில் முருகன் உவப்பவற்றைச் செய்யும் குறமகளுடைய பண்புகளும் வினைகளும் கூறப்படுகின்றன; "குறமகள் இறுதியாக உருகெழு வியனகரை அழகு செய்து கோழிக் கொடியை நிறுத்தி முருகனை நெய்யோடு ஐயவி அப்பி ஐதுரைத்து வழிபடுகின்றாள். அவள் கொழுமலர் சிதறி முரண்கொள் உருவின் இரண்டு உடையை உடனுடுத்திருக்கின்றாள்; வெண்பொரியைச் சிதறுகின்றாள்; வலிமை நிலை பெற்றுள்ள பெரிய

---

நீடமை விளைந்த தேக்கட் டேறற்
குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து
தொண்டகச் சிறுபறைக் குரவை யயர
விரலுளர்ப் பவழிந்த வேறுபடு நறுங்காற்
குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி
யிணைத்த கோதை யணைத்த கூந்தன்
முடித்த குல்லை யிலையுடை நறும்பூச்
செங்கான் மராஅத்த வாலிண ரிடையிடுபு
சுரும்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை
திருந்துகா ழல்கு றிளைப்ப வுடீஇ
மயில்கண் டன்ன மடநடை மகளிரொடு
செய்யன் சிவந்த வாடையன் செவ்வரைச்
செயலைத் தண்டளிர் துயல்வருங் காதினன்
கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்
குழலன் கோட்டன் குறும்பல் லியத்தன்
தகரன் மஞ்ஞையன் புகரில் சேவலங்
கொடிய னெடியன் றொடியணி தோள
னரம்பார்த் தன்ன வின்குரற் றொகுதியொடு
குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயன்
மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன்
முழவுறழ் தடக்கையி னியல வேந்தி
மென்றோட் பல்பிணை தழீஇத் தலைத்தந்து
குன்றுதொ றாடலு நின்றதன் பண்பே.

திருமுருகு. 190—217.

கால்களையுடைய கிடாயினது உதிரத்தோடே கலந்த வெள்ளரிசியைப் பலியாகத் தூவுகின்றாள்; பல சிறிய பலிகளையும் அவள் படைக்கின்றாள். மஞ்சளைச் சந்தனம் முதலியவற்றோடு கலந்து தெளிக்கின்றாள்; குளிர்ந்த செவ்வலரி மாலைகளை ஒரே அளவாக அறுத்துத்தூங்க விடுகின்றாள்; நளிமலைச் சிலம்பின் நன்னகர் வாழ்த்தி நறும் புகை எடுத்துக் குறிஞ்சி பாடுகின்றாள்.''[26]

**முருகனும் ஆரியக் கடவுளான கார்த்திகேயனும்**

திருமுருகாற்றுப்படையில் 'திருச்சீரலைவாய்' என்ற பகுதியில் ஆறு முகங்களும் பன்னிரண்டு கைகளும் உடைய முருகனின் திருவுருவம் கூறப்படுகின்றது. இவனே சிவனின் மகனும் போர்க்கடவுளுமான ஆரியக் கற்பனையிலெழுந்த கார்த்திகேயன். அந்த ஆறு முகங்களின் வினைகளையும் திருமுருகாற்றுப்படை பின்வருமாறு கூறுகின்றது. ''அவனுடைய ஒளி பொருந்திய முகங்கள் தவம் இயற்றும் அன்பர்களுடைய உள்ளங்களில் குடிகொண்டிருப்பன. அவற்றுள் ஒரு முகம் தன்னுடைய எண்ணற்ற கதிர்

---

26. ஆண்டலைக் கொடியொடு மண்ணி யமைவர
நெய்யோ டையவி யப்பி யைதுரைத்துக்
குடந்தம் பட்டுக் கொழுமலர் சிதறி
முரண்கொ ளுருவி னிரண்டுட னுடீஇச்
செந்நூல் யாத்து வெண்பொரி சிதறி
மதவலி நிலைஇய மாத்தாட் கொழுவிடைக்
குருதியொடு விரைஇய தூவெள் ளரிசி
சில்பலிச் செய்து பல்பிரப் பிரீஇச்
சிறுபசு மஞ்சளொடு நறுவிரை தெளித்துப்
பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை
துணையற வறுத்துத் தூங்கநாற்றி
நளிமலைச் சிலம்பி னன்னகர் வாழ்த்தி
நறும்புகை யெடுத்துக் குறிஞ்சி பாடி.
திருமுருகு. 227–239.

களினுல் உலகத்தைச் சூழ்ந்திருக்கும் அடர்ந்த இருளை அகற்றுகின்றது. ஒருமுகம் தன்மேல் அன்பு செய்தவர் துதிக்கக் காதலினுவந்து வரங் கொடுக்கின்றது. மூன்ருவது முகம் மந்திரத்தை உடைய வேதங்களிற் கூறப்பட்ட விதிகள் பிறழாது நடக்கும் அந்தணரின் யாகங்களில் தீங்கு வராதபடி நினையா நிற்கும். நான்காவது முகம் எஞ்சிய பொருட்களை ஏமுற நாடித் திங்கள்போலத் திசை விளக்கும். ஐந்தாவது முகம் தன் நடுவுநிலைமையைக் கெடுத்து வைரங்கொண்ட திருவுள்ளத்தோடே பகைவர் களைக் கொன்று வெற்றியைக் களத்திலே கொண்டாடும். ஆருவது திருமுகம் குறவர் மடமகளும் கொடிபோல் நுசுப் பினளுமாகிய வள்ளியோடு நகை அமர்ந்தாடும்.''[27]

அடுத்து, அவனுடைய பன்னிரு கைகளும் பாற்பட இயற்றும் வினைகள் கூறப்படுகின்றன. ஒரு கை ஆகாயத்தின் கண் செல்லும் முறைமையை உடையோருக்காக உயர்த்தப் பட்டிருக்கின்றது. ஒரு கை இடுப்பிலே அமைந்து விளங்கு கின்றது. இன்னெரு கை குலிசத்தைச் செலுத்துகின்றது. நான்காவது கை நலம்பெறு கலிங்கத்திஞல் மூடப்பட்டு

---

27. மாயிருண் ஞால மறுவின்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன் ருெருமுக மொருமுக
மார்வல ரேத்த வமர்ந்தினி தொழுகிக்
காதலி னுவந்து வரங்கொடுத் தன்றே யொருமுக
மந்திர விதியின் மரபுளி வழாஅ
வந்தணர் வேள்வியோர்க் கும்மே யொருமுக
மெஞ்சிய பொருள்களை யேமுற நாடித்
திங்கள் போலத் திசைவிளக்கும்மே யொருமுகஞ்
செறுநர்த் தேய்த்துச் செல்சம முருக்கிக்
கறுவுகொ ணெஞ்சமொடு களம்வேட்டன்றே
[யொருமுகங்
குறவர் மடமகள் கொடிபோ னுசிப்பின்
மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே.
திருமுருகு. 91-102.

விளங்கும் தொடையின்மீது கிடக்கின்றது. இரு கைகள் வட்டத்தையும் வேலையும் செலுத்துகின்றன. ஒரு கை மார்போடு விளங்குகின்றது. ஒரு கை தாரோடு பொலி கின்றது. இன்னொரு கை வளைகள் கலகலப்பப் போர் வினைக்கு வேண்டிய குறிப்பைச் செய்கின்றது. ஒரு கை மணி இரட்டி ஒலிக்கும்படி அதனை அலைக்கின்றது. ஒரு கை நீலநிறமான வானத்திலிருந்து மழை பொழியச் செய்கின்றது. பன்னிரண் டாவது கை வானத்து மகளிர்க்கு வதுவை சூட்டுகின்றது. பன்னிரு கைகள் இயற்றுகின்ற வினைகளும் ஆறுமுகங்க ளுடைய வினைகளுக்கேற்ப அமைந்துள்ளன."[28]

மேற்கண்ட உருவ அமைதி ஆரியக் கடவுளான கார்த்தி கேயனுடையது. திராவிடரின் கடவுளான முருகனுக்கும் பார்ப்பனருக்கும் யாகங்களுக்கும் ஒரு வகையான தொடர்பும் இல்லை. ஆனல் மேற்கூறப்பட்ட திருமுருகாற் றுப்படைப் பகுதியில் அவன் பார்ப்பனர் பாதுகாவலனுகக் கூறப்படுகின்ருன். வள்ளியும் அவன் மனைவியாகக் கூறப்படு கின்ருள்.

---

28. விண்செலன் மரபி னையர்க் கேந்திய
தொருகை யுக்கஞ் சேர்த்திய தொருகை
நலம்பெறு கலங்கத்துக் குறங்கின்மிசை யசைஇய
தொருகை
யங்குசங் கடாவ வொருகை யிருகை
யையிரு வட்டமொ டெஃகுவலந் திரிப்ப வொருகை
மார்பொடு விளங்க வொருகை
தாரொடு பொலிய வொருகை
கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப
[வொருகை
பாடின் படுமணி யிரட்ட வொருகை
நீனிற விசும்பின் மலிதுளி பொழிய வொருகை
வானர மகளிர்க்கு வதுவை சூட்ட
வாங்கப், பன்னிரு கையும் பாற்பட வியற்றி.
திருமுருகு. 107—118.

திருவாவினன்குடி என்ற பகுதியில் அவன் விட்டுணு, சிவன், இந்திரன் முதலியோரைக் கொண்ட ஒரு தேவர் குழாத்தை வரவேற்கின்றான். அத் தேவர் குழாம் "தாமரை பயந்த தாவில் ஊழி நான்முக ஒருவற்காக" வணங்கு கின்றது.[29] திருவேரகம் என்ற பகுதியில் இருமூன்றியல்பினின் வழாது[30] ஆறு எழுத்தைப் பயில்கின்ற இரு பிறப்பாளரைப் பற்றிக்[31] கூறப்படுகின்றது. இத்திருவேரகத்தில் முருகன் விரும்பி உறைகின்றான். இப்பாட்டுப்பகுதியிலும் ஆரியக் கருத்துக்கள் காணப்படுகின்றன.

திருமுருகாற்றுப்படையின் இறுதிப் பகுதியிலும் முருகன் ஆரியக் கடவுளான சுப்பிரமணியனோடு தொடர்புபடுத்திக் கூறப்படுகின்றான். அவன் ஆலமர்ந்த கடவுளின் மகன்;[32] வானோர் தானைத் தலைவன்;[33] அந்தணர் வெறுக்கை;[34] மங்கையர் கணவன்;[35] மதவலி என்ற பெயரை உடையவன்.[36] அவனுடைய கொடி மயிலாகும்.[37] திராவிடக் கடவுளான முருகன் மலைநிலத்துத் தெய்வம்; கொற்றவையின் மகன்; சேவற் கொடியோன். மேற் கூறிய பகுதிகளில் அவன் உமையின் மகனும் மயிற்கொடியோனுமாகிய கார்த்திகேயனுடன் ஒன்று படுத்தப்படுகின்றான்.

---

29. தாமரை பயந்த தாவி லூழி
நான்முக வொருவற் சுட்டிக் காண்வர.
திருமுருகு. 164—165.

30. அடி 177.

31. அடி 182.

32. அடி 256.

33. அடி 260.

34. அடி 263.

35. அடி 264.

36. அடி 275.

37. அடி 122.

தமிழ் மக்கள் முருகனை மலைத் தெய்வமாகக் கண்டார்கள். ஆரியர் உருத்திரனை மலைத் தெய்வமாகக் கண்டனர். தைத்திரிய ஆரண்யகத்திற் சுப்பிரமணியன் என்ற பெயர் காணப்படுகின்றது.[38] எனினும் வேதசங்கிதை காலத்தில் அவனுடைய வழிபாடு வழக்கில் இருந்ததாகத் தெரியவில்லை. தைத்திரிய ஆரண்யகத்தில் அக்கினியும் வாயுவும் சுப்பிரமணியன் என்ற பெயர் கொண்ட இந்திரன் மெய்க்காப்பாளர் எனப்படுகின்றனர். இதிகாசங்களிற் கார்த்திகேயன் அல்லது சுப்பிரமணியனுடைய பிறப்பைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. அந்நூல்களில் அவன் சிவன் அல்லது அக்கினியின் மகன். எனவே வடநாட்டிற் சுப்பிரமணிய வழிபாடு உருத்திர வழிபாட்டிலிருந்து தோன்றி இருக்கலாம் எனத் தோன்றுகின்றது. தமிழ்நாட்டிலே சிவ வழிபாடு பெருவழக்குப் பெற முருக வழிபாடு குறைவதாயிற்று. முருகனுடைய இடத்தை ஆரியக்கடவுளாகிய கந்தன் கொண்டனன். பத்துப்பாட்டு எழுந்த காலத்திலே முருகனே மக்களின் தெய்வமாக இருந்தனன். அவன் வழிபாடு பெருவழக்குற்றிருந்தது. அக்காலப் பகுதிக்குப் பின்னர் சிவன் திருமால் ஆகிய இருகடவுளருடைய வழிபாடும் சிறப்புற்றது.

## (2) கொற்றவை

இவள் திராவிடரின் வெற்றித் தெய்வம். இவள் முருகனுடைய தாய் என்று கூறப்படுவதை முன்னே குறித்துள்ளோம்.[39] இவளுடைய வழிபாட்டைச் சித்திரிக்கும் நூற்பகுதிகளிலிருந்து இவள் வழிபாடு வெறியாட்டுடன் நடைபெற்றது என்று அறிகின்றோம். நெடுநல்வாடையிற் போருக்குத் தலைவனைச் செலவு விடுத்த தலைவியின் தோழிமார் தலைவன் வெற்றியுடன் மீள வேண்டுமென்று வெற்றித் தெய்வத்தை வணங்குகிறார்கள். வணக்கத்தைப் பெறும்

---

38. *Prasna I, Anuvaka 12, V 58.*

39. இவ்வியலின் 20-ம் அடிக் குறிப்புரையைப் பார்க்க.

அவ்வெற்றித் தெய்வம் கொற்றவையாகும்.[40] கொற்றவைக்குப் பலி கொடுத்து வாழ்த்துதலைக் கொற்றவை நிலையெனக் குறிக்கின்றது தொல்காப்பியம்.[41]

அயிரைமலையிலுள்ள கொற்றவை சேரரால் வழிபட்ப் பெற்றமையைப் பதிற்றுப்பத்தால் அறியலாம்.[42] அயிரை மலையில் வாழும் அச்சம் தருகின்ற முறைமையையுடைய கொற்றவையைப்பற்றிப் பதிற்றுப்பத்து 79-ம் பாட்டுக் குறிப்பிடுகின்றது.[43] பிளப்பையும் குகைகளையும் உடைய மலைப் பக்கத்திலுள்ள வெற்றி பொருந்திய கொற்றவைக்குப் பலிக்கடன் கழித்தலைப் பற்றிக் குறுந்தொகை கூறுகின்றது.[44] பிரிந்த தலைவர் மீண்டு வந்து சேர்ந்து பின் பிரியாது உறைய வேண்டுமென்று கொற்றவையை வழிபடுதல் இப்பாட்டில் குறிக்கப்படுகின்றது. பிற் காலத்திற் கொற்றவையைத் துர்க்கையோடு மாறுபட வழங்கினர்.

## (3) சிவன்

சிவன் ஒரு நிலத்திற்குமுரிய தெய்வமாகக் கருதப் படாமையை மேலே நோக்கினோம். ஏழாம் எட்டாம் நூற்றாண்டிற் சைவநாயன்மாரும் வைணவ ஆழ்வாரும் தொடக்கிய சமயமறுமலர்ச்சியின் பயனாகவே சிவன் சிறப்புற்ற தெய்வமாகத் திகழ்ந்தான். பத்துப்பாட்டில் நான்கு இடங்களிற் சிவனைப் பற்றிய குறிப்புகளைக் காண்கின்றோம். இந்த நான்கு இடங்களிற்கூட 'சிவன்' என்ற பெயர் வழங்கப்படவில்லை. மதுரைக் காஞ்சி ஐம்பூதங்களைப் படைத்

40. நெடுநல்வாடை. அடி 168. நச்சினார்க்கினியர் உரை.

41. தொல். பொருள். 56.

42. உருகெழு மரபி னயிரை பரவியும். பதிற். 90 : 19.

43. ..........................அஞ்சுவரு மரபிற்
கடவு ளயிரையி னிலைஇ· பதிற். 79 : 17—18.

44. விடர்முகை யடுக்கத்து விறல்கெழு சூலிக்குக்
கடனும் பூணும். குறுந். 218 : 1—2.

தவன் என்றும், மழுவினை உடையவன் என்றும் குறிக்கின்றது.[45] நஞ்சை உணவாகவும் நவிரத்தை உறைவிடமாகவும் உடையவனென மலைபடுகடாம் பாடுகின்றது.[46] அந்நூல்களுக்குப் பின்னர் எழுந்த திருமுருகாற்றுப்படை சிவனைப் பின்வருமாறு சித்திரிக்கும்: "வெற்றிக்களத்திலே உயர்த்திய இடபக் கொடியை அவன் கொண்டிருக்கிறான். அவன் உடம்பின் ஒரு பாகத்தில் உமையாள் உறைகின்றாள். அவன் பலர் புகழும் திண்ணிய தோள்களை உடையவன். இமையாத முக்கண்களை உடையவன். மூவெயில் முருக்கிய முரண்மிகு செல்வன்."[47] இதே பாட்டின் இன்னொரு பகுதியில் அவன் 'ஆல் கெழு கடவுள்' எனப்படுகினறான்.[48]

எட்டுத்தொகை நூல்களிலேயும் சிவனைப் பற்றிய செய்தியை இடையிடையே காண்கின்றோம். மூவெயில் எரித்தமை, நீலகண்டம், தலையிலே உள்ள திங்கள், நெற்றிக் கண் ஆகியவற்றின் குறிப்புகளைச் சில புறப்பாட்டுகளிற் காணலாம். முக்கண்களையுடைய சிவனது கோயில் புறநானூற்று ஆறும் பாட்டிற் கூறப்படுகின்றது.[49] பிறை சேர்ந்த நெற்றியிலே விளங்கும் கண்ணைப்பற்றி அந்நூல்

---

45. நீரு நிலனுந் தீயும் வளியு
மாக விசும்போ டைந்துட னியற்றிய
மழுவா ணெடியோன். மதுரை. 453—455.

46. பேரிசை நவிர மேஎ யுறையுங்
காரி யுண்டிக் கடவுள். மலைபடு. 82—83.

47. ..................................வெள்ளேறு
வலவயி னுயரிய பலர்புகழ் திணிதோ
ளுமையமர்ந்து விளங்கு மிமையா முக்கண்
மூவெயில் முருக்கிய முரண்மிகு செல்வன்.
திருமுருகு. 151-154.

48. ஆல்கெழு கடவுள். திருமுருகு. 256.

49. முக்கட் செல்வர் நகர். புறநா. 6 : 18.

55-ம் பாட்டுப் பாடுகின்றது.[50] நீலமணி போன்ற கரிய மிடற்றையும், நீண்ட சடையினையும் அந்நூல் வேறிடங் களிற் குறிப்பிடுகின்றது.[51] நற்றிணையிலே சிவனைப் பற்றிய குறிப்பு ஒன்றும் இல்லை. நானூறு பாக்களைப் டாடிய நூற்றெழுபத்தைந்து புலவரும் சிவனைப் பற்றித் தாம் அறிந் திருந்தமைக்குச் சான்றாக ஒரு செய்தியையும் தரவில்லை. இவ் வேதுக்களாற் சங்க காலத்திலே சிவவழிபாடு அவ்வளவு செல் வாக்குப் பெற்றிருக்கவில்லை எனக் கொள்ளலாம்.

## (4) விட்டுணுவும் கண்ணனும்

வேதங்கள் எவ்வளவு பழமை வாய்ந்தனவோ அவ்வளவு பழமை வாய்ந்தது விட்டுணு வழிபாடும். வைணவருடைய தத்துவ அமைதியில் இரண்டு வளர்ச்சிகளைக் குறிப்பிடலாம். ஒன்று வேதங்களில் காணப்படுவது; மற்றது புராணங்களிற் காணப்படுவது. வேதங்களில் விட்டுணு சூரியனோடு தொடர்புள்ள ஒரு தெய்வம். அவன் இந்திரன் நண்பனும் ஆவான். புராணங்கள் தோன்றிய காலத்தில் ஐம்பூதங்களைக் குறித்து எழுந்த தெய்வங்களின் சிறப்புக் குறையத் தொடங்கியது; அவற்றின் இடத்தை மும்மூர்த்திகள் பெற் றுக்கொண்டன. அம் மும்மூர்த்திகள் பிரமா, விட்டுணு, சிவன் என்ற பரமான்மாவின் மூன்று வேறுபட்ட அமைதி கள். இம்மும்மூர்த்திகளைச் சிறப்பித்துப் பார்ப்பனரால் பதினெட்டுப் புராணங்கள் பாடப்பட்டன. இப்புராணங் களில் இம்மும்மூர்த்திகளைப்பற்றிய கதைகளையும், மந்திரம், பலி, விழா முதலியன எடுத்து வழிபட வேண்டிய முறைகளை யும் காணலாம்.

இதிகாசங்களிற் கண்ணன் விட்டுணுவின் ஒரு அவதார மாகவும் ஒரு போர்வீரனாகவும் காட்சியளிக்கின்றான். அவனை

---

50. பிறைநுதல் விளங்கு மொருகண். புறநா 55 : 5.

51. பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி
நீல மணிமிடற் றொருவன். புறநா 91 : 5—6.
நன்றாய்ந்த நீணிமிர்சடை
முதுமுதல்வன். புறநா. 166 : 1—2.

ஒரு பெருந்தெய்வமாக அக்காலத்தில் மக்கள் கருதவில்லை. ஆரியர் திராவிடரிடமிருந்தே கண்ணன் வழிபாட்டைப் பெற்றிருத்தல் வேண்டும். கண்ணன் உண்மையில் ஓரிடத்தில் நிலையாக இருந்து வாழ்ந்த இடையர் குலத் தெய்வமே. ஆரியர் பொருளாதாரத்தில் இடையராக இருந்தபோதும் அவர்கள் நாடோடிகளே. மேலும், கண்ணன் கருமை நிறம் வாய்ந்த தெய்வமாக இருப்பதும் அவன் திராவிடத் தெய்வம் என்று கொள்வதற்கு அறிகுறியாய் அமையும் எனலாம். கருமை நிற மனிதர் என்று பழைய காலத்திலே ஆரியர் திராவிடரைக் குறித்தனர்.

தென்னாட்டிற்குரிய முல்லை நிலத் தெய்வமான மாயோனே விட்டுணுவாகவும் கண்ணனாகவும் காட்சியளிக்கின்றான். மிகவும் பழைய நூல்களில் விட்டுணு என்ற பெயர் வழங்கப்படவில்லை. மால், மாயோன் என்ற பெயர்களே வழக்கிலிருந்தன. மால் என்பதற்குப் பெரியோன் என்றும், மாயோன் என்பதற்குக் கரியவன் என்றும் கருத்துக் கூறலாம். முல்லைப் பாட்டின் மூன்றாம் அடியில் 'மால்' என்ற சொல்லும், மதுரைக் காஞ்சியில் ஐந்நூற்றுத் தொண்ணூற்றோராம் அடியில் 'மாயோன்' என்னும் சொல்லும் வருகின்றன. மற்ற நூல்களிற் பல இடங்களில் இப்பெயர் காணப்படவில்லை. எனினும் கூறப்படும் பண்புகளைக் கொண்டு அவ்விடங்களிற் குறிக்கப்படும் தெய்வம் திருமால் என அறிந்துகொள்ளலாம்.

திருமால், கழுவப்பட்ட அழகிய நீலமணி போன்ற திருமேனியையும் வானுற வோங்கிய கருடக்கொடியையும் உடையவன்;[52] ஆழியை ஏந்தியிருப்பவன்.[53] திருமால் தன்னுடைய கைகளிலே சங்கையும் சக்கரத்தையும் தாங்கி

---

52. மண்ணுறு திருமணி புரையு மேனி
விண்ணுயர் புட்கொடி விறல்வெய் யோன்.
புறநா. 56 : 5—6.

53. நீனிற வுருவி னேமி யோன். புறநா. 58 : 15.

யிருக்கிருன் என்றும், தனது மார்பிடத்தே திருமகளை வைத்திருக்கிருன் என்றும், மாவலி வார்த்த நீர் தனது கையிலே சென்றதாக உயர்ந்தவன் என்றும் முல்லைப்பாட்டு பாடுகின்றது.[54] ஆலிலையின் மேல் மேவிய திருமால் எனப் புறநானூறு கூறும்.[55] மாயோனைப் போன்ற உயர்ந்த மலைச் சாரலைப் பற்றி நற்றிணை கூறும்.[56] வண்டு ஆரவாரிக்கும் மாலையையுடைய திருமகள் தாங்கியிருக்கும் மார்பிலே, கண்ணை வெறியோடச் செய்யும் சக்கரப்படையையும், நறுமணம் வீசும் பூங்கொத்துக்களையுடைய துளவ மாலையையும் அணிந்த திருமாலினது திருவடிகளை மக்கள் புகழ்ந்து வணங்குவர்.[57]

வடக்கின் கண்ணதாகிய நீர்வளம் அருத யமுனை யாற்றின் நெடிய மணலையுடைய அகன்ற துறையில் நீராடிய ஆயர் மகளிர், குளிர்ச்சி பொருந்திய தழையை உடுத்துக் கொள்ளும் பொருட்டுத் திருமால் குருந்த மரத்தை வளைத்தான்.[58] பிறரை வருத்தும் அச்சத்தினையுடைய அசுரர் கூட்டம் தேவருடன் பொருதபொழுது, பகலும் இராப்

---

54. நனந்தலை யுலகம் வளைஇ நேமியொடு
வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
நீர்செல நிமிர்ந்த மாஅல். முல்லை. 1—3.

55. ஆலமர் கடவுள். புறநா. 198 : 9.

56. மாயோ னன்ன மால்வரைக் கவாஅன்.
நற். 32 : 1.

57. வண்டுது பொலிதார்த் திருஞெம ரகலத்துக்
கண்பொரு திகிரிக் கமழ்குரற் றுழாஅய்
அலங்கற் செல்வன். பதிற். 31 : 7—9.

58. வடாஅது
வண்புனற் றொழுநை வார்மண லகன்றுறை
யண்டர் மகளிர் தண்டழை யுடீஇயர்
மரஞ் செல மிதித்த மாஅல் போல.
அகநா. 51 : 3—6.

போல இருக்கத் தாம் போர்செய்தற்பொருட்டு அசுரர் ஞாயிற்றைக் கரந்தனர். அப்பொழுது இருளானது உலகத்தாரது கண்ணை மறைத்தது. இத்துன்பம் நீங்கும் பொருட்டு அஞ்சனம் போலும் நிறம் வாய்ந்த திருமேனியையுடைய மால் அந்த ஞாயிற்றைக் கொண்டுவந்து இவ்வுலகின்கண் அந்தகாரம் நீங்கும்வண்ணம் ஆகாயத்தின்கண்ணே நிறுத்தினன்.[59]

அரவணையிலே துயிலும் திருமாலைப்பற்றி முதன் முதற் கூறும் நூல் பெரும்பாணாற்றுப்படையாகும். நீண்ட பூங்கொத்துக்கள் செறிந்த காந்தளையுடைய அழகிய பக்க மலையிலே யானை படுத்திருந்தாற்போலப் பாம்பணையாகிய படுக்கையில் அவன் துயில்கொண்டான். இவ்வாறு அவன் பள்ளியமர்ந்தது திருவெஃகா என்னும் திருப்பதியிலாகும்.[60] நான்முகத்தையுடைய ஒருவனைப் பெற்ற நீலநிறத்தையுடைய திருமால் எனவும் அந்நூல் திருமாலைக் குறிக்கின்றது.[61] பெரிய நிலத்தை அளந்தவன்; திருவாகிய

---

59. அணங்குடை யவுணர் கணங்கொண் டொளித் [தெனச்
சேண்விளங்கு சிறப்பின் ஞாயிறு காணா
திருள்கண் கெடுத்த பருதி ஞாலத்
திடும்பைகொள் பருவர றீரக் கடுந்திறல்
அஞ்சன வுருவன் றந்து நிறுத்தாங்கு.
புறநா. 174 : 1-5.

60. நீடுகுலைக்
காந்தளஞ் சிலம்பிற் களிறுபடிந் தாங்குப்
பாம்பணைப் பள்ளி யமர்ந்தோன்.
பெரும்பாண். 371—373.

61. நீனிற வுருவின் நெடியோன்கொப்பூழ்
நான்முக னொருவற் பயந்த.
பெரும்பாண். 402—403.

மறுவை அணிந்த மார்பினை உடையவன், கடல்போன்ற நிறத்தையுடையவன் என்று இன்னோரிடத்தில் பாடுகின்றது.[62]

சில இடங்களில் ஒரு பயங்கரமான தெய்வமாகத் திருமாலைக் காண்கின்றோம். இன்னும் சில இடங்களில் நன்மை பயக்கும் கடவுளாக அவன் காட்சியளிக்கின்றான். மதுரைக் காஞ்சியில் அவன் மாநிலத்தின் காவலனாக விளங்குகின்றான். ஆண்கள் தம் மனைவி மக்களுடன் நின்று, மலரும் தூபமும் கொண்டு அவனை வணங்குவர். ஒளிபொருந்திய பேரணிகலங்களையுடைய அழகிய இளம் பெண்கள் தம் கணவரோடும், தாது மிகுந்த தாமரையையொத்த முகங்களையுடைய குழந்தைகளோடும் சென்று, காக்கும் கடவுளாகிய திருமாலைப் பூவும் புகையும் கொண்டு வணங்குவர்.[63] அவுணர் கூட்டத்தை வென்றவனும், பொன்னாற் செய்த மாலையையுடையவனுமாகிய திருமால் பிறந்த ஓணமாகிய நன்னாளில் ஊரிலுள்ளோர் விழாவெடுப்பர்.[64]

## (5) இந்திரன்

தொல்காப்பியத்தின்படி இந்திரன் ஆற்றங்கரைகளிற் பரந்து கிடக்கும் மருதநிலத்தின் கடவுளாவான். ஆனால்

---

62. இருநிலங் கடந்த திருமறு மார்பின்
முந்நீர் வண்ணன். பெரும்பாண். 29-30.

63. திண்கதிர் மதாணி யொண்குறு மாக்களை
யோம்பினர்த் தழீஇத் தாம்புணர்ந்து முயங்கித்
தாதணி தாமரைப் போதுபிடித் தாங்குத்
தாமு மவரு மோராங்கு விளங்கக்
காமர் கவினிய பேரிளம் பெண்டிர்
பூவினர் புகையினர் தொழுவனர் பழிச்சி.
மதுரை. 461—463.

64. கணங்கொ ளவுணர்க் கடந்த பொலந்தார்
மாயோன் மேய வோண நன்னாள்.
மதுரை. 590—591.

பத்துப்பாட்டு எட்டுத்தொகை நூல்களில் அவனைப் பற்றிய செய்திகள் இரண்டொரு இடங்களிலேயே காணப்படும். பத்துப்பாட்டில் இந்திரன் என்ற சொல் ஓரிடத்திலே தான் வருகின்றது. மற்றப் பாட்டுகளிலும் காலத்தாற் பிந்தியதென்று முன்னே காட்டிய திருமுருகாற்றுப்படையிலேயே இக்குறிப்பு உண்டு. அது பின்வருமாறு: "ஆயிரம் கண்களை உடையவனும், நூறு வேள்விகளை நடத்தியவனுமாகிய 'திருக்கிளர் செல்வ'னான இந்திரன் தன் பகைவரை வெற்றி கொண்டான். அவன் யானையின் பிடரியின் மேல் ஏறி வருபவன். அந்த யானை அசைந்த சிறந்த நடையை உடையது; நான்கு தந்தங்களை உடையது. அதன் தும்பிக்கை நிலம் வரைக்கும் தாழும் தகையது."[65]

எட்டுத்தொகை நூல்களிற்கூட இந்திரனைப் பற்றிய குறிப்புகள் மிகச்சில இடங்களிலேயே காணப்படுகின்றன. ஒள்ளிய தொடியினையும், வச்சிராயுதத்தையும் உடைய இந்திரனுக்குக் கோயில் கட்டி எழுப்பினர்;[66] விழாவும் எடுத்தனர்.[67] எனினும் சங்க காலத்தில் இந்திர வழிபாடு மக்களிடையே அவ்வளவு செல்வாக்குப் பெறவில்லை. சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய தொடர்நிலைச் செய்யுட்கள் எழுந்த காலத்திலேயே இந்திர வழிபாடு சிறப்புற்று விளங்கியது. அந்நூல்களில் அவனுடைய வழிபாட்டைப் பற்றியும், அவனுக்காக எழுந்த விழாக்களைப் பற்றியும்

---

65. நூற்றுப்பத் தடுக்கிய நாட்டத்து நூறுபல்
வேள்வி முற்றிய வென்றடு கொற்றத்
தீரிரண் டேந்திய மருப்பி னெழினடைத்
தாழ்பெருந் தடக்கை யுயர்த்த யானை
யெருத்த மேறிய திருக்கிளர் செல்வன்.
திருமுருகு. 155—159.

66. ஒண்டொடி
வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலுள்.
புறநா. 241 : 2—3.

67. இந்திர விழவிற் பூவி னன்ன. ஐங். 62 : 1.

பரக்கக் காணலாம். ஆறும் நூற்றாண்டுக்குப் பின் இந்திர வழிபாடு அறவே மறைந்து விடுகின்றது.

## (6) வருணன்

தொல்காப்பியத்தின்படி வருணன் கடல் சார்ந்த நெய்தல் நிலப் பகுதியின் கடவுளாவான். சங்க நூல்களில் அவனைப்பற்றிய செய்திகளில்லை. பட்டினப்பாலை மலர் மலைந்து பிழிமாந்திச் சினைச் சுறவின் கோட்டை நட்டு வணங்கும் புன்தலை இரும்பரதவரைப் பற்றிக் கூறும்.[68] இங்குக் கூறப் படும் 'சினைச் சுறவின் கோடு' திராவிடரின் கடற்றெய்வம்; வருணன் அல்ல.

## (7) இலக்குமி (திரு)

செல்வத்திற்குத் தலைவியான திருவைச் சங்க நூல்கள் பல இடங்களிற் குறிப்பிடுகின்றன. முல்லைப்பாட்டு மார்பிலே திருவைத் தாங்கும் மாயோனைப் பற்றிக்கூறும்.[69] இந்நூலிலே அவள் 'மா' என்ற பெயரைப் பெற்றுள்ளாள். அழகாகக் கட்டப்பட்ட வீடுகளில் திருவின் உருவம் தீட்டப் பட்டிருக்கும்.[70] நகரத்தின் காவல் தெய்வமாகவும் அவள் கருதப்பட்டாள்.[71] நன்னன் மார்பில் அவள் உறைபவளென மலைபடுகடாம் கூறும்.[72]

---

68. சினைச்சுறவின் கோடுநட்டு
மனைச்சேர்த்திய வல்லணங்கினான்
மடற்றாழை மலர்மலைந்தும்
பிணர்ப்பெண்ணைப் பிழிமாந்தியும்
புன்றலை யிரும்பரதவர். பட்டினப். 86—90.

69. மாதாங்கு தடக்கை
நீர்செல நிமிர்ந்த மாஅல். முல்லை. 2—3.

70. திருத்துஞ்சுந் திண்காப்பு. பட்டினப். 41.

71. திருநிலைஇய பெருமன்னெயில். பட்டினப். 291.

72. திருவார் மார்ப. மலைபடு. 356.

வீட்டுவாயில் நிலைகளில் திருமகளின் உருவம் தீட்டப்பட்டிருக்கும்.[73] திருமகளின் திருவுருவம் செதுக்கப்பட்ட மதிற் கதவுகளைப்பற்றி மதுரைக்காஞ்சி கூறுகின்றது.[74] இங்குத் தரப்பட்ட மேற்கோள்களால் 'திரு' என்பது செல்வத்தின் தெய்வத்தையே குறித்ததெனக் கண்டு கொள்ளலாம்.

## (8) மற்றைய தெய்வங்கள்

பிரமன் வழிபாடு சங்க காலத்தில் இருந்ததாகத் தெரியவில்லை. அவனைப்பற்றிக் கூறும் பகுதிகளிலிருந்து அவன் அவ்வளவு முக்கியமான தெய்வமாகக் கருதப்படவில்லையெனக் கொள்ளலாம். நான்முகன் கார்நிறக்கடவுளான விட்டுணுவின் உந்தியில் பிறந்தானெனப் பெரும்பாணாற்றுப் படை கூறும்.[75] பிரமதேவன் படைப்புக் கடவுள். அவன் படைப்பில் எத்தனையோ புதுமைகள் உண்டு. பல இன்பங்களும் துன்பங்களும் அப்படைப்பிற் கலந்திருக்கின்றன. இன்பத்துடன் துன்பத்தையும் கலந்து உலகத்தில் இன்னாமையை மிகுவிப்பதைக்கண்ட ஒரு புலவர், "படைத்தான் பண்பில்லா அந்நான்முகன்" என்று பிரமனுக்கு ஒரு பழி சூட்டுகின்றார்.[76]

---

73. ஓங்குநிலை வாயிற்
றிருநிலை பெற்ற தீதுதீர் சிறப்பு.
நெடுநல். 88—89.

74. தொல்வலி நிலைஇய வணங்குடை நெடுநிலை.
மதுரை. 353.

75. நீனிற வுருவி னெடியோன் கொப்பூழ்
நான்முக வொருவற் பயந்த.
பெரும்பாண். 402—403.

76. ஓரி னெய்தல் கறங்க வோரில்
ஈர்ந்தண் முழவின் பாணி ததும்பப்
புணர்ந்தோர் பூவணி அணியப் பிரிந்தோர்
பைத லுண்கண் பனிவார் புறைப்பப்
படைத்தோன் மன்றவப் பண்பி லாளன்.
புறநா. 194 : 1—5.

கண்ணனின் உடன்பிறந்தானாகிய பலராமன் கடற்சங்கு போன்ற நிறம் பொருந்தியவன்; நாஞ்சிற் படையையும், பனைக்கொடியையும் உடையவன்.[77] பால்போலும் நிறத்தை யுடைய பனைக்கொடியோன் எனப் புறநானூறு 58-ம் பாடல் கூறும்.[78]

சிறுதெய்வங்களை வழிபடும் வழக்கும் அக்காலத்தில் இருந்தது. மலையிலும், நீரிலும், மரங்களிலும் கடவுள் உறைவதாக மக்கள் நம்பினர். மலையைச் சிறப்பிக்குமிடத்து அணங்குடை நெடுங்கோடு, அணங்குசால் அடுக்கம், அருந்திறற் கடவுள் காக்கும் உயர்சிமையம் என்றிவ்வாறு புலவர் கூறுவர். தெய்வம் உறைந்த ஓர் ஆலமரம் 'கடவுள் ஆலம்' என வழங்கிற்று.[79] கள்ளி நிழலிலுள்ள தெய்வங் களைப் பாணர் தொழுவர்.[80] காட்டுக்குரிய ஒரு கடவுளைக் காடுறை கடவுள் எனக் குறிக்கின்றது பொருநராற்றுப் படை.[81] இக்கடவுளின் சிறப்புப் பண்புகளை நன்கு அறிய முடியவில்லை.

---

77. கடல்வளர் புரிவளை புரையு மேனி
அடல்வெந் நாஞ்சிற் பனைக்கொடி யோனும்.
புறநா. 56 : 3—4.

78. பானிற வுருவிற் பனைக்கொடி யோனும்.
புறநா. 58 : 14.

79. கடவு ளாலத்துத் தடவுச்சினைப் பல்பழம்.
புறநா. 199 : 1.

80. கள்ளி நீழற் கடவுள் வாழ்த்தி. புறநா. 260 : 5.

81. காடுறை கடவுள். பொருந. 52.

## ஏழாம் இயல்

# ஆரியர் நம்பிக்கைகளும் சமயச் சடங்குகளும் வழிபாட்டு முறைகளும்

சங்ககாலத் தமிழ் மக்கள் திராவிடக் கடவுளரைத் தாம் விரும்பியவாறு வழிபட்டு வந்தனரெனினும், யாகங்கள் செய்தல், பலியிடுதல் முதலியனவற்றைக் கொண்ட வைதிக வழிபாட்டு முறைகளையும் தென்னாட்டிற் சிறிது சிறிதாகக் கைக்கொள்ளத் தொடங்கினர். அந்தணர் அரசரின் நன்மதிப்பைப் பெற முயன்றனர். தமக்கே சிறப்பாக உரிய கடமைகளை உடையவராயினர். சங்ககால இறுதியில் அவர் சமூக வாழ்வில் ஒரு முக்கியமான இடத்தைப் பெறத் தொடங்கினர்.

## (1) அந்தணர்

அந்தணர் முனிவர் முதலியோரின் வாழ்க்கை முறை, பண்பு, கடமை முதலியவற்றைப் பற்றிய செய்திகள் சங்க நூல்களில் உண்டு. அவர் காலையிலே வேதம் ஓதுவர். அவர் எழுப்புகின்ற ஓசை தாதுண் தும்பி போதைச் சுற்றிச் செய்யும் ரீங்காரத்தை ஒத்திருக்கும்.[1] வேதங்களிற் கூறப் படும் சடங்குகளைத் தவறாது செய்து ஒழுகுவர்.[2] அந்தணர்

---

1. தாதுண் டும்பி போது முரன்றாங்
   கோத லந்தணர் வேதம் பாட. மதுரை. 655—656.

2. மந்திர விதியின் மரபுளி வழாஅ
   வந்தணர் வேள்வி யோர்க் கும்மே.
   திருமுருகு. 95—96.

வேதம் ஓதுவதையும், வேதச் சடங்குகளைச் செய்து கொள் வதையும் மதுரைக் காஞ்சி பின்வருமாறு குறிக்கின்றது: "அவர்கள் வேதங்களைப் பாடுவர். விழுமிய தலைமை வாய்ந்த யாகங்கள் முதலியவற்றைச் செய்வர்; நால்வகை நிலம் அமர்ந்த உலகத்தே தாம் ஒப்பற்றவராகத் திகழ்ந்து, உயர்ந்த நிலைமையை உடைய தேவருலகை இவ்வுலகிலே நின்று சேருவர்; தரும வழியிலிருந்து பிறழாதவர்; எல்லா உயிர்களிடத்தும் அன்பு பொருந்திய நெஞ்சு உடையவர்; பெருமையுடன் இனிதாக வாழ்பவர்."[3]

அந்தணர் வேதத்தை நன்கு பயின்றனர். அதனால் அவர்கள் அறத்தை விரும்பும் கோட்பாட்டினை உடைய நான்மறை முதல்வர் என்று சிறப்பிக்கப் பெறுவர்.[4] அறுவகைத் தொழிலைச் செய்து வந்தமையால் அறுதொழில் அந்தணர் எனவும் கூறப் பெறுவர்.[5] அந்திக் காலத்திலே செய்தற்குரிய கடனாகிய ஆவுதி செய்யும் முத்தீ வளர்ப்பர்.[6] நல்ல நூல்கள் பலவற்றைக் கேட்டு அறிவு நிரம்பி வேள்வி செய்வர். இதனால் பெறற்கரிய பொற்கலங்களை அவர்களுக்கு அரசர் நீரோடட்டிக் கொடுப்பர்.[7] பொருள் வேண்டி இரந்து

---

3. சிறந்த வேதம் விளங்கப் பாடி
விழுச்சீ ரெய்திய வொழுக்கமொடு புணர்ந்து
நிலமமர் வையத் தொருதா மாகி
யுயர்நிலை யுலக மிவணின் றெய்து
மறநெறி பிழையா வன்புடை நெஞ்சிற்
பெரியோர் மேஎ யினிதி னுறையுங்
குன்றுகுயின் றன்ன வந்தணர் பள்ளியும்.
மதுரை. 468—474.

4. அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்.
புறநா. 93 : 7.

5. அறுதொழி லந்தணர். புறநா. 397 : 20.

6. அந்தி யந்தண ரருங்கட னிறுக்கும்
முத்தீ விளக்கு. புறநா. 2 : 22—23.

7. கேள்வி முற்றிய வேள்வி யந்தணர்க்
கருங்கல நீரொடு சிதறி. புறநா. 361 : 4—5.

நின்ற பார்ப்பனர்க்கு அவருடைய நனைந்த கை நிறையும்படி பொற்காசும் பொற்பூவும் நீருடன் அட்டிக்கொடுப்பர் எனப் புறநானூறு கூறும்.[8]

அந்தணருக்குரிய ஆறு தொழிலையும், அவர் அணியும் முப்புரி நூலினையும், பேணும் முத்தீயையும் திருமுருகாற்றுப் படை விரிவாக எடுத்துக் கூறுகின்றது: "தமக்கென அமைந்த ஆறு தொழிலையும் தவறுது இயற்றும் இருபிறப் பாளர் திருவேரகத்தில் உள்ளனர். அவரின் தாய் தந்தையர் மரபு சிறப்புடையது. அவர் பழமையும் உயர்ச்சியும் வாய்ந்த குடிப்பிறந்தவர். நாற்பத்தெட்டு ஆண்டுகள் நிறைந்த நல்லிளமையை விதிமுறையில் கழித்தவர்; மறையைத் தவறுது ஓதுபவர்; முத்தீயை முறையொடு பேணிப் புகழ் பெறுபவர்; ஒன்பது இழைகளைக் கொண்ட முப்புரி நூலை அணிபவர்; குறித்த காலத்திலே வழிபடும் வாய்மையர்; தோய்த்த உடையை உடம்பிலே உலர அணிவர்; கைகளை முகிழ்த்துக் கடவுளை வணங்குவர்; அமைதியாக ஆறு எழுத்தை உச்சரிப்பர்."[9] "செம்மையாகிய பூவையுடைய

---

8. ஏற்ற பார்ப்பார்க் கீர்ங்கை நிறையப்
 பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்து.
 புறநா. 367 : 4—5.

9. இருமூன் றெய்திய வியல்பினின் வழாஅ
 திருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி
 யறுநான் கிரட்டி யிளமை நல்லியாண்
 டாறினிற் கழிப்பிய வறனவில் கொள்கை
 மூன்றுவகைக் குறித்த முத்தீச் செல்வத்
 திருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல
 வொன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்
 புலராக் காழகம் புலர வுடீஇ
 யுச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்
 தாறெழுத் தடக்கிய வருமறைக் கேள்வி
 நாவியன் மருங்கி னவிலப் பாடி.
 திருமுருகு. 177—187.

முருக்கின் நல்ல பட்டையை நீக்கிவிட்டு, அதன் தண்டோடு ஏந்திய தாழ்கின்ற கரகத்தையும், விரத உணவையுமுடைய பார்ப்பான்'' எனக் குறுந்தொகை கூறும்.[10]

அந்தணர் வாழ்கின்ற தெரு குற்றமற்றது; நாய் இல்லாது அகன்ற வாயிலை உடையது. அங்கே செந்நற் சோற்று அமலையும், மிகவெள்ளிய நெய்யும்கிடைக்கும்.[11]

பெரும்பாணாற்றுப்படையிலே அந்தணர் வதியும் ஊர் ஒன்றன் சித்திரம் உண்டு: ''சிறிய மரத்தூண்களைக் கொண்ட குடிகளில் பசுக்கள் கட்டப்பட்டுள்ளன. அவ்வூரிலுள்ள வீடுகள் யாவும் சாணத்தினால் மெழுகப்பட்டிருப்பன. அவ் வீடுகளிற் பல உருவங்கள் உண்டு. அவற்றைச் சுற்றியுள்ள இடங்களில் கோழிகளும் நாய்களும் காணப்படா. வளைந்த வாய்களை உடைய கிளிகளுக்கும் மறைபயிற்றும் மறையவர் அவ்வீடுகளில் உறைவர்.''[12]

## (2) முனிவர்

தீயை வளர்த்து அவி வழங்கும் முனிவரைப் பற்றிய குறிப்புக்கள் பல உண்டு. முனிவர் அணையாத தீயைப்பேணி,

---

10. செம்பூ முருக்கி னன்னார் களைந்து
தண்டொடு பிடித்த தாழ்கமண் டலத்துப்
படிவ வுண்டிப் பார்ப்பன மகனே.
குறுந். 956 : 2—4.

11. ஆசி றெருவி னயில் வியன்கடைச்
செந்நெ லமலை வெண்மை வெள்ளிழு
தோரிற் பிச்சை யார மாந்தி.
குறுந். 277 : 1—3.

12. செழுங்கன் றியாத்த சிறுதாட் பந்தர்ப்
பைஞ்சேறு மெழுகிய படிவ நன்னகர்
மனையுறை கோழியொடு ஞமலி துன்னாது
வளைவாய்க் கிள்ளை மறைவிளி பயிற்று
மறைகாப் பாள ருறைபதி.
பெரும்பாண். 297—301.

வெண் கோட்டை உடைய யானைகள் கொண்டுவரும் விறகினால் வேள்விச் சடங்குகளைச் செய்வர்.[13] பள்ளியில் வதியும் அவிர்சடை முனிவர் வேட்கும் தீயிலிருந்து மேலெழும் புகையினால் பறவைகள் சோலையை விட்டுப் பறக்கும்.[14] கல்லிலே தோய்த்த பார்ப்பானின் உடை முக்கோலில் அசைவதைப்பற்றி முல்லைப்பாட்டுப் பாடுகின்றது.[15]

அவரின் நடை, உடை, பண்பு ஆகியவற்றைப் பிற்காலத்து நூலாகிய திருமுருகாற்றுப்படை விரிவாகக் கூறும் "பெருமை பொருந்திய முனிவர் மரவுரியை உடுத்திருக்கின்றனர். அவருடைய வெளுத்த நரைமுடி வலம்புரிச் சங்கை ஒத்திருக்கும். உறுப்புக்கள் யாவும் மாசின்றி விளங்குகின்றன; அவர் அடிக்கடி உண்ணாவிரதம் கொள்வர். அவர் வெறுப்பு, செற்றம் ஆகியவற்றை நீக்கிய உள்ளத்தினர். கற்றோரும் விரைவில் அறிய முடியாத உண்மைகளை உணரும் ஆற்றல் உடையவர். அறிவிற் சிறந்து விளங்குபவர்; விருப்பு வெறுப்பை மேம்பட விடாது நல்லறிவு படைத்தவர்; துன்பத்தை அமைதியாகப் பொறுப்பவர்; வஞ்சனை இல்லாத உள்ளத்தினர்."[16] நிலத்தின் மேல் உயிர் வாழ்வார்க்கு

---

13. செந்தீப் பேணிய முனிவர் வெண்கோட்டுக்
களிறுதரு விறகின் வேட்கும்.
பெரும்பாண். 498—499.

14. தவப்பள்ளித் தாழ்காவி
னவிர்சடை முனிவ ரங்கி வேட்கு
மாவுதி நறும்புகை முனைஇக் குயிறம்
மாயிரும் பெடையோ டிரியல் போகி.
பட்டினப். 53—56.

15. கற்றோய்த் துடுத்த படிவப் பார்ப்பான்
முக்கோ லசைநிலை கடுப்ப. முல்லை. 37—38.

16. சீரை தைஇய வுடுக்கையர் சீரொடு
வலம்புரி புரையும் வானரை முடியினர்
மாசற விமைக்கு முருவினர் மானி
னுரிவை தைஇய வூன்கெடு மார்பி
னென்பெழுந் தியங்கு மியாக்கையர் நண்பகற்
பலவுடன் கழிந்த வுண்டிய ரிகலொடு

அழற்சி நீங்கும் பொருட்டு சுடுகின்ற கதிரையுடைய ஞாயிற் றின்து வெப்பத்தைத் தாம் பொறுத்து, காற்றை உணவாகக் கொண்டு, அச்சுடருடனே சூழவரும் விளங்கிய சடையை உடையவரெனப் புறநானூறு கூறும்.[17]

## (3) ஆரிய நம்பிக்கைகளும் வழிபாட்டு முறைகளும்

புகார் நகரத்து வணிகர் தெய்வங்களுக்கு அவி வழங்கு வதிலும், அமரரைப் பேணுவதிலும், பகடு ஓம்புவதிலும் ஈடு பட்டுள்ளனரென அறிகின்றோம்.[18] இதிலிருந்து பார்ப்பனரின் ஆதிக்கம் நகரங்களிற் சிறப்புற்றிருந்ததை அறியலாம். பூரணையின் ஏழாம் நாள் நிகழும் விழாவிலே பாவங்களைப் போக்குவதற்காக மக்கள் குளத்தில் நீராடுவர்.[19] உலகத்தைக் குறித்துள்ள ஆரியத் தத்துவக் கருத்துக்கள்

---

செற்ற நீக்கிய மனத்தின ரியாவதுங்
கற்றோ ரறியா வறிவினர் கற்றோர்க்குத்
தாம்வரம் பாகிய தலைமையர் காமமொடு
கடுஞ்சினங் கடிந்த காட்சிய ரிடும்பை
யாவது மறியா வியல்பினர் மேவரத்
துனியில் காட்சி முனிவர். திருமுருகு. 126—137.

17. நிலமிசை வாழ்ந ரலமர றீரத்
தெறுகதிர்க் கனலி வெம்மை தாங்கிக்
காலுண வாகச் சுடரொடு கொட்கும்
அவிர்சடை முனிவர். புறநா. 43 : 1—4.

18. அமரர்ப் பேணியு மாவுதி யருத்தியு
நல்லானொடு பகடோம்பியு
நான்மறையோர் புகழ்பரப்பியும்.
பட்டினப். 200—202.

19. கணவ ருவப்பப் புதல்வர்ப் பயந்து
பணைத்தேந் திளமுலை யமுத மூறப்
புலவுப்புனிறு தீர்ந்து பொலிந்த சுற்றமொடு
வளமனை மகளிர் குளநீ ரயர. மதுரை. 600—603.

தமிழ்நாட்டிற் புகுந்தமைக்குப் பெரும்பாணாற்றுப்படையிற் சான்று இருக்கின்றது. நாவலந் தண்பொழில் என்று அது உலகத்தைக் கூறுகின்றது.[20]

வேள்வி செய்து வழிபடும் முறை அக்காலத்தில் வழக்கில் இருந்தது. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனைச் சிறப்பிக்கும் எரிக்காட்டூர்த் தாயங்கண்ணனார், அவனுடைய நாட்டில் எங்கும் வேள்வி வேட்டதைக் குறிப்பிடுகின்றார்.[21] பாண்டியன் ஒருவன் பல்யாகசாலைகள் அமைத்து வேள்வியைப் போற்றினான். இதனால் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்ற பட்டப் பெயர் அவனுக்கு அமைந்தது. அவனைப் பாடிய நெட்டிமையார் "பல மாட்சிமைப்பட்ட கெடாத தலைமையை உடைய யாகங்களை முடித்துத் தூண்கள் நடப்பெற்ற அகன்ற வேள்விச் சாலைகள் பலகொல்" என வினவுகின்றார்.[22] இதிலிருந்து அவன் பல யாகங்கள் செய்தமை புலனாகும்.

சோழன் கரிகாற் பெருவளத்தான் செய்த வேள்விகளைக் கருங்குழலாதனார் பின்வருமாறு கூறுவர்: "அறத்தைத் தெளிய உணர்ந்த ஒழுக்கம் மாட்சிமைப்பட்ட அந்தணரது அவைக்களத்தின்கண் வேள்விக்குரிய முறைமையை நன்றாக அறிந்தோர் அம் முறைமையை முன்னின்று காட்டினர். பலராலும் புகழப்பட்ட தூய இயல்பு பொருந்திய கற்பொழுக்கத்தை உடைய குற்றந் தீர்ந்த குலமகளிர் சூழ்ந்து நின்றனர். வட்டமாகிய வடிவினையுடைய பல படையாற் செய்யப்பட்ட மதில்கள் வேள்விச் சாலையைச் சூழ்ந்திருந்தன.

20. நாவலந் தண்பொழில். பெரும்பாண். 465.

21. அறுதொழி லந்தண ரறம்புரிந் தெடுத்த
தீயொடு விளங்கு நாடன். புறநா. 397 : 20—21.

22. நெய்ம்மலி யாவுதி பொங்கப் பன்மாண்
வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி
யூப நட்ட வியன்களம் பலகொல்.
புறநா. 15 : 19—21.

அச்சாலையுள் பருந்து வடிவமாகச் செய்யப்பட்ட இடத்தில், யூபமாகிய நெடிய கம்பத்தை நாட்டி, வேள்வியைச் செய்து முடித்தான் அரசன்.''[23]

பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந் தாயன் செய்த வேள்வியைச் சிறப்பித்து ஆவூர் மூலங்கிழார் பாடிய பாட்டில் வேள்வி செய்யும் முறைகள் மிக விரிவாகத் தரப்பட்டுள்ளன. அவன் தன் மனைவியரோடு கூடி வேள்வி செய்வதற்கு வேண்டிய தோல் உடையை அணிந்து, அம் மகளிர் துணைபுரிய, வேள்வி செய்தான். அவ்வேள்வியில் நீர் நாணும்படி நெய் சொரிந்தான். வேள்வியின் இறுதியிற் பெருவிருந்து நிகழ்ந்தது. இவ்வாறு அவன் செய்தவை எண்ணில் அடங்காதனவாதலின், 'எண்ணிறப்பப் பல வேள்வி வேட்டு, மண்பொருமற் புகழ் பரப்பினுன்' எனப் புலவர் பாடுவர்.[24] சேரமான் பெருஞ் சேரல் இரும்பொறை யாகம் செய்வதற்குரிய விதிகளைக் கேட்டு, விரதம் மேற் கொண்டு, தன் கற்பிற்கரசியோடு வேள்வி செய்தான். இதன் பயனுக அவள் வயிற்றிலிருந்த குழந்தை கருவிலிருந்தே அரசு துறைக்கு வேண்டுவன வெல்லாவற்றையும் பெற்று நல்லறி விஞேடு விளங்கியது.[25] இங்ஙனமாக வேள்வியை அரசர்

---

23. அறமறக் கண்ட நெறிமா ணவையத்து
முறைநற் கறியுநர் முன்னுறப் புகழ்ந்த
தூவியற் கொள்கைத் துகளறு மகளிரொடு
பருதி யுருவிற் பல்படைப் புரிசை
எருவை நுகர்ச்சி யூப நெடுந்தூண்
வேத வேள்வித் தொழின்முடித் ததூஉம்.
புறநா. 224 : 4—9.

24. எண்ணுணப் பலவேட்டும்
மண்ணுணப் புகழ்பரப்பியும்.
புறநா. 166 : 22—23.

25. கேள்வி கேட்டுப் படிவ மொடியாது
வேள்வி வேட்டனை உயர்ந்தோ ருவப்ப
.....................................................
ஒடுங்கீ ரோதி யொண்ணுதல் கருவில்
எண்ணியன் முற்றி யீரறிவு புரிந்து

மேற்கொண்டு செய்தனர். வேள்வியிற் பங்கு பற்றிய அந்தணருக்குரிய செல்வாக்கும் அதிகரித்தது. இதனால் அந்தணர் வழிமொழிந்து ஒழுகினர் அரசர்.[26] அந்தணருக்குப் பணிதலே அல்லாமல் பிறருக்குப் பணிதலை அவர்கள் அறியார்.[27] 'நீடு வாழ்க' என அந்தணர் வாழ்த்திடும் கையின் முன்னேயே அரசரின் முடி வணங்கிற்று.[28] காரியினுடைய நாடு வேள்வித் தீயைப் பாதுகாக்கும் அந்தணர்க்குரியது என்ற கொள்கையும் பரவியது.[29]

சங்க நூல்களிற் சில இடங்களில் நிலையாமையைப் பற்றியும் மனிதனுடைய பொய் உணர்வைப் பற்றியும் சில குறிப்புக்களைக் காணலாம். இளந்திரையன் என்னும் அரசன் தன் வாழ்வு என்றும் நிலைபெற்று நில்லாது என்பதினை உட்கொண்டு தன் புகழை நிறுத்த விரும்பினான்.[30]

---

சால்புஞ் செம்மையு முளப்படப் பிறவும்
காவற் கமைந்த வரசுதுறை போகிய
வீறுசால் புதல்வற் பெற்றனை. பதிற். 74 : 1—21.

26. ஆறுபுரிந் தொழுகும்
அறம்புரி யந்தணர் வழிமொழிந் தொழுகி.
பதிற். 24 : 7—8.

27. பார்ப்பார்க் கல்லது பணிபறி யலையே.
பதிற். 63 : 1.

28. இறைஞ்சுக பெருமநின் சென்னி சிறந்த
நான்மறை முனிய ரேந்துகை யெதிரே.
புறநா. 6 : 19—20.

29. காரிநின் னாடே
அழல்புறந் தருஉ மந்தண ரதுவே.
புறநா. 122 : 2—3.

30. நில்லா வுலகத்து நிலைமை தூக்கி
யந்நிலை யணுகல் வேண்டி.
பெரும்பாண். 466—467.

நெடுஞ்செழியனுக்கு நிலையாமையை உணர்த்த எழுந்த நூல் மதுரைக் காஞ்சி. இந்நிலையாமையை புலவர் நூலிற் பல இடங்களில் அறிவுறுத்திச் செல்கின்றார். ஓரிடத்தில் புலவர் பின்வருமாறு கூறுவர்: "நல்வினை இயற்றுவதினால் வரும் புகழை நீ விரும்புகிறாய். புலன்களினால் நுகரப்படும் பொருள்களிலே உனக்கும் பற்றுதல் இல்லை. போரைப் புரியச் செய்யும் உன் பொய் உணர்வு கெடுவதாக."[31]

உலகம் ஒருபகுதி இன்பமும் ஒருபகுதி துன்பமும் கலந்தது. சுடுகாட்டைக் கண்ணுற்றதும் ஒரு புலவருக்கு நிலையாமை உணர்ச்சி பிறக்கின்றது. அந்தச் சுடுகாடு உயிர்த் தொகுதி எல்லாவற்றையும் ஏற்றுத் தான்மாத்திரம் அழிவின்றி எவ்வாறு மக்களுக்கு நிலையாமையை உணர்த்துகின்றது என்று எண்ணுகின்றார்.[32] சோழன் நலங்கிள்ளியைப் பாடிய உறையூர் முதுக்கண்ணன் சாத்தனார் திங்கள் கல்வியறிவில்லாத மடவோருக்குக்கூட நிலையாமையை அறிவுறுத்துகின்றது என்று கூறுவர். "வளர்ந்ததொன்று பின் குறைதலும், குறைந்ததொன்று பின் வளர்தலும், பிறந்ததொன்று பின் இறத்தலும், இறந்ததொன்று பின் பிறத்தலும் உண்டு என்பதை, கல்வி அறிவில்லாத மடவோரும் அறியும்படி

---

31. ஈத லுள்ளமொ டிசைவேட் குவையே
யன்னாய் நின்னொடு முன்னிலை யெவனோ
கொன்னொன்று கிளக்குவ லடுபோ ரண்ணல்
கேட்டிசின் வாழி கெடுகநின் னவலங்
கெடாது நிலைஇயர்நின் சேண்விளங்கு நல்லிசை.
மதுரை. 205—209.

32. எல்லார் புறனுந் தான்கண் டுலகத்து
மன்பதைக் கெல்லாந் தானாய்த்
தன்புறங் காண்போர்க் காண்பறி யாதே.
புறநா. 356 : 7—9.

காட்டித் திங்களாகிய தெய்வம் இயங்குகின்றது'' என்பது அவர் பாடிய பாட்டின் பகுதி.[33]

வாழ்நாள் நிலையின்றிக் கழியுமென்பதனை, "குன்றுகளோடு கூடிய மலைகளைத் தன்னிடத்துப் பிணைத்துக்கட்டி நிற்கும் மண்ணுலகத்திலே, பொதுவெனக் கருதப்பட்ட மூவேந்தருடைய நாடு மூன்றையும் பொதுவெனப் போற்றாது, தமக்கே உரியவெனக் கொண்டு ஆண்ட வேந்தருக்கும் வாழ்நாட்கள் கழிந்தன; அவர் ஈட்டித் தொகுத்து வைத்த செல்வமும் அவர் செல்லுயிர்க்குத் துணையானதில்லை'' என்று பிரமனார் என்னும் புலவர் குறிப்பிடுகின்றார்.[34] விழவின்கண் ஆடும் கூத்தரது வேறுபட்ட கோலம் போல முறைமுறைதோன்றி இயங்கி மறையும் தன்மையை உடையது உலகம்.[35] ஒரு வீட்டில் சாக்காட்டுப் பறை ஒலிக்கின்றது; மற்றொரு வீட்டின் கண்ணே மணத்திற்குக் கொட்டும் முழவினது ஓசை ஒலிக்கின்றது. ஒரு புறத்திலே காதலரோடு கூடிய மகளிர் பூவணிவர்; இன்னொரு புறத்திலே

---

33. தேய்த லுண்மையும் பெருக லுண்மையும்
மாய்த லுண்மையும் பிறத்த லுண்மையும்
அறியா தோரையு மறியக் காட்டித்
திங்கட் புத்தே டிரிதரு முலகத்து.

புறநா. 27 : 11—14.

34. குன்றுதலை மணந்த மலைபிணித் தியாத்தமண்
பொதுமை சுட்டிய மூவ ருலகமும்
பொதுமை யின்றி யாண்டிசி னோர்க்கும்
ஆண்ட வன்றே யாண்டுகள். புறநா. 357 : 1—4.

35. விழவிற்
கோடியர் நீர்மை போல முறைமுறை
ஆடுநர் கழியுமிவ் வுலகத்துக் கூடிய
நகைப்புற னாகநின் சுற்றம்,
இசைப்புற னாகநீ யோம்பிய பொருளே.

புறநா. 29 : 22—26.

பிரிந்திருக்கும் மகளிரது வருத்தத்தையுடைய கண்களிலிருந்து நீர் பாய்கின்றது. இத்தகைய முரண்பட்ட நிலைகளை உடையது உலகம்.[36]

உலகின்கண் யாக்கை, இளமை, செல்வம் முதலியன நிலை பேறின்றிக் கழிவது கண்டு, நிலைபேருன வாழ்வினைப் பெற விரும்புவோர் துறவினை மேற்கொள்ளுவர். துன்பம் பொருந்திய இறுதிநாள் வருமுன்பே கடல்சூழ்ந்த நிலவுலக வாழ்வினைப் பற்றறுத்துத் துறந்து, தவமாகிய நல்வினையைச் செய்வர்.[37] இத்துறவுக்கு இடையூருகச் சுற்றம் சூழ வாழும் மனைவாழ்க்கை உள்ளது.[38] இவ்விடையூற்றை நீக்கித் துறவோர் மூங்கில் வளர்ந்த நெடிய மலையிடத்துச் சென்று அருவி நீரில் ஆடுவர். அவர்களுக்கு யானைகள் விறகு கொணர்ந்து கொடுக்கும். அதனைக் கொண்டு மிக்க வெம்மையையுடைய செந்தீயை வேட்டு, முதுகின் கண்ணே தாழ்ந்த புரிசடையைப் புலர்த்தித் துறவிகள் வாழ்வர்.[39]

---

36 ஓரி னெய்தல் கறங்க வோரில்
ஈர்ந்தண் முழவின் பாணி ததும்பப்
புணர்ந்தோர் பூவணி யணியப் பிரிந்தோர்
பைத லுண்கண் பனிவார் புறைப்ப.
புறநா. 194 : 1—4.

37. இன்ன வைகல் வாரா முன்னே
செய்ந்நீ முன்னிய வினையே
முன்னீர் வரைப்பக முழுதுடன் றுறந்தே.
புறநா. 336 : 16—18.

38. ஓடி யுய்தலுங் கூடுமன்
ஒக்கல் வாழ்க்கை தட்குமா காலே.
புறநா. 193 : 3—4.

39. கழைக்க ணெடுவரை யருவி யாடிக்
கான யானை தந்த விறகிற்
கடுந்தெறற் செந்தீ வேட்டுப்
புறந்தாழ் புரிசடை புலத்து வோனே.
புறநா. 251 : 4—7.

சிவந்த தீயைக் கைவிடாமற் காக்கும் முனிவர், வெள்ளிய கொம்பினையுடைய களிறு முறித்துக் கொண்டுவந்த விறகாலே வேள்வியைச் செய்வரெனப் பெரும்பாணாற்றுப் படையும் கூறும்.[40] துறவு பூண்ட ஒருவனைக் காட்டி மாரிப் பித்தியார் என்னும் புலவர் பின்வருமாறு கூறுகின்றார்: "மனைவாழ்வில் இவன் தன் மனையாளிடத்துப் பேராக் காதல் உடையனாய் ஒழுகினான்; தன்னுடைய இனிய சொற்களால் அவளது மனத்தைத் தன்பாற் பிணித்து நல்லறம் புரிந்தான். அத்தகையோன் இப்பொழுது துறவியாகி விட்டான். அருவியிற் பலகாலும் நீராடுதலால் அவன் தலையிலுள்ள சடை தில்லந் தளிர்போற் புற்கென்று பொலிவிழந்து கிடக்கின்றது. செறிந்த இலையையுடைய தாளியைப்பறித்துத் திரிகின்றான்."[41]

ஞாயிற்றினாற் சூழப்பட்ட இப் பெரிய உலகம் ஒரு நாளில் ஏழு அரசர் தலைவராக வருதற்குரிய அத்தகைய நிலையாமையை உடையது. அதனால், உலகியலாகிய இல்லறத்தையும் அருட் பயிற்சியாகிய துறவறத்தையும் சீர்தூக்கிப் பார்த்தால், தவத்திற்கு உலகம் சிறு கடுகளவும் நிகர் உள்ளதாகத் தெரியவில்லை. அதனைத் தெரிந்தே வீடு பேற்றை அடைய விரும்பினோர் இல்வாழ்விற் பற்றுவிட்டனர். அவ்வாறு அவர்கள் உலகத்திருவைக் கைவிட்டு நீங்கியபோதும், திரு அவர்களைக் கைவிடுவதில்லை. தன்னிடம்

---

40. செந்தீப் பேணிய முனிவர் வெண்கோட்டுக்
களிறுதரு விறகின் வேட்கும்.

பெரும்பாண். 498—499.

41. கறங்குவெள் ளருவி யேற்றலி னிறம்பெயர்ந்து
தில்லை யன்ன புல்லென் சடையோ
டள்ளிலைத் தாளி கொய்யு மோனே
இல்வழங்கு மடமயில் பிணிக்கும்
சொல்வலை வேட்டுவ னாயினன் முன்னே.

புறநா. 252.

பற்றுடையோரையே திரு கைவிட்டு நீங்குவாள். ஆதலால் தவமே செய்யற்பாலது எனச் சான்றோர் கண்டனர்.[42]

ஊழ்வினையைப்பற்றிச் சில பாட்டுக்கள் கூறுகின்றன. ஊழ்வினையின் உண்மையை முதலில் உணர்ந்தவர் திராவிடரோ அல்லது ஆரியரோ என்பது தெரியவில்லை. "கன்மம்" என்ற வடசொல் உணர்த்தும் பொருளைச் சங்க நூல்கள் 'ஊழ்' என்ற சொல்லினுல் உணர்த்துகின்றன. 'ஊழ்' என்பது தமிழ்ச் சொல். அதற்குரிய பழமையான கருத்தை அறிய முடியவில்லை. பொருநராற்றுப்படையிற் பொருநனைப் பார்த்துப் புலவர் கூறுவர், "உன்னை நான் காணும்படி செய்தது உன்னுடைய நல்வினைப் பயனுகும்."[43] ஊழ்வினையை மறப்பதை நினைக்கவும் மாட்டாத மாந்தரைப் பற்றி மலைபடுகடாம் பாடுகின்றது.[44] குறிஞ்சிப் பாட்டில் தலைவனுடன் ஏனையுலகத்தில் இயைவது தனக்கு உண்டெனத் தலைவி தன்னைத் தேற்றிக்கொள்வதிலிருந்து அக்காலத்தில் மறுபிறப்பில் நம்பிக்கை இருந்ததென அறியலாம்.[45]

---

42. பருதி சூழ்ந்தவிதப் பயங்கெழு மாநிலம்
ஒருபக லெழுவ ரெய்தி யற்றே
வையமுந் தவமுந் தூக்கிற் றவத்துக்
கையவி யனைத்து மாற்ரு தாகலிற்
கைவிட் டனரே காதல ரதனுல்
விட்டோரை விடாஅ டிருவே
விடாஅ தோரிவள் விடப்பட் டோரே.
புறநா. 358.

43. ஆற்றெதிர்ப் படுதலு நோற்றதன் பயனே.
பொருந. 59.

44. மறந்தமை கல்லாப் பழனுமு ழிறந்து
பெரும்பயங் கழியினு மாந்தர் துன்னுர்.
மலைபடு. 263—264.

45. ஏனையுல கத்து மியைவதா னமக்கென
மானமர் நோக்கங் கலங்கிக் கையற்று.
குறிஞ்சி. 24—25.

இவ்வுலகில் வாழ்தற்கென வரையறுக்கப்பட்ட வாழ் நாள் முழுதும் நன்றாக வாழ்தலே வேண்டப்படுவது. வாழ்தற்கு ஏதுவாகிய நல்வினையன்றி இறக்கும்பொழுது உயிர்க்குத் துணையாவது வேறு யாதும் இல்லை என்ற கொள்கை பரவத் தொடங்கியது.[46] உயிர்கள் அனைத்தும் தாம்தாம் செய்த வினைக்கேற்ப இன்பமும் துன்பமும் உயர்வும் தாழ்வும் செல்வமும் வறுமையும் எய்தும். மின்னுடனே மழை குளிர்ந்த துளியைப் பெய்தலால் அமையாது, கல்லை அலைத்து ஒலிக்கும் வளவிய பெரிய ஆற்றின் நீரிலே போகும் மிதவை போல, அரிய உயிர் ஊழின் வழியேபடும்.[47] உயர்ந்த விருப்பத்தை உடைய உயர்ந் தோர்க்குத் தாம் செய்த நல்வினையிடத்து அதனை அனுப வித்தல் உண்டாமாயின், அவர்க்கு இருவினையும் செய்யப்படாத தேவருலகத்தின்கண் இன்பமனுபவித்தலும் கூடும். அவ்வுலகத்தின்கண் நுகர்ச்சி இல்லையாயின் மாறிப் பிறத்தலை உடைய பிறப்பின்கண் இன்மை எய்தவும் கூடும்'' என்று புறநானூறு கூறும்.[48] கடத்தற்கரிய

---

46. வாழ்தல் வேண்டுமிவண் வரைந்த வைகல்
வாழச் செய்த நல்வினை யல்ல
தாழுங் காலைப் புணைபிறி தில்லை.

புறநா. 367 : 9—11.

47. தீது நன்றும் பிறர்தர வாரா
நோதலுந் தணிதலு மவற்றோ ரன்ன
..............................................
வானந் தண்டுளி தலைஇ யானாது
கல்பொரு திரங்கு மல்லற் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோ லாருயிர்
முறைவழிப் படூஉம். புறநா. 192 : 2—10.

48. உயர்ந்த வேட்டத் துயர்ந்திசி னோர்க்குச்
செய்வினை மருங்கி னெய்த லுண்டெனிற்
றொய்யா வுலகத்து நுகர்ச்சியுங் கூடும்
தொய்யா வுலகத்து நுகர்ச்சியில்லெனின்
மாறிப் பிறப்பி னின்மையுங் கூடும்.

புறநா. 214 : 6—10.

போரைச் செய்யும் வலியினையுடையோர் நீண்ட இலையை உடைய வேலாற் புண்ணுற்று வடுப்பட்ட உடம்போடு மேலுலகம் புகுவர் எனப் பரணர் கூறுவதால் மறுபிறப்பில் நம்பிக்கை இருந்ததெனத் தெரிகின்றது.[49]

சங்க காலத்திலே தமிழகத்தில் அந்தணரும், முனிவரும் வாழ்ந்தனரெனினும் அவர்கள் செல்வாக்குப் பிற்காலத்தில் இருந்த அளவுக்கு மேம்பட்டிருக்கவில்லை யெனக் கூறலாம். சங்க நூல்களில் ஆரிய நம்பிக்கைகளும், சமயக் கோட்பாடுகளும் கூறப்பட்டிருப்பது உண்மையே. ஆனால் பொதுவாக நோக்குமிடத்து மக்களின் அன்றாட வாழ்க்கையில் அவை இடம் பெறவில்லை எனலாம். நகர வாழ்க்கையில் அவற்றின் செல்வாக்கு சிறிது சிறிதாகப் பெருகிக்கொண்டே வந்தது. பொதுமக்கள் தங்கள் மூதாதையரின் வழிபாட்டு முறைகளையே பின்பற்றினர்.

---

49. ஆரம ருழக்கிய மறங்கிளர் முன்பின்
நீளிலை யெஃக மறுத்த வுடம்பொடு
வாரா உலகம் புகுத லொன்றெ‌ன.

புறநா. 341 : 13—15.

———

# எட்டாம் இயல்

## சமணமும் பௌத்தமும்

கிறித்து பிறப்பதற்குச் சில நூற்றாண்டுகளுக்கு முன்பே சமணரும் பௌத்தரும் தமிழ் நாட்டுக்கு வந்து விட்டன ரெனச் சாசனங்களால் அறியலாம்.[1] ஆனால் பத்துப்பாட்டு எட்டுத்தொகை நூல்களை நோக்குமிடத்து அவர்களின் செல்வாக்குத் தென்னாட்டில் அக்காலத்திற் சிறந்திருக்க வில்லை என்பதையும் அறியமுடிகின்றது.

சங்ககாலத் தமிழ் மக்கள் போரையும் காதலையும் போற்றி வாழ்ந்தனர். அவர் போர்த் தொழிலில் ஈடுபட்டிருந்தமைக்குச் சான்றாகச் சங்க நூல்களில் அமைந்துள்ள பல பகுதிகளை முன்பு காட்டினோம். கொல்லாமையைப் போற்றிய சமணரும் பௌத்தரும், தமிழ் மக்கள் போரையும் வேட்டையையும் விரும்பிவாழும் பண்பை அறவே வெறுத்திருத்தல் வேண்டும். சங்ககாலத்தில் சமண பௌத்தரின் செல்வாக்குச் சிறந்திருப்பின் சங்க நூல்களில் உலக வாழ்க்கையை வெறுக்கின்ற ஒரு பண்பு காணப்படல் வேண்டும். அதற்குப் பதிலாக அந்நூல்களில் உலக வாழ்க்கையை விரும்பும் ஒருணர்வே செறிந்து விளங்குகின்றது.

---

1. (i) *Madras Epigraphical Reports 1907 (pp. 60—61) and 1910 (pp. 77—78).*
   (ii) *Bhattiprola Inscription (2nd cent. B. C.) Epigraphia Indica. Vol. II, p. 323—329.*
   (iii) *Asokan Edicts—Edict ii, Rock Edict iii and also Maski and Southern India Inscriptions.*
   (iv) *See also M. S. Ramaswami Ayyangar: Studies in South Indian Jainism, chapters I to III.*

சில நூற்பகுதிகளிலே புலாலுண்ணுமை, கொல்லாமை, அருள் உணர்வு ஆகியவை மனிதனுக்குரிய நற் பண்புகளாகக் கருதப்படுகின்றன. புகார் நகரத்து வணிகரின் பண்புகளைப் பட்டினப்பாலை பின்வருமாறு பாடும்: "இவ்வணிகர் எவ்விடத்தில் வாழுவாரோ அவ்விடத்திலுள்ள கடலிலே மீன்கள் துன்பமுறாது வாழ்வன; வயல்களில் மாட்டு மந்தைகள் இன்பமாகக் காலம் கழிப்பன. இவ்வணிகர் சுற்றத்தோடு சிறந்து இன்பமாக வாழ்பவர். இவருக்குப் பகைவர் இல்லை. மீன்கள் யாவும் பரதவர் குடியிருப்பின் அருகில் துள்ளி விளையாடுவன. மாடுகள் யாவும் வணிகர் குடில்களில் குறைவில்லாது பெருகுகின்றன. இவ்வாறு கொலைகடிந்து வாழ்கின்றனர் இவ்வணிகர்."[2] இந்த அளவுக்குமட்டுமே சமணர், பௌத்தர் செல்வாக்கு அமைந்திருந்தது என ஒருவாறு கூறலாம்.

மதுரை, காஞ்சி போன்ற தலைசிறந்த நகரங்களிலே சமண பௌத்த துறவிகள் தங்கித் தத்தம் சமய உண்மைகளைப் புகட்டுவதற்குப் பள்ளிகள் இருந்தன. காஞ்சிநகரில் எல்லாச் சமயத்தவரும் தொழுது விழா அயர்வரென அறிகின்றோம்.[3] இவருள் சமண பௌத்தர் இருந்திருத்தலும் கூடும். மாடுகள் கட்டப்படும் கொட்டில்களுக்கருகில் அமைந்த சமண பௌத்த பள்ளிகளைப் பற்றிப் பட்டினப்பாலை

---

2. நீர்நாப் பண்ணு நிலத்தின் மேலு
மேமாப்ப வினிதுதுஞ்சிக்
கிளைகலித்துப் பகைபேணாது
வலைஞர்முன் றின் மீன்பிறழவும்
விலைஞர்குரம்பை மாவீண்டவுங்
கொலைகடிந்துங் களவுநீக்கியும்.
பட்டினப். 194—199.

3. பலர்தொழ
விழவுமேம் பட்ட பழவிறன் மூதூர்.
பெரும்பாண். 410—411.

கூறுகின்றது.[4] பள்ளி என்ற சொல் எச்சமயத்தவர் இருப்பிடத்தையும் குறிக்கும். ஆனால், பழைய இலக்கியங்களிலும் இடைக்கால இலக்கியங்களிலும் அது சமண பௌத்த முனிவர் வாழ்ந்த இல்லங்களைக் குறிக்கவே வழங்கப்பட்டு வந்தது. மேலும், இப்பாட்டிலே பள்ளிகளைக் குறித்தபின்னர் முனிவரை வேறுபடுத்தி அவர் பண்புகள் யாவற்றையும் விரித்துக் கூறுவார் புலவர். எனவே இவ்விடத்திற் பள்ளி என்பது சமண பௌத்த முனிவருக்குரிய இருப்பிடத்தைக் குறிப்பதுவேயாகும்.

மதுரையிலே சோலைகளிற் சமணத் துறவிகள்[5] வாழ்ந்து சாவகருக்குக்[6] கல்வி கற்றுக்கொடுத்தனர். அவர் முக்காலத்தையும் உணர்ந்தவர். அத்துறவிகளைச் சிறப்பாக மதுரைக் காஞ்சி வருணிக்கின்றது: "அழகு சிறந்த மலர் நிறைந்த பொழில்களிலே துறவிகள் உறைகின்றனர். வண்டு படுதற் கேதுவான மலரும் நறுமணம் சிறந்த புகையுங்கொண்டு அவரைச் சாவகர் வழிபடுகின்றனர். அத்துறவிகள் சென்ற காலமும், வரும் அமயமும், இன்று இவ்விடத்துத் தோன்றிய ஒழுக்கமும் நண்குணர்ந்தவர். தேவருலகையும் அதன் செய்கைகளையும், எல்லா நிலங்களின் செய்கைகளையும் தம் நெஞ்சால் அறிதற்குக் காரணமான அறிஞர். தமக்கமைந்த விரதங்களையும், அவ்விரதங்களுக்கு இளையாத உடம்பினையும் உடையவர். கல்விகளெல்லாம் நிறைந்து களிப்பின்றி அடங்கின அறிவினையுடையவர். நோன்பு செய்தற் பொருட்டுக் கல்லைப் பொளிந்தாற் போன்று சிறிய வாயை

---

4. பகட்டெருத்தின் பலசாலைத்
தவப்பள்ளி. பட்டினப். 52—53.

5. 'சான்ற கொள்கையர்' என்ற தொடராலேயே இவர் குறிக்கப்படுவர்.

6. சமணரில் விரதங்காக்கும் இல்லறத்தார் சாவகர் எனப்படுவர்; இவர் உலக நோன்பிகள் எனவும் கூறப்படுவர்.

உடைய குண்டிகைகளைப் பல வடங்களையுடைய உறியிலே தொங்கவிட்டுத் திரிவர்.[7]"[8]

பத்துப்பாட்டிற் சமண பௌத்த துறவிகளுடைய வாழ்க்கைப் பண்பு, அவர் குறிக்கோள் என்பவைபற்றி மேற் கூறிய குறிப்புக்களே காணப்படுகின்றன. எட்டுத் தொகையில் வரும் பாடல்களைப் பாடிய புலவருள் இருவருக்குப் பௌத்தப் பெயர்கள் அமைந்துள்ளன. அவ்விருவரும் இளம்போதியாரும் சீத்தலைச் சாத்தனாரும் ஆவர். போதியார் என்பது புத்தருக்குரிய பெயர்களில் ஒன்று. நற்றிணையிலுள்ள எழுபத்திரண்டாம் பாட்டு இளம் போதியார் பாடியதாகும். 'சாஸ்தா' என்பது புத்தர் பெருமானுக்குரிய ஒரு பெயராகலின், 'சாத்தனார்' என்ற பெயரும் புத்தர் பெயராகவே இருத்தல் வேண்டும். மணிமேகலையை இயற்றிய சாத்தனாரல்லர் இவர். இவர் பாடிய பாட்டுக்கள் மூன்று நற்றிணையிலும், ஒன்று குறுந்

---

7. சமண முனிவர் உறிகளிற் குண்டிகைகளைக் கொண்டு திரிவர் எனத் தமிழ் நூல்கள் பல இடங்களிற் கூறு கின்றன.

8. வண்டுபடப் பழுநிய தேனார் தோற்றத்துப்
பூவும் புகையுஞ் சாவகர் பழிச்சச்
சென்ற காலமும் வரூஉ மமயமு
மின்றிவட் டோன்றிய வொழுக்கமொடு
[நன்குணர்ந்து
வானமு நிலனுந் தாமுழு துணருஞ்
சான்ற கொள்கைச் சாயா யாக்கை
யான்றடங் கறிஞர் செறிந்தனர் நோன்மார்
கல்பொளிந் தன்ன விட்டுவாய்க் கரண்டைப்
பல்புரிச் சிமிலி நாற்றி......................
...................................................
இறும்பூது சான்ற நறும் பூஞ் சேர்க்கையும்.
மதுரை. 475—487,

தொகையிலும்; ஐந்து அகநானூற்றிலும், ஒன்று புறநானூற்றிலும் உள்ளன.[9]

இதுகாறும் கூறியவற்றுற் சங்ககால மக்கள் சமய வாழ்விலே சமண பௌத்தரின் செல்வாக்கு மிகவும் குறைவாகவே இருந்ததென்பது தெளிவாகின்றது. அவர் செல்வாக்குச் சிறிது சிறிதாகப் பெருகி, ஏழாம் நூற்றுண்டின் முற்பகுதியில் 'உச்சநிலையை அடைந்தது. ஏழாம் நூற்றுண்டின் முற்பகுதியிலே மக்கள் உள்ளத்தினைக் கவர்ந்திருந்த சமண பௌத்த நெறிகளைச் சைவ வைணவத் தலைவர் எதிர்த்துப் போராடவேண்டிய நிலைமை ஏற்பட்டது. அதற்கிடையில், வாழ்க்கையின் துன்பப் பண்பை உறுத்திக் கூறும் அவ்விரு நெறிகளும் மக்கள் மனப்பான்மையை மாற்றியமைத்து விட்டன என்றே கூறலாம். ஒழுக்கத்தினையே சிறப்பித்துக் கூறும் நூல்களை ஆக்கும் ஒரு காலப் பகுதியும் ஏற்பட்டது. காதல், போர் என்ற இரு பொருளை அடிப்படையாகக் கொண்ட பழைய இலக்கியங்களின் இடத்தில் ஒழுக்கம், சமயக் கொள்கை முதலியவற்றை அறிவுறுத்தும் திருக்குறள், நாலடியார் போன்ற பதினெண் கீழ்க்கணக்கு நூல்களும், சிலப்பதிகாரம் மணிமேகலை போன்ற தொடர்நிலைச் செய்யுட்களும் எழுந்தன.

---

9. நற்றிணை 36, 127, 339; குறுந்தொகை 154; அகநானூறு 53, 134, 229, 306, 320; புறநானூறு 59.

———

## ஒன்பதாம் இயல்

# சமய வாழ்க்கை

சங்ககாலத் தமிழர் சமயத்தைப்பற்றி மேலே கூறிய வற்றிலிருந்து, அக்காலத் தமிழர் வாழ்க்கை முற்றிலும் சமயச் சார்பாக மாறிவிடவில்லையென்பது தெளிவாகும். பிற்காலத்திலே சமயத்திற்கு வாழ்க்கையிற் சிறந்த இடம் கொடுத்தனர். சமயத்தின் பொருட்டே வாழ்க்கை என்ற எண்ணமும் ஒரு காலத்தில் இருந்தது. ஆனால், சங்க காலத்தில் மக்களுக்குத் தொண்டு செய்வதிலும் உலகம் நல்ல நிலையில் வாழவேண்டும் என்ற உயர்ந்த எண்ணத்திலுமே தமிழர் உள்ளம் பதிந்திருந்தது.

அன்பே சமய வாழ்க்கையின் அடிப்படையாக இருந்தது. அக்கால மக்கள் ஒருவருக்கொருவர் உயிர்விடும் பண்புடையவர். கோப்பெருஞ் சோழன் பொருட்டுப் பிசிராந்தையாரும்,[1] பொத்தியாரும்[2] வடக்கிருந்தார் எனப் புறநானூறு வாயிலாக அறிகின்றோம். ஆதன்நுங்கன் என்பவன் ஒரு குறுநில மன்னன். அவனிடத்துக் கள்ளில் என்னும் ஊரில் வாழ்ந்த ஆத்திரையனார் என்பவர் அன்பு பூண்டவர். இவ் வன்பு எத்தகையதென்பதனைப் புலவரே பின்வருமாறு வெளிப்படுத்துவர்: "இறைவ, நீ எப்பொழுதும் என் நெஞ்சில் இடம் பெற்றுள்ளாய்; என் நெஞ்சை யாராவது திறந்து பார்த்தால் அதனுள் உன்னையே காண்பர். வேறு யாரும் என் நெஞ்சத்தில் இடம் கொள்ளவில்லை. அப்படி இருக்கும்பொழுது நான் உன்னை எப்பொழுதாயினும் மறப்பேனா? மறத்தற்குரிய காலம் ஒருவேளை ஏற்பட்டால், அது

---

1. புறநா. 218.

2. புறநா. 223.

என்னுயிர் எனது உடம்பை விட்டுப் பிரிந்துபோகும் காலத்தில் என்னை நான் மறந்துவிடும் காலமாகும்."[3]

ஒருவர்க்கு ஓர் இடர் ஏற்படின் அவ்வூரே செயலற்று நிற்கும். வேந்தன் போரில் துன்புறுவானாயின் அவனது ஊரில் வாழ்வோர் அனைவரும் உணவு ஒழிந்து பசித்தபடியே வாடுவர்.[4] ஒருவர் இறந்து விட்டால் பலரும் தம் நலம் இழப்பர். ஒல்லையூர் கிழான்மகன் சாத்தன் இறந்தபொழுது கீரத்தனார் என்னும் புலவர் ஒரு முல்லைக்கொடியை நோக்கி கூறுகின்றார் : "முல்லையே, பெருஞ்சாத்தன் இறந்தபின் இத் துன்பக் காலத்தில் உன்னை இளையரும் சூடார் ; வளையணியும் பருவ மகளிரும் கொய்து குழலிற் சூடார் ; பாணனும் சூடான் ; பாணினியும் அணியாள் ; இந்த ஒல்லையூர் நாட்டில் நீ ஏனோ பூத்துள்ளாய்."[5] மேலும் ஒருவரையொருவர் மறுமையிலும் தாவி நின்றனர். வேள்பாரி துஞ்சிய வழி அவன் மகளிரைப் பார்ப்பார்ப் படுத்து வடக்கிருந்த கபிலர்

---

3. எந்தை வழி யாத னுங்கவென்
நெஞ்சந் திறப்போர் நிற்காண்குவரே
நின்னியான் மறப்பின் மறக்குங் காலை
என்னுயிர் யாக்கையிற் பிரியும் பொழுதும்
என்னியான் மறப்பின் மறக்குவென்.

புறநா. 175 : 1—5.

4. கொய்யடகு வாடத் தருவிற குணங்க
மயிலஞ் சாயன் மாஅ யோளொடு
பசித்தன் றம்ம பெருந்தகை யூரே.

புறநா. 318 : 1—3.

5. இளையோர் சூடார் வளையோர் கொய்யார்
நல்லியாழ் மருப்பின் மெல்ல வாங்கிப்
பாணன் சூடான் பாணினி அணியாள்
ஆண்மை தோன்ற வாடவர்க் கடந்த
வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை
முல்லையும் பூத்தியோ வொல்லையூர் நாட்டே.

புறநா. 242.

பாரியை மனக்கண்ணிற் கண்டு, "இப்பிறப்பில் எம் இருவரையும் கூட்டி ஒன்றிய நட்பால் உயர்வாழ்வு வாழச்செய்த நல்ஊழ் மறுபிறப்பிலும் இடைவிடாத காட்சியினையுடைய உன்னோடு கூடி உறையும் வாழ்வை நல்குவதாக" என்று மொழிந்தார்.[6] இவ்வளவு சிறந்த அன்பு ஒருமைப்பாடு அக்காலத்தில் வளர்ந்தோங்கி எங்கும் அன்பொளியைப் பரப்பியது.

உதவிசெய்வோர் சிலர் உடனே வரக்கூடிய பயனை எதிர்பார்த்தே மற்றவருக்குத் துணை நிற்பர். வேறு சிலர் இப்பிறவியிலேயே பிற்காலத்தில் உண்டாகக்கூடிய சில பயனைக் கருதி இப்போதிருந்தே துணைசெய்து வருவர். இன்னுஞ் சிலர் இந்தப் பிறவியில் மற்றவருக்கு உதவி செய்து வந்தால் அவ்வளவும் மறுபிறப்பில் தமக்கு உதவியாக இருக்குமென்று மறுமைப் பயன்கருதி இம்மையில் அறம் செய்வர். ஆனால் முற்காலத்தில் தமிழகத்தில் வாழ்ந்தோர் தாம் ஒருவருக்கு ஓர் உதவி செய்யும்போது, மறுமைப் பயனை எதிர்பார்ப்பதில்லை. மறுமைப்பயன் கருதிச் செய்தலை ஒருவகை வணிகம் எனலாம். அறத்தை விலைகொடுத்து வாங்கும் அத்தகைய அறவிலை வணிகர் அல்லர் தமிழர்.[7]

இவ்வாறு பயன்கருதாது ஒருவருக்கொருவர் உதவும் சான்றோராகத் தமிழர் திகழ்ந்தமையாலேயே தமிழ் நாட்டில் மக்களுக்கு வயது முதிர்ந்தபோதும் நரைதிரையில்லாமல் விளங்கினர். பிசிராந்தையார் என்னும் புலவர்

---

6. இம்மை போலக் காட்டி யும்மை
இடையில் காட்சி நின்னோ
டுடனுறை வாக்குக வுயர்ந்த பாலே.
புறநா. 236 : 10—12.

7. இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்
அறவிலை வணிக னாயலன் பிறரும்
சான்றோர் சென்ற நெறியென
ஆங்குப் பட்டன் றவன்கைவண் மையே.
புறநா. 134.

அவ்வாறு நரைதிரை இல்லாது வாழ்தலுக்குரிய காரணங்களைப் பின்வருமாறு கூறுவர்: "என்மனைவி இல்வாழ்க்கைக்கு ஏற்ற மாட்சிமையான குணங்கள் உள்ளவள்; அறிவும் நிரம்பியவள். என் புதல்வரும் மிக்க அறிவு உடையவர். என் ஏவல் செய்வோரும் நான் கருதுவதையே கருதுவர். என் அரசனும் முறையல்லாதன செய்யான்; தகுந்தவற்றை அவ்வப்போது செய்து குடிகளைப் பாதுகாப்பான். யான் இருக்கின்ற ஊரின்கண் சான்றோராய் இருப்பவரே பலர். அவர் அறிவு நிறைந்து புலன் அவிந்து அருளிற் படிகின்ற வாழ்க்கையை உடையவர். இவையே நான் நரைதிரை இல்லாமலிருப்பதற்குக் காரணம்."[8]

இத்தகைய சான்றோர் உண்மையாலேயே தமிழ் உலகம் புகழுடன் விளங்கியது. தேவர் உண்ணும் அமுதம் கிடைப்பதாயிருந்தாலும், இனியதொன்று கிடைத்துவிட்டது என்று கருதி, அதனைத் தனியாக உண்பவர் தமிழ்நாட்டிலே இருக்கவில்லை. யாரிடமும் எதனோடும் வெறுப்புக் கொள்பவரும் வாழவில்லை. பிறர் அஞ்சும் இன்னல்களுக்குத் தாமும் அஞ்சி, அதனால் புதிய புதிய நற்செயல்களைச் செய்யாது மனம் மடிந்திருப்பவரும் இல்லை. புகழ்தரக்கூடிய கருமமாயின் தம் உயிரையும் கொடுப்பர். பழி ஈட்டக்கூடிய தொன்றாயின் அதனால் உலகம் முழுவதுமே பெறமுடியுமெனினும் அத்தொழிலை ஏற்றுச் செய்யமாட்டார். தொழில் செய்யும் பொழுது அவர்களுக்குத் தளர்ச்சி ஏற்படுவதில்லை. அத்தகைய மாட்சிமை பொருந்தி, அம்மாட்சிமையே உருவாகித் தமக்கென முயலாத வலிய பெருமுயற்சி யுள்ள

8. யாண்டுபல வாக நரையில வாகுதல்
யாங்கா கியரென வினவுதி ராயின்
மாண்டவென் மனைவியொடு மக்களு நிரம்பினர்
யான்கண் டனையரென் னிளையரும் வேந்தனும்
அல்லவை செய்யான் காக்கு மதன்றலை
ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர்யான் வாழு மூரே. புறநா. 191.

வராய்ப் பிறர்க்கென முயல்வோர் இருந்தனர், தமிழ் நாட்டில்.[9]

நீண்ட காலம் வாழச் செய்யும் ஆற்றலுடைய நெல்லிக் கனியைத் தானே உண்ணாது ஔவையாருக்கு அதனை ஈந்து, அவர் நெடிது வாழும்படி செய்தான் அதியமான் நெடுமான் அஞ்சி.[10] தம்பியால் நாடு கொள்ளப்பட்டுக் காட்டில் இருந்த குமணனிடம் பெருந்தலைச் சாத்தனார் பரிசில் வேண்டிவந்தனர். பெருமை பெற்ற பரிசிலன் பரிசில் பெறாது வாடினனாகத் திரும்பிச் செல்லுதல் தனது நாட்டை இழந்த தனினும் மிக இன்னாது என எண்ணினான் குமணன். கொடுப்பதற்கு வேறு பொருள் இல்லாததனால் தன் தலையை வெட்டித் தன் தம்பியிடம் கொடுத்தால் புலவரின் வறுமை தீரும் என உணர்ந்தான் அவ் வள்ளல். உடனே தன் தலையை அரிந்துகொள்ளுமாறு புலவரிடம் வாளைக் கொடுத்தான்.[11]

---

9. உண்டா லம்மவிவ் வுலக மிந்திரர்
அமிழ்த மியைவ தாயினு மினிதெனத்
தமிய ருண்டலு மிலரே முனிவிலர்
துஞ்சலு மிலர்பிற ரஞ்சுவ தஞ்சிப்
புகழெனி னுயிருங் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினுங் கொள்ளல ரயர்விலர்
அன்ன மாட்சி யனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுந ருண்மை யானே.
புறநா. 182.

10. பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியா
தாத னின்னகத் தடக்கிச்
சாத னீங்க வெமக்கீத் தனையே.
புறநா. 91 : 8—11.

11. பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தலென்
நாடிழந் ததனினு நனியின் னாதென
வாடந் தனனே தலையெனக் கீயத்
தன்னிற் சிறந்தது பிறிதொன் றின்மையின்.
புறநா. 165 : 10—13.

கோப்பெருஞ் சோழன் உறையூரிலிருந்து ஆட்சி புரிந்து வருகையில் அவன் மக்கள் இருவரும் சிற்றினச் சேர்க்கையால் தகப்பனுடன் பகைகொண்டு போருக்கெழுந்தனர். தான் அவருடன் போர்செய்து அவரைத் தோல்வியுறச் செய்து, அரசு முழுவதையும் தானே பெறக்கூடியதாய் இருந்த போதும், தன் மக்களுடன் போர் புரிதல் பழி என உணர்ந்து அப்பழிக்கு அஞ்சித் தானகவே போரைக் கைவிட்டான்.[12]

பிறர்க்கென முயலுநர் பலர் இவ்வாறு பரந்த உள்ளம் படைத்தவராக விளங்கினர். ஈர்ந்தூர்க்கிழான் கோயமான் என்பவனிடத்து யாராயினும் சென்று பசி என்று இரந்தால், அவன் தன் ஊர்க்கொல்லனை வருவித்து, அவனுக்குப்புலவரின் உண்ணு வயிற்றைக்காட்டி, தான் சென்று போருடற்றிப் பொருள் கொணர்ந்து அவர்தம் பசி தீர்த்தற்கு உடனே வேல்வடித்துக் கொடுக்குமாறு கேட்பானும்.[13] இவ்வாறு அருள்மணங் கமழும் மெய்வாழ்வு வாழ்ந்தனர் தமிழர்.

கணவனுகிய வேட்டுவன் வேட்டைக்குப் போய் வீட்டிற்குத் திரும்பி வருகின்ருன்; வந்து வீட்டிற்கு வெளியே மர நிழலிலே, அலுத்துத் தூங்குகின்ருன். வீட்டு முற்றத்தில் தினை உலர்த்தப்பட்டிருக்கின்றது. அவ்வீட்டில் அன்றைய வாழ்க்கைக்குத் தேவையான தினையே இருக்கும். இருட்டுச் சந்தையில் தினைவாங்கிச் சேகரித்து வைப்பவர் அல்லர் அவர். அன்று இரா உணவுக்குரிய தினையே அது. வீட்டில் ஒரு பெண் மானும் உண்டு. அதனை அந்நேரத்தில் ஓர் ஆண் மான் அணுகித் தழுவி இன்பத்தில் திளைத்திருந்தது. அவ்வேளையில் முற்றத்தில் காயும் தினையைக் காட்டுக் கோழியும் வேறு

12. புறநா. 213.

13. யாந்தன் னிரக்குங் காலைத் தானெம்
உண்ணு மருங்குல் காட்டித் தன்னூர்க்
கருங்கைக் கொல்லனை யிரக்கும்
திருந்திலை நெடுவேல் வடித்திசி னெனவே.
புறநா. 180 : 10—13.

பறவைகளும் தின்று தீர்க்க முயலுகின்றன. அவை தின்று தீர்த்துவிட்டால் அன்று வீட்டில் பட்டினியே. இத்தகைய நிலையில் மக்கள் பொதுவாகக் கல்லெறிந்து அவற்றைக் கலைப்பர். ஆனால் அவள் சங்ககாலத்துப் பெண். கல்லால் எறிந்தால் களைப்புடன் தூங்கும் கணவன் துயில் எழுந்து விடுவான். பெண்மானுடன் இன்பம் அனுபவிக்கும் ஆண் மானின் கூட்டத்திற்கும் இடையூறு ஏற்பட்டுவிடும். எனவே அன்பே உருவாகிய அப் பெண் வாளா இருந்தாள்.[14] அவ்வளவு அருட் கொழுந்தோடிய மெல் உள்ளம் படைத்தவர் தமிழர்.

வேறோர் இல்லத்திற்கு அறிஞர் சிலர் பசியோடு சென்றனர். இல்லாள் அவரை விரும்பி வரவேற்றாள். இருந்த வரகும் தினையும் இரப்போர்க்குப் பசி ஆற்றியாற்றித் தீர்ந்து விட்டன. திருப்பித் தருவதாகக் கடன் வாங்கியவரும் தேவையான நேரத்தில் திருப்பித் தரவில்லை. அடுத்த விதைப் பிற்கு ஒதுக்கப்பட்ட விதைத் தினை தான் மிஞ்சியிருந்தது. அதைக் கொடுத்துவிட்டால் விதைப்பதற்குத் தினையே இல்லாது போய்விடும். ஆனால் அவள் பிறருக்காக வாழும் பெண். விதைத்தினையை மிகுந்த மகிழ்ச்சியோடு உரலிடத்துப் பெய்து, குற்றியெடுத்து இரவலரை உண் பித்தாள்.[15] இவ்வாறு பொருள்வேண்டி வருவோர்

---

14. கைம்மான் வேட்டுவன் கனைதுயின் மடிந்தெனப்
பார்வை மடப்பிணை தழீஇப் பிறிதோர்
தீர்தொழிற் றனிக்கலை திளைத்து விளையாட
இன்புறு புணர்நிலை கண்ட மனையோள்
கணவ னெழுதலு மஞ்சிக் கலையே
பிணைவயிற் றீர்தலு மஞ்சி யாவதும்
இல்வழங் காமையின். புறநா. 320 : 3—9.

15. சென்றதற் கொண்டு மனையோள் விரும்பி
வரகுந் தினையு முள்ளவை யெல்லாம்
இரவன் மாக்க ளுணக்கொளத் தீர்ந்தெனக்
குறித்துமா றெதிர்ப்பை பெறாஅ மையிற்
குரலுணங்கு விதைத்தினை யுரல்வாய்ப் பெய்து.
புறநா. 333 : 8—12.

அறிவாலும், குணம் செயல்களாலும் மிகத் தாழ்ந்தோரா யினும் அவர்பாலும் அருள் புரிந்து அவர் வேண்டுவன நல்கிப் புரப்பர். இதனை கபிலர் சிறந்த ஓர் உவமை வழியாகத் தெளிவு படுத்துவர். குவிந்த பூங்கொத்தினையும் புல்லிய இலையையும் உடைய எருக்கம்பூவாயினும், அவற்றை ஒருவன் உடைய னாயின் தெய்வங்கள் தாமும் அவற்றை விரும்பேம் என்று கூறமாட்டா. யாதும் அறிவில்லாதாரும், புல்லிய குணமுடை யாரும் செல்லினும் பாரி கைவண்மை செய்தலைக் கடப்பா டாக உடையன்.[16]

வறுமையுற்று வருந்திய ஓர் இரவலன் தன் சுற்றத்தோடு புறப்பட்டு நள்ளி என்பவனின் கண்டீர நாட்டுக்குப் பல கல்லும் கானமும் கடந்து சென்றான். ஒருநாள் வழிநடை வருத்த மிகுதியால் காட்டிடத்தே ஒரு பலாமரத்தின் அடியில் அவனும் அவன் சுற்றத்தாரும் அமர்ந்தனர். மான் கணத்தை வேட்டம் புரிந்து அவற்றின் இரத்தம் தோய்ந்து சிவந்த கழற்காலும் மணி விளங்கும் சென்னியும் உடைய தலைவன் ஒருவன், அவரிடம் சென்று அவர் வருத்தத்தை அவர் முகம் நோக்கித் தேர்ந்து கொண்டான். தன்னுடன் சென்று காட்டகத்தே பரந்திருந்த வில்லுடை இளையர் திரும்பி வருமுன் தன் கையிலிருந்த தீக்கடை கோலால் தீ மூட்டிக் கானிடைக் கொன்ற விலங்கின் ஊனைச் சுட்டு அவரை உண்பித்தான். உண்டு பசி தீர்ந்த மக்கள் மலைச்சாரலில் ஒழுகிய அருவி நீரைப் பருகி அயர்வு நீங்கினர். அப்பொழுது தன்னிடத்து வீறுபொருந்திய நன்கலம் வேறில்லாமையால் மார்பில் அணிந்திருந்த முத்து மாலையையும் முன்கையில் அணிந்திருந்த கடகத்தையும் அவர்களுக்குக் கொடுத்தான். அவனது வள்ளன்மையை

---

16. நல்லவுந் தீயவு மல்ல குவியிணர்ப்
புல்லிலை யெருக்க மாயினு முடையவை
கடவுள் பேணே மென்னா வாங்கு
மடவர் மெல்லியர் செல்லினும்
கடவன் பாரி கைவண் மையே. புறநா. 106.

வியந்து அவன் ஊர் பெயர் முதலியவற்றை அவர்கள் வினவியபொழுது அப்பெரியோன் ஒரு மொழியேனும் விடையாக இயம்பாது போய்விட்டான்.[17] இத்தகைய உயர்ந்த மனப்பான்மையோடு வாழ்ந்தனர் தமிழர். இதனால், பெற்ற பரிசிலுக்கு மகிழ்ந்து, சுற்றத்தை ஊட்டி, தாமும் பொருளைப் பாதுகாவாது உண்டு, உள்ளம் மலர்ந்து வாழ்ந்தனர் மக்கள்.[18]

பண்டைத் தமிழ் மக்கள் மிகைபட உண்ணுதவர்; சிறிதே சினம் உடையவர்; சிலவாகிய சொற்களைச் சொல்லு

---

17. உயங்குபடர் வருத்தமு முலைவு நோக்கி
மான்கணந் தொலைச்சிய குருதியங் கழற்கால்
வான்கதிர்த் திருமணி விளங்குஞ் சென்னிச்
செல்வத் தோன்றலோர் வல்வில் வேட்டுவன்
தொழுதன னெழுவேற் கைகவித் திரீஇ
இழுதி னன்ன வானிணக் கொழுங்குறை
கானதர் மயங்கிய விளையர் வல்லே
தாம்வந் தெய்தா வளவை யொய்யெனத்
தான்ஞெலி தீயின் விரைவனன் சுட்டுநின்
இரும்பே ரொக்கலொடு தின்மெனத் தருதலின்
அமிழ்தின் மிசைந்து காய்பசி நீங்கி
நன்மர னளிய நறுந்தண் சாரற்
கன்மிசை யருவி தண்ணெனப் பருகி
விடுத்த றொடங்கினே னாக வல்லே
பெறுதற் கரிய வீறுசா னன்கலம்
பிறிதொன் றில்லைக் காட்டுநாட் டேமென
மார்பிற் பூண்ட வயங்குகா ழாரம்
மடைசெறி முன்கைக் கடகமோ டீத்தனன்
எந்நா டோவென நாடுஞ் சொல்லான்
யாரீ ரோவெனப் பேருஞ் சொல்லான்.

புறநா. 150 : 4—23.

18. பெற்றது மகிழ்ந்து சுற்ற மருத்தி
ஓம்பா துண்டு கூம்பாது வீசி. புறநா. 47 : 4—5.

தலோடு பல சொற்களைச் சான்றோர் சொல்லக் கேட்டலை உடையவர் ; நுண்ணுணர்வினர் ; பெருங்கொடையாளர் ; கலங்கிய கள்ளோடு தண்ணிய கட்டெளிவை அளிப்பவர் ; கனிந்த தாளிதத்தோடு கூடிய கொழுவிய துவையலைப் பிறருக்கு அளிப்பவர் ; எல்லார்க்கும் பணிவை விரும்பி அவரை வணங்கிய சொல்லால் தழுவிப் பேசும் இன்சொல்லை உடையவர்.[19] இவ்வாறு பலருக்கும் பயன் உண்டாக்கத்தக்க செயல்களைச் செய்து வாழ்ந்தனர் தமிழ்ப் பெருமக்கள்.

உலகின்கண் எல்லாருடைய உள்ளமும் பொருள் ஈட்டற்கண் பேரார்வமுற்று இயங்குகின்றது. நாடுகளுக்குத் தலைமை தாங்கிய வேந்தர் பொதுச்சொற் பெறாது அரசு புரிகின்றனர். காடுகளில் வாழும் விலங்குகளை வேட்டையாடித் திரியும் வேட்டுவர், இரவும் பகலும் தமக்குரிய விலங்குகளைப் படுப்பதையே எண்ணி முயல்கின்றனர். இவர்கள் அனைவரின் உழைப்பு என்னவென்று ஆராயின், இவர்களுக்கு வேண்டுவன உண்டியும் உடையுமே யென்றும், அவற்றுள் உண்பது நாழி உடுப்பவை இரண்டே யென்றும், பிறவகையில் வேற்றுமை இல்லையென்றும் அறியலாம்.[20] இத்தகைய மெய்யுணர்வு பெற்றிருந்தனர் தமிழர்.

---

19. பெரிதாராச் சிறுசினத்தர்
சிலசொல்லாற் பலகேள்வியர்
நுண்ணுணர்விஞற் பெருங்கொடையர்
கலுழ்நனையாற் றண்டேறலர்
கனிகுய்யாற் கொழுந்துவையர்
தாழுவந்து தழூஉமொழியர்
பயனுறுப்ப பலர்க்காற்றி. புறநா. 360 : 1—7.

20. தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய வொருமை யோர்க்கும்
நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான்
கடுமாப் பார்க்குங் கல்லா வொருவற்கும்
உண்பது நாழி யுடுப்பவை யிரண்டே
பிறவு மெல்லா மோரொக் கும்மே.
புறநா. 189 : 1—6.

தகுதிவாய்ந்த அன்புமிக்கோர் இணக்கத்தில் முன்னோர் திளைத்திருந்தனர். பொன்னும் பவளமும் முத்தும் மணியும் தூரமான வெவ்வேறிடங்களிற் பெறப்பட்டபோதும், கோவையாக நல்ல அணிகலங்களைச் செய்யும் காலத்து ஓரிடத்தில் வந்து கூடும். அதுபோலவே சான்றோர்கள் வேறு வேறு நாட்டிற்கு உரியனரேனும் எந்நாளும் ஒரு வழிப்பட்டு ஒன்றுசேர்ந்து இணங்கியிருப்பர் எனப் பிசிராந்தையார் சான்றோரிணக்கத்தை நயம்படக் கூறுவர்.[21] பிடவூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன் என்பவனிடத்து நக்கீரர்க்குப் பேரன்பும் பெருநட்பும் உண்டு. ஒருமுறை நக்கீரர் இவனைக் காணச் சென்றபோது, பெருஞ்சாத்தன் அவரை நன்கு வரவேற்றுச் சீரிய உணவும் பெருஞ் செல்வமும் வழங்கிச் சிறப்பித்தான். இச் சிறப்புகளைச் செய்தும் உள்ளம் அமையாது தன் மனைவியை வருவித்து அவளுக்கு நக்கீரரைக்காட்டி "என்னைப் போல் இவரைப் போற்றுக" என்று பணித்தான்.[22] இதுவும் சான்றோர் இணக்கத்தை நன்கு புலப்படுத்தும்.

---

21. பொன்னுந் துகிரு முத்து மன்னிய
மாமலை பயந்த காமரு மணியும்
இடைபடச் சேய வாயினுந் தொடைபுணர்ந்
தருவிலை நன்கல மமைக்குங் காலை
ஒருவழித் தோன்றியாங் கென்றுஞ் சான்றோர்
சான்றோர் பால ராப
சாலார் சாலார் பாலரா குபவே. புறநா. 218.

22. ஆங்குநின்ற வெற்கண்டு
சிறிதுநில்லான் பெரிதுங்கூறான்
அருங்கலம் வரவே யருளினன் வேண்டி
ஐயென வுரைத்தன்றி நல்கித் தன்மனைப்
பொன்போன் மடந்தையைக் காட்டி யிவனை
என்போற் போற்றென் றோனே யதற்கொண்
டவன்மறவ லேனே பிறருள்ள லேனே.
புறநா. 395 : 26—32.

இம்மெய்யுணர்வுபெற்ற மக்கள் கடமை ஆற்றும்பொழுது இன்னலைப் பாரார். முன்னோர் செல்வம் நிறைய இருந்தும் அங்ஙனம் உள்ளதைச் செலவு செய்து அழிப்பவர், உயிரோடு இருப்பவர் எனக் கருதப்படார். உள்ளதை அழிக்காவிட்டாலும் அதன் பயனை மட்டுமேனும் துய்த்துக்கொண்டு தாம் ஒரு விதத்திலும் முயற்சி செய்யாதிருப்பவரது வாழ்க்கை பிச்சையெடுக்கும் வாழ்க்கையிலும் பார்க்க இழிவானதெனக் கருதப்படும். ஆதலினால் இன்னலைப்பாராது முயற்சிசெய்து தொண்டாற்றுவர் பெரியோர்.[23] பிறவியின் கடமை, உணர்வு விளக்கம் பெறுவது என்பதே தமிழர் கொள்கை. அந்த விளக்கம் நற்செயல்கள் செய்துகொண்டிருக்கும் அளவும் உண்டாகும். எனவே மக்கள் விருப்பப்படியே எல்லாம் நடைபெறவேண்டுமென்னும் முறைமை இல்லை. அரிய தொழிலான யானை வேட்டைக்குச் செல்லும் யானை வேட்டுவன் ஒருவன் யானையை எளிதாகப் பெறவும் கூடும். ஆனால் மிகவும் எளிய தொழிலான குறும்பூழ் வேட்டைக்குப் போவோன் அதுபெறாமல் வெறுங்கையோடு திரும்பவும் கூடும். அதனால் முயற்சி செய்வதொன்றே மக்கள் கருத வேண்டுவது. மற்றவை கருதுவது அவரின் கடமை அன்று. இம்முறையில் நற்செயல்கள் செய்வோரே உயர்ந்தோர் எனக் கொள்ளப்படுவர். உயர்ந்த விருப்பமுடையவராய் இருப்பதே உயர்ந்தோர் என்பதற்கு அடையாளம்.[24]

---

23. உள்ளது சிதைப்போ ருளரெனப் படாஅர்
இல்லோர் வாழ்க்கை யிரவினு மிளிவெனச்
சொல்லிய வன்மை தெளியக் காட்டி.
குறுந். 283 : 1—3.

24. யானை வேட்டுவன் யானையும் பெறுமே
குறும்பூழ் வேட்டுவன் வறுங்கையும் வருமே
அதனால், உயர்ந்த வேட்டத் துயர்ந்திசி னோர்க்குச்
செய்வினை மருங்கி னெய்த லுண்டெனில்.
புறநா. 214 : 4—7.

இன்பமும் துன்பமும் கலந்திருக்கின்றது இவ்வுலக வாழ்க்கை. அத்தகைய உலகில் மக்கள் செய்யவேண்டியது யாது என்ற கேள்வி இடம் பெறுகின்றது. இயன்றவரையில் நல்ல செயல்களையே அறிந்து செய்துகொண்டிருத்தல் வேண்டுமென்பதே இதற்கு விடை.[25] உலகத்தின் இயல்பை நன்முக உணர்ந்த பழந்தமிழர் இம் முடிபையே கொண்டிருந்தனர். இங்ஙனம் எல்லாவற்றிலும் நல்லன கண்டு கொண்டிருந்தமையாலேயே துன்பங்களையும் இனியவாகக் காணும் திறனை மக்கள் உடையவராய் இருந்தனர்.

ஒவ்வொருவரும் அறம் செய்ய இயலாது விடினும், அல்லவை செய்தலை ஒழித்தமையாலேயே தமிழ்நாடு புகழுடன் விளங்கியது. கூற்றுவன் வருவன் என்பது யாவருக்கும் தெரியும். மழுவாகிய கூரிய படைக்கலத்தினையும் கடிய வலியினையும் உடையவன் அவன். அவன் வந்து மக்களைக் கயிற்ருற் கட்டிக்கொண்டு போங்காலத்து அவர்கள் மனமுடைந்து வருந்துவர். இவ்வளவு காலமும் நற்செயல்களிற் கழியாதவருக்கு இனிமேல் நல்லதொன்று செய்வது முடியாமலும் இருக்கும். ஆனல், ஒன்று செய்யலாம். இனிமேல் நல்ல வினைகளைச் செய்தல் இயலாததாய் இருந்தாலும், நல்லதல்லாதவற்றைச் செய்தலை நீக்கிக் கொள்ளுதல் வேண்டும். அதுதான் யாவரும் புகழ்வது; மேலும், நல்லது செய்யும் நெறியில் ஒரு வேளை அவர்களை அது செலுத்தினும் செலுத்தும்; அதற்கு வழி அதுவே என நரிவெரூஉத்தலையார் நயம்பட விளக்குவர்.[26]

---

25. இன்னு தம்மவிவ் வுலகம்
இனிய காண்கித னியல்புணர்ந் தோரே.
புறநா. 194 : 6—7.

26. கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திற லொருவன்
பிணிக்குங் காலை யிரங்குவிர் மாதோ
நல்லது செய்த லாற்றீ ராயினும்
அல்லது செய்த் லோம்புமி னதுதான்
எல்லாரு முவப்ப தன்றியும்
நல்லாற்றுப் படூஉ நெறியுமா றதுவே.
புறநா. 195 : 4—9.

இவ்வுயரிய குறிக்கோள்களைக் கொண்ட தமிழர், தன் முயற்சியின்றிப் பிறர் உழைப்பால் வாழ்ந்து கொழுக்கும் எலியை ஒவ்வாதவராக விளங்கினர். எலி ஒரு நூதனமான விலங்கு. ஈழத்திலே இறப்பர் தேயிலைத்தோட்டம் வைத்துக் கொண்டும் கடும் வட்டிக்குக் காசைக் கடன் கொடுத்துக் கொண்டும் தமது தொந்தியை நிரப்பும் மகான்களிலும் எலிமோசமானது. வயலிலே நெல் விளைந்து அறுவடை நிலைமை எய்திக் கிடக்கின்றது. வயலிலே எலியும் இருக் கின்றது. எலிவளையின் அருகில் கதிர்கள் வளைந்து சாய்ந்து நிலத்தோடு விழுந்து கிடக்கின்றன. வளைந்து கிடக்கும் கதிர்களை ஒவ்வொன்றாகக் கறித்துத் தனது வளையில் நிறையச் சேர்த்து வைத்துக்கொள்கின்றது எலி. அதன் முயற்சி அவ்வளவுதான். பெருமுயற்சிக்கு வேண்டிய உள்ள மேம்பாடு எலியிடம் இல்லை. இம்முயற்சியை உடைய வராய்த் தமிழர் வாழவில்லை. அவர்கள் புலியைப்போல் வாழ்ந்தார்கள். புலி தன் வழியே போய்க்கொண்டிருக் கின்றது. அது விசையாய்ப் பாய்ந்துபோன பாய்ச்சலில் ஒரு பன்றி கீழே விழுந்தது. அஞ்சுதற்குரிய தறுகண்மையை உடைய அந்த ஆண்பன்றி புலியின் இடது பக்கத்திலே வீழ்ந்தது. மேலும் அப்பன்றி புலியின் முயற்சியால் வீழவில்லை ; தற்செயலாகவே விழுந்தது. அதனால் புலிக்குப் பசி இருந்தபோதும் அங்கு அந்தப் பன்றியை கிழித்துத் தின்னவில்லை. அச்செயல் அதற்கு மானக்குறைவாகத் தோன்றியது. எனவே பெரிய மலைப்பிளவுகளிற் பாய்ந்து ஒரு பெரிய ஆண்யானையைத் தனது வலிமை மிகுந்த வலப் பக்கத்தே வீழ்ந்து இறக்கும்படி வீழ்த்தியது ; வீழ்த்தித் தன்பசியை ஆற்றியது. அங்ஙனம் செய்த புலியைப்போல மெலிவில்லாத நினைப்பும் அதற்கேற்ற முயற்சி உரமும் உடையவராய் வாழ்ந்தனர் தமிழர்.[27] முன்னோர் சொத்து,

---

27. விளைபதச் சீறிட நோக்கி வளைகதிர்
வல்சி கொண்டளை மல்க வைக்கும்
எலிமுயன் றனைய ராகி யுள்ளதம்
வளன்வலி யுறுக்கு முளமி லாளரொ

சீதனப்பொருள், நன்கொடை, குதிரைப் பந்தயப்பணம், களவு, சூது, ஏமாற்றம், கடுவட்டி ஆகிய இழிந்த முயற்சிகளால் திரட்டும் பணம் முதலியன கிட்டுமா என்று ஏங்கிக் கிடக்கும் பேடிகளாகிய இன்றைய மக்களின் தன்மைக்கும், புலியின் உயர்ந்த மனப்பான்மை படைத்த பண்டைத் தமிழரின் பண்புக்கும் எவ்வளவு வேற்றுமை உண்டு!

இவ்வாறு பிறர் பொருளை வெளவாது தம்முடைய முயற்சியால் உழைத்த தமிழர் சமூக சேவையைத் தமது கடமையாகப் போற்றினர். மக்கள் இனம் முழுவதும் நலம் பெறல்வேண்டும், அனைவரும் இன்புற்று வாழவேண்டும் என்ற கொள்கை தமிழரிடையே பரவியதனாலேயே 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற மனப்பான்மையும் உண்டாயது. அவர்களுக்குத் தீமை செய்யும் பகைவரில்லை; நன்மை செய்யும் நண்பருமில்லை. ஏனெனில் தீமையும் நன்மையும் பிறர்தர வாரா என்பது அவர் கருத்து. துன்புறுதலும் பின் அது தணிதலும் நன்மை தீமைபோல வருவனவே. உலகில் இழந்து போவது என்பதும் புதிய நிகழ்ச்சியன்று, இயல்பாக நடைபெறுவதே எனக் கருதினர். உயிர்வாழ்தல் இனிதானதென்று அவர்கள் மகிழவுமில்லை; வெறுப்பால் இனியதல்லாதது என்று வருந்தவுமில்லை. இக் காரணங்களினாலேயே தமிழருக்கு எல்லா ஊரும் ஊராகவும், எல்லா மக்களும் உறவினராகவும் இருக்க இடம் உண்டா

---

டியைந்த கேண்மை யில்லா கியரோ
கடுங்கட் கேழ லிடம்பட வீழ்ந்தென
அன்றவ ணுண்ணா தாகி வழிநாட்
பெருமலை விடரகம் புலம்ப வேட்டெழுந்
திருங்களிற் றொருத்த னல்வலம் படுக்கும்
புலிபசித் தன்ன மெலிவி லுள்ளத்
துரனுடை யாளர் கேண்மையொ
டியைந்த வைக லுளவா கியரோ. புறநா. 190.

யிற்று.[28] இவ்வாறு பண்டைத் தமிழர் சமயவாழ்க்கை தந் நலங் கருதாச் சமூகசேவையை அடிப்படையாகக்கொண்டு திகழ்ந்தது. வாழ்க்கை பிறர் நலம் பொருட்டே, சமயத்தின் பொருட்டு அன்று என்ற தமிழர் சால்பு போற்றற்குரியதே.

---

28. யாது மூரே யாவருங் கேளிர்
தீது நன்றும் பிறர்தர வாரா
நோதலுந் தணிதலு மவற்றோ ரன்ன
சாதலும் புதுவ தன்றே வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன்று மிலமே முனிவின்
இன்னா தென்றலு மிலமே. புறநா. 192 : 1—6.

———

பத்தாம் இயல்

# நம்பிக்கைகள்

## (1) பேய்மகளிரும் பேய்களும்

இறந்த மக்களின் புலாலைச் சுடுகாட்டிலும் போர்க்களத்திலும் உண்ணும் பேய்மகளிரைப்பற்றிச் சங்க நூல்கள் பல இடங்களிற் கூறுகின்றன. இக்குறிப்புக்களிலிருந்து மனிதரின் புலாலை உண்ணும் ஒரு மக்கட் கூட்டத்தினர் சங்க காலத்திலோ அல்லது அதற்கு முன்னரோ வாழ்ந்தனரென மக்கள் நம்பினர் என்று கொள்ளலாம். கள்ளிமிகுந்த சுடுகாட்டிலே பகற் காலத்திலும் கூகைகள் கூவும்; பிணஞ்சுடு தீ கொழுந்து விட்டு எரியும்; அகன்ற வாயையுடைய பேய்மகளிர் காண்போர்க்கு அச்சம் உண்டாகும் முறையில் இயங்குவர்.[1] முற்றவும் கெட்டுத் தேய்ந்தழிந்த பல முட்கள் கிடக்கின்ற பக்கத்தில், வேறுபட்ட குரலினையும் வெவ்விய வாயையுமுடைய கூகைகளோடு கூடி, பிணங்களைத் தின்னும் குறுநரிகள் தசை ஒட்டிய பற்களால் நிணத்தைத் தின்றுகொண்டிருக்கும்; பேய்மகளிர் பிணங்களைத் தழுவிப் பற்றிக்கொண்டு, வெள்ளிய தசையைத் தின்பதினால் வெவ்விய புலால் நாறும் உடம்பினை உடையராய், பிணம் வைத்துச் சுடும் களர் நிலத்தில் காலைப் பெயர்த்து வைத்துக் கூத்தாடுவர்.[2]

---

1. களரி பரந்து கள்ளி போகிப்
   பகலுங் கூவுங் கூகையொடு பேழ்வாய்
   ஈம விளக்கிற் பேஎய் மகளிரொ
   டஞ்சுவந் தன்றிம் மஞ்சுபடு சுடுகாடு.
   புறநா. 356 : 1—4.

2. பாறுபடப் பறைந்த பன்மாறு மருங்கின்
   வேறுபடு குரல வெவ்வாய்க் கூகையொடு
   பிணந்தின் குறுநரி நிணந்திகழ் பல்ல
   பேஎய் மகளிர் பிணந்தழூஉப் பற்றி

பொருதுபட்ட வீரரது புண்ணைத் தோண்டி, அவ்வுதிரம் தோய்ந்த சிவந்த கையால் தமது மயிரைக் கோதி, நிறம் மிக்க வடிவையுடைய பேய்மகளிர், மேன்மேலும் கொட்டும் மந்தமான ஓசையை உடைய பறையினது தாளத்திற்கேற்ப ஆடுவர்.[3] பெரிய தலைகள் வெட்டப்பட்டு, மூளையும் நிணமும் கூழ் போலச் சிந்தியுள்ள போர்க்களத்திற் பேய்மகளிர் பிணக் குவியலைச் சூழ்ந்து மொய்த்து நிற்பர்.[4] கோடரி பாய்ந்து வெட்டுதலால் துணிபட்டுக் கிடக்கும் தொடியணிந்த பெரிய கையொன்றினை எடுத்து மேலே உயர்த்தி, அஞ்சாத வீரர் கூட்டத்தில் தன்னுடைய கால்களைச் சுற்றிக்கொள்ளும் குடரை ஒருங்குசேர்த்து எடுத்துப் பேய்மகள் ஆடுவள்.[5] பன்றியின் கோடுபோன்ற வெள்ளிய பற்களாற் கடித்துத் தசையோடு விரவிய வெள்ளிய கொழுப்பைத் தின்று சுவை காண்பவளாய், குடர்களைத் தன் தலையில் மாலையாக அணிந்து, 'யாம் நிரம்ப உண்ணவும் தின்னவும் குறையாத வாறு மிக்க பிணங்களாகிய பெரிய வளங்களைக் கொடுத்த

---

விளரூன் றின்ற வெம்புலான் மெய்யர்
களரி விளக்கின் கால்பெயர்த் தாடி
ஈம விளக்கின் வெருவரப் பேரும்
காடு. புறநா. 359 : 1—8.

3. பொருதாண் டொழிந்த மைந்தர் புண்டொட்டுக்
குருதிச் செங்கைக் கூந்த றீட்டி
நிறங்கிளர் உருவிற் பேஎய்ப் பெண்டிர்
எடுத்தெறி யனந்தற் பறைச்சீர் தூங்க.
புறநா. 62 : 2—5.

4. விழுத்தலை சாய்த்த வெருவரு பைங்கூழ்ப்
பேய்மகள் பற்றிய பிணம்பிறங்கு பல்போர்பு.
புறநா. 369 : 14—15.

5. வடிநவி லெஃகம் பாய்ந்தெனக் கிடந்த
தொடியுடைத் தடக்கை யோச்சி வெருவார்
இனத்தடி விராய வரிக்குட ரடைச்சி
அழுகுரற் பேய்மக ளயர. புறநா. 370 : 22—25.

அரசன் வானத்தின்கண் விளங்கும் பல விண்மீன்களிலும் பல்லாண்டு வாழ்வானாக' என்று அச்சம் பொருந்திய பேய்மகள் பாடிக் குரவைக் கூத்தாடுவள்.[6] போர்க்களத்திலே, பிதுங்கிய கண்ணையுடைய கோட்டான்கள் குழறும் குரலாகிய தாள இசைக்கு ஏற்பக் கொடிய கண்களை உடைய பேய்மகள் ஆடுவள் எனப் பதிற்றுப்பத்தும் கூறும்.[7]

தலை வெட்டப்பட்டு உடல் மட்டும் மிஞ்சிய ஆண்மை மிக்க கவந்தத்தோடு பேய்மகள் காண்போர்க்கு வருத்தத்தைச் செய்வள்.[8] சான்றோர் இருந்த பெரிய அம்பலங்களிலே இரட்டையான அடிகளையும் கடிய பார்வைகளையும் உடைய பேய்மகளிர் உலாவி ஆடுவர்.[9] மேனோக்கி எரியும் நெருப்புச் சாய்ந்தாலொத்த நாவினையும், வெள்யாட்டு மறிகளை அணிந்த காதினையும், கவைத்த அடியினையுமுடைய பேய்மகள் நிணத்தைத் தின்று சிரித்து விளங்கும் பல்லினை உடையவள்.[10]

---

6. களிற்றுக்கோட் டன்ன வாலெயி றழுத்தி
விழுக்கொடு விரைஇய வெண்ணிணச் சுவையினள்
குடர்த்தலை மாலை சூடி யுணத்தின
ஆனாப் பெருவளஞ் செய்தோன் வானத்து
வயங்குபன் மீனினும் வாழியர் பலவென
உருகெழு பேய்மக ளயர.
புறநா. 371 : 21—26.

7. கழல்கட் கூகைக் குழலுகுரற் பாணிக்
கருங்கட் பேய்மகள் வழங்கும். பதிற் 22 : 36—37.

8. தலைதுமிந் தெஞ்சிய வாண்மலி யூபமொ
டுருவில் பேய்மகள் கவலை கவற்ற.
பதிற். 67 : 10—11.

9. அவையிருந்த பெரும்பொதியிற்
கவையடிக் கடுநோக்கத்துப்
பேய்மகளிர் பெயர்பாட. மதுரை. 161—163.

10. எரிமறிந் தன்ன நாவி னிலங்கெயிற்றுக்
கருமறிக் காதிற் கவையடிப் பேய்மக
ணிணனுண்டு சிரித்த தோற்றம் போல.
சிறுபாண். 196—198.

போரிற்பட்ட நல்ல தந்தங்களையுடைய யானைப் பிணங்களின் குருதியைக் குடித்து, சிதறிக்கிடந்த குறைத் தலைப்பிணமும் எழுந்து தன்னோடு ஆடும்படி அவள் துணங்கைக் கூத்தாடுவள்.[11]

போரில் வீழ்ந்த மன்னரின் குருதியைக் காய்ச்சி, வெற்றி கொண்ட வீரர்க்குப் பேய்மகன் வழங்குவான்.[12] போர்வீரர் பலர் பட்ட போர்க்களத்தைச் சித்திரிக்கும்பொழுது இதனை மதுரைக் காஞ்சி பின்வருமாறு குறிப்பிடும்: "சமையல் தொழிலில் வல்ல பேய்மடையன் ஆண் தலைகளினாலாய அடுப்பிலே வயவேந்தர் ஒண்குருதியை உலையாக வைத்துக் காய்ச்சுவான். அந்த ஊன் சோற்றை, வளைகளை அணிந்த தோள்களையுடைய வீரரின் கைகளால் துழவுவான். அடியொதுங்கிய பிற்பெயரா வீரர்க்குத் தான் ஆக்கிய உணவை அளிப்பான்."[13] முன்பு முருகனைப்பற்றிக் கூறிய பகுதியில் இதைப் பற்றிக் குறித்துள்ளோம்.

---

11. பிணக்கோட்ட களிற்றுக்குழம்பி
னிணம்வாய்ப்பெய்த பேய்மகளி
ரிணையொலியிமிழ் துணங்கைச்சீர்ப்
பிணையூப மெழுந்தாட
வஞ்சுவந்த போர்க்களத்தான். மதுரை. 24—28.

12. ஆதிமக்கள் பலர் தாம் கொன்ற வீரரின் உடலுறுப்புக்களை உண்பதனாலே அவ் வீரரின் வலிமையைத் தாம் பெறுவதாக எண்ணினர். இங்குக் குறிக்கப்பட்டது அந் நம்பிக்கையுடன் தொடர்புள்ளதாக இருக்கலாம்.

13. ஆண்டலை யணங்கடுப்பின்
வயவேந்த ரொண்குருதி
சினத்தீயிற் பெயர்புபாங்கத்
தெறலருங் கடுந்துப்பின்
விறல்விளங்கிய விழுச்சூர்ப்பிற்
றொடித்தோட்கை துடுப்பாக
வாடுற்ற வூன்சோறு
நெறியறிந்த கடிவாலுவ
னடியொதுங்கிப் பிற்பெயராப்
படையோர்க்கு முருகயர. மதுரை. 29—38.

அடுத்ததாகப் பேய்களைப் பற்றிய நம்பிக்கையைக் கவனிப்போம். தமிழ்மக்கள் பேய்களுக்குப் பயந்து வாழ்ந்தனர்; பேய்கள் மரங்களிலும் சுடுகாட்டிலும் வாழ்ந்தன எனக் கொண்டனர். சுடுகாட்டகத்தே பிணமிட்டுப் புதைக்கப்பட்ட கவிந்த தாழிகளின் அருகே, சிவந்த செவியினை உடைய கழுகின் சேவலும் பொகுவல் என்னும் பறவையும் அஞ்சாது. வாய் வலிய காக்கையுடனும் கோட்டானுடனும் பேயினத்துடனும் கூடித் தாம் விரும்பியவாறு இயங்குமெனப் புறநானூறு கூறும்.[14] தன்னைப் பற்றப் பட்டாரது உயிரைக் கொள்ளாமல் தனக்கு இடப்பட்ட பலியை மட்டும் ஏற்று நீங்கும் பேயைப் பற்றிப் பதிற்றுப்பத்துக் கூறும்.[15] நள்ளிரவிற் பேய்களும் பிசாசுகளும் நகரத்து வீதிகளில் உலாவுவன எனவும் மக்கள் நம்பினர். பேய்களும், வருத்தும் தெய்வங்களும் வடிவு கொண்டு கழுதுடனே நடுச்சாமத்தில் உலாவித் திரிவன என்னும் மதுரைக் காஞ்சி.[16] கரிகால் வளவனால் அழிக்கப்பட்ட நாட்டிலே குலைந்த மயிருடன் பிணங்களைத் தின்றுகொண்டிருக்கும் பூதக் கூட்டங்களும் பிணந்தின்னிப் பேய்களும் நிறைந்திருந்தன.[17]

---

14. கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த
செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெருவா
வாய்வன் காக்கையுங் கூகையுங் கூடிப்
பேஎ யாயமொடு பெட்டாங்கு வழங்கும்
காடு. புறநா. 238 : 1—5.

15. பலிகொண்டு பெயரும் பாசம் போல.
பதிற். 71 : 23.

16. பானாட் கொண்ட கங்கு லிடையது
பேயு மணங்கு முருவுகொண் டாய்கோற்
கூற்றக் கொஃறேர் கழுதொடு கொட்ப.
மதுரை. 631—633.

17. கணங்கொள் கூளியொடு கதுப்பிகுத் தசைஇப்
பிணந்தின் யாக்கைப் பேய்மக டுவன்றவும்.
பட்டினப். 259—260.

இறந்த கணவனின் பிணத்தைப் பேய்கள் தீண்டாத வண்ணம் மனைவி காத்துக்கொள்ளுதலும் உண்டு. இது புறப் பொருள் இலக்கணத்தில் தொடாக் காஞ்சி என்னும் துறையில் அடங்கும். இனிய கனிகளைத் தரும் இரவமரத்தின் தழையுடனே வேப்பிலையையும் சேர்த்து மனையிறப்பிற் செருகி, வளைந்த கோட்டையுடைய யாழும் வேறு பல வாத்தி யங்களும் இயம்ப, கையை மெல்ல எடுத்து மையாகிய மெழுகினை இட்டு, வெண் சிறு கடுகைத் தூவி, ஆம்பற்குழலை ஊதி, ஓசையைச் செய்யும் மணியை இயக்கி, காஞ்சிப் பண்ணைப் பாடி, நெடிய மனையின்கண் நறுமணம் கமழும் அகில் முதலியவற்றைப் புகைத்து மனைவிமார் கணவருடைய புண்களைக் காப்பரெனப் புறநானூற்றிலிருந்து அறியலாம்.[18]

## (2) கண்ணூறு

இது பேய்களைப் பற்றிய நம்பிக்கையோடு தொடர் புடையது. இவ்விருபதாம் நூற்றாண்டிலும் இந்நம்பிக்கை தமிழ் மக்களிடம் நிலவுகின்றது.[19] குறமகள் கண்ணினால் ஏற்படும் ஊறுகளைத் தீர்ப்பதற்கு நெய்யுடன் வெண்சிறுகடு கையும் தூவுவாள்.[20] அணங்குகள் அணுகாவண்ணம்

---

18. தீங்கனி யிரவமொடு வேம்புமனைச் செரீஇ
வாங்குமருப் பியாழொடு பல்லியங் கறங்கக்
கைபயப் பெயர்த்து மையிழு திழுகி
ஐயவி சிதறி யாம்ப லூதி
இசைமணி யெறிந்து காஞ்சி பாடி
நெடுநகர் வரைப்பிற் கடிநறை புகைஇக்
காக்கம் வம்மோ காதலந் தோழி
வேந்துறு விழுமந் தாங்கிய
பூம்பொறிக் கழற்கா னெடுந்தகை புண்ணே.

புறநா. 281.

19. இந் நம்பிக்கை உலக முழுவதிலும் உண்டு என லாம். *See Elworthy : Thy Evil Eye.*

20. நெய்யொடு ஐயவி யப்பி. திருமுருகு. 228.

காவலாக வெண்கடுகை அப்பி எண்ணெய் தேய்த்து நீராடுவர் பெண்கள்.[21] விழுப்புண்பட்ட வீரனின் புண்ணை ஆற்றும் மகளிர் வெண்சிறு கடுகைத் தூவிப் பேய்கள் அணுகா வண்ணம் காத்ததைப் பற்றி மேலே கூறினோம்.[22] நெய் யுடனே கலந்து ஒளிருகின்ற சிறுவெண் கடுகாகிய திரண்ட விதைகளை மாளிகையிடமெங்கும் பூசுவர்.[23] தீமை பயக்கும் கண்களுக்கு மாற்றாகக் கதவு நிலைகளில் நெய்யும் வெண் கடுகும் பூசும் வழக்கம் இருந்தது.[24] மதுரை மாடங்களின் கதவு நிலைகள் நெய் பல முறையும் பூசப்படுவதால் கறுத் திருந்தன[25] மதில்களின் கதவுக்குக் காவலாகப் புறவாயிலிலே தூக்கப்படும் துலாமரமும் ஐயவி எனப்படும்.[26] இம்மரத்தில் ஐயவி அப்பியதால் இஃது இப்பெயர் பெற்றது போலும்.

## (3) நிமித்தம்

வீட்டிலிருந்து புறப்படுவதற்கும் வீட்டிற்குத் திரும்பி வருவதற்கும் நல்நிமித்தம் பார்ப்பது பழந்தமிழ் மக்களிட மிருந்த ஒரு வழக்கமாகும். மலைபடுகடாத்திற் புலவனைப் புரவலனிடம் ஆற்றுப் படுத்தும் பாணன் பின்வருமாறு கூறு வான்: "பரிசில் விரும்பினையாயின் இன்றே அவனிடம் செல்வாயாக; பெரும் பரிசிலைப் பெறுவது நோக்கமாயின் இதுவே நல்ல நிமித்தமாகும்."[27] "நொய்ய மரமாகிய

---

21. ஐயவி யணிந்த நெய்யாட்டு. நற். 40 : 7.
22. இவ்வியல் 18ம் அடிக் குறிப்புரையைப் பார்க்க.
23. நெய்யோடு இமைக்கும் ஐயவித் திரள்காழ் விளங்கு நகர். நற். 370 : 3 - 4.
24. ஐயவி யப்பிய நெய்யணி நெடுநிலை. நெடுநல். 86.
25. நெய்படக் கரிந்த திண்போர்க் கதவு. மதுரை. 354.
26. ஐயவி தூக்கிய மதில். பதிற். 16 : 4.
27. நன்னன்சேய் நன்னற் படர்ந்த கொள்கையொ டுள்ளினிர் சேறி ராயிற் பொழுதெதிர்ந்த புள்ளினிர் மன்ற. மலைபடு. 64—66.

விறகாலாக்கிய நெருப்பிலே பனி விட்டு நீங்கும்படி இனிதாகத் தூங்கி, விடியற்காலத்தில் நல்ல வேளையில் நிமித்தம் பார்த்துப் போவாயாக'' என அவன் மீண்டும் கூறுவான்.[28] தாம் பரிசில் பெறக் கருதிச் செல்லப்பட்டோர் பரிசில் ஈயாது விட்டாலும் புலவர் அவரைப் பழியார் ; தாம் புறப்பட்டு வந்த வழியிடத்தே உண்டான புள் நிமித்தத்தையும் முழுத்தத்தையுமே பழிப்பரெனப் புறநானூறு கூறும்.[29]

நிமித்தம் புள் எனக் கூறப்படும். முதலிற் பறவைகளால் நிமித்தம் பார்க்கும் வழக்கம் இருந்தது. எனவே பறவையைக் குறிக்கும் புள் என்னும் பெயரால் நிமித்தத்தைக் குறித்தனர். அதன்மேல் வேறு பலவகை நிமித்தங்களுக்கும் புள் என்னும் பெயரே வழங்கலாயிற்று. ஓந்தி நிமித்தமும் அக்காலத்தில் புள் என்றே கூறப்பட்டது. வழிச்செல்லும் மனிதர் நிமித்தமாகக் கொள்ளும்படி முதிய ஆண் ஓணன் பாலை நிலத்தில் தங்கும்.[30] தலைவரைப் பிரிந்த மகளிர் தலைவர் வருவதற்குரிய நல் நிமித்தங்களைப் பார்ப்பர்.[31]

நற்சொல், விரிச்சி எனப்படும். இச்சொல் விரி என்னும் சொல்லுடன் தொடர்புடையதாக இருக்கலாம். எனவே,

---

28. நொய்யமர விறகின் ஞெகிழி மாட்டிப்
பனிசே ணீங்க வினிதுடன் றுஞ்சிப்
புலரி விடியற் புள்ளோர்த்துக் கழிமின்.
மலைபடு. 446—448.

29. புள்ளும் பொழுதும் பழித்த லல்லதை
உள்ளிச் சென்றோர்ப் பழியலர்.
புறநா. 206 : 10—11.

30. வேதின வெரிநி னோதி முதுபோத்
தாறுசென் மாக்கள் புட்கொளப் பொருந்தும்.
குறுந். 140 : 1—2.

31. புள்ளு மோராம் விரிச்சியு நில்லாம்.
குறுந். 218 : 3.

'வருங்காரியத்தை விரிவாய் முன்னே தெரிவிப்பது' என்று இச்சொல்லிற்குப் பொருள் கொள்ளலாம். ஒரு செயலை மேற் கொள்ளுங்கால் அம்முயற்சி இன்ன ஞான்று கைகூடும் என் பதனை அறிதற்கே இவ்வாறு செய்வர்; செய்து, ஆக்கம் பெறுவர். அயல்வீட்டு மாதொருத்தி வேறொருத்தியுடன் உரையாடிக்கொண்டிருக்கும்பொழுது 'அவன் இன்னே வருகுவன்' எனக் கூறினாள். அதனைத் தோழி நல்ல விரிச்சி யாகப் பெற்று 'நம் தலைவனும் இன்னே வருவான்; ஆதலின் நீ வருந்தற்க; அங்ஙனம் கூறிய அம்மாது அமுதம் உண்பாளாக' என்று தலைவிக்குக் கூறி ஆற்றுவித்ததை நற்றிணையிலுள்ள ஒரு பாட்டால் அறியலாம்.[32] திருந்திய ஆபரணம் அணிந்த மகளிர் நன்னிமித்தமாக நிற்பதைக் குறித்து இந்நூல் வேறோரிடத்திற் கூறும்.[33]

பிரிந்த தலைவனது வருகையை விரிச்சி பார்த்து நின்றறி யும் மரபை முல்லைப்பாட்டு விரிவாக விளக்கும்: "யாழி சையை ஒத்த வண்டினம் ஆரவாரிக்கும்படி நறிய பூக்களை யுடைய முல்லையினது அரும்புகள் அவிழ்ந்திருக்கும். அப் பூக்களை நெல்லுடனே தூவித் தெய்வத்தை வணங்கி நிற்பர், நற்சொல் கேட்போர். ஆய்மகள் குளிரால் நடுங்குகின்ற தோளின்மேல் கட்டின கையளாய் நின்று, சிறிய தாம்பாலே கட்டப்பட்ட கன்றின் பசித்துன்பத்தை நோக்கி நிற்கின்றாள். நோக்கி நின்று, 'கொடிய கோலையுடைய இடையர் பின்னே நின்று செலுத்த, நிரம்ப மேய்ந்து, தாய்மாராகிய பசுக்கள் இப்பொழுதே வரும்' என்று கூறுவள். இதனைக் கேட்டுத் 'தலைவர், வஞ்சி சூடிச் சென்று பகைவர் மண்ணைக்கொண்டு, திறையினையும் பெற்று, தாம் எடுத்துக்கொண்ட வினை யினையும் முடித்து வருவர்' என நற்சொல் கேட்போர் தலைவி

32. அமுதம் உண்கநம் அயலில் லாட்டி
கிடங்கி லன்ன........................
..........................................
பெருமலை நாடனை வருஉம்என் றோளே. நற். 65.

33. திருந்திழை மகளிர் விரிச்சி நிற்ப. நற். 40 : 4.

யைத் தேற்றுவர்.''[34] நெல்லும் நீரும் சொரிந்து விரிச்சி கேட்கும் முதுபெண்டிரைப் பற்றிப் புறநானூறும் கூறும்.[35]

வளை இறுகுதலும் நல்நிமித்தமாகக் கருதப்பபடும். சுழித்த சங்குகொண்டு செய்த வளையினுல் விளங்கிய தோள்களும் நெகிழ்ச்சி நீங்கி வளையோடு செறியும் என்பது குறுந்தொகை.[36] மயிர் வளரும் முன்கையிலணிந்த வளைகள் தாமும் நெருங்கும். இதனுற் பெரிய மலைநாடன் விரைவில் வருவான் எனக்கொண்டனர்.[37] நடுப்பகலிலே தும்பி பறப்பதும், இரவில் விளக்கு நில்லாமையும், கூகை தன் குழறு குரலெடுத்து ஒலியா நிற்றலும், பெருந்தூக்கம் வருதலும் கெட்ட நிமித்தங்கள் எனக்கொண்டனர்.[38] விண்ணிடத்தே

---

34. நாழி கொண்ட நறுவீ முல்லை
யரும்பவி ழலரி தூஉய்க் கைதொழுது
பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்பச்
சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றி
னுறுதுய ரலமர னோக்கி யாய்மக
ணடுங்குசுவ லசைத்த கையள் கைய
கொடுங்கோற் கோவலர் பின்னின் றுய்த்தர
வின்னே வருகுவர் தாய ரென்போ
ணன்னர் நன்மொழி கேட்டன மதனு
னல்ல நல்லோர் வாய்ப்புட் டெவ்வர்
முனைகவர்ந்து கொண்ட திறையர் வினைமுடித்து
வருத றலைவர் வாய்வது. முல்லை. 9—20.

35. நென்னீ ரெறிந்து விரிச்சி யோர்க்கும்
செம்முது பெண்டின் சொல்லும்.
புறநா. 280 : 6—7.

36 சுரிவளைப் பொலிந்த தோளுஞ் செற்றும்.
குறுந். 260 : 3.

37. மயிர்வார் முன்கை வளையுஞ் செறூஉம்.
ஐங். 218 : 2.

38. நடுநாள் வந்து தும்பியுந் துவைக்கும்
நெடுநகர் வரைப்பின் விளக்கு நில்லா
துஞ்சாக் கண்ணே துயிலும் வேட்கும்
அஞ்சுவரு குராஅற் குரலுந் தூற்றும்.
புறநா. 280 : 2—5

ஒரு விண்மீன் தீப்பரக்கக் காற்ருற் பிதிர்ந்து கிளர்ந்து வீழ்ந் தால் ஏழாம் நாளில் உலகாளும் வேந்தன் உயிர் நீப்பான் எனக் கருதினர்.[39] எட்டுத் திசையும் எரிகொள்ளி எரிந்து வீழ்தலும், இலையில்லாத நெடுங்கோடு வற்றல் பற்றலும், வெய்ய சுவரையுடைய ஞாயிறு பல இடத்தும் செறிந்து தோன்றுதலும், அஞ்சத்தக்க பறவைகள் குரல் இசைத் தலும், பல்லு நிலத்தின்கண்ணே வீழ்தலும், எண்ணெயை மயிரின்கண்ணே வார்த்தலும், யானை ஏறுதலும், ஆடை யைக் களைதலும் பிறவும் கனவிற் காணப்படுதல் கூடாது; கண்டார்க்குத் தீங்குண்டாம் என நம்பினர்.[40]

பல்லி சொல்லுவதைக் கவனிக்கும் வழக்கமும் அக் காலத்தில் இருந்தது. முள்ளம்பன்றியின் முட்போன்ற பருத்த மயிரையுடைய பிடரையும் சிறிய கண்ணையுமுடைய பன்றியொன்று ஒருநாள் தினைக்கதிரை மேயும் பொருட்டுத் தினைப்புனம் நோக்கிச் சென்று கொண்டிருந்தது. அவ் விடத்தில் வாழும் கானவர் புனத்திற்கு வரும் விலங்குகளை அகப்படுத்தற் பொருட்டு அவை வரும் வழியில் பொறிகளை அமைத்து வைத்திருந்தனர். இப்பன்றி அதனை அறியாது பொறி வைக்கப்பட்டிருக்கும் புழை வழியே சென்று

---

39. கனையெரி பரப்பக் காலெதிர்பு பொங்கி
ஒருமீன் விழுந்தன்ருல் விசும்பி னானே
.........................................
அஞ்சின மெழுநாள் வந்தன் றின்றே
.........................................
மேலோ ருலக மெய்தினன்.
புறநா. 229 : 11—22.

40. திசையிரு நான்கு முற்க முற்கவும்
பெருமரத் திலையி னெடுங்கோடு வற்றல் பற்றவும்
வெங்கதிர்க் கனலி துற்றவும் பிறவும்
அஞ்சுவரத் தகுந புள்ளுக்குர லியம்பவும்
எயிறுநிலத்து வீழவு மெண்ணெ யாடவும்
களிறுமேல் கொள்ளவுங் காழக நீப்பவும்
வெள்ளி நோன்படை கட்டிலொடு கவிழவும்
கனவி னரியன காணூ. புறநா. 41 : 4—11.

புகுந்தது. அப்பொழுது தாழாது விரைந்து நல்ல பக்கத்தி லிருந்து பல்லி இடைவிடாது படபடவென்று ஒலித்தது. அதனைக்கேட்ட பன்றி, அங்கு சென்றுற் கெடுதி உண்டாகு மென்று அஞ்சி, மெல்ல மெல்லப் பின்னே சென்று, மீண்டும் தன் இருப்பிடமான கன்முழையினை அடைந்தது.[41] பன்றியும் விரிச்சி பெற்று ஆக்கம் எய்தியதைக் காண்க.

## (4) குறிபார்த்தல்

குறிபார்க்கும் வழக்கம் சங்க காலத்தில் மிகவும் பரவி யிருந்ததென அறிகின்றோம். அகப்பொருள் இலக்கியத்தில் இவ்வழக்கினைப் பரக்கக் காணலாம். தலைவியினுடைய காம நோயை அறியமாட்டாத தாய் அவள் அடைந்த வேறு பாட்டின் காரணத்தை ஆராயும்பொருட்டுக் கட்டுவிச்சியை அழைத்துக் கட்டுப் பார்ப்பது வழக்கம். கட்டுவிச்சி முறத் தில் நெல்லையிட்டு, அதனை எண்ணி, அதனுற் போந்த சில நிமித்தங்களை அறிந்து, 'இவள் முருகனுல் அணங்கப்பட் டாள்' எனக் கூறுவள். கட்டுவிச்சியர் தெய்வமேறிக் குறி சொல்லுதலும் உண்டு. இவர்களைப் பிற்காலத்தவர் குறத்தியரென அழைப்பர். "சங்கு மணியினுலாகிய கோவை யைப் போன்ற வெண்மையாகிய நல்ல நீண்ட கூந்தலை யுடைய அகவல் மகள்" எனக் குறுந்தொகை குறிப்பிடும்.[42] இதனுல், கட்டுவிச்சியர் நரைமுதாட்டியர் என்பது பெறப் படும்.

---

41. எய்ம்முள் அன்ன பருஉமயிர் எருத்தில்
செய்ம்ம் மேவல் சிறுகட் பன்றி
ஓங்குமலை வியன்புனம் படீஇயர் வீங்குபொறி
நூழை நுழையும் பொழுதில் தாழாது
பாங்கர்ப் பசகத்துப் பல்லி பட்டென
மெல்ல மெல்லப் பிறக்கே பெயர்ந்துதன்
கல்லளைப் பள்ளி வதியும் நாடன். நற். 98 : 1—7.

42. அகவன் மகளே யகவன் மகளே
மணவுக்கோப் பன்ன நன்னெடுங் கூந்தல்
அகவன் மகளே. குறுந். 23 : 1—3.

தலைவன் பிரிந்ததனாலே தலைவியின் நுதலில் பரந்த பசலையை நோக்கித் தாயானவள் சேரியிலுள்ள செம்மையாகிய முதுமையுடைய கட்டுவிச்சியுடன் இல்லம் புகுந்து, முறத்தில் நெல்லைப் பரப்பிக் கட்டுவைத்து, தலைவியை எதிரில் நிறுத்திக் குறி கேட்பளென நற்றிணை கூறும்.[43] குறி பார்க்கும்பொழுது நெல்லை நந்நான்காக எண்ணி, எஞ்சியவை ஒன்று இரண்டு மூன்றளவும் முருகணங்கெனவும், நான்காயின் பிறிதொரு நோயெனவும் கொள்வர். தலைவியின் ஒளி பொருந்திய நகை நெகிழ்ந்த நிலையினைப் பார்த்து, தாய் செயலற்ற உள்ளத்தினளாய், முதுமை வாய்ந்த கட்டுவிச்சியராய பெண்டிரை வினவினாள். அவர் பிரப்பரிசியைப் பரப்பி வைத்து, அது முருகனால் வந்த அரிய வருத்தமெனக் கூறினரென்று அகநானூறு பாடும்.[44] முருகனால் நோய் ஏற்பட்டதோ என்பதை அறிவதற்கு வேலன் குறிபார்ப்பது கழங்கு பார்த்தல் எனப்படும். இதனைப்பற்றி விரிவாக இந்நூலின்கண்ணுள்ள வெறியாட்டு என்னும் பகுதியிற் கூறியுள்ளோம்.[45]

## (5) காக்கையது பலி

உணவு அருந்த முன்னர் உண்ணும் உணவிலே ஒரு பகுதியைக் காகத்திற்கு எடுத்து வைக்கும் வழக்கம் இப்பொழுதும் தமிழ் மக்களிடையே காணப்படும். இவ்வாறு செய்யாது

---

43. நன்னுதல் பரந்த பசலைகண்டு அன்னை
செம்முது பெண்டிரொடு நெல்முன் நிறீஇக்
கட்டிற் கேட்கும் ஆயின் வெறப்பில்.
நற். 288 : 5—7.

44. செறிந்திலங் கெல்வளை நெகிழ்ந்தமை நோக்கிக்
கையறு நெஞ்சினள் வினவலின் முதுவாய்ப்
பொய்வல் பெண்டிர் பிரப்புளர் பிரீஇ
முருக னாரணங் கென்றலின். அகநா. 98 : 7—10.

45. பக்கம் 119—123 பார்க்க.

விடின் துன்பம் நேருமெனக் கருதினர். வளைந்த தென்னைகள் நிறைந்த குளிர்ந்த தோப்புக்களில் வாழும் மக்கள் இட்ட செஞ்சோற்றுப் பலியைக் கருமை நிறம் பொருந்திய காகம் உண்ணும்.[46] காட்டிலுள்ள இடையருக்குரிய பசுநெய்யோடு, முற்றும் ஒருங்கே விளைந்த வெண்ணெல் அரிசியால் ஆக்கிய வெம்மையையுடைய சோற்றைப் பாத்திரங்களில் ஏந்திக் கொடுப்பரெனக் குறுந்தொகை கூறும்.[47]

காக்கை கரைதல் விருந்தினர் (புதியோர்) வரவைக் குறிக்குமெனக் கொண்டனர். எட்டுத்தொகை நூல்களில் இந்நம்பிக்கையைப் பற்றிய பல குறிப்புக்களைக் காணலாம். மேலே குறித்த குறுந்தொகைப் பாட்டில் 'விருந்தினர் வரும்படி கரைதலைச் செய்த காக்கை' என்ற தொடர் வருகின்றது.[48] இப்பாட்டைப் பாடிய புலவர் காக்கை பாடினியார் நச்செள்ளையார் என்பவர். அன்பர் வருவதைக் குறித்து நன்னிமித்தமாகக் காக்கை கரைந்ததைப் பாராட்டி இவர் இச் செய்யுளைப் பாடியதனால் காக்கை பாடினியார் என்ற சிறப்புப் பெயரைப் பெற்றாரெனக் கூறுவர். ஐங்குறு நூற்றுப்பாட்டொன்றில் உடன்போகிய தலைவியின் தாய் ஒருத்தி காகத்தைக் கரையும்படி பின்வருமாறு வேண்டுகின்றாள்: "நல்ல இறகினை உடைய சிறு கருங்காக்கையே! அன்பை உடைய முறைமை பொருந்திய உனது சுற்றத்தோடு நீயும் உண்ணும் பொருட்டுப் பசிய நிணமாகிய உணவைப்

---

46. தாழ்தாழைத் தண்டண்டலைக்
கூடுகெழீஇய குடிவயினாற்
செஞ்சோற்ற பலிமாந்திய
கருங்காக்கை பொருநர். 181—184.

47. பல்லா பயந்த நெய்யிற் றொண்டி
முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோ
றெழுகலத் தேந்தினும். குறுந். 210 : 2—4.

48. விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே.
குறுந். 210 : 6.

பொன்னாற் செய்யப்பட்ட பாத்திரத்தில் வைத்துத் தருவேன்; கொடிய சினம் பொருந்திய வெற்றியமைந்த வேலையுடைய காளையோடும் சென்ற அழகிய கூந்தலை உடையாளை வரும் வண்ணம் கரைவாயாக.''[49] இத்தகைய நம்பிக்கைகள் பல அக்காலத் தமிழரிடையே பரவியிருந்தன.

---

49. மறுவி றூவிச் சிறுகருங் காக்கை
அன்புடை மரபினின் கிளையோ டாரப்
பச்சூன் பெய்த பைந்நிண வல்சி
பொலம்புனை கலத்திற் றருகுவென் மாதோ
வெஞ்சின விறல்வேற் காளையொ
டஞ்சி லோதியை வரக்கரைந் தீமே. ஐங். 391.

---

# பதினோராம் இயல்

# சமூக அமைப்பு

## நில இயற்கைக்கு ஏற்ப அமைந்த மக்கட் பாகுபாடு

பழந்தமிழர் சமுதாயத்திற் பிற்காலத்திலெழுந்தது போலச் சாதிப்பிரிவினை இருந்தமைக்குச் சான்றுகள் இல்லை. மக்கட் பாகுபாடு நில இயற்கையையும் தொழிற் பண்பையும் அடிப்படையாகக் கொண்டே இருந்தது. நில இயற்கைக்கு ஏற்ப அமைந்த மக்கட் பாகுபாடு பின்வருமாறு :—

### (1) முல்லை நிலமக்கள்

ஆடு மாடு மேய்த்தலைத் தொழிலாகக் கொண்ட இம் மக்கள் ஆயர் எனவும், இடையர் எனவும், கோவலர் எனவும் படுவர். அறம் புரியும் நெஞ்சை உடைய ஆயரைப்பற்றிப் புறநானூறு கூறும்.[1] பாலைக் கொணர்ந்துவந்து பாற் சோற்றைப் பெற்று மீண்டு செல்வான் இடைமகன்.[2] குறுகிய காம்பினை உடைய குராமரத்தின் குவிந்த கொத்திலுள்ள வெள்ளிய பூவை ஆடு மேய்த்தலையுடைய ஆய்மகன் அணிவான்[3] பந்தரின்கீழ் இடையன் கொளுத்திய சிறிய சுடரை

---

1. அறவை நெஞ்சத் தாயர். புறநா. 390 : 1.

2. பாலொடு வந்து கூழொடு பெயரும் யாடுடை யிடைமகன். குறுந். 221 : 3—4.

3. குறுங்காற் குரவின் குவியிணர் வான்பூ ஆடுடை இடைமகன் சூட. நற். 266 : 2—3.

யுடைய விளக்கொளியில் பாணர் சூழ்ந்திருப்பர்.[4] கோலினைக் காலுடன் சேர்த்து ஊன்றித் தனியே நிற்கும் இடையன் வாயை மடித்துச் சீழ்க்கையை எழுப்புவான்.[5] கொடிய கோலினையுடைய கோவலரைப்பற்றி நெடுநல்வாடையும்,[6] ஆம்பற் பண்ணை எழுப்பும் கோவலரைப்பற்றிக் குறிஞ்சிப் பாட்டும்,[7] தம் தொழிலன்றிப் பிற தொழிலைக் கல்லாத வளைந்த கோலினையுடைய கோவலரைப்பற்றி அகநானூறும் கூறும்.[8]

முல்லைநில மக்கள் வாழும் இடங்களில் மான்களும் முயல்களும் வான்கோழிகளும் வழங்குவன. அவற்றைக் கொன்று அவர் உண்பர். அத்துடன், பால் தயிர் முதலியவற்றையும், பண்டமாற்றினால் பெறப்படும் தானிய வகைகளையும் உண்பர். அவரின் நிலத்திற்குரிய குடியிருப்பொன்றைப் பெரும்பாணாற்றுப்படை பின்வருமாறு சித்திரிக்கும்: ஆடுகள் உண்பதற்காகத் தூங்கவிடப்பட்ட குழைகள் செறிந்த குறிய கால்களையுடைய குரம்பைகள் அக்குடியிருப்பில் உள்ளன. வாயிலின் பக்கங்களில் அடர்ந்த செடிகள் வளர்ந்துள்ளன. கதவுகள் இறுக்கமான கயிற்றினாற் கட்டப்பட்டுள்ளன. கயிற்றினாற் பின்னப்பட்டு, அதன் மேலே

---

4. வண்காற் பந்தர்
இடையன் பொத்திய சிறுதீ விளக்கத்துப்
பாணரொ டிருந்த. புறநா. 324 : 10—12.

5. தண்டுகா லூன்றிய தனிநிலை யிடையன்
மடிவிடு வீளை கடிதுசென் றிசைப்ப.
அகநா. 274 : 8—9.

6. கொடுங்கோற் கோவலர். நெடுநல். 3.

7. பல்வயிற் கோவல
ராம்பலந் தீங்குழற் றெள்விளி பயிற்ற.
குறிஞ்சி. 221—222.

8. கொடுங்கோற்
கல்லாக் கோவலர். அகநா. 74 : 15—16.

வைக்கோல் பரவப்பட்ட கட்டில்களும் இருக்கின்றன. அக்கட்டிலின் மேல் ஆட்டுத்தோல் விரித்திருக்கின்றனர். அவற்றின்மேற் காவற்காரர் உறங்குவர். ஆடுகள் கட்டப் பட்டிருக்கின்றன. கிராமத்தைச் சுற்றிப் பசுக்கள் நின்று மேயும். பற்றைகளினாலாய வேலியொன்று உண்டு. மெலிந்த வெள்ளாடுகளும் செம்மறி ஆடுகளும் அவ்விடத்தில் தங்கி யிருக்கின்றன.''[9]

கருமைநிறம் வாய்ந்த ஆய்மகள் தயிர் கடையும் ஒலி, புலி உறுமுவது போல இருக்கும். அவள் காளானின் மொட்டுப் போன்ற துளிகளையுடைய சுவை பொருந்திய தயிரைக் கடைந்து நெய் எடுப்பாள். பூவாற் செய்த சுமட்டின் மேலே, தயிர் புள்ளியாகத் தெறித்த வாயையுடைய மோர்ப்பானையை வைத்துக்கொண்டு திரிந்து, காலை நேரத் திலே மோர் விற்பாள் அவள்.[10] ஆயர் இல்லங்களிலே தங்கும் விருந்தினர் நண்டினது சிறிய பார்ப்புத் திரளையொத்த தினை அரிசியாலாகிய சோற்றைப் பாலுடன் பெறுவர்.[11] மந்தைகள்

---

9. குளகரை யாத்த குறுங்காற் குரம்பைச்
செற்றை வாயிற் செறிகழிக் கதவிற்
கற்றை வேய்ந்த கழித்தலைச் சாம்பி
னதளோன் றுஞ்சுங் காப்பி னுதள
நெடுந்தாம்பு தொடுத்த குறுந்தறி முன்றிற்
கொடுமுகத் துருவையொடு வெள்ளை சேக்கு
மிடுமுள் வேலி யெருப்படு வரைப்பின்.
பெரும்பாண். 148—154.

10. ஆம்பி வான்முகை யன்ன கூம்புமுகி
ழுறையமை தீந்தயிர் கலக்கி நுரைதெரிந்து
புகர்வாய்க் குழிசி பூஞ்சுமட் டிரீஇ
நாண்மோர் மாறும். பெரும்பாண். 156—160.

11. மடிவாய்க் கோவலர் குடிவயிற் சேப்பி
னிருங்கிளை ஞெண்டின் சிறுபார்ப் பன்ன
பசுந்தினை முரல் பாலொடும் பெறுகுவீர்.
பெரும்பாண். 166—168.

மேயும் பசும் புற்றரைகளில் இளம் ஆய்மகளிருடன் கைகோத்து ஆடுவது இளம் ஆயருக்கு இன்பமான பொழுது போக்கு. இத்தகைய பொழுதுபோக்குச் சேரி யென்னும் சிறு குடியிருப்புக்களில் சிறந்திருக்கும். சேரி என்ற சொல் இக் காலத்திலும் புதுச்சேரி போன்ற இடப் பெயர்களில் அமைந்துள்ளது.

## (2) குறிஞ்சி நில மக்கள்

மலை நாட்டில் வாழும் மக்கள் குறவர் எனப்படுவர். குறவர் என்ற சொல் மலைவாழ்நர், காட்டிலே வாழ்பவர், பாம்பாட்டிகள், சாத்திரம் சொல்பவர் முதலியோரை இக் காலத்திற் குறிக்கும். சங்க காலத்திற் குறிஞ்சி நில மக்களைக் குறிப்பதற்கே இச்சொல்லை வழங்கினர். இக்குறவர் வாழ்ந்த இடங்களிற் சந்தன மரம் மிக்க காடு உண்டு. அக் காட்டிற் புலியும், கரடியும், யானையும் திரியும் ; அழகு மிக்க மயிலும், கூட்டங் கூட்டமாக உலாவும்.

குறிஞ்சி நிலத்திற் காணப்படும் விழுமங்களைக் கூறவந்த குறிஞ்சிப் பாட்டு ஆசிரியர் அந் நிலத்தில் உலாவும் விலங்குகள் முதலியவற்றைப் பின்வருமாறு குறிப்பிடுவர். "முழை இடங்களிலே தங்கும் புலியும், யாளியும்,[12] கரடியும், எருதும், யானையும், வலியினூற் கெடுக்கும் தறுகண்மையை உடைத்தாகிய வெவ்விய சினத்தையுடைய உருமேறும், கொடுந் தெய்வமும், இரைதேடித் திரியும் பாம்பும், போதற் கரிய சுழியிடத்தே திரியும் வளைந்த தாளையுடைய முதலையும் இடங்கரும் கராமும்,[13] வழிபறிப்பார் கொன்று குவிக்கும் இடங்களும், பிசாசும், பெரும்பாம்பும் போன்ற பல இடும்பைகளை உடையது மலையிடம்."[14]

---

12. யானையின் தந்தமும் துதிக்கையும் சிங்கத்தின் முகமும் உடையதாகக் கருதப்படும் விலங்கு.
13. இவை மூன்றும் சாதி விசேடம்.
14. அளைச்செறி யுழுவையு மாளியு முளியமும்
புழற்கோட் டாமான் புகல்வியுங் களிறும்

தினையே குறிஞ்சி நிலத்தில் விளையும் முக்கிய தானியம் ஆகும். "குறவர் தம் உழைப்பின் பயனான முதிர்ந்த தினையைக் காவல் செய்வர்; அவர் உயர்ந்த பரணிலே ஏறி, மலையிடங்களிற் செறிந்த காடுகளில் வாழும் யானைகள்மீது 'கவணுமிழ் கற்களை' வீசுவர். அக் கற்கள் யானைகளின் பகைத்த நிலையைக் கெடுத்து உயிரைப் போக்கும் முறைமையாலே கூற்றத்தை ஒப்பன" என மலைபடுகடாம் கூறும்.[15] அக் கற்கள் அவரையின் குறுந் தளிரை உண்டு நிற்கும் காட்டுப் பசுக்களைத் துரத்துவனவென்றும்,[16] மலைவாழ்நரால் தோண்டப்பட்ட குழிகளில் வீழும் பன்றிகளைக் கொல்வன என்றும்[17] கூறப்படும்.

---

வலியிற் றப்பும் வன்கண் வெஞ்சினத்
துருமுஞ் சுரு மிரைதே ரரவமு
மொடுங்கருங் குட்டத் தருஞ்சுழி வழங்கும்
கொடுந்தாண் முதலையு மிடங்கருங் கராமு
நூழிலு மிழுக்கு மூழடி முட்டமும்
பழுவும் பாந்தளு முளப்படப் பிறவும்
வழுவின் வழாஅ விழும மவர்
குழுமலை விடரக முடையவா லெனவே.
குறிஞ்சி. 252—261.

15. புலந்துபுனிறு போகிய புனஞ்சூழ் குறவ
ருயர்நிலை யிதண மேறிக் கைபுடையூஉ
வகன்மலை யிறும்பிற் றுவன்றிய யானைப்
பகனிலை தளர்க்குங் கவணு மிழ் கடுங்க
லிருவெதி ரீர்ங்கழை தத்திக் கல்லெனக்
கருவிர லூகம் பார்ப்போ டிரிய
வுயிர்செகு மரபிற் கூற்றத் தன்ன
வரும்விசை தவிராது மரமறையாக் கழிமின்
மலைபடு. 20.—210

16. மணிப்பூ வவரைக் குரூஉத்தளிர் மேயு
மாமாக் கடியுங் கானவர் பூசல்.
மதுரை. 292—293.

17. சேணோ னகழ்ந்த மடிவாய்ப் பயம்பின்
வீழ்முகக் கேழ லட்ட பூசல். மதுரை. 294—295.

மேலே குறித்த குறவர், தொழில் காரணமாகத் தாம் வாழ்ந்த மலைநிலப் பகுதியை விட்டுச் செழிப்பான நன்செய் நிலப் பகுதிக்கு வந்தவராக இருக்கலாம். பரண்மேல் நின்று காக்கவேண்டுமென்றால் வயல் பரந்த நிலப் பரப்பாக இருத்தல் வேண்டும். மேலும், மலையடிவாரங்களிலுள்ள பரந்த நிலங்களிலேதான் பன்றி, யானை முதலிய விலங்குகள் உலாவும். மேற்கூறிய செய்திகள் யாவும் தென்னிந்தியத் தட்சிண தேச நிலத்து வாழ்க்கை முறைமையை நினைப்பூட்டுகின்றன.

"பெண் நாய் பிடித்த உடும்பின் இறைச்சியையும், ஓடி வரும் விசையைக் கெடுத்துக் கொன்ற கடமானின் பசிய கொழுப்பையுடைய பன்றியின் தசையையும் உண்டு, அதன் பின்னர் முற்றிய தேனாற் செய்யப்பட்ட தெளிந்த கள்ளை மூங்கிற் குழாயுள்ளே விட்டு அருந்துவீராக. அடுத்து, நெல்லாற் சமைத்த கள்ளையும் உண்ணுவீராக. கடைசியாக அருவி தந்த செவ்வியழிந்து உதிர்ந்த பலாவின் விதையாலாகிய மாவையும், ஓட்டையுடைய புளியம் பழத்தையும் மோருக்கு அளவாகக் கலந்து குறமகள் மூங்கிலரிசியாலாகிய சோற்றைத் தருவாள்; அதனையும் உண்பீராக" என மலைபடுகடாம் கூறும்.[18] மலை நிலத்து மக்கள் உண்ணும் உணவு இவையே.

---

18. அருவி தந்த பழஞ்சிதை வொண்காழ்
வருவிசை தவிர்த்த கடமான் கொழுங்குறை
முளவுமாத் தொலைச்சிய பைந்நிணப் பிளவை
பிணவுநாய் முடுக்கிய தடியொடு விரைஇ
வெண்புடைக் கொண்ட துய்த்தலைப் பழனி
னின்புளிக் கலந்து மாமோ ராகக்
கழைவளர் நெல்லி னரியுலை யூழ்த்து
வழையமை சாரல் கமழத்துழைஇ
நறுமல ரணிந்த நாறிரு முச்சிக்
குறமக ளாக்கிய வாலவிழ் வல்சி.

மலைபடு. 174—183

பல குடிசைகள் கொண்டது ஒரு கிராமம். அவ்வாறு அமைந்த கிராமம் சிறுகுடி[19] அல்லது குறிச்சி எனப்படும். பெரிய மலையினிடத்து வீழும் அருவி பாறைகளின் வெடிப்புக் களில் ஒலிக்கும் பல மலரையுடைய சாரலிலுள்ள சிறுகுடி என்றும்,[20] மேகங்கள் விளையாடுதற் கிடமாகிய மலையைச் சேர்ந்த சிறுகுடி யென்றும்,[21] வேங்கை மரத்தின் மலர் மணம் வீசும் சிறுகுடி என்றும்,[22] காந்தளையுடைய அழகிய சிறுகுடி யென்றும்[23] குறுந்தொகை கூறும். இக்காலத்திலும் தூத்துக்குடி, பனைக்குடி போன்ற இடப் பெயர்களில் குடி என்பது விகுதியாக அமைந்திருப்பது கவனித்தற்குரியது. கிராமப் பகுதிகளைக் குறிக்க ஈழத்தின் வடபகுதியில் குறிச்சி என்ற சொல் இப்பொழுதும் வழங்கும். தனக்காரக் குறிச்சி, இமையாணன் குறிச்சி, வென்றிபாகுதேவன் குறிச்சி என்ற இடப் பெயர்களில் இச்சொல் அமைந்திருப்பதைக் காணலாம்.

## (3) மருத நில மக்கள்

இவர் நீர்வளம் மிக்க நிலப் பரப்பில் வாழும் உழவர், உழத்தியர், கடையர், கடைசியர் முதலியோராவர். பெரும் பாணாற்றுப்படை,[24] மதுரைக்காஞ்சி,[25] மலைபடுகடாம்[26]

19. செழும்பல் யாணர்ச் சிறுகுடி. மலைபடு. 156.
20. மால்வரை யிழிதருந் தூவெள் ளருவி
கன்முகைத் ததும்பும் பன்மலர்ச் சாரற்
சிறுகுடி. குறுந். 95 : 1—4.
21. மழைவிளை யாடுங் குன்றுசேர் சிறுகுடி. குறுந். 108 : 1.
22. வேங்கை கமழுமெஞ் சிறுகுடி. குறுந். 355 : 6.
23. காந்தளஞ் சிறுகுடி. குறுந். 373 : 7.
24. பெரும்பாண். 206—246.
25. மதுரை. 246—270.
26. மலைபடு. 100—185.

முதலிய நூல்களில் மருத நில இயற்கையும், அந்நில மக்களின் வாழ்க்கை முறை, தொழிற் பண்பு முதலியனவும் விரிவாகக் கூறப்படும். மருத நிலம் பணையெனப் பல இடங் களிற் குறிக்கப்படும்.[27] பணை என்ற சொல்லிற்கு 'செழிப் புள்ள நிலம்', 'வளமுள்ள மண்' எனக் கருத்துக் கொள்ளலாம். உழவர் களமர் எனவும் படுவர். களம் என்பதன் பொருள் இடம் என்பது. இடம் இங்கு நெல் வயலைக் குறிக்கும். வேலை செய்து களைத்துச் சேற்றில் வீழ்ந்த எருதுகளைத் தூக்கும் கள்ளார் களமரின் ஆர்ப்பொலியைப் பற்றி மதுரைக்காஞ்சி பாடும்.[28] இவர் அரிக்கப்பட்ட முதிர்ந்த விரும்பத்தக்க மதுவை ஆமை இறைச்சியுடன் வேட்கை தீர உண்பர்.[29]

மருத நிலத்துப் பெருங்குடியிருப்புக்கள் ஊர் எனப்படும். பசி அறியாத இல்லங்களையுடைய பேரூர்களைப் பற்றிப் பெரும்பாணாற்றுப்படை கூறும்.[30] வேளாண்மையே அவ்வூர் மக்களுடைய முக்கியமான தொழில். அவர் நெல் விளைவிக்கும் முறைமையைப் பெரும்பாணாற்றுப்படை விரிவாக வருணிக்கும். விதைத்தல், களை பிடுங்குதல், அறு வடை செய்தல் முதலிய நிகழ்ச்சிகளை அந்நூல் குறிக்கும். நெல் விளைவித்தலில் அந்நூல் கூறும் வினைவகைகளைப் பின் வருமாறு தொகுத்து உரைக்கலாம்:—

---

27. மதுரை. 270 ; பெரும்பாண். 242.

28. அள்ளற் றங்கிய பகடுறு விழுமங்
கள்ளார் களமர் பெயர்க்கு மார்ப்பே.
மதுரை. 259—260.

29. களமர்க் கரித்த விளையல் வெங்கள்
யாமைப் புழுக்கிற் காமம் வீட வாரா.
புறநா. 212 : 2—3.

30. தொல்பசி யறியாத் துளங்கா விருக்கை
மல்லற் பேரூர். பெரும்பாண். 253—254.

(1) மாடுகளினுல் நிலத்தை மிதித்தல்.[31]

(2) உழுத நிலத்தைக் காலால் மட்டம் படுத்துதல்.[31]

(3) நாற்று நடுதல்.[32]

(4) தொடுப்பினுற் களே பறித்தல்.[33]

(5) அறுவடை செய்தல்.[34]

(6) நெற்கட்டுக்களேக் களத்திற் சேர்த்தல். இத்துடன் தெய்வங்களுக்குப் பலி கொடுத்தலும் நிகழும்.[34]

(7) சூடு முதித்தல்.[34]

(8) காற்றிலே தூற்றுதல்.[34]

---

31. பைஞ்சாய் கொன்ற மண்படு மருப்பிற்
காரேறு பொருத கண்ணகன் செறுவி
னுழாஅ நுண்டொளி நிரவிய வினேஞர்.
பெரும்பாண். 209—211.

32. முடிநா றழுத்திய நெடுநீர்ச் செறு.
பெரும்பாண். 212.

33. தொடுப்பெறிந் துழுத துளர்படு துடவை
யரிபுகு பொழுதின். பெரும்பாண். 201—202.

34. நீங்கா யாணர் வாங்குகதிர்க் கழனிக்
கடுப்புடைப் பறவைச் சாதியன்ன
பைதற விளேந்த பெருஞ்செந் நெல்லின்
றூம்புடைத் திரடா டுமித்த வினேஞர்
பாம்புறை மருதி னேங்குசினே நீழற்
பலிபெறு வியன்கள மலிய வேற்றிக்
கணங்கொள் சுற்றமொடு கைபுணர்ந் தாடுந்
துணங்கையம் பூதந் துகிலுடுத் தவைபோற்
சிலம்பி வானூல் வலந்த மருங்கிற்
குழுமுநிலேப் போரின் முழுமுத றெலேச்சிப்
பகடூர் பிழிந்த பின்றைத் துகடப
வையுந் துரும்பு நீக்கிப் பைதறக்
குடகாற் றெறிந்த குப்பை.
பெரும்பாண். 228—240.

பழைய காலத்தில் நிகழ்ந்த நெற் செய்கையின் செல்வாக்கை மேற்கூறியன விளக்கும். நாற்று நடுகை நெற் செய்கைக்கே சிறப்பு வாய்ந்தது. நாற்று நடுதலைப்பற்றி முதன் முதற் கூறும் நூல் பெரும்பாணாற்றுப்படையே. நெல் மிதிக்குமிடம் களம் எனப்படும்.

ஏரிகளிலும் கிணறுகளிலுமிருந்து நெல் வயல்களுக்கு நீர் இறைத்தனர். இரண்டாம் கரிகாலன் ஏரிகள் வெட்டி நிலத்தை வளம்படுத்தினனென்று புலவர் உருத்திரன் கண்ணனார் கூறுவர்.[35] வயலுக்கு நீர் பாய்ச்சுவதில் மூன்று வழிகள் இருந்தன. சிலர் வரிசையாக நின்று குளங்களிலிருந்து பட்டையினால் இறைத்து வயலிலே நீர் பாய்ச்சுவர்; அவ்வாறு இறைக்கும்போது பாட்டுக்கள் பாடுவர்.[36] மாடுகளைக் கொண்டு ஆம்பி (பன்றிப்பத்தர்) மூலம் இறைக்கும் வழக்கமும் இருந்தது.[37] துலா அமைத்துப் பூட்டைப் பொறியினாலும் நீர் இறைப்பர்.[38]

செந்நெல்லும் வெண் நெல்லுமே இந்நிலத்து மக்களுடைய முக்கியமான உணவாக இருந்தன. செந்நெல் சிறிது மஞ்சள் நிறமுடைய சிறந்த தானியமாகும். வெண்ணெல் என்பது ஒருவகையான காட்டரிசி. "மருத நிலத்திலே தங்குவீராயின் மடியா வினைஞர் தந்த வெண்நெல்லும் வதக்கப்பட்ட 'மனைவாழ் கோழி' இறைச்சியும் பெறுவீர்" எனப் பாணன் ஒருவன் கூறுகின்

---

35. குளந்தொட்டு வளம்பெருக்கி. பட்டினப். 284.

36. நீர்த்தெவ்வு நிரைத்தொழுவர்
பாடுசிலம்பு மிசை மதுரை. 89—90.

37. ஏற்றத்
தோடுவழங்கு மகலாம்பி. மதுரை. 90—91.

38. மென்றொடை வன்கிழார். மதுரை. 93.

றுன்.[39] "கரும்பின் தீஞ்சாறும் அங்கு மிசைமின்" என்று அவன் மீண்டும் கூறுகின்றுன்.[40]

## (4) நெய்தல் நில மக்கள்

மீன் பிடிப்பதே இவர்கள் செய்யும் தொழிலாகும். கரையோரங்களில் இவர்கள் வாழ்ந்த குடியிருப்புக்கள் பட்டினம் எனப்படும்; சிறு குடியிருப்புக்கள் பாக்கம் எனப்படும். குளிர்ச்சி பொருந்திய நீரையுடைய பட்டினம் என்று சிறுபாணுற்றுப்படை கூறும்.[41] கள்ளாகிய உணவினையருந்தும் குடிகளைக் கொண்ட பாக்கம் என மதுரைக்காஞ்சியும்,[42] செருக்கினையுடைய பல குடி எழுந்திருத்தற்குக் காரணமான பகையை அறியாத பாக்கம் எனப் பட்டினப்பாலையும்,[43] துறைக்கு அணித்தாயுள்ள பாக்கம் என நற்றிணையும்[44] செம்படவர் ஊராகிய பாக்கத்தைச் சிறப்பித்துக் கூறுவன.

பட்டினம் என்னுஞ் சொல் இப்பொழுது வழக்கொழிந்து விட்டது எனலாம். சென்னைப்பட்டணம் என்பதிற்போலப் பட்டணம் என்ற சொல்லே பெரும் நகரங்களைக் குறிக்க இப்பொழுது வழங்கும். செம்படவர் வாழும்

---

39. மடியா
வினைஞர் தந்த வெண்ணெல் வல்சி
மனைவா ழளகின் வாட்டொடும் பெறுகுவிர்.
பெரும்பாண். 254-256.

40. கரும்பின் றீஞ்சாறு விரும்பினிர் மிசைமின்.
பெரும்பாண். 262.

41. பனிநீர்ப் படுவிற் பட்டினம். சிறுபாண். 153.

42. கட்கொண்டிக் குடிப்பாக்கத்து. மதுரை. 137.

43. விலங்குபகை யல்லது கலங்குபகை யறியாக்
கொழும்பல்குடிச் செழும்பாக்கத்து.
பட்டினப். 26—27.

44. துறைநணி யிருந்த பாக்கமும். நற். 101 : 5.

குடியிருப்புக்களே இவ்வாறு பெரும்பட்டணங்களாகச் சிறந்திருத்தல் வேண்டும். இதற்கு அச்சிறு நகரங்களில் வணிகம் பெருகியமையை ஒரு காரணமாகக் கூறலாம். இக்காலத்திலேயும் கரையோரங்களிலுள்ள நகரங்களே பட்டணம் என வழங்கும். விசாகப்பட்டணம், நாகப்பட்டணம் என்ற இடங்களின் பெயர்கள் கவனிக்கத்தக்கன. உள்நாட்டு நகரங்களாகிய தஞ்சாவூர் முதலியனவே ஊர் என்ற சொல்லை இறுதியாக உடையன. இவற்றிலிருந்து பட்டணம் என்று முடியும் பெயரை உடையன தொடக்கத்தில் செம்படவர் நகரங்களாக இருந்தனவென்பதும், ஊர் என்று முடிவன கமத் தொழிலிற் சிறந்த நகரங்களாக இருந்தனவென்பதும் புலனாகும்.

நெய்தல் நிலத்து மக்களை நுளையர், பரதவர், வலைஞர் எனப் பலவாறு அழைப்பர். பெரிய தோளினையும், சந்திரன் விரும்புவதற்குக் காரணமான மறுவற்ற அமைதி பொருந்திய முகத்தினையும், முனையினை உடைத்தாகிய வேல் போலும் பார்வையினையும் உடைய நுளைமகளைப்பற்றிச் சிறுபாணாற்றுப் படையிலிருந்து அறியலாம்.[45] நுளையர் என்ற சொல்லின் அடிப்பொருள் தெரியவில்லை. இஃது இப்பொழுது 'குறைந்த' 'இழிவான' என்ற கருத்துக்களில் வழங்கும். பரதவர் என்ற சொல் 'தொகுதி' 'பரந்த' என்ற பொருள் களையுடையபரப்பு என்னுஞ் சொல்லுடன் தொடர்புடையதாக இருக்கலாம். கடலிற் செல்வோர் என அதற்குப் பொருள் கூறலாம். வளைந்த திமிலைக்கொண்டு கடலிலே செல்லும் பரதவர் நெடுங்கால் மாடங்களில் விடியற் காலத்தும் அவியாது விளங்கும் விளக்குகளைப் பார்ப்பரெனப் பட்டினப்பாலை கூறும்.[46]

---

45. பெருந்தோண்
மதியேக் கறூஉ மாசறு திருமுகத்து
நுதிவே னோக்கி னுளைமகள். சிறுபாண். 156—158.

46. நெடுங்கான் மாடத் தொள்ளெரி நோக்கி
கொடுந்திமிற் பரதவர் குரூஉச்சுட ரெண்ணவும்.
பட்டினப். 111—112.

தெளிந்த கடற்றிரையின் மேலே பாயும் திண்ணிய திமிலையுடைய வலிய பரதவரெனப் புறநானூறு பாடும்.[47] கொல்லுந் தொழிலிற் பொலிவு பெற்ற கூரிய முகத்தை யுடைய எறிந்துகொல்லும் எறி உளியையும், வேகம் கொண்ட வளைந்த மீன் படகையும் உடைய பரதவரைப் பற்றிக் குறுந்தொகையும் கூறும்.[48] வலைகொண்டு மீன் பிடிப்போர் வலைஞர் எனப்படுவர். தான் பிடித்த மீனை விற்கும் வலைஞனைப்பற்றி மதுரைக் காஞ்சி மூலம் அறியலாம்.[49] மீன் புரளும் முற்றத்தையுடைய வலைஞரைப்பற்றிப் பட்டினப் பாலை பாடும்.[50] மீன் பிடிப்போர் இப்பொழுது கரையார் எனப்படுவர். (கடற்கரையோரத்தில் வாழ்பவர்.) அவர் களின் தொழிலில் உயிர் நீக்கம் நிகழ்வதால் அவர்கள் பிற்காலத்தில் குறைந்த சாதியினரெனக் கருதப்பட்டனர்.

மீன் பிடிப்போருடைய குடிசைகள் பின்வருமாறு பெரும்பாணாற்றுப்படையிற் சித்திரிக்கப்படும்: "வஞ்சி மரத்தின் கொப்புகளாலும் வெண் காஞ்சியின் கொப்பு களாலும் குறுகிய குடிசைகள் கட்டப்பட்டிருக்கின்றன. வரிச்சு தாழை நாராற் கட்டப்பட்டு, ஒழுங்காக உள்ளன. இக்குடிசைகள் தருப்பைப் புல்லினால் வேயப்பட்டவை. சுரைக்காய் முதலியவற்றின் கொடி தவழும் மணற் பரப்

---

47. தெண்கடற்றிரை மிசைப்பாயுந்து
திண்டிமில் வன்பரதவர். புறநா. 24 : 3—4.

48. கொல்வினைப் பொலிந்த கூர்வா யெறியுளி
முகம்பட மடுத்த முளிவெதிர் நோன்காழ்
தாங்கரு நீர்ச்சுரத் தெறிந்து வாங்குவிசைக்
கொடுந்திமிற் பரதவர். குறுந். 304 : 1—4.

49. வள்ளை நீக்கி வயமீன் முகந்து
கொள்ளை சாற்றிய கொடுமுடி வலைஞர்.
மதுரை. 255—256.

50. வலைஞர் முன்றின் மீன்பிறழவும்.
பட்டினப். 197.

பினையும் வளைந்த புன்னையினது கொப்பினைக் கால்களாகவும் கொண்ட குடிசைகளின் முற்றத்தே மீன் கூடைகள் இருக்கும். இவ்விடத்தில் இளையவரும் முதியவரும் சுற்றத்துடன் கூடியிருப்பர்.''[51]

வலைஞர் இல்லத்திலே தங்கும் விருந்தினர் பாம்பு உறையும் புற்றின்கண் கிடக்கும் புற்றும் பழஞ் சோற்றையொக்கும் நல்ல நென்முளையின் மா கலக்கப்பெற்ற குற்றாத கொழியலரிசிக் கூழைப் பெறுவர். அக்கூழ், அகன்ற வாயையுடைய தட்டுப் பிழாவிலே உலர ஆற்றப்பட்டது. விரலாலே அலைத்துப் பின்னர் இரண்டு பகலும் இரண்டு இரவும் இனிமை பிறக்கும்படி புளிக்க வைக்கப்பெற்ற கள்ளையும் பெறுவர். இவற்றுடன் புலராத மீன்பொரியலையும் பெறுவர்.''[52]

## (5) பாலை நில மக்கள்

இவர் பாலைவனத்திலும் காட்டு நிலங்களிலும் வாழ்பவர். இவருடன் கழுகுகளும் புறுக்களுமே வாழ்வன.

---

51. வேழ நிரைத்து வெண்கோடு விரைஇத்
தாழை முடித்துத் தருப்பை வேய்ந்த
குறியிறைக் குரம்பைப் பறியுடை முன்றிற்
கொடுங்காற் புன்னைக் கோடுதுமித் தியற்றிய
பைங்காய் தூங்கும் பாய்மணற் பந்த
ரிளையருங் கிளையுடன் றுவன்றி.
பெரும்பாண். 263—268.

52. கொடுமுடி வலைஞர் குடிவயிற் சேப்பி
னவையா வரிசி யங்களித் துழவை
மலர்வாய்ப் பிழாவிற் புலர வாற்றிப்
பாம்புறை புற்றிற் குரும்பி யேய்க்கும்
பூம்புற நல்லடை யளைஇத் தேம்பட
வெல்லையு மிரவு மிருமுறை கழிப்பி
வல்வாய்ச் சாடியின் வழைச்சற விளைந்த
வெந்நீ ரரியல் விரலலை நறும்பிழி
தண்மீன் சூட்டொடு தளர்தலும் பெறுகுவிர்.
பெரும்பாண். 274—282.

வேட்டையாடுதலையும், வழிப்பறி செய்தலையும் தொழிலாகக் கொண்ட இம்மக்கள் எயினர், மறவர், வேடர் எனப் பல பெயர் பெறுவர். குறும்பு என்னும் குடிசைகளில் வசித்தன ராதலின் பிற்காலத்தில் குறும்பர் எனவும் பெயர் பெற்றனர்.[53]

எயின் என்ற சொல்லின் வரலாறு தெரியவில்லை. ஆனால் சங்க நூல்களிற் பாலை நில மக்களைக் குறிப்பதற்கே இச் சொல் வழங்கும். வளைந்த வில்லினையுடைய எயினரெனப் பட்டினப்பாலை கூறும்.[54] வெம்மையான பாறையின்மேல் ஏறி இவ்வெயினச் சாதியினர் தம் அம்புகளைத் தீட்டுவர்.[55] ஆடுந் தோறும் ஒலிக்கும் அழகிய வாயினையுடைய கடிய துடியினை யும் வளைந்த வில்லினையுமுடைய எயினர் சுரத்தின்கட் செல்லப் பெரிய சிறையினையும் வளைந்த வாயினையும் வெள்ளிய கண்ணினையுமுடைய பருந்தின் பேடை தன் துணையினை நோக்கி நெடுங்கூப்பீடு செய்யும்.[56] சிலையாகிய வில்லும் பகழியும் செவ்விய துவராடையுமுடையவர் எயினர்; இவர்கள் கொலைத் தொழிலில் வல்லுநர்;[57] முட்பன்றி ஊனை உணவாக உடையவர்.[58] கூட்டமாகிய மிருகங்களைக்

---

53. சீவகசிந்தாமணி. 1076.

54. கொடுவி லெயினர். பட்டினப். 266.

55. உலைக்க லன்ன பாறை யேறிக்
கொடுவி லெயினர் பகழி மாய்க்கும்.
குறுந். 12 : 2—3.

56. இருஞ்சிறை
வளைவாய்ப் பருந்தின் வான்கட் பேடை
யாடுதொறு கனையு மவ்வாய்க் கடுந்துடிக்
கொடுவி லெயினர் கோட்சுரம் படர
நெடுவிளி பயிற்று நிரம்பா நீளிடை.
அகநா. 79 : 11—15.

57. சிலைவிற் பகழிச் செந்துவ ராடைக்
கொலைவ லெயினர். ஐங். 363 : 1—2.

58. முளமா வல்சி யெயினர். ஐங். 364 : 1.

கொன்று, தமயைன்மார் கொடுத்த நிணம் அமைந்த ஊனுகிய உணவிற் படியும் பறவைகளை ஒப்பும் எயிற்றியரைப்பற்றி ஐங்குறுநூறு கூறும்.[59] இவ்வெயிற்றியர் வெண்சோற்றை அடுவர்.[60]

மறவர் என்பது மறம் என்னும் சொல்லோடு தொடர்புடையது. கணைகளைச் செலுத்தும் வில்லைத்தாங்கும் எறுழ்தோள் மறவரைப்பற்றி மதுரைக்காஞ்சி பாடும்.[61] இவர்கள் மிக்க அழகில்லாத பெரிய பொலிவற்ற தாடியினையும் வன்கண்மையையும் உடையவர்.[62] நெடிய மூங்கில் உலர்ந்த நீர் இல்லாத அரிய இடத்தில் வழியிற் போவோர் அழியும்படி எதிராக நின்று வளைந்த வில்லையுடைய மறவர் கொள்ளையிடுவர்.[63] எப்பொழுதும் கூற்றுவனைப் போன்ற கொலைத் தொழிலைச் செய்யும் வேலையுடைய மறவர், வழியிடத்தே தங்கி வழிப்போக்கைரைக் கொல்வர்.[64] தமது தடித்த தோளின் விளிம்பினை உரஞ்சிய வேகம் அமைந்த

---

59. கணமா தொலைச்சித் தன்னையர் தந்த
நிணவூன் வல்சிப் படுபுள் ளோப்பு
நலமா ணெயிற்றி. ஐங். 365 : 1—3.

60. எயிற்றிய ரட்ட வின்புளி வெஞ்சோறு.
சிறுபாண். 175.

61. வில்லைக் கவைஇக் கணைதாங்கு மார்பின்
மாதாங் கெறுழ்த்தோண் மறவர்.
மதுரை. 728—729.

62. இருங்கவி னில்லாப் பெரும்புன் றூடிக்
கருங்கண் மறவர். அகநா. 297 : 5—6.

63. நெடுங்கழை திரங்கிய நீரி லாரிடை
ஆறுசெல் வம்பலர் தொலைய மாறுநின்று
கொடுஞ்சிலை மறவர். குறுந். 331 : 1—3.

64. கூற்றத் தன்ன கொலைவேன் மறவர்
ஆற்றிருந் தல்கி வழங்குநர்ச் செகுத்த.
குறுந் 283 : 5—6.

வலிய வில்லில் வைத்திழுத்து விடும் அம்பு, குறிதப்புதல் இல்லாத தறுகண்மையை உடையவர் மறவர்.[65] வளைந்து சுருண்ட மயிரினையுடைய கொடிய மறவர் குதை அமைந்த அம்பினை முழுதும் இழுத்து விடுத்து, வழிச்செல்லும் புதியரைக் கொல்வர் என அகநானூறு கூறும்.[66]

வேட்டையாடுவோர் வேடர் எனப்படுவர். கானவர் (காட்டில் வாழ்பவர்) எனவும் இவர் பெயர்பெறுவர். தறுகண்மையை உடையவர் இக்கானவர்.[67] நீண்ட அம்பையும், பல இலக்குகளை ஒரு தொடையில் துளைக்க விடும் வலிய வில்லினையுமுடைய கானவரெனக் குறுந்தொகை கூறும்.[68] களிற்றி யானையின் மதம் பொருந்திய கன்னத்தையுடைய முகத்தைக் கிழித்த அம்பினையும், வெள்ளிய நிணத்துடன் கூடிய உணவினையும் உடையவர் கானவர்.[69]

பழைய தமிழ் இலக்கியங்களில் மறவர் எயினர் ஆகியோரைப் பற்றிய பல செய்திகளைக் காணலாம். அவர்கள் வில் வன்மை மிக்க வீரர் என்பது மேலே கூறியவற்றிலிருந்து

---

65. வீங்குவிளிம் புரீஇய விசையமை நோன்சிலை
வாங்குதொடை பிழையா வன்கண் ஆடவர்
அகநா. 175 : 1—2.

66. வணர்சுரி
வடியாப் பித்தை வன்கணாடவர்
அடியமை பகழிஆர வாங்கி
வம்பலர்ச் செகுத்த அஞ்சுவரு கவலை.
அகநா. 161 : 1—4.

67. கடுங்கட் கானவர். பெரும்பாண். 116.

68. வார்கோல்
வல்விற் கானவர். குறுந். 335 : 5—6.

69. களிற்றுமுசந் திறந்த கவுளுடைப் பகழி
வானிணப் புகவிற் கானவர்.
அகநா. 132 : 4—5.

பெறப்படும். அவர்கள் பெரும்பாலும் பாண்டி நாட்டில் இருந்தார்கள்; இப்பொழுதும் இருக்கின்றார்கள். எயினர் தொண்டை நாட்டிலும் சோழநாட்டிலும் இருந்தனர். பாலை நில மக்கள் பன்றியின் இறைச்சியையும் ஆமாவின் இறைச்சியையும் உண்டனர். கள் முதலிய வெறிப் பொருள்களையும் மிகுதியாக அருந்தினர். இப் பழக்கவழக்கங்களினால் இந்து சமூகத்தில் அவர்கள் தாழ்ந்த இடத்தைப் பிற்காலத்திற் பெற்றனர் போலும்.

பாலைநில மக்களின் உணவு பின்வருமாறு கூறப்படும்: "வானமடிகின்ற பொழுதில் நீர் பெறுவதற்காகக் கட்டப் பட்ட குளங்களின் அருகிலேயுள்ள அதர்களில் நீர் அருந்த வரும் மான்களுக்காகப் பதுங்கி இருப்பர் கடுங்கட் கானவர். பகலிலே 'பகுவாய் ஞமலி'யொடு, முட்பொருந்திய தண்டுகளில் மலரும் தாமரையின் இதழ்களையொத்த நெடுஞ்செவிகளையுடைய குறு முயல்களை அவர் வலைபோட்டு மாட்டி வேட்டையாடுவர்."[70]

எயினர் இருப்பிடம் பின்வருமாறு சித்திரிக்கப்படும்: "பொருந்தாத பகைவர் அஞ்ச, பருந்துகள் படியக் குத்தி, முனைமழுங்கின புலால் நாறும் வாயையுடைய வேல்களும் மணிகட்டின கேடயங்களும் நிரையாக வைக்கப்பட்டிருக்கும்.

---

70. மானடி பொறித்த மயங்கதர் மருங்கின்
வான்மடி பொழுதி னீர்நசைஇக் குழித்த
வகழ்சூழ் பயம்பி னகத்தொளித் தொடுங்கிப்
புகழா வாகைப் பூவி னன்ன
வளைமருப் பேனம் வரவுபார்த் திருக்கு
மரைநாள் வேட்ட மழுங்கிற் பகனாட்
பகுவாய் ஞமலியொடு பைம்புத லெருக்கித்
தொகுவாய் வேலித் தொடர்வலை மாட்டி
முள்ளரைத் தாமரைப் புல்லிதழ் புரையு
நெடுஞ்செவிக் குறுமுயல் போக்கற வளைஇக்
கடுங்கட் கானவர் கடறுகூட் டுண்ணு
மருஞ்சுரம். பெரும்பாண். 106—117.

நன்றாக முடிந்த நாணையுடைய வில்லும் அம்புகளும் அக் குறும்புகளில் இருக்கும். வேலிகள் ஊகம் புல்லினால் வேயப் பட்டு உயர்ந்து ஓங்குவன. அம்பறாத் தூணிகள் தூங்கும் தூண்களை உடைய பந்தரும் அவ்வெயினர் வாழும் இடங் களில் உண்டு. சங்கிலிகளாலே நாய்கள் கட்டப்பட்டுக் கிட்ட முடியாத காவலை உடையன வீடுகள்."[71] இவ்வீடுகளில் ஈந்தின் விதையைக் கண்டாலொத்த சிவந்த அவிழாகிய சோற்றை விருந்தினர் பெறுவர். அத்துடன் ஞமலி தந்த உடும்பின் பொரியலையும் பெறுவர்.[72]

பாரத நாட்டின் சமூக அமைதிகள் பல காலப்போக்கில் வளர்ச்சியற்றிருந்தன என்பது வரலாற்றுண்மை. அதே முறையில் ஆரியச் சாதிப்பிரிவு அற்ற, தமிழ்நாட்டு ஐந்நில மக்களும் பல நூற்றாண்டுகளாகத் தம்முடைய பழைய பழக்க வழக்கங்களுடன் வாழ்ந்து வந்திருக்கின்றனர். இவர் களுட் சிலர் தமக்கே உரிய பழைய பண்பாட்டுடன் இன்றும் வாழ்கின்றனர்.

---

71. பருந்துபட
வொன்னாத் தெவ்வர் நடுங்க வோச்சி
வைந்நுதி மழுங்கிய புலவுவா யெஃகம்
வடிமணிப் பலகையொடு நிரைஇ முடிநாட்
சாபஞ் சார்த்திய கணைதுஞ்சு வியனக
ரூகம் வேய்ந்த வுயர்நிலை வரைப்பின்
வரைத்தேன் புரையுங் கவைக்கடைப் புதையொடு
கடுந்துடி தூங்குங் கணைக்காற் பந்தர்த்
தொடர்நா யாத்த துன்னருங் கடிநகர்
வாழ்முள் வேலிச் சூழ்மிளைப் படப்பைக்
கொடுநுகந் தழீஇய புதவிற் செந்நிலை
நெடுநுதி வயக்கழு நிரைத்த வாயிற்
கொடுவி லெயினக் குறும்பு.

பெரும்பாண். 117—129.

72. களர்வள ரீந்தின் காழ்கண் டன்ன
சுவல்விளை நெல்லின் செவ்வவிழ்ச் சொன்றி
ஞமலி தந்த மனவுச்சூ லுடும்பின்
வறைகால் யாத்தது வயின்றொறும் பெறுகுவிர்.

பெரும்பாண். 130—133.

———

## பன்னிரண்டாம் இயல்

# மக்கள் தொழிலும் வணிகமும்

பதினேராம் இயலிலே குறித்த ஆயர், குறவர், உழவர், பரதவர், எயினர் ஆகியோரைத் தவிரக் கொல்லர், பொற் கொல்லர், தச்சர், கலஞ்செய் மாக்கள், நூல் நூற்போர், வணிகர் முதலியோரும் தமிழ்நாட்டில் வாழ்ந்தனர்.

### (1) கொல்லர்

நீண்ட கைகளையுடைய யானைக்குத் தொடியிடும் கொல்லனைப்பற்றிப் பெரும்பாணாற்றுப்படை கூறுகின்றது. அவன் செய்யும் அரவம் சிவந்த கால்களையுடைய புறக்களின் துயிலைக் கலைக்கும்.[1] நண்டினது காலுக்கு, துருத்தியை அமுக்கி உலையிலே தொழிலைச் செய்யும் கொல்லனின் குறடு உவமிக்கப்படும்.[2] செறிந்த குலையையுடைய பசிய கதிர்கள் வளைந்திருத்தல் கரியை எடுக்கின்ற குறடு வளைந்திருத்தலை ஒக்கும்.[3] சிறிய பல காய்களை உடைய வேங்கையின் மலர்கள்

---

1. பெருங்கை யானைக் கொடுந்தொடி படுக்கும்
கருங்கைக் கொல்ல னிரும்புவிசைத் தெறிந்த
கூடத் திண்ணிசை வெரீஇ மாடத்
திறையுறை புறவின் செங்காற் சேவல்
இன்றுயி லிரியும் பொன்றுஞ்சு வியனகர்.
பெரும்பாண். 436—440.

2. வன்புல மிறந்த பின்றை மென்றோல்
மிதியுலைக் கொல்லன் முறிகொடிற் றன்ன
கவைத்தா ளலவ னளற்றளை சிதைய.
பெரும்பாண். 206—208.

3. கரிக்குறட் டிறைஞ்சிய செறிகோட் பைங்குரல்.
குறுந். 198 : 4.

உதிர்தல், கொல்லனது உலைக்களத்து இரும்பின் பொறி சிதறுமாறு போல இருக்கும்.[4]

பாலைநிலத்துக் கற்பாறைகள் கொல்லனது உலைக் களத்துள்ள பட்டடைக்கல்லைப்போன்ற வெம்மையை உடையன.[5] உள்ளே பெருமூச்செறிந்து வருந்தச்செய்யும் இரவு இரும்பு செய் கொல்லன் ஊதுகின்ற உலை மூக்குப் போன்றது.[6] தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவியின் நெஞ்சு உலையிற் செறித்த துருத்தியைப்போல வருந்தும்.[7] பகைவரால் தாக்கிக் கெடுக்க முடியாத அரசரின் வலிமை இரும்பைப் பயன்படுத்தும் வலிய கையையுடைய கொல்லன் விசைத்து அடிக்கும் சம்மட்டியோடு மாறுபடும் பட்டடைக்கல்லுக்கு உவமிக்கப்படும்.[8] திருந்திய இலையையுடைய வேலை வடிப்பவன் கொல்லன்.[9]

---

4. கொல்ல
னெறிபொற் பிதிரிற் சிறுபல் காய
வேங்கை வீயுகும். நற். 13 : 5—7.

5. உலைக்க லன்ன பாறை யேறி. குறுந். 12 : 1.

6. நல்லரா நடுங்க வுரறிக் கொல்லன்
ஊதுலைக் குருகி னுள்ளுயிர்த் தகழு
நடுநாள் வருத லஞ்சுதும் யாமென.
நற். 125 : 3—5.

7. உலைவாங்கு மிதிதோல் போலத்
தலைவரம பறியாது வருந்துமென் னெஞ்சே.
குறுந். 172 : 6—7.

8. நசைவர்க்கு மென்மை யல்லது பகைவர்க்கு
இரும்புபயன் படுக்குங் கருங்கைக் கொல்லன்
விசைத்தெறி கூடமொடு பொரூஉம்
உலைக்கல் லன்ன வல்லா ளன்னே.
புறநா. 170 : 14—17.

9. கருங்கைக் கொல்லனை யிரக்கும்
திருந்திலை நெடுவேல் வடித்திசி னெனவே.
புறநா. 180 : 12—13.

வேலைத் திருத்தமாகச் செய்து கொடுத்தல் கொல்லற்குக் கடன் எனப் பொன்முடியார் கூறுவர்.[10]

## (2) பொற்கொல்லர்

ஒளி பொருந்திய பொன்னினாலே ஒளி பொருந்திய இழைகள் இயற்றுபவர் இவர்.[11] கிளி தனது வளைந்த அலகினிடத்தே கொண்ட வேம்பினது ஒள்ளிய பழமானது புதிய பொற்கம்பியை ஊடுசெலுத்தும் பொற்கொல்லனது கூரிய கைந்நகத்திற் கொண்ட பொன் ஆபரணத்திற்குரிய காசை ஒக்கும்.[12] பொன்னை உரைத்து மாற்றுக்காணும் உரை கல்லைப்பற்றிப் பெரும்பாணாற்றுப்படையிலிருந்து அறியலாம்.[13] மின்னுகின்ற இனிய இறகுகளையுடைய கரிய குயிலின் மேனி பொன்னினது உரைத்த பொடி விளங்குகின்ற உரைகல்லை ஒக்கும்.[14] கரு நிறமுடைய பன்றியின் உடம்பில் கூதளஞ் செடியின் பொன்னிறப் பூம்பொடி படிந்திருத்தல், பொன்னின் மாற்றறியும் கரிய கட்டளைக் கல்லிற் பொன் உரைத்தாற் போன்றது.[15]

---

10. வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே.
புறநா. 312 : 3.

11. சூடுறு நன்பொன் சுடரிழை புனைநரும்.
மதுரை. 512.

12. உள்ளார் கொல்லோ தோழி கிள்ளை
வளைவாய்க் கொண்ட வேப்ப வொண்பழம்
புதுநா ணுழைப்பா னுதிமாண் வள்ளுகிர்ப்
பொலங்கல வொருகா சேய்க்கும்.
குறுந். 97 : 1—4.

13. பொன்காண் கட்டளை கடுப்பக் கண்பின்.
பெரும்பாண். 220.

14. மின்னின் றூவி யிருங்குயில் பொன்னின்
உரைதிகழ் கட்டளை கடுப்ப. குறுந். 192 : 3—4.

15. வண்பிணி அவிழ்ந்த வெண்கூ தாளத்து
அலங்குகுலை யலரி தீண்டித் தாதுகப்
பொன்னுரை கட்டளை கடுப்ப.
அகநா. 178 : 9—11.

கரிய நிறத்தையுடைய தும்பியும் பொன்னுரைக்கும் கல்லுப் போன்றது.[16] தலைவன் உரைகல் போன்றவன்.[17] கட்டளை எவ்வாறு பொன்னைத் தராதரம் காட்டுமோ அவ்வாறே தலைவனும் தலைவியை வரைந்து தலைவியின் நலத்தை நுகர்ந்து மனைக்கண் இல்வாழ்க்கைச் சிறப்பை எய்துவிப்பான். பொற்கொல்லரின் கன்னத் தட்டைப்பற்றி அகநானூறு கூறும்.[18] சங்க நூல்களில் அரசரும் தேவிமாரும் மற்றும் மக்களும் அணியும் அணிகளைப்பற்றிய குறிப்புக்கள் பல உள.[19] அக் குறிப்புக்களிலிருந்து பொற்கொல்லரின் தொழில் அக்காலத்திற் சிறப்புற்று ஓங்கியதெனக் கொள்ளலாம்.

## (3) தச்சர்

தச்சுத் தொழில் சங்க காலத்தில் மிகவும் சிறந்த நிலையில் இருந்தது. நெடுநல்வாடையில் தச்சர் கட்டி எழுப்பிய அரச மாளிகை சிறப்புறக் கூறப்படும். சிற்ப நூலை அறிந்த தச்சர் நுட்பமாக நூலை நேரே பிடித்துத் திசைகளைக் குறித்துக் கொள்வர். மதிற்கண் அமைந்த வாயில், ஆணிகளும் பட்டங்களுமாகிய வலிய இரும்பாலே கட்டிச் சாதிலிங்கம் வழித்துப் பூசப்பட்டவை. மதில் தாழோடு அமைத்த இரு கதவுகளை உடையது. கைத்தொழில் வல்ல தச்சன் திறம்பட அமைத்தலினாலே இடைவெளியற்றுப் பல மரங்களும் தம்மில் இறுகச் சேர்ந்துள்ளன கதவுகள். கதவு நிலைக்கு

---

16. கட்டளை யன்ன மணிநிறத் தும்பி. ஐங். 215 : 1.
17. கட்டளை யன்ன கேழன். ஐங். 263 : 2.
18. பொன்செய் கன்னம் பொலிய வெள்ளி.
அகநா. 317 : 8.
19. மதுரை. 719—20 ; 416 ; 704 , 316.
பெரும்பாண். 181 ; 311.
பொருநர். 159 ; 162.

மேல் குவளைப் பூவும் திருமகள் குலவும் பெண்யானைகளும் உத்தரத்தில் சித்திரங்களாக அமைக்கப் பெற்றுள்ளன.[20]

பாண்டியனுடைய தேவியின் கட்டிலைத் தச்சர் தந்தத் தாற் செய்தனர். அக்கட்டில், முரசெனத் தோன்றும் வலிய கால்களையும் புகர் நிறைந்த மத்தகத்தினையுமுடைய போரிற் பொருதுபட்ட யானையின் கொம்பை எடுத்து, கனமும் செம்மையும் ஒப்ப இருபுறத்தையும் செதுக்கி, கூரிய சிற்றுளியாலே செய்யப்பட்ட பெரிய இலைத் தொழிலை இடையே அமைக்கப் பெற்றது ; பல நிறம் கொண்ட மயிர்களை உள்ளே வைத்து மருவி, அதன்மேலே சிங்கம் முதலியன வேட்டையாடும் தொழில்களைப் பொறித்த தகடுகளை வைத்து, முல்லைப் பூக் களையும் பிற பூக்களையும் நிரையாகச் செருக்கி அமைத்து, தகடுகள் ஆணிகளால் தைக்கப்பட்டுள்ளன. புலியினது வரியைத் தன்னகத்தே கொண்ட பொலிவு பெற்ற நிறத்தையுடைய கச்சாலே நடுவு வெளியான இடம் அழகுற மறைக்கப்பட்டுள்ளது. அக்கட்டிலின் கால்கள், சூல் முற்றியசைந்த இயல்பினை உடையராகிய மகளிரது பால் கட்டி வீங்கின முலையையொப்பப் பக்கம் உருண்டு திரண்ட குடத்தையும் குடத்திற்கும் கட்டிலுக்கும் நடுவாகிய இடம் மெல்லியவாய்த் திரண்டு உள்ளிப்பூடு போலச் செதுக்கிய உருவத்தையும் கொண்டன.[21]

---

20. பருவிரும்பு பிணித்துச் செவ்வரக் குரீஇத்
துணைமாண் கதவம் பொருத்தி யிணைமாண்டு
நாளொடு பெரிய கோளமை விழுமரத்துப்
போதவிழ் குவளைப் புதுப்பிடி காலமைத்துத்
தாழொடு குயின்ற போரமை புணர்ப்பிற்
கைவல் கம்மியன் முடுக்கலிற் புரைதீர்ந்து
ஐயவி யப்பிய நெய்யணி நெடுநிலை.
நெடுநல். 80—86.

21. தசநான் கெய்திய பணைமரு ளெருத்தின்
இகன்மீக் கூறு மேந்தெழில் வரிநுதல்
பொருதொழி நாக மொழியெயி றருகெறிந்து
சீருஞ் செம்மையு மொப்ப வல்லோன்
கூருளிக் குயின்ற வீரிலை யிடையிடுபு

சிறு பிள்ளைகளுக்குச் சிறுதேர் செய்வதிலும் அக்காலத் தச்சர் திறனுடையவர். தச்சர் குடியிற் பிறந்த சிறுவர் பிறர் விரும்பும்படி செய்த சிறிய தேரைப் பற்றிப் பெரும்பாணாற்றுப் படை கூறும்.[22] பூண் அணிந்த தாளினையுடைய சிறுவர் குதிரை பூட்டாமற் கையால் உருட்டும் மூன்று உருளையை யுடைய சிறிய தேரெனப் பட்டினப்பாலை இதனைக் குறிக்கும்:[23] தச்சனாற் செய்யப்பட்ட சிறிய குதிரை பூட்டப் பெற்ற சிறிய வண்டியை, ஏறிச் செலுத்தி இன்பமடையா ராயினும் கையால் இழுத்து இன்பம் அடைவர் சிறுவர் எனக் குறுந்தொகை கூறும்.[24]

தச்சர் செய்த சிறந்த தேரொன்று பின்வருமாறு சிறு பாணாற்றுப்படையில் சித்திரிக்கப்படுகின்றது: "தேர் ஒரு

---

தூங்கியன் மகளிர் வீங்குமுலை கடுப்பப்
புடைதிரண் டிருந்த குடத்த விடைதிரண்டு
உள்ளி நோன்முதல் பொருத்தி யடியமைத்துப்
பேரள வெய்திய பெரும்பெயர்ப் பாண்டில்
மடைமா ணுண்ணிழை பொலியத்
[தொடைமாண்டு
முத்துடைச் சாலேக நாற்றிக் குத்துறுத்துப்
புலிப்பொறிக் கொண்ட பூங்கேழ்த் தட்டத்துத்
தகடுகண் புதையக் கொளீஇத் துகடீர்ந்து
ஊட்டுறு பன்மயிர் விரைஇ வயமான்
வேட்டம் பொறித்து வியன்கட் கானத்து
முல்லைப் பல்போ துறழப் பூநிரைத்து
மெல்லிதின் விரிந்த சேக்கை மேம்பட.

நெடுநல். 115—131.

22. தச்சச் சிறாஅர் நச்சப் புனைந்த
ஊரா நற்றே ருருட்டிய புதல்வர்.

பெரும்பாண். 248—249.

23. பொற்காற் புதல்வர் புரவியின் றுருட்டும்
முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும்.

பட்டினப். 24—25.

24. தச்சன் செய்த சிறுமா வையம்
ஊர்ந்தின் புறாஅ ராயினுங் கையின்
ஈர்த்தின் புறூஉ மிளையோர் போல.

குறுந். 61 : 1—3.

வகையான பிழைபாடுமின்றி உருண்டோடும் தகைமையது. பாவிப்பதற்கு உகந்தது. கூரிய உளியினுற் செதுக்கப்பட்ட குறட்டினை உடையது. அதன் சில்லுகளில் பொருத்தப்பட்ட ஆர்கள், கூதிர் காலத்திலே வானிலே தோன்றும் மதியின் கிரணங்கள்போல விளங்கும். தேரின் பலகைகள் செவ்வரக்குப் பூசப்பெற்றுப் பலவகைச் சித்திரங்களையும் உடையனவாய் இருந்தன."[25]

## (4) கலம் செய்த மாக்கள் (குயவர்)

அக் காலத்தில் இவர் தாழி முதலியன வனைந்தனர். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் விண்ணுலகை அடைந்தபொழுது, அவனைக் கவிக்கும் இடமகன்ற தாழியை வனைதலைக் குயவன் விரும்பினுல், நிலவட்டத்தை உருளியாகவும் பெரிய மேருமலையை மண்ணுகவும் வனைய வேண்டுமென ஐயூர் முடவனுர் பாடுவர்.[26] மட்கலம் சுடும் சூளையிற் புகைபோல, விளங்கும் மலை மறையுமாறு வெள்ளிய மேகம் சூழ்ந்து தோன்றும்.[27]

---

25. கூருளி பொருத வடுவாழ் நோன்குறட்
டாரஞ் சூழ்ந்த வயில்வாய் நேமியொடு
சிதர்நனை முருக்கின் சேணோங்கு நெடுஞ்சினைத்
ததர்பிணி யவிழ்ந்த தோற்றம் போல
உள்ளரக் கெறிந்த வுருக்குறு போர்வைக்
கருந்தொழில் வினைஞர் கைவினை முற்றி
ஊர்ந்துபெயர் பெற்ற எழினடைப் பாகரொடு.
சிறுபாண். 252—258.

26. தேவருலக மெய்தின னாதலின்
அன்னேற் கவிக்குங் கண்ணகன் ருழி
வனைதல் வேட்டனை யாயி னெனையதூஉம்
இருநிலந் திகிரியாப் பெருமலை
மண்ணு வனைத லொல்லுமோ நினக்கே.
புறநா. 228 : 11—15.

27. இலங்குமலை புதைய வெண்மழை கவைஇக்
கலஞ்சுடு புகையிற் ருேன்றும். அகநா. 308 : 5—6.

## (5) புலைத்தி (வண்ணாத்தி)

களர் நிலத்தேயுற்ற கூவலில் ஆடையைத் துவைப்பள் வண்ணாத்தி.[28] களர் நிலத்து ஊற்று உவர் மண் ஊறி ஆடையின் அழுக்கினை நன்கு போக்கும் என்பதனை அறிந்தே இவ்வாறு செய்வள். இதிலிருந்து இத் தொழிலாளரின் தொழிலறிவைக் கண்டு கொள்ளலாம். ஆடைகளை ஆராய்ந்து கழுவுந்தன்மையிற் பெரிதும் தன்கையொழியாத வறுமையில்லாத வண்ணாத்தி, பூத்தொழிலை உடைய ஆடையை இரவிலே தோய்த்து, சோற்றின் கஞ்சியிட்டுப் புலர்த்துவள்.[29] நன்மையையும் அழகையும் உடைய வண்ணாத்தி ஆடையைக் கஞ்சியிலே தோய்த்து எடுப்பள் எனக் குறுந்தொகை பாடும்.[30] ஆடைகளிலே தோய்ந்துள்ள கஞ்சிப் பசையினைக் கரைத்துவிடும் மெல்லிய விரல்களையும் பெரிய தோள்களையுமுடைய வண்ணாத்தி அக் கஞ்சிப் பசையினைத் துறையில் அலசி விடுவள்.[31]

## (6) நூல் நூற்றலும் சீலை நெய்தலும்

இவை இரண்டும் தமிழ் நாட்டில் நடைபெற்ற தொழில்களில் முக்கியமானவை. பட்டிலும் பஞ்சிலும் சீலை நெசவு செய்தல் அக்காலத்திற் சிறந்திருந்ததென்பதைச் சங்க நூல்களிலிருந்து அறியலாம். நூற் சீலையிலும் பட்டுச் சீலையிலும

---

28. களர்ப்படு கூவற் றோண்டி நாளும்
புலைத்தி கழீஇய தூவெள் ளறுவை.
புறநா. 311 : 1—2.

29. வறனில் புலத்தி யெல்லித் தோய்த்த
புகாப்புகர் கொண்ட புன்பூங் கலிங்கமொடு.
நற். 90 : 3—4.

30. நலத்தகைப் புலைத்தி பசைதோய்த் தெடுத்து.
குறுந். 330 : 1.

31. பசைகொல் மெல்விரற் பெருந்தோட் புலைத்தி
துறைவிட் டன்ன. அகநா. 34 : 11—12.

சிறந்த சித்திர வேலைப்பாடுகள் செய்தனர் தமிழர். இவர்கள் நெய்த ஆடை அறுவை எனவும் கலிங்கம் எனவும் பெயர் பெறும். ஒள்ளிய பூவேலை செய்யப்பட்ட கலிங்கத்தைப் பற்றி நற்றிணை கூறும்.[32] பாம்பின் தோல் போன்ற வடிவினை உடையவாய், மூங்கிற்கோலின் உட்புறத்தேயுள்ள தோல் போன்று, நெய்யப்பட்ட இழைகளின் வரிசையை அறிய இயலாத பூவேலை பொருந்தியன இவ்வாடைகள்.[33] கண்ணினால் இஃது இழைபோன வழியென்று குறித்துப் பார்க்க முடியாத நுண்மையை உடைய துகில் என்றும், பூத்தொழில் முற்றுப் பெற்ற தன்மையாற் பாம்பினது தோலையொத்த துகிலென்றும் பொருநராற்றுப்படை கூறும்.[34] இகழ்ச்சியற்ற தலைமையினை உடைய இழை போன இடமறியாத நுண்ணிய நூலாற் செய்த கலிங்கம் என மலைபடுகடாத்திலிருந்து அறியலாம்.[35]

பட்டு நூலால் ஆகிய கலிங்கத்தை நூலாக் கலிங்கமெனப் பதிற்றுப்பத்துக் குறிக்கும்.[36] அரும்பி மலர்ந்த பகன்றையின் புதுப்பூப்போன்ற கலிங்கம் புறநானூற்றிற் கூறப்படும்.[37]

---

32. புகாப்புகர் கொண்ட புன்பூங் கலிங்கமொடு.
நற். 90 : 4.

33. தேம்பா யுள்ள தங்கமழ் மடருளப்
பாம்புரி யன்ன வடிவின காம்பின்
கழைபடு சொலியி னிழையணி வாரா.
புறநா. 383 : 9—11.

34. நோக்கு நுழை கல்லா நுண்மைய பூக்கனிந்து
அரவுரி யன்ன வறுவை. பொருநர். 82—83.

35. இழைமருங் கறியா நுழைநூற் கலிங்கம்
எள்ளறு சிறப்பின் வெள்ளரைக் கொளீஇ.
மலைபடு. 561—562.

36. நூலாக் கலிங்கம். பதிற். 12 : 21.

37. போதுவிரி பகன்றைப் புதுமல ரன்ன
அகன்றுமடி கலிங்க முடீஇ.
புறநா. 393 : 17—18

பால் ஆவியை ஒத்த விளங்குகின்ற நூலாற் செய்த கலிங்கம் இது.[38] கரைகளில் தூய நூலினாலாய பல முடிச்சுக்களை உடைய பட்டு அறுவைகளும் இருந்தன.[39] பருத்திப் பெண்டிர் நூற்கும் பஞ்சைப்பற்றிப் புறநானூற்றிற் குறிப்புக்கள் உள்ளன.[40] கணவனை இழந்த கைம்மை மகளிர் பஞ்சை நூற்பர் என்பதற்கு நற்றிணை சான்று பகரும்.[41]

## (7) வணிகம்

ஒரு நாட்டின் தொழில்களிலே உழவும் வணிகமுமே தலை சிறந்தன என்பது அறிஞர் கொள்கை. ஒரு நாட்டின் மேம் பாட்டுக்கு இவ்விரு தொழில்களும் ஒருங்கு செழித்திருத்தல் வேண்டும். தமிழகமும் சங்க காலத்தில் இவ்விரு தொழிலை யும் குறைவறப் பெற்றிருந்தது. மதுரைக் காஞ்சியில்,

> வியன்மேவன் விழுச்செல்வத்து
> இருவகையா னிசைசான்ற
> சிறுகுடிப் பெருந்தொழுவர்
> குடிகெழீஇய நானிலவரொடு

என வரும் அடிகளாலும்,[42] அப்பகுதிக்குஆசிரியர் நச்சினார்க் கினியர் "உலகத்துத் தொழில்களில் மேலாகச் சொல்லும்

---

38. ஆவி யன்ன அவிர்நூற் கலிங்கம்.
பெரும்பாண். 469.

39. துன்னற் சிதாஅர் நீக்கித் தூய
கொட்டைக் கரைய பட்டுடை நல்கி.
பொருநர். 154—155.

40. பருத்திப் பெண்டிர் பனுவ லன்ன.
புறநா. 125 : 1.
பருத்திப் பெண்டின் சிறுதீ விளக்கத்து.
புறநா. 326 : 5.

41. ஆளில் பெண்டிர் தாளில் செய்த
நுணங்குநுண் பனுவல் போல. நற். 353 :1—2.

42. மதுரை. 120—123.

உழவு வாணிகம் என்கின்ற இரண்டு கூற்றுலே அகலம் பொருந்துதலையுடைய சீரிய செல்வத்தாலே புகழ் நிறைந்த குடிமக்கள் பொருந்தின நான்கு நிலத்து வாழ்வாருடனே'' எனக் கூறும் உரையாலும் தமிழ் நாட்டில் இவ்விரு தொழிலும் பெற்றிருந்த செல்வாக்குப் பெறப்படும்.

பண்டைக்காலத்திலே வணிகத்தின் பெருமையை நன்குணர்ந்து அதனைத் தம் தொழிலாகக் கொண்டு வாழ்ந்த புலவர் பலர் உளர். கூல வாணிகன் சீத்தலைச் சாத்தனுர், நெல் புல் வரகு முதலிய தானியங்களை விற்ற கூல வணிகனு வார். அறுவை வணிகன் இளவேட்டனுர் என்பவர் ஆடை வியாபாரி. பலசரக்கு வியாபாரம் செய்தவர் மதுரைப் பண்ட வாணிகன் இளநத்தனுர் என்பவர். மதுரைப் பெருங் கொல்லனுர், உறையூர் இளம்பொன் வாணிகன் சாத்தங் கொற்றனுர் முதலியோரின் பெயரும் மேற்கூறிய பொருளை வலியுறுத்தும்.

## பிறநாட்டு வணிகம்

இத்தகைய சிறப்பு வாய்ந்த வணிகத்தைத் தமிழ் மக்கள் பிற நாடுகளிலும் உள்நாடுகளிலும் பெருக்கி வந்தனர். மேலைத் தேச நாடுகளோடு—சிறப்பாக உரோமாபுரியோடு-தமிழர் செய்த வணிகத்திற்குப் பல பழைய நாணயங்கள் சான்று பகருமென முன்னே கூறியுள்ளோம்.[43] தமிழ் நாட்டிற் சிறந்திருந்த பொன்னும் முத்தும் சங்கும் மிளகும் புடவையும் பிறநாட்டவர் மனத்தைக் கவர்ந்தன. பொன் கொணர்ந்து மிளகை எடுத்துச் சென்றனர் மேனுட்டினர்.[44] நெடிய கொடி பாய்மரத்தின் மேலே ஆடும் இயல்பினை யுடைய மரக்கலங்கள், பொன் மிகுதற்குக் காரணமாகிய சீரிய பண்டங்களை நாட்டிலுள்ளார் நுகரும்படி கொண்டு

---

43. இரண்டாம் இயலைப் பார்க்க.

44. யவனர் தந்த வினைமா ணன்கலம்
பொன்னெடு வந்து கறியொடு பெயரும்.
அகநா. 149 : 9—10.

வந்தனர்.[45] துறைமுகங்களில் மேலைநாட்டுக் குதிரைகளும் வடநாட்டுப் பொருள்களும் மரக்கலங்களில் வந்து இறங்கின.[46]

வெளிநாடுகளிலிருந்து கடலின் மேல் மரக்கலங்களில் வந்த பண்டங்கள் காவிரிப்பூம்பட்டினத்தின் கரையில் இறக்குமதியாயின. உள் நாடுகளிலிருந்து வண்டிகளில் வந்த பண்டங்களும் கடலில் ஏற்றுமதியாயின. அளந்து அறிய முடியாத அவ்வளவு ஏராளமான பண்டங்கள் வெள்ளம் போலப் பெருகி வந்தன. கடலிலிருந்து கரைக்கும் கரையி லிருந்து கடலுக்கும் இவ்வாறு பண்டங்கள் பெருகிப் பெருகிச் செல்லும் நிலை, நல்ல மழைக் காலத்தில் கடலி லிருந்து மேகம் முகந்த நீர் மலையில் ஏராளமாகப் பொழிதலை யும், மலையிற் பொழிந்த மழை வெள்ளம் மீண்டும் கடலிற் போய்ச் சேருதலையும் ஒக்கும்.[47]

இவ்வாறு கடலில் வணிகம் செய்த தமிழ் மக்கள் கலம் செலுத்துமிடத்து, வணிகக் காற்றின்[48] வரவும் காலமும்

---

45. பொன்மலிந்த விழுப்பண்டம்
நாடார நன்கிழிதரும்
ஆடியற் பெருநாவாய். மதுரை. 81—83.

46. விழுமிய நாவாய் பெருநீ ரோச்சுநர்
நனந்தலைத் தேஎத்து நன்கல னுய்ம்மார்
புணர்ந்துடன் கொணர்ந்த புரவியொ டனைத்தும்.
மதுரை. 321—323.

47. வான்முகந்தநீர் மலைப்பொழியவும்
மலைப்பொழிந்தநீர் கடற்பரப்பவும்
மாரிபெய்யும் பருவம்போல
நீரினின்று நிலத்தேற்றவும்
நிலத்தினின்று நீர்ப்பரப்பவும்
அளந்தறியாப் பலபண்டம்.
பட்டினப். 126—131.

48. *Trade winds.*

அறிந்து அதனைச் செலுத்தும் ஆற்றல் பெற்றிருந்தனர். சோழன் கரிகாற் பெருவளத்தானைச் சிறப்பித்துப் பாராட்டிய வெண்ணிக்குயத்தியார் என்னும் புலவர், "நீர்செறிந்த கடலின் கண்ணே மரக்கலத்தை ஓட்டி, வணிகக் காற்றின் தொழிலை ஆண்ட வலியோன் மரபிலுள்ளவனே" எனப் பாடுவர்.[49] இதினின்று, கரிகாலனின் முன்னோன் ஒருவன் காலத்தில் வேற்று நாடு செல்லுதற்குரிய வணிகக் காற்று ஏவல் கொள்ளப்பட்டது பெறப்படும். இவ் வணிகக்காற்றினை அக் காலத்தில் 'வளி' என்றே வழங்கினர்.

பிற நாட்டு வணிகத்தைப் பற்றித் தமிழ் நூல்கள் கூறும் இச் செய்திகள் மேலைத்தேச வரலாற்று நூலாசிரியர் கூறுவன வற்றோடு ஒத்திருப்பதைக் காணலாம். இவ்வாசிரியர்கள் இன்ப வாழ்விற்கான கீழைத்தேசப் பொருட்களை தம் நாட்டுச் செல்வர் மிகவும் விரும்பியதைக் கண்டு ஆச்சரிய முற்றனர். கிறித்துவுக்குப்பின் இருபத்திரண்டாம் ஆண்டில் தைபேரியசு (*Tiberius*) என்னும் அரசன் உரோமாபுரியி லுள்ள ஆட்சி மன்றத்திற்கு பின்வருமாறு ஓலை அனுப்பினான்: "திருத்தம் ஏற்பட வேண்டுமானால் அது எவ்விடத்தில் தொடங்க வேண்டும்? பெண்கள் விரும்பி அணியும் இன்பப் பொருள்களைப்பற்றி எமது கருத்தென்ன? முக்கியமாக எமது நாட்டின் செல்வத்தை அழியச் செய்வனவான இழைகள், மணிகள் ஆகியவற்றைப்பற்றி நாம் செய்யவேண்டியது யாது?"[50] இவ்வணிகம் குளோடியசு நேரோ என்ற அரசரின் காலத்தில் உச்சநிலையை அடைந்திருத்தல் வேண்டும். அவர்கள் காலத்தில் வாழ்ந்த பிளினி என்னும் ஆசிரியர் உரோமாபுரியிலுள்ள செல்வம் படைத்த மக்கள் வாசனைத் திரவியங்களிலும் அணிகளிலும் செல்வத்தை வீணாகச் செலவு செய்யும் முறையைக் கண்டித்தனர்.[51]

---

49. நளியிரு முந்நீர் நாவா யோட்டி
வளிதொழி லாண்ட உரவோன் மருக.
புறநா. 66 : 1—2.

50. *Tacitus : Annals, III, 53.*

51. *Nat. Hist. IV, 26.*

பிற நாடுகளுடன் நடந்த வணிகத்தில் வழங்கிய நாணயம் பொன்னாகும். யவனரின் கப்பல்கள் பொன்னைக் கொணர்ந்து மிளகை எடுத்துச் சென்றன.[52] கப்பல்கள் தந்த பொன்னைப் பற்றிப் புறநானூறும் கூறும்.[53] தெற்கே வைகை ஆற்றங்கரையிலும் மேற்கே கோயம்புத்தூர்ப் பக்கங்களிலும் கண்டு எடுக்கப்பட்ட பழைய உரோம நாணயங்களினால் இச்செய்திகள் வலுப்பெறுகின்றன.

**மேலை நாட்டு வணிகர் குழாங்கள்**

மேலைத்தேசத்திலிருந்து வந்த வணிகர் யவனர் எனப் பட்டனர். இச்சொல் ஐஓனிஸ் (*Iaones*) என்னும் கிரேக்க சொல்லிலிருந்து திரிந்து வந்தது. வடமொழிக் கவிதையிற் பெரும்பாலும் கிரேக்கரை உணர்த்தவே இச் சொல் வழங்கும். தமிழ்க் கவிதையில் உரோமர், கிரேக்கர் உட்பட மேலைத் தேசத்தவர் யாவரையும் குறிக்கும். தமிழ்நாட்டுப் பட்டினங்களிலும் மற்றும் வியாபாரம் சிறந்த நகரங்களிலும் இவர்கள் வாழ்ந்தனர். இச் செய்தியைப் பற்றிய சான்றுகள் சங்க நூல்களிலே உள்ளன. போர்க்களத்தில் மன்னன் அமைத்த பாசறை வீட்டைக் கூறவந்த முல்லைப் பாட்டு ஆசிரியர் யவனரைப் பற்றித் தந்துள்ள செய்திகளை நான் காம் இயலிற் குறித்துள்ளோம்.[54] வேற்று நாட்டு மக்கள் தமிழ்நாட்டிற் குடிகொண்டமைக்குப் பதிற்றுப்பத்திலுள்ள சான்றும் முன்பு தரப்பட்டது.[54A] உயர்ந்த பண்பாட்டினை யுடைய பற்பல மக்களும் சாறயர் மூதூரில் தொக்கதுபோல வேறுவேறு மொழிகளைப் பேசும் பல்வேறு நாட்டவர் சமாதானமாகவும் இன்பமாகவும் வாழும் முட்டாச்

---

52. இவ்வியல் 44ம் அடிக் குறிப்புரையைப் பார்க்க.

53. கலந்தந்த பொற்பரிசம். புறநா. 343 : 5.

54. நான்காம் இயல் 96ம் அடிக் குறிப்புரையைப் பார்க்க.

54A. இரண்டாம் இயல் 10ம் அடிக் குறிப்புரையைப் பார்க்க.

சிறப்பினை உடையது காவிரிம்பூம்பட்டினம் எனப் பட்டினப் பாலையில் இருந்து அறியலாம்.[55]

**பண்டகசாலைகள்**

மதுரை நகரத்திலிருந்த பல வணிக நிலையங்களைப் பற்றித் தமிழ் இலக்கியங்கள் கூறும். பண்டங்கள் யாவும் பெரிய சாலைகளில் வைக்கப்பட்டிருந்தன. கடலில் வந்த வற்றை உள்நாட்டிற்குச் செலுத்து முன்பும், உள்நாட்டில் நிலத்தில் வந்தவற்றைக் கடலின் மேற் செலுத்து முன்பும் அவை பண்டகசாலையிற் சேர்த்து வைக்கப்படும் அப் பண்டகசாலைகளில் மன்னனது முத்திரையை மூடைகளுக்கு இடுவர். அங்ஙனம் முத்திரை இடப்பட்ட மூடைகள் அகன்ற முற்றத்தில் ஏற்றுமதி இறக்குமதிக்கு ஆயத்த மாக உயரமாய் அடுக்கி வைக்கப்பட்டு இருக்கும்.[56] பண்டகசாலையிலுள்ள இம் மூடைப் போர்கள் வானளாவிய மலைகளைப் போன்றவை. இந்தப் போர்களின்மேல் ஆண் நாய்கள் ஆட்டுக் கிடாய்களுடன் ஏறிச் குதித்துக்கொண்டு

---

55. பல்லாயமொடு பதிபழகி
வேறுவே றுயர்ந்த முதுவா யொக்கற்
சாறயர் மூதூர் சென்றுதொக் காங்கு
மொழிபல பெருகிய பழிதீர் தேஎத்துப்
புலம்பெயர் மாக்கள் கலந்தினி துறையும்
முட்டாச் சிறப்பிற் பட்டினம்.
பட்டினப். 213—218.

56. நீரினின்று நிலத்தேற்றவும்
நிலத்தினின்று நீர்ப்பரப்பவும்
அளந்தறியாப் பலபண்டம்
வரம்பறியாமை வந்தீண்டி
அருங்கடிப் பெருங்காப்பின்
வலியுடை வல்லணங்கினோன்
புலிபொறித்துப் புறம்போக்கி
மதிநிறைந்த மலிபண்டம். பட்டினப். 129—136.

இருக்கும் தோற்றம் மலைச் சரிவுகளில் வருடை மான்கள் துள்ளி விளையாடுதலை ஒத்திருக்கும்.[57] இனிய ஓசையை யுடைய அலைகள் ஒலிக்கும் கடலிலே வந்த நல்ல ஆபரணம் வைக்கப்பட்டுள்ள பண்டகசாலை பதிற்றுப்பத்தில் கூறப் படும்.[58]

### முந்நீர் வழக்கம்

தமிழ்நாட்டு மக்களின் குன்றாத முயற்சியினால் முந்நீர் வழக்கம் சிறப்புற்று விளங்கியது. நாட்டின் கரையோரங் களிற் செல்லுவதற்குச் சிறுச்சிறு ஓடங்களையும், பிறநாட்டு வணிகத்திற்கு நுண்ணிய தொழிலமைந்த பரந்த இடவசதி யுடைய பெரிய நாவாய்களையும் தமிழர் வைத்திருந்தனரென அறிகின்றோம். உள்நாட்டு வணிகத்தில் வழங்கிய ஓடம் பஃறி எனப்படும். இத்தகைய ஒரு பஃறியைப்பற்றிப் பட்டினப்பாலை பின்வருமாறு கூறும்: "அவை வெள்ளை உப்பின் விலையைச் சொல்லி விற்ற நெல்லைக் கொண்டு வந்தவை; குதிரைச்சாலையிலே நிற்கும் குதிரைகளைப் பிணிக்குமாறு போலக் கழி சூழ்ந்த பக்கத்திலே தறிகளிற் பிணிக்கப்பட்டுள"[59] சிறு மரக்கலங்களில் தோணி, அம்பி

---

57. பொதிமுடைப் போரேறி
மழையாடு சிமைய மால்வரைக் கவாஅன்
வரையாடு வருடைத் தோற்றம் போலக்
கூருகிர் ஞமலிக் கொடுந்தா ளேற்றை
ஏழகத் தகரோ டுகளு முன்றில்.
பட்டினப். 137—141.

58. நன்கல வெறுக்கை துஞ்சும் பந்தர்.
பதிற். 55 : 4.

59. வெள்ளை யுப்பின் கொள்ளை சாற்றி
நெல்லொடு வந்த வல்வாய்ப் பஃறி
பணைநிலைப் புரவியி னணைமுதற் பிணிக்கும்
கழிசூழ்படப்பைக் கலியாணர். பட்டினப்:29—32.

என்ற வகைகளும் இருந்தன. பெருமரக்கலம் கொணர்ந்த பொன்னுகிய பொருள்கள் கழிகளில் இயங்கும் தோணிகளாற் கரைசேர்க்கப்படும்.[60] உழுந்தின் சக்கையைத் தின்று வளர்ந்த தளர்ந்த நடையையுடைய குதிரை, கடல் நீரைப் பிளந்துகொண்டு செல்லும் தோணி போலப் பகைவருடைய தானைத் திரளைப் பிளந்து சென்று போரைச் செய்யும்.[61] கடலொலி அடங்கத் தோணி கடலிற் செல்லாதொழிந்தமையால் மிக்க நீரினையுடைய பெரிய கழியிற் சுரு முதலிய மீன்கள் செருக்கித் திரியும்.[62]

பெரியோராயினும் சிறியோராயினும் வருவோரை இரு கரையினும் மாறிமாறிக்கொண்டு போய்விடும் நீர்த்துறையிடத்துள்ளன அறத்துக்கு உழைக்கும் அம்பிகள்.[63] திருத்தமாக முறுக்கிய வலிய கயிற்றுற் பின்னிய பெரிய வலையை இடிபோல முழங்கும் அலைகளையுடைய கடலில் இடும் பொருட்டுப் பரதவர் அம்பிகளைச் செலுத்துவர். இவ்வாறு செலுத்தப்படும் அம்பிகள் பரிக்கோற்காரர் பிணித்துச் செலுத்துகின்ற அடக்குதற்குரிய களிற்றியானையைப் போன்

---

60. கலந்தந்த பொற்பரிசும்
கழித்தோணியாற் கரைசேர்க்குந்து.
புறநா. 343 : 5—6.

61. உழுத்தத ருண்ட வோய்நடைப் புரவி
கடன்மண்டு தோணியிற் படைமுகம் போழ.
புறநா. 299 : 2—3.

62. கடல்பா டவிந்து தோணி நீங்கி
நெடுநீர் இருங்களிக் கடுமீன் கலிப்பினும்.
அகநா. 50 : 1—2.

63. உறுவரும் சிறுவரும் ஊழ்மா றுய்க்கும்
அறத்துறை யம்பியின் மான மறப்பின்.
புறநா. 381 : 23—24.

றிருக்கும்.[64] குளிர்ந்த புனலாடும் வளைந்த கோட்டையுடைய எருமை வலிய கட்டினையுடைய தோணி போலத் தோன்றும்.[65] வெப்பம் குறையாத எரிபரந்த பாழிடத்தே யுள்ள பெருமையொழிந்த வழிச்செல்லும் யானை, நீருள்ள இடம் அறியாமல் பேய்த்தேர் தோன்றும் இடமெல்லாம் ஓடி வழியிடத்து வருந்திக் கிடக்கும். இவ்வாறு அது கிடக்கும் நிலை நீரற்ற ஆற்றிற் கிடக்கும் ஓடம் போன்றது.[66] பனங் குருத்தைத் தின்னும் பசிய கண்ணினையுடைய யானை ஒள்ளிய சுடர் முதிராத இளைய ஞாயிற்றையுடைய காலை வேளையிலே செயல் ஒடுங்கி அசைந்துகொண்டிருக்கும் நிலை, காலையில் கடலிடத்தே பொருந்திய அம்பி போலத் தோற்றும்.[67]

---

64. வடிக்கதிர் திரித்த வன்ஞாட் பெருவலை
இடிக்குரற் புணரிப் பௌவத்து இடுமார்
நிறையப் பெய்த வம்பி காழோர்
சிறையறுங் கழற்றிற் பரதவ ரொய்யுஞ்.

நற். 74 : 1--4.

65. தண்புன லாடுந் தடங்கோட் டெருமை
திண்பிணி யம்பியிற் றோன்று மூர.

ஐங். 98 : 1—2.

66. வெம்மை தண்டா எரியுகு பறந்தலைக்
கொம்மை வாடிய இயவுள் யானை
நீர்மருங் கறியாது தேர்மருங் கோடி
அறுநீர் அம்பியின் நெறிமுதல் உணங்கும்.

அகநா. 29 : 15—18.

67. பனைவெளி றருந்து பைங்கண் யானை
ஒண்சுடர் முதிரா இளங்கதிர் அமையத்துக்
கண்படு பாயற் கையொடுங் கசைநிலை
வாள்வாய்ச் சுறவின் பனித்துறை நீந்தி
நாள்வேட் டெழுந்த நயனில் பரதவர்
வைகுகடல் அம்பியிற் றோன்றும்.

அகநா. 187 : 18—23.

பெருங்கடலிலே ஓடும் கலம் நாவாய் எனப்படும்.[68] அசையாத கம்பத்தினை அசைக்கும் யானைகள் போலப் புகார் நகரின் திரையையுடைய துறையில் நாவாய்கள் நிற்கும். அசைகின்ற அந்நாவாயின்மேல் நட்ட பாய்மரத்திலே கொடிகள் பறக்கும்.[69] தன்னை மருவிய பாகரை அறியாது மதம்பட்ட யானை போன்றது கடலின் கண்ணே இயங்கும் மரக்கலம் என்று புறநானூறு கூறும்.[70] குடதிசையிலிருந்து பால்போன்ற வெண்ணிறமான குதிரைகளையும், வடதிசையி லிருந்து மற்றும் சிறந்த பொருட்களையும் நாவாய்கள் தரும்.[71] கூம்புகளில் கொடிகள் அசையும் பெரும் நாவாய்களைப் பற்றி மதுரைக்காஞ்சி கூறும். அவை பாய் விரித்து, உருண்டோடிவரும் அலைகளைக் கிழித்துச் செல்லும். மக்களின் செல்வத்தை மிகச் செய்யும் பொன்னைத் தரும் வியாபாரத் திற் சிறப்புற்று முரசம் ஒலிக்க அவை துறைமுகத்தை

---

68. இச்சொல் கிரேக்க மொழியிலிருந்தோ அல்லது வடமொழியிலிருந்தோ தமிழில் அமைந்ததெனக் கூற இயலாது.

69. வெளிலிளக்குங் களிறுபோலத்
தீம்புகார்த் திரைமுன்றுறைத்
தூங்குநாவாய் துவன்றிருக்கை
மிசைக்கூம்பி னசைக்கொடியும்.

பட்டினப். 172—175.

70. களிறே, முந்நீர் வழங்கு நாவாய் போலவும்
பன்மீ னுப்பட் டிங்கள் போலவும்
சுறவினத் தன்ன வாளோர் மொய்ப்ப
மரீஇயோ ரறியாது மைந்துபட் டன்றே.

புறநா. 13 : 5—8.

71. நீர்ப்பெயற் றெல்லைப் போகிப் பாற்கேழ்
வாலுளைப் புரவியொடு வடவளந் தரூஉம்
நாவாய் சூழ்ந்த நளிநீர்ப் படப்பை.

பெரும்பாண். 319—321.

அடைவன.[72] சிறந்த நாவாய்களிற் குதிரைகள் கொண்டு வரப்பட்டன. அகன்ற இடத்தையுடைய யவனம் முதலிய தேசத்திலுள்ளோர் விரும்பும் பேரணிகலங்களை அவை பெற்றுக்கொண்டு செல்வன.[73]

இத்தகைய பெரிய கப்பல்கள் வங்கம் எனவும் வழங்கின. தொடக்கத்தில் இச்சொல் வங்காளத்திலே செய்யப்பட்ட கலங்களைக் குறித்திருக்கலாம். பின்னர் எல்லாக் கப்பல்களையும் குறிக்க வழங்கிற்று. இழைகளைத் தூரத் தேசங்கட்குக் கொண்டுசென்று விற்று ஆழமும் மணமும் பொருந்திய பெருங்கடலினின்றும் இரவில் இருங்கழியை அடையும் வங்கங்களில் வந்திறங்கும் வணிகரைப்பற்றி மதுரைக் காஞ்சி கூறும்.[74] பிறநாடுகளிலுள்ள அரிய ஆபரணங்களைத் தரும்

72. கொடும்புணரி விலங்குபோழக்
கடுங்காலொடு கரைசேர
நெடுங்கொடிமிசை யிதையெடுத்து
இன்னிசைய முரசமுழங்கப்
பொன்மலிந்த விழுப்பண்டம்
நாடார நன்கிழிதரும்
ஆடியற் பெருநாவாய். மதுரை. 77—83.

73. விழுமிய நாவாய் பெருநீ ரோச்சுநர்
நனந்தலைத் தேஎத்து நன்கல னுய்ம்மார்
புணர்ந்துடன் கொணர்ந்த புரவியொ டனைத்தும்.
மதுரை. 321—323.

74. வாலிதை யெடுத்த வளிதரு வங்கம்
பல்வேறு பண்ட மிழிதரும் பட்டினத்
தொல்லெ னிமிழிசை மானக் கல்லென
நனந்தலை வினைஞர் கலங்கொண்டு மறுகப்
பெருங்கடற் குட்டத்துப் புலவுத்திரை யோதம்
இருங்கழி மருவிப் பாயப் பெரிதெழுந்து.
மதுரை. 536—541.

பொருட்டுக் கடல்நீரில் உயர்ந்து செல்லும் பெரிய ஆரவாரத்தையுடைய வங்கம் திசைகளிலே திரியும் எனப் பதிற்றுப்பத்திலிருந்து அறியலாம்.[75] உலகு புடைபெயர்ந்தாலொத்த அச்சம் தோன்றும் வங்கம், புலால் வீசும் அலைகளை உடைய பெரிய கடலின் நீரை இடையிடையே பிளந்துசெல்லும்.[76] கங்கை யாற்றில் ஓடும் வங்கம் நற்றிணையில் கூறப்படும்.[77] போர்க்களத்தில் வெட்டுண்டு குதிரைகள் குருதி வெள்ளத்தில் நிறைந்து மிதத்தல், காற்று இயக்கமின்றி நிற்கும் வங்கம் போலக் காட்சியளிக்கும்.[78] கரிய கழி வழியாக வந்திறங்கும் கடலிற் செல்லுதலையுடைய வங்கங்களைப் பற்றிப் புறநானூறு கூறும்.[79]

சிறிய ஓடங்களைப் பற்றியும் பெருங்கப்பல்களைப் பற்றியும் வரும் இச் செய்திகள் பெரிப்புளூசு என்னும் கிரேக்க வரலாற்று நூலாசிரியர் தரும் செய்திகளோடு ஒத்திருக்கின்றன. "சோழ நாட்டுத் துறைமுகங்களிற் கரையோரமாகத் தமரிக்கா (*Damirica*) வரையும் செல்லும் கப்பல்கள் உள்ளன ; இன்னும் மரங்களைப் பிணைத்துச் செய்யப்பட்ட சங்கரம் (*Sangara*) எனப்பட்ட பெரும் கப்பல்களும் அங்கு

---

75. அருங்கலந் தரீஇயர் நீர்மிசை நிவக்கும்
பெருங்கலி வங்கந் திசைதிரிந் தாங்கு.
பதிற். 52 : 3—4.

76. உலகுகிளர்ந் தன்ன உருகெழு வங்கம்
புலவுத்திரைப் பெருங்கடல் நீரிடைப் போழ.
அகநா. 255 : 1—2.

77. கங்கை வங்கம் போகுவர் கொல்லோ.
நற். 189 : 5.

78. வளிவழக் கறுத்த வங்கம் போலக்
குருதியம் பெரும்புனல் கூர்ந்தொழிந்தனவே.
புறநா. 368 : 9—10.

79. இருங்கழி யிழிதரு மார்கலி வங்கம்.
புறநா. 400 : 20.

உள்ளன. கிரிசி (*Chryse*) என்ற ஊருக்கும் கங்கை நதிக்கும் செல்லும் கப்பல்கள் கொலண்டியா (*Colandia*) எனப் பட்டன. கொலண்டியா என்னும் இக்கப்பல்கள் மிகப் பெரிய உருவத்தை உடையன."[80] பெரிப்புளுசு ஆசிரியர் இங்கு மூன்று வகைக் கப்பல்களைக் குறித்திருக்கின்றார். கரையோரங் களிற் செல்லும் கப்பல்கள் ஒருவகையைச் சார்ந்தன. தமிழ் இலக்கியத்திலே பஃறி, தோணி, அம்பி என்று வழங்குவன வோடு அவை பொருந்துவன. பரந்த இடத்தையுடைய பெருங் கடலிற் செல்லும் கப்பல்கள் யாவும் மற்றைய இரண்டு வகைகளையும் சார்ந்தன. அவையே சங்க நூல்களில் நாவாய் எனவும் வங்கமெனவும் வழங்கின.

இத்தகைய கப்பல்களைக் குறிப்பதற்குக் கலம் என்ற சொல்லும் அடிக்கடி எட்டுத்தொகை நூல்களில் வழங்கப் படும். சங்குகள் கரையின்கண்ணே திரிய, கடல் எழுந்து ஆரவாரிக்க ஒலியையுடைய குளிர்ந்த துறைக்கண் கலத்தைச் செலுத்துவர்.[81] கரையிற் பிணிக்கப்பட்டு உலர்ந்து தோன்றும் கலத்தைப்பற்றிப் புறநானூறு கூறும்.[82] கடல் சார்ந்த நெய்தற் பகுதியிலே காற்றாற் கொணரப்பட்ட மரக் கலங்களைப் பெண்கள் எண்ணுவார்கள்.[83]

---

80. *Section 60, p 46.*

81. கோடுபுலங் கொட்பக் கடலெழுந்து முழங்கப்
பாடிமிழ் பனித்துறை யோடுகல முகைக்கும்.
ஐங். 192 : 1—2.

82. பிணங்குகதிர்க் கழனி நாப்ப ணேமுற்று
உணங்குகல னாழியிற் றோன்றும்.
புறநா. 338 : 10—11.

83. கடலே, காறந்த கலனெண்ணுவோர்
கானற் புன்னைச் சினை நிலைக் குந்து.
புறநா. 386 : 14—15.

### கலங்கரை விளக்கம் (வெளிச்ச வீடுகள்)

பெருங் கப்பல்களும் செழித்த வாணிபமும் அக்காலத்தில் இருந்தமையால், நடுக்கடலிற் கப்பல்கள் சென்று திரியும் இராக் காலத்திலே திசைதடுமாறுது கரைசேர்தற்குத் துணையாகக் கடற்கரைப் பட்டினங்களிற் கலங்கரை விளக்கங்களை அமைத்தனர். ஆழ்ந்த கடலிற் செல்லும் கலங்களுக்குத் துணையாகவுள்ள விளக்குகளைப் பற்றிப் பெரும்பாணுற்றுப் படை பாடுகின்றது.[84]

### துறைமுகங்கள்

தமிழகத்தில் நடைபெற்ற பெரும் வணிகத்தின் பயனுகப் பல துறைமுகங்கள் அக்காலத்திற் சிறப்புடன் விளங்கின.

### காவிரிப்பூம்பட்டினம்

சோழநாட்டின் பெருந்துறைமுகம் புகார் என வழங்கிய காவிரிப்பூம்பட்டினமாகும். அது காவிரியின் வடகரையில் அமைந்திருந்தது. காவிரியாறு அக்காலத்திலே அகலமும் ஆழமும் கொண்டு விளங்கியது. பாரம் ஏற்றிய கப்பல்கள் பாய்சுருக்காது சென்று அதன் கரைகளில் வெளிநாட்டிலிருந்துவந்த பண்டங்களைப் பறிப்பன.[85] அத்துறைமுகத்தின் கரையருகே உயர்ந்த மேடைகளும் பண்டக சாலைகளும் இருந்தன. அவ்விடத்திற் குவிந்துள்ள பொருள்களிற் சோழர்

---

84. இரவின் மாட்டிய விலங்குசுடர் ஞெகிழி
உரவுநீ ரழுவத் தோடுகலங் கரையும்
துறைபிறக் கொழியப் போகி.
பெரும்பாண். 349—351

85. கூம்பொடு
மீப்பாய் களையாது மிசைப்பரந் தோண்டாது
புகாஅர்ப் புகுந்த பெருங்கலந் தகாஅர்
இடைப்புலப் பெருவழிச் சொரியும்
கடற்பஃ றாரத்த நாடுகிழ வோயே.
புறநா. 30 : 10—14.

முத்திரை பொறிக்கப்பட்டது.[86] அத்துறைமுகத்தில் வாழ்ந்த வேற்று நாட்டவரைப் பற்றி முன்னர்க் கூறினோம்.[87] இத்துறைமுகத்தில் ஏற்றுமதி இறக்குமதியாகும் பொருட்களைப்பற்றிப் பின்னர் கூறுவோம். சுங்கவரி இறுப்பதற்கு இருந்த பொருட்குவியல்கள் மலைகள்போல் இருந்தன.

**முசிறி**

சேர சோழ பாண்டிய நாடுகளிற் சேரநாடே மேலைத்தேச வியாபாரிகள் இலகுவாக அடையக்கூடிய இடத்தில் அமைந்திருந்தது. இந்நாட்டிலிருந்து அவர் அளவில்லாத மிளகைப் பெற்றனர். இப்பகுதியிலிருந்த சிறந்த துறைமுகம் "முசிரிஸ்" (*Muziris*) என வழங்கப்பட்டது. இப்பொழுது பேரியாற்றின் கரையிலுள்ள கொடுங்கல்லூருக்கு (*Cranganore*) அண்மையில் பழம் முசிறி அமைந்ததெனக் கூறுவர்.[88]

தம்நாட்டுப் பொருள்களைக் கொணர்ந்து தமிழ் நாட்டுப் பொருள்களை எடுத்துச் செல்லும் வணிகர் வந்த நாவாய்கள் பல இத்துறைமுகத்தில் நெருங்கி நின்றன. மீன்களை விற்று விலைக்கு மாறுகப் பெற்ற நெற்குவியல்களும், வீடும் உயர்ந்த தோணியும் பிரித்தறிய வாராதபடி காண்பாரை மயக்கச் செய்யும் மனையிடத்தே குவிக்கப்பெற்ற மிளகு மூடைகளும், மரக்கலங்கள் கொணர்ந்த பொன்னுலாகிய பொருள்களும், கழிகளில் இயங்கும் தோணிகளால் கரை சேர்க்கப்படும் மலை நாட்டுப் பொருளும், கடல்தரு பொருளும் இத்துறைமுகத்தில் நெருங்கிக் கிடந்தன.[89] யவனர் கொண்டுவந்த

---

86. இவ்வியல் 56ம் அடிக் குறிப்புரையைப் பார்க்க.
87. இவ்வியலிலுள்ள 'மேலைநாட்டு வணிகர் குழாங்கள், என்னும் பகுதியைப் பார்க்க.
88. *Madras Tamil Lexicon p. 3235.*
89. மீனொடுத்து நெற்குவைஇ
மிசையம்பியின் மனைமறுக்குந்து
மனைக்குவைஇய கறிமூடையாற்
கலிச்சும்மைய கரைகலக்குறுந்து

மரக்கலங்கள் பொன்னேடு முசிறிக்கு வந்து மிளகோடு மீளுவதைப் பற்றி மேலே கூறினேம்.[90]

முசிறிப் பட்டினத்தைப் பற்றிய இச்செய்திகள் பெரிப்புளுசு தரும் செய்திகளோடு ஒப்பிடத்தக்கன. பொன்னும் இரத்தினமும், மென்மைமிக்க புடவைகளும், சித்திரங்கள் அமைந்த ஆடைகளும், பவளமும், செம்பும், ஈயமும், கோதுமையும் இத்துறைமுகத்தில் இறக்குமதி செய்யப்பட்டனவென அந்நூலாசிரியர் கூறுவர். கோதுமை மாலுமிகளுக்கு வேண்டிய அளவே இறக்குமதி செய்யப்பட்டதென்றும், அப்பொருளில் உள்நாட்டு வணிகர் வியாபாரம் செய்யவில்லையென்றும் அவர் கூறுவர். மேலும் இப்பட்டினத்திற் குட்டநாட்டிலிருந்து (*Cottonara*) வரும் மிளகும் முத்தும் யானைத் தந்தங்களும் பட்டும் இரத்தினமும் ஏற்றுமதி செய்யப்பட்டனவென்றும் இவ்வரலாற்று ஆசிரியர் கூறுவர்.[91]

## கொற்கை

பாண்டியரின் சிறந்த துறைமுகம் இதுவாகும். இத்துறைமுகம் பழங்காலத்தில் மக்களால் மிகவும் விரும்பப்பட்ட முத்துக்குப் பேர்போன இடமாகும். சேரநாடு மிளகிற்குப் பேர்போனது போலப் பாண்டிநாடும் முத்துக்குப் பேர்போனது. மதுரைக் காஞ்சியும் சிறுபாணுற்றுப்படையும் கொற்கையில் நடந்த முத்து வியாபாரத்தைச் சிறக்கக் கூறுகின்றன. சூல் முற்றி ஒளி முதிர்ந்த சீரிய முத்தினையும்

---

கலந்தந்த பொற்பரிசம்
கழித்தோணியாற் கரைசேர்க்குந்து
மலைத்தாரமுங் கடற்றாரமும்
தலைப்பெய்து வருநர்க்கீயும்.

புறநா. 343 : 1—8.

90. இவ்வியல் 44ம் அடிக்குறிப்புரையைப் பார்க்க.

91. *Section* 56, *p.* 44—45.

விளங்குகின்ற சங்கினையுமுடைய பெரிய சங்கு குளிப்பார் இருப்பினையும், கள்ளாகிய உணவினை மாந்தும் குடிகளைக் கொண்ட சீறூர்களையுமுடைய கொற்கையென மதுரைக் காஞ்சி குறிக்கும்.[92] கொற்கையிலுள்ள உமணர் வளர்க்கும் மந்திகள் மடப்பத்தினையுடைய மகளிருடைய பல்லையொத்த செறிந்த நீர்மையையுடைய முத்தைக் கிளிஞ்சிலின் வயிற்றகத்தே இட்டு நிரப்புவன.[93]

அகநானூற்றுப் பாட்டுக்கள் பல கொற்கைப் பட்டினத்து முத்தைச் சிறப்பிக்கின்றன. முத்துச் சிறந்து பொலியும் சீரும் பெருமையும் வாய்ந்த கொற்கைப் பட்டினத்தை அறத்தொடு காப்பர் பாண்டியர்.[94] பரக்கும் அலைகள் கொணர்ந்து வீசிய குளிர்ந்த ஒளியினையுடைய முத்துக்கள், விரும்பும் நடையினையுடைய குதிரையது காலினை வடுச்செய்து அதன் செலவினைக் கெடுக்கும் கொற்கையென அகநானூறு கூறும்.[95] பாண்டியனது புகழ் மிக்க சிறப்பினையுடைய கொற்கைப்பதியின் கடற்றுறை

---

92. விளைந்துமுதிர்ந்த விழுமுத்தின்
இலங்குவளை இருஞ்சேரிக்
கட்கொண்டிக் குடிப்பாக்கத்து
நற்கொற்கையோர் நசைப்பொருந.
மதுரை. 135—138.

93. மகாஅ ரன்ன மந்தி மடவோர்
நகாஅ ரன்ன நளிநீர் முத்தம்
வாள்வா யெருந்தின் வயிற்றகத் தடக்கி.
சிறுபாண். 56—58.

94. மறப்போர்ப் பாண்டியர் அறத்திற் காக்கும்
கொற்கையம் பெருந்துறை முத்தின் அன்ன.
அகநா. 27 : 8—9.

95. இவர்திரை தந்த ஈர்ங்கதிர் முத்தம்
கவர்நடைப் புரவிக் கால்வடுத் தபுக்கும்
நற்றேர் வழுதி கொற்கை முன்றுறை.
அகநா. 130 : 9—11.

யிலே ஒளியினையுடைய முத்துப் பிரகாசிக்கும்.[96] வெண்மை யான ஓடங்களினின்றும் கருமையான கடலிலே மூழ்கிச் சுறுவின் வாயினின்றும் தப்பி வலம்புரிச்சங்கையெடுத்து வெற்றிச்சங்கை ஊதும் பரதவர் மலிந்திருந்தனர் கொற்கை யில்.[97] நெருங்கிய நீர்மிக்க முத்துக்கள் விளையும் கடற் பரப்பினை உடையது கொற்கை.[98]

கொற்கையைப் பற்றிய இக்குறிப்புக்கள் யாவும் கிரேக்க உரோம வரலாற்றாசிரியர் கூறுவனவற்றோடு ஒத்திருக் கின்றன. கொற்கையில் முத்துக்குளிப்பவர் சிறையிலுள்ள குற்றவாளிகளெனப் பெரிப்புளூசு என்னும் நூலால் அறிய லாம். அது தொடர்ந்து கூறுவதாவது : "குமரி தொடக்கம் கொல்சி (கொற்கை) வரையும் இந்நாடு உள்ளது. கொல்சி யில் முத்துக் குளிக்கும் இடம் பல உள ; முத்துக்குளிப்பவர் சிறையிலிடப்பட்ட குற்றவாளிகள் ; கொல்சி பாண்டிய அரசனுக்கு உரியது."[99] இவ்வாறு மேனாட்டவரால் சிறப் பிக்கப்பெற்றது கொற்கை.

### இறக்குமதிப் பொருட்களும் ஏற்றுமதிப் பொருட்களும்

அக்கால வியாபாரப் பொருட்களைப் பற்றிய குறிப்புக் களைப் பட்டினப்பாலையிலும் மதுரைக் காஞ்சியிலும் விரி

96. வினை நவில் யானை விறற்போர்ப் பாண்டியன்
புகழ்மலி சிறப்பிற் கொற்கை முன்றுறை
அவிர்கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து.
அகநா. 201 : 3—5.

97. இலங்கிரும் பரப்பின் எறிசுறு நீக்கி
வலம்புரி மூழ்கிய வான்றிமிற் பரதவர்
ஒலிதலைப் பணிலம் ஆர்ப்பக் கல்லெனக்
கலிகெழு கொற்கை எதிர்கொள இழிதரும்.
அகநா. 320 : 10—13.

98. காண்டொறுங் கலுழ்த லன்றியு மீண்டுநீர்
முத்துப்படு பரப்பிற் கொற்கை முன்றுறை.
நற். 25 : 5—6.

99. *Section* 59, *p.* 46.

வாகக் காணலாம். "கப்பல்களில் நிமிர் பரிப் புரவிகள் வந்து இறங்குவன; மிளகு மூடைகள் வண்டியில் வருவன; வடமலையிற் பிறந்த மணியும் பொன்னும், குடமலைப் பிறந்த சந்தனமும் அகிலும், தென் கடலிற் பிறந்த முத்தும், குண கடலிற் பிறந்த பவளமும் குவிந்து கிடப்பன. கங்கை காவிரி ஆகிய ஆறுகளின் பயன்களும், ஈழத்துணவும், காழகத்து ஆக்கமும் சிறந்து விளங்குவன. இவ்வாறு அருமையும் பெருமையும் சான்ற பொருட்கள் பல காவிரிப்பூம்பட்டினத்து மறுகுகளில் மண்டியும் மயங்கியும் கிடக்கின்றன" எனப் பட்டினப்பாலை ஆசிரியர் கூறுவர்.[100]

சேறு நிரம்பிக் கரியதாய் விளங்கும் கழிகளில் விளைந்த உப்பையும் இனிய புளியினையும், பரதவரால் மணலிலே பரப்பிச் செய்யப்பட்ட துடியின் பக்கங்களையொத்த கருவாட்டையும் வேற்று நாட்டுக் கப்பல்கள் எடுத்துச் செல்லும். சிறந்த அணிகளைப் பண்டமாற்றாகக் கொள்ளும் பொருட்டு அக்கப்பல்கள் சிறந்த குதிரைகளைக் கொண்டு வருவன.[101] அணிகளை விற்பனைக்காகத் தூர தேசங்கட்கு எடுத்துச்

---

100. நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடன் முத்துங் குணகடற் றுகிரும்
கங்கை வாரியுங் காவிரிப் பயனும்
ஈழத் துணவுங் காழகத் தாக்கமும்
அரியவும் பெரியவும் நெரிய வீண்டி
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகின்.
பட்டினப். 185—193.

101. இருங்கழிச் செறுவிற் றீம்புளி வெள்ளுப்புப்
பரந்தோங்கு வரைப்பின் வன்கைத் திமிலர்
கொழுமீன் குறைஇய துடிக்கட் டுணியல்
விழுமிய நாவாய் பெருநீ ரோச்சுநர்
நனந்தலைத் தேஎத்து நன்கல னுய்ம்மார்
புணர்ந்துடன் கொணர்ந்த புரவியொ டனைத்தும்.
மதுரை. 318—323.

செல்லும் வணிகர் கொண்டுவரும் பொருட்களைப் பற்றி மதுரைக் காஞ்சி குறிப்பிடும்.[102]

**புரவி (குதிரை)**

வேகமான நடையையுடைய குதிரைகள் தூர தேசங்களிலிருந்து வந்தன என்று மேலே கூறப்பட்டது. தூர தேசங்கள் என்று குறிக்கப்பட்டவற்றுள் பார்த்தியாவும் (*Parthia*) ஒன்றுக இருக்கலாம். ஈழத்திற்குப் பாரசீகத்திலிருந்து குதிரைகள் வந்தன என்று கொசுமசு (*Cosmas*) என்னும் நூலினுல் அறியலாம்.[103] ஆதலின் தமிழ் நாட்டிற்கும் அதே நாட்டிலிருந்தே குதிரைகள் வந்தனவெனக் கொள்ளலாம்.

**மிளகு**

இது தமிழ்நாட்டிலிருந்து உரோமர் பெற்ற பொருட்களில் முக்கியமானது. தமிழ் நாட்டிலிருந்து மேற்கே சென்ற பொருட்களுள் நான்கின் மூன்று பகுதி மிளகு. முசிறித் துறைமுகத்திலிருந்து இம் மிளகு ஏற்றுமதி செய்யப்பட்டது. எவ்வாறு வேற்று நாட்டுக் கப்பல்கள் மிளகைப் பொன் கொடுத்து வாங்கிக்கொண்டு சென்றன என்பதை மேலே கூறினேம். இறைச்சி முதலிய உணவுகளைப் பழுதுபடாது பேணுவதற்கு உரோமர் மிளகைப் பயன்படுத்தினர். மருந்து ஆக்குவதற்கும் மிளகு உதவியது. கிப்போக்கிரிட்டசு (*Hippo-Crrtes*) கலென் (*Galen*) பிளினி முதலிய வைத்திய ஆசிரியர் மிளகை மருந்துக்குப் பயன்படுத்தினர்.[104] கிப்போக்கிரிட்டசு மிளகை இந்திய மருந்தெனக் கூறுவர். உரோமாபுரியில் ஒரு இருத்தல் மிளகின் விலை பதினைந்து தெனுறி (*Denarir*) என்றும், இந்தியாவில் அவ் விலையின் அரைப்பங்குகூட இல்லை

---

102. நனந்தலை வினைஞர் கலங்கொண்டு மறுக.
மதுரை. 539.

103. *Cosmas XI. 449, C.*

104. *Warmington-Commerce between the Roman Empire and India. pp. 181—183.*

என்றும் பிளினி கூறுவர்.[105] மேலும் பசியை அதிகரிப்பதற்கு மிளகை உண்பவரைக் கண்டித்து, மிளகை உணவாகக் கொள்ளும் பழக்கத்தைத் தொடக்கி வைத்தவர் யாராக இருக்கலாம் என்று நினைத்துப் பார்க்கிறார் பிளினி.[106]

### பொன்

சங்கநூல்களிற் பொன் குறிக்கப்பட்டிருந்த போதிலும் அது ஒரு முக்கியமான வியாபாரப் பொருளாக இருக்கவில்லை யென்றே கூறவேண்டும். வடமலைப் பிறந்த பொன் என்பது சூடிய நாகபுரியின் (*Chota Nagpur*) மேட்டு நிலத்தில் விளைந்த பொன்னாக இருக்கலாம். இப் பொன்னைக் காவிரிப் பூம்பட்டினத்திற்குக் கொண்டுவந்து அங்கு வேற்று நாட்டவர்க்கு விற்றனர் போலும்.[107] கங்கைநதிப் பக்கத்தில் இருந்து வந்த பொன்னைப் பற்றிப் பிளினியும் கூறுவர்.[108] தென்னாட்டிற் கண்டெடுக்கப்பட்ட பழைய உரோம நாணயங்களைக் கொண்டு தென்னாட்டில் உரோம நாணயங்களாகப் பொன் இறக்குமதி செய்யப்பட்டதெனக் கொள்ளலாம்.

### ஆரம் (சந்தனம்)

இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட மணம் நிறைந்த மரவகைகளில் முக்கியமானது சந்தனம். சந்தன மரம் தென்னாட்டிற்கே சிறப்பாக உரியது. தென்னிந்தியாவில்

---

105. *XII*, 14.

106. *XII*, 14.

107. காவிரியைப் பொன்னியாறு எனக் கூறுவதும் குறிப்பிடத்தக்கது. மைசூரிலுள்ள கோலாறுப் பிரதேசத்தில் காவிரியாறு உற்பத்தியாகின்றபடியால் அங்கிருந்து பொன்னைத் தன் நீருடன் கொணர்ந்து கொழிக்கும். அதனை மக்கள் நீர் வற்றிய காலங்களில் அவ்வாற்றின் மணற் பரப்பில் கிண்டியெடுப்பர்.

108. *XXXIII* 66 ; *XI*, *III*.

அது வாசனைத் திரவியமாகச் சிறப்புப்பெற்றது. ஆனால் உரோம நகரிலே அது பேதி மருந்தாகப் பயன்பட்டது.[109] சந்தன மரம் பொதியமலை, மைசூர், கோயம்புத்தூர், சேலம் ஆகிய இடங்களில் காணப்படும். சந்தனக்கட்டைகள் காவிரிப் பூம்பட்டினத்து மறுகுகளில் விலைப்பட்டன. பெரிப்புளுசு என்னும் நூலும் சந்தன மரத்தைக் கொண்டு நடந்த வியாபாரத்தைக் குறிக்கும்.[110]

## அகில்

வியாபாரத்திற் சிறப்படைந்த வேறொரு நறுமணம் மிக்க மரம் அகிலாகும். சங்க நூல்களில் இஃது அடிக்கடி கூறப்படும். இந்தியாவின் எப்பகுதியில் இம்மரம் வளர்ந்த தென்று கூறுவது இயலாது. குடமலையிலிருந்து வந்ததெனப் பட்டினப்பாலை கூறும்.[111] குடமலை என்பது காவிரிப்பூம் பட்டினத்திற்கு மேற்கே இருக்கும் குடகு மலையைக் (Western Ghats) குறிக்கலாம். காவிரித்துறையில் அகிலும் ஆரமும் வந்து குவிந்தனவென்று மாத்திரம் பொருநராற்றுப் படை கூறும்.[112] இம்மரம் நறுமணத்திற்காக எரிக்கப்படுவது என்றும், கப்பல்களிற் கொண்டுவரப்படுவதென்றும், உருவத்திற் படுத்திருக்கும் ஒட்டகத்தை ஒத்திருக்குமென்றும் சிறுபாணாற்றுப்படையிலிருந்து அறியலாம்.[113] பெரிப்புளுசு ஆசிரியர் இம்மரத்தைப்பற்றி ஒன்றுங் கூறவில்லை.

---

109. *Warmington: The Commerce between the* Roman Empire and India p. 215.

110. *Section 36. p. 36.*

111. குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்.
பட்டினப். 188.

112. நறையு நரந்தமு மகிலு மாரமும்
துறைதுறை தோறும் பொறையுயிர்த் தொழுகி.
பொருநர். 238 – 239.

113. ஓங்குநிலை யொட்டகந் துயின்மடிந் தன்ன
வீங்குதிரை கொணர்ந்த விரைமர விறகில்.
சிறுபாண். 154—155.

### முத்து

பாண்டி நாட்டிலிருந்த முத்துக் குளிக்கும் துறைகளைப் பற்றிய பல செய்திகளைப் பழந்தமிழ் நூல்களிற் காணலாம். இவற்றுள் முக்கியமானது கொற்கையாகும். இத்துறை முகத்தைப் பற்றிய செய்திகளை இவ்வியலில் மேலே கூறப்பட்ட கொற்கை என்னும் பகுதியிற் காண்க. தென்னிந்தியாவிற்கும் மேலைத்தேச நாடுகளுக்குமிடையில் நடந்த வாணிகத்தில் முத்து ஒரு சிறந்த இடத்தைப் பெற்றிருந்தது. முத்துப் பெறும் இடமாகவே கிரேக்கர் தென்னிந்தியாவைக் கருதினர்.[114] உரோமரும் தமிழ்நாட்டு முத்தினை விரும்பி வாங்கினர். உரோமாபுரி மகளிர் முத்துக்களை மிகவும் ஆவலோடு விரும்பினர். கையசு என்னும் (*Caius*) பேராசனின் மனைவியாகிய பௌலீனு (*Paulina*) என்பவள் 40,000,000 பொன் பெறுமதியான இரத்தினங்களாலும் முத்துக்களாலும் தன்னை அழகு செய்திருந்தாள் எனப் பிளினி கூறுவர்.[115] மேற்கு நாட்டு மக்கள் இப் பொருட்களை விழைந்தது தமிழ் மக்களுக்கு மிகவும் நன்மையாக இருந்தது.

### துகிர் (பவளம்)

பட்டினப்பாலை இதனை ஒரு வியாபாரப் பொருளாகக் குறித்தபோதும்[116] இப்பொருள் தமிழ் நாட்டினின்றும் ஏற்றுமதியானதற்கு ஒரு சான்றும் இல்லை.[117] ஒரு பவள மணியை ஓர் இந்தியன் எவ்வளவுக்கு மதித்தானோ அவ்வளவுக்கு ஒரு முத்தை உரோமப் பெண்மணி மதித்தாள் எனப் பிளினி கூறுவர்.[118]

---

114. *Campridge : History of India, Volume I, p. 423.*
115. *IX, 54—58.*
116. குணகடல் துகிர். பட்டினப். 189.
117. வங்காள விரிகுடாக்கடலிற் பவளம் விளைவதும் இவ்விடம் நோக்கற்பாலது.
118. *Warmington : The Commerce between the Roman Empire and India. p. 263.*

**கங்கைவாரி**

இப்பொருள்கள் யானை, இரத்தினம், முத்து, பொன் எனப் பட்டினப்பாலைக்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர் குறிக்கின்றார். இவற்றைத் தவிர வேறு எப்பொருள்கள் கங்கையாற்றின் கரைப் பகுதிகளிலிருந்து வந்தன என்று கூற முடியாது. வேற்று நாட்டவர்க்கு விற்கும் பொருட்டு இப் பொருட்கள் காவிரிப்பூம்பட்டினத்திற்குக் கொண்டுவரப் பட்டன.

**ஈழத்துணவு**

ஒரு காலத்தில் ஈழம் உணவுப் பொருட்களில் வளமிக்க நாடாகத் திகழ்ந்து செல்வம் சிறந்த சோணாட்டுக்கு உணவு வழங்கியது என்பது கவனிக்கத்தக்கது. ஈழத்திருந்து வந்த உணவு வகைகள் எவையெனத் தெரியவில்லை.

**உள்நாட்டு வணிகம்**

உள்நாட்டு வணிகத்தில் வியாபாரப் பொருட்களைக் கொண்டு செல்வதற்கு வண்டிகளும் கழுதைகளும் பயன் பட்டன. எருதுகள் இழுத்து நிரையாகச் செல்லும் உப்பு வண்டிகளைப் பற்றிச் சிறுபாணாற்றுப்படை கூறும்.[119] உப்புப் பொதியேற்றி இவ்வண்டியினை உமணப் பெண்டிரே ஓட்டிச் செல்வர். இவ்வாறு செல்லுமிடத்து அவ்வண்டியின் இரு புறத்தும் உப்பு வணிகர் வண்டியின் அச்சு முறியாமற் பாது காத்து நடப்பர்; அவ்வாறு செல்லும்பொழுது, வண்டியில் முன் பூட்டிய எருதுகள் இளைத்தால், அவற்றின் இடத்திற் பூட்டுதற்கு சில எருதுகளையும் மேலதிகமாக உடன் நடத்திச் செல்வர்.[120]

---

119. நோன்பகட் டுமண ரொழுகையொடு வந்த.
சிறுபாண். 55.

120. முடலை யாக்கை முழுவலி மாக்கள்
சிறு துளைக் கொடுநுக நெறிபட நிரைத்த
பெருங்கயிற் றொழுகை மருங்கிற் காப்பச்
சில்பத வுணவின் கொள்ளை சாற்றிப்
பல்லெருத் துமணர் பதிபோகு நெடுநெறி.
பெரும்பாண். 61—65.

மிளகுப் பொதிகளைக் கழுதைகளின் முதுகில் ஏற்றி நடத்திச் செல்வதும் உண்டு. சுளைகளை உடைய பலாப் பழத்தைப் போன்ற மிளகு மூடைகளைச் சுமக்கும் நேரான காதினையும் குறிசுட்ட உரமான முதுகையுமுடைய கழுதைகளைப் பற்றிப் பெரும்பாணாற்றுப்படை குறிக்கும்.[121] வெள்ளை உப்பைக் கொடுத்து நெல்லைக் கொண்டுவரும் சிறு ஓடங்களைப் பற்றிப் பட்டினப்பாலை கூறும்.[122]

உள்நாட்டு வணிகத்திற் பண்டமாற்று முறையே பெருவழக்கிலிருந்தது. நெல்லை அளவாக வைத்தே மற்றைய பொருட்களை மதிப்பெடுத்தனர் அக்காலத்து மக்களெனத் தமிழிலக்கியத்திலிருந்து அறிகின்றோம். நெல்லுக்காக உப்புக் கொடுக்கப்பட்டதை மேலே குறித்த பட்டினப்பாலையின் பகுதி விளக்கும். பெரிய கடலில் மீன்வேட்டை செய்யும் சிறு குடியில் வாழும் பரதவர் பெரிய உப்பங்கழியாய வயலில் விளைவித்த வெள்ளுப்பின் விலைகூறி, ஞாயிற்றின் வெம்மையாலாகிய பிளப்புக்களையுடைய குன்றங்களைக் கடந்து செல்லுவாள் உப்புவணிகரது காதலையுடைய இளையமகள். இவள், திரண்ட ஒளி பொருந்திய வளைகளை ஒலிக்க வீசி, "நெல்லுக்கு ஒத்த அளவினதே வெள்ளிய கல்லுப்பு" என்று சேரியிற் பண்டமாற்றாகிய விலை கூறுவள்.[123] உப்பு விற்றுக் கொண்ட நெல்லினாற் சமைத்த மூரலாகிய வெண்சோற்றைப்

---

**121.** தடவுநிலைப் பலவின் முழுமுதற் கொண்ட
சிறுசுளைப் பெரும்பழங் கடுப்ப மிரியற்
புணர்ப்பொறை தாங்கிய வடுவாழ் நோன்புறத்
தணர்ச்செவிக் கழுதைச் சாத்தொடு வழங்கும்
உல்குடைப் பெருவழிக் கவலை காக்கும்.
பெரும்பாண். 77—81.

**122.** குறும்பல்லூர் நெடுஞ்சோணாட்டு
வெள்ளை யுப்பின் கொள்ளை சாற்றி
நெல்லொடு வந்த வல்வாய்ப் பஃறி.
பட்டினப். 28—30.

**123.** பெருங்கடல் வேட்டத்துச் சிறுகுடிப் பரதவர்
இருங்கழிச் செறுவின் உழாஅது செய்த
வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றி
என்றூழ் விடர குன்றம் போகும்

பற்றியும், "ஊரவரே, நெல்லும் உப்பும் விலை ஒப்பாகும்; கொள்வீராக" என்று சேரிகள் தோறும் கூறி விற்கும் அழகிய வளைந்த உந்தியினையும் மூங்கில் போன்ற தோளினையுமுடைய நெய்தல் நிலப் பெண்ணைப் பற்றியும் அகநானூறு கூறும்.[124] உப்பை விற்று வெண்ணெல்லைப் பெறுவதைப் பற்றிக் குறுந்தொகையும் கூறும்.[125]

மலைநாட்டு வேட்டுவர் தயிர் கொணர்ந்த முட்டிகளுக்குள் பாண்டிநாட்டு உழத்திகள் நெல்லைச் சொரிவர்.[126] கூரிய பற்களையுடைய வலைப்பாண்மகள் இனிமையுடைத் தென்று கொள்ளப்படும் கெடிற்று மீனைச் சொரிந்த அகன்ற பெட்டி நிறையப் பண்டமாற்றாக மனையோள் பெரும் பயற்றை நிறைப்பள் என்றும்,[127] வலையையுடைய வலிய

---

கதழ்கோல் உமணர் காதல் மடமகள்
சில்கோல் எல்வளை தெளிர்ப்ப வீசி
நெல்லின் நேரே வெண்கல் உப்பெனச்
சேரி விலைமாறு கூறலின். அகநா. 140 : 1—8.

124. நெல்லும் உப்பும் நேரே ஊரீர்
கொள்ளீ ரோவெனச் சேரிதொறும் நுவலும்
அவ்வாங் குந்தி அமைத்தோ ளாய்.
அகநா. 390 : 8—10.

125. உப்பை மாறி வெண்ணெற் றரீஇய.
குறுந். 269 : 5.

126. கானுறை வாழ்க்கைக் கதநாய் வேட்டுவன்
மான்றசை சொரிந்த வட்டியு மாய்மகள்
தயிர்கொடு வந்த தசும்பு நிறைய
ஏரின் வாழ்நர் பேரி லரிவையர்
குளக்கீழ் விளைந்த களக்கொள் வெண்ணல்
முகந்தனர் கொடுப்ப வுகந்தனர் பெயரும்.
புறநா. 33 : 1—6.

127. முள்ளெயிற்றுப் பாணமக ளின்கெடிறு சொரிந்த
அகன்பெரு வட்டி நிறைய மனையோள்
அரிகாற் பெரும்பயறு நிறைக்கு மூர.
ஐங். 47 : 1—3.

பாண்மகனது மடமகளானவள் வரால் மீன் சொரிந்த பெட்டியுள் மனையோளானவள் ஓர் யாண்டு கழிந்த வெண்ணெல்லைச் சொரிந்து நிறைப்பள் என்றும்[128] ஐங்குறுநூறு கூறும். மீனைக் கொடுத்து நெல்லுப் பெறும் வழக்கத்தைப் புறநானூறும் கூறும்.[129] நெல் அளப்பதற்குரிய அளவையைப் பதிற்றுப்பத்து எடுத்து விளம்பும்.[130]

தேனையும் உணவுக்குகந்த கிழங்கு வகைகளையும் மீனின் கொழுப்புக்காகவும் நறவத்துக்காகவும் விற்கும் வழக்கத்தையும், கள்ளுக்காகவும் மான் இறைச்சிக்காகவும் கரும்பையும் சோற்றையும் கொடுக்கும் வழக்கத்தையும் பொருநராற்றுப் படையிலிருந்து அறியலாம்.[131] தயிர் புள்ளியாகத் தெறித்த வாயையுடைய மோர்ப் பானையைச் சுமட்டின்மேல் வைத்துக் கொண்டு திரியும் ஆய்மகள், தான் நெய்யை விற்கின்ற விலைக்குக் கட்டியாகப் பசும் பொன்னைக் கொள்ளாது,

---

128. வலைவல் பாண்மகன் வாலெயிற்று மடமகள்
வராஅல் சொரிந்த வட்டியுண் மனையோள்
யாண்டுகழி வெண்ணெ னிறைக்கு மூர.
ஐங். 48 : 1—3.

129. மீனெடுத்து நெற்குவைஇ. புறநா. 343 : 1.

130. தொன்றுதிறை தந்த களிற்றொடு நெல்லின்
அம்பண வளவை விரிந்துறை போகிய.
பதிற். 66 : 7—8.

அம்பண வளவை யுறைகுவித் தாங்குக்
கடுந்தே றுறுகிளை மொசிந்தன துஞ்சும்.
பதிற். 71 : 5—6.

131. தேனெய்யொடு கிழங்குமாறியோர்
மீனெய்யொடு நறவுமறுகவும்
தீங்கரும்போ டவல்வகுத்தோர்
மான்குறையொடு மதுமறுகவும்.
பொருநர். 214—217.

பாலெருமையையும் நல்ல பசுவையும் கரிய எருமை நாகினை யும் நெய்க்கு ஒப்பாகப் பெறுவள்.[132] மேலே கூறியவற்றி லிருந்து அக் காலத்தில் உழுதுண்டு வாழ்வார்க்கிருந்த செல்வாக்கையும் பால் மோர் நெய் ஆகியவற்றிற்கிருந்த சிறப்பையும் அறிந்துகொள்ளலாம்.

**வணிகர் பண்பு**

பண்டைக் காலத்தில் தமிழகத்தில் வணிகம் உலக நன்மைக்காகவே நடந்துவந்தது. பொருள் ஈட்டுவது என்னும் கருத்தால் மட்டும் அவர் இத்தொழிலை நடத்த வில்லை. பல இடங்களில் விளையும் பலவகைப் பண்டங்களை ஓரிடத்திற் கொண்டுவந்து குவித்து, அப்பண்டங்கள் கிடைக்காத வேறிடங்களுக்கு அவற்றை அனுப்பி, நாடு முழுவதும் வறுமையின்றி நலமாக இருக்க அவர் வழி தேடினர். காவிரிப்பூம்பட்டினத்திலிருந்த வணிகர் உண்மை பேசும் பண்பு வாய்ந்தவர்; பொய் பேசுவதை நாணுதற்குரியது என்று கருதுவர். தமக்கு உண்டாகும் ஊதியத்தை வெளிப்படையாகக் காட்டிப் பண்டங்களை விலை கூறி விற்பர். பிறர் பொருளை மிகுதியாகக் கொள்ளாமலும், தம்முடைய பண்டங்களைக் குறைத்துக் கொடாமலும் நடுவு நிலைமையோடும் உண்மையோடும் அவர் வணிகம் செய்வர். இவ்வாறு தமது செல்வத்தை அறம் தவறாது ஈட்டுவரெனப்

---

132. உறையமை தீந்தயிர் கலக்கி நுரைதெரிந்து
புகர்வாய்க் குழிசி பூஞ்சுமட் டிரீஇ
நாண்மோர் மாறு நன்மா மேனிச்
சிறுகுழை துயல்வருங் காதிற் பணைத்தோட்
குறுநெறிக் கொண்ட கூந்த லாய்மகள்
அளைவிலை யுணவிற் கிளையுட னருத்தி
நெய்விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளாள்
எருமைநல்லான் கருநாகு பெறூஉம்
மடிவாய்க் கோவலர் குடிவயிற் சேப்பின்.
பெரும்பாண். 158—166.

பட்டினப்பாலை கூறும்.[133] அறத்தின் வழிபாட்டு ஒழுகிய வணிகரை மதுரைக் காஞ்சியும் குறிக்கும்.[134] வணிகம் இவ்வளவு நேர்மையான முறையில் நடந்தமையாலேயே தமிழ் நாடும் பெருமையுடன் சிறப்புற்று விளங்கியது.

---

133. நெடுநுகத்துப் பகல்போல
நடுவுநின்ற நன்னெஞ்சினோர்
வடுவஞ்சி வாய்மொழிந்து
தமவும் பிறவு மொப்ப நாடிக்
கொள்வதூஉ மிகைகொளா
குறைப்பதுங் குறைகொடாது.

பட்டினப். 206—210.

134. அறநெறி பிழையா தாற்றி னொழுகி.

மதுரை. 500.

—

## பதின்மூன்ரும் இயல்

# பெண்கள்

### (1) சமுதாயத்திற் பெண்கள் நிலை

சமுதாயத்திற் பெண்கள் மிகவும் சிறந்த இடத்தைப் பெற்றிருந்தனர். சங்க காலத்திற்குப் பின்னரே அவர்கள் சிறப்புக் குறையத் தொடங்கியது. பெண்கள் தீவினைக்கும் துன்பத்திற்கும் ஏதுவானவர். என்ற கருத்து சங்க நூல்களில் இல்லை. சமணர் வருகையினுலே பெண்களைப் பற்றிய கருத்து மாறத்தொடங்கியது. இல்லற வாழ்க்கையையும் அதிலே பெறப்படும் இன்ப துன்பங்களையும் வெறுத்துத்தள்ளிய சமணர் பெண்களை வஞ்சகம் மிகுந்தவராகக் கொண்டனர் இதற்கு எடுத்துக்காட்டாகப் பெண்களை நம்பக்கூடா தென்றும் அவர் கூறுவதை உண்மையெனக் கொள்ளக்கூடா தென்றும் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்ருகிய ஏலாதி கூறுவதைக் காணலாம்.[1] சங்க மருவிய காலத்திற் குரிய இந் நூல் பெண்கள் கூறுவதை ஏற்றுக்கொள்ளாத கடவுளரும் இல்லையென வேருேர் இடத்திற் கூறும்.[2] பெண்கள் கூற்றைப் பொருளெனக் கொள்ளாதவர் கடவுளரி லும் உயர்ந்தோர் என்பது இதன் குறிப்பாகும்.

சங்க நூல்களில் இத்தகைய கருத்துக்கள் இல்லை. பெண்கள் சமூக விழாக்களிலே பங்கு பற்றிச் சுதந்திரமான

---

1. புனக்கொன்றை
 போலு மிழையார்சொற் றேருன் கனியானேல்
 சாலும் பிறநூலின் சார்பு. ஏலாதி. 5 : 2—4.

2. மின்னே ரிடையார்சொற் றேருன் விழைவோரான்
 ..................................................
 ......................விண்ணகத்து மில்.
 ஏலாதி. 20 : 1—4.

வாழ்க்கை நடத்தினர். அவர் கணவருடன் கள்ளருந்தினர்.[3] கள்ளருந்துவதினுல் அவர் கண்கள் குளிர்மையுள்ளனவாய் இருந்தன.[4] அவர் கல்லா மாந்தரோடு கைகோத்து விளையாடுவர்.[5] இன்னும் அலைகள் கரையோடு பொருதும் கடலில் யாவரும் காணக்கூடியதாக நீந்தி விளையாடுவர்.[6] கரைகளினுற் சூழப்பட்ட குளங்களிலே பெண்கள் பாய்ந்து நீராடுவரெனப் பொருநராற்றுப்படையிலிருந்து அறியலாம்.[7] புது நீர் விழவின் ஆரவாரத்தைத் தம்மிடத்தே கொண்ட மகளிர் தாம் அணிந்த கோதை ஆடவர்தம் மார்பிலணிந்த மாலையுடன் மயங்க அவருடன் நீர் விளையாடுவர்.[8] மகளிர் ஆடவருடன் குலவிப் பழகுவதற்கு ஒருவகையான

---

3. துணைப்புணர்ந்த மடமங்கையர்
பட்டுநீக்கித் துகிலுடுத்தும்
மட்டுநீக்கி மதுமகிழ்ந்தும்.
பட்டினப். 106—108.

4. நறவுபெயர்த் தமைத்த நல்லெழின் மழைக்கண்
மடவரன் மகளிரொடு பகல்விளை யாடி.
பெரும்பாண். 386—387.

5. கைஇ மெல்லிதி ஞெதுங்கிக் கையெறிந்து
கல்லா மாந்தரொடு நகுவனர் திளைப்ப.
மதுரை. 419—420.

6. துறையாடு மகளிர்க்குத் தோட்புணை யாகிய
பொருபுன றரூஉம் போக்கரு மரபின்.
சிறுபாண். 117—118.

7. நுரைத்தலைக் குரைப்புனல் வரைப்பகம் புகுதொறும்
புனலாடு மகளிர் கதுமெனக் குடைய.
பொருந. 240—241.

8. கலிகொள் சும்மை யொலிகொ ளாயம்
தசைந்த கோதை தாரொடு பொலியப்
புணர்ந்துட னுடு மிசையே யனைத்தும்.
மதுரை. 264—266.

தடையும் இருக்கவில்லை. எனவே காதல் மணத்தைப் பற்றிய பல குறிப்புக்கள் சங்க நூல்களிற் காணப்படும்.

ஒழுக்கத்தில் இருந்து தவறுதல் பெருங்குற்றமாகக் கருதப்பட்டது. பெண்களுக்கு இருக்கவேண்டிய மடம் நாணம் அச்சம் முதலிய பண்புகளைப்பற்றிப் பல நூல்கள் கூறும். முல்லை போன்ற பற்களையுடைய மகளிரின் கற்புச் சிறப்பைச் சிறுபாணாற்றுப்படையும் அகநானூறும் பாடும்.[9] முல்லை கற்பின் அடையாளமாகும். அருந்ததியின் கற்புப் பெண்களின் கற்புக்கு உவமையாக அமையும்.[10] பெரிய தெளிவான விசும்பிடத்து வடதிசைக்கண்ணே நின்று விளங்கும் அருந்ததியையொக்கும் கற்பினையுடைய மகளிரெனப் பெரும்பாணாற்றுப்படையும் புறநானூறும் கூறும்.[11] முதன்முதல் தலைவனை எதிர்ப்பட்ட தலைவியின் நாணத்தையும் அச்சத்தையும் குறிஞ்சிப்பாட்டு சிறப்பிக்கும்.[12]

வினைகள் இயற்றுவதிற் கணவருக்குப் பெண்கள் துணையாக இருந்தனர். அவர் பரணில் ஏறிக் கிளிகளை ஓட்டிப் பயிரைப் பேணுவர். மலைகளில் வளரும் பிரம்பினாற்

---

9. முல்லை சான்ற கற்பின் மெல்லியல்.
சிறுபாண். 30.

10. உயர்நிலை யுலகத்து
அருந்ததி யனைய கற்பிற்
குரும்பை மணிப்பூட் புதல்வன் றாயே.
ஐங். 442 : 4—5.

11. பெருநல் வானத்து வடவயின் விளங்கும்
சிறுமீன் புரையுங் கற்பி னறுநுதல்.
பெரும்பாண். 302—303.

வடமீன் புரையுங் கற்பின் மடமொழி.
புறநா. 122 : 8.

12. நாணு முட்கு நண்ணுவழி யடைதர
ஒய்யெனப் பிரியவும் விடாஅன்.
குறிஞ்சி. 184—185.

செய்யப்பெற்ற கவணினாலும், மற்றும் கருவியினாலும் கல்லெறிந்தும், முரசம் அறைந்தும் வானிலே திரியும் பறவைகளைக் குடம்பை நோக்கிப் பெயரச் செய்வர்.[13] தழலினைச் சுற்றியும் தட்டையினைத் தட்டியும், தீயின் கொழுந்தினை ஒத்த அசோகினது அழகிய தழையாலாகிய உடையினை உடுத்த குறமகள் தினைப்புனத்தைக் காப்பள் என அகநானூற்றிலிருந்து அறிந்துகொள்ளலாம்.[14] ஆய்மகளிர் மோரும் நெய்யும் விற்று ஆ முதலிய கொள்ளும் வழக்கத்தை முன்னர்க் கூறினோம்.[15]

பாலை நிலத்து எயிற்றியர் உறுதியான பிடியினையும் இரும்பு அலகினையுமுடைய மண்வெட்டிகளினாலே நிலத்தைத் தோண்டுவர் ; கறுத்த வெற்று நிலத்தை வளம்படுத்தி நெல் விளையச் செய்வர் ; முன்றில் நிலத்திலே அமைக்கப்பட்ட உரலில் நெல்லை இட்டு உறுதியான உலக்கையாற் குற்றுவர்.[16] நெல்லுக் குற்றும்பொழுது பாடும் மகளிரைப்

---

13. புலியஞ் சிதண மேறி யவண
சாரற் சூரற் றகைபெற வலந்த
தழலுந் தட்டையுங் குளிரும் பிறவும்
கிளிகடி மரபின் வூழூழ் வாங்கி. குறிஞ்சி. 41—44.

14. தழலை வாங்கியும் தட்டை ஓப்பியும்
அழலேர் செயலை அந்தழை அசைஇயும்
குறமகள் காக்கும் ஏனல். அகநா. 188 : 11—13.

15. பன்னிரண்டாம் இயல் 132-ம் அடிக்குறிப்புரையைப் பார்க்க.

16. ஈன்பிண வொழியப் போகி நோன்காழ்
இரும்புதலை யாத்த திருந்துகணை விழுக்கோல்
உளிவாய்ச் சுரையின் மிளிர மிண்டி
இருநிலக் கரம்பைப் படுநீ றாடி
நுண்பு லடக்கிய வெண்ப லெயிற்றியர்
பார்வை யாத்த பறைதாள் விளவின்
நீழன் முன்றி னிலவுரற் பெய்து
குறுங்கா முலக்கை யோச்சி நெடுங்கிணற்று.
பெரும்பாண். 90—97.

பற்றி மலைபடுகடாம் குறிக்கும்.[17] "பரந்த அடியினை உடைய உரலினது பகுவாயிடத்துத் தானியம் இடிக்கும்பொழுது குறமகள் பாடும் வள்ளைப்பாட்டு" என இதைக் குறுந் தொகைப்பாட்டு விளக்கிக் கூறும்.[18]

இல்லற மகளிர் இருள் மாய்ந்து கதிர் விரிகின்ற விடியற் காலத்தில் அக்காலத்து இல்லத்திற் செய்ய வேண்டியன வற்றை விரும்பிச் செய்வர்.[19] தேனீக்களும் வண்டுகளும் ஆரவாரிக்கும் மணல் பரவிய முற்றத்தைக் கூட்டுவர்.[20] அந்திக்காலத்தில் இரும்பாற் செய்த தகளியிலே நெய் தோய்ந்த திரியைக்கொளுத்துவர்;[21] வணிகர் தெருக்களில் நடமாடுவர்.[22]

பெண்கள் பாசறையில் வினை இயற்றுவதும் உண்டு. பெரும்பாலும் போர்த்தலைவர்க்குப் பணிப் பெண்களாகவும் விளக்கேற்றுபவராகவுமே ஏற்பட்டனர். "பாசறையி னுள்ளே தொடியணிந்த முன்கையினையும் கூந்தல் அழகாக விழுந்துகொண்டிருக்கும் சிறுபுறத்தையுமுடைய பெண்கள் உளர். அவர் வரிகள் விரவிய கச்சுக்களில் கட்டப்பட்ட ஈட்டியை உடையவர். அவ்வீட்டிகள் இரவைப் பகல் செய்யும் ஒளி வாய்ந்தவை. அப் பெண்கள் நெய்யுமிழ்

---

17. தினைகுறு மகளி ரிசைபடு வள்ளையும்.
மலைபடு. 342.

18. பாவடி யுரல பகுவாய் வள்ளை. குறுந். 89 : 1.

19. புலர்ந்துவிரி விடிய லெய்த விரும்பி. மதுரை. 664.

20. தருமணன் முற்றத் தரிஞிமி றார்ப்ப
மென்பூஞ் செம்மலொடு நன்கலஞ் சீப்ப
இரவுத்தலைப் பெயரு மேம வைகறை.
மதுரை. 684—686.

21. இரும்புசெய் விளக்கி னீர்ந்திரிக் கொளீஇ.
நெடுநல். 42.

22. மல்ல லாவண மாலை அயர. நெடுநல். 44.

கலத்தினராய் நெடும் விளக்குகளை ஏற்றுகின்றனர்; மங்கலாக எரிவனவற்றைத் தூண்டி விடுகின்றனர்'' என முல்லைப்பாட்டு விளம்பும்.[23]

## (2) பொழுதுபோக்கு

மகளிர் ஈடுபடும் பல விளையாட்டுக்களைச் சங்க நூல்கள் கூறும். கடற்கரையில் இளமகளிர் சிற்றில் இழைத்து விளையாடும் வண்டல் அவற்றுள் ஒன்றாகும். வண்டல் விளையாடும் இள மகளிரைப் பற்றிப் பொருநராற்றுப்படையும்,[24] வண்டல் இழைக்கும் ஆயத்தைப்பற்றிப் பெரும்பாணாற்றுப் படையும் குறிக்கும்.[25] வரிப்பட்ட மணலில் வண்டற்பாவை செய்து மகளிர் விளையாடுவரென அகநானூறு பகரும்.[26] பலரும் வந்து நீராடும் பெருந்துறைக்கண் மலரோடு பெருகி வந்த தண்ணிய நீர் வண்டல் மனையைச் சிதைக்கும்.[27] செல்வம் சிறந்த மகளிர் பந்து விளையாடுவர். ஒளிமிக்க பொற்சிலம்பு ஒலிப்ப, வான்தோய் மாடத்தில் வரிப் பந்தாடுவர் இவர்.[28] கதிர் கொய்த அரிதாளின்கண் இருந்த

---

23. குறுந்தொடி முன்கைக் கூந்தலஞ் சிறுபுறத்து
இரவுபகற் செய்யுந் திண்பிடி யொள்வாள்
விரிவுவரிக் கச்சிற் பூண்ட மங்கையர்
நெய்யுமிழ் சுரையர் நெடுந்திரிக் கொளீஇக்
கையமை விளக்க நந்துதொறு மாட்ட.
முல்லை. 45—49.

24. இளையோர் வண்ட லயரவும். பொருந. 187.

25. வண்ட லாயமொ டுண்டுறைத் தலைஇ.
பெரும்பாண். 311.

26. வண்டற் பாவை வரிமணல் அயர்ந்தும்.
அகநா. 330 : 2.

27. பலராடு பெருந்துறை மலரொடு வந்த
தண்புனல் வண்ட லுய்த்தென. ஐங். 69 : 2—3.

28. தமனியப் பொற்சிலம் பொலிப்ப வுயர்நிலை
வான்றோய் மாடத்து வரிப்பந் தசைஇ.
பெரும்பாண். 332—3.

குருவிகள் எழுவது விழுவதுவாய் துன்பமுறச் சிறைவிரித் தாடுதல் மகளிர் பந்தாடுதலை ஒக்கும்.[29] பெண்கள் பந்தை விரும்பி ஆடுவர் என அகநானூறும் கூறும்.[30]

புனல் விளையாட்டும் பெரு வழக்கிலிருந்தது. "செறி வுண்டான மலையிடத்துப் பளிங்கைக் கரைத்துச் சொரிந்து வைத்தாற் போன்ற பரந்த சுனையைக் குடைந்து தாழ்வில் லாத உள்ளத்துடன் ஆடுவோம்; உள்ளம் களிக்கப் பாடு வோம்" எனப் புனல் விளையாட்டைப் பற்றி ஒரு பெண் குறிப்பிடுவாள்.[31] நறிய நாகமும் அகிலும் ஆரமும் துறை யாடும் மகளிர்க்குத் துணையாவன.[32] கூந்தலிடத்து ஆம்ப லினது புறவிதழ் ஒடித்த முழுப்பூவைச் செருகி, வெள்ளம் வரப்பெற்ற பெரிய நீர்த் துறையை விரும்பி அப் புனல் விளையாட்டைச் செய்யப் பெண்கள் செல்வர் எனக் குறுந் தொகையிலிருந்து அறியலாம்.[33]

---

29. இருவி யிருந்த குருவி வருந்துறப்
பந்தாடு மகளிரிற் படர்தரும்.
ஐங். 295 : 4—5.

30. கிளியும் பந்துங் கழங்கும் வெய்யோள்.
அகநா. 49 : 1.

31. அவிர் துகில் புரையு மவ்வெள் ளருவித்
தவிர்வில் வேட்கையேந் தண்டா தாடிப்
பளிங்குசொரி வன்ன பாய்சுனை குடைவுழி
நளிபடு சிலம்பிற் பாயம் பாடி.
குறிஞ்சி. 55—58.

32. நறுவீ நாகமு மகிலு மாரமும்
துறையாடு மகளிர்க்குத் தோட்புணை யாகிய.
சிறுபாண். 116—117.

33. கூந்த லாம்பன் முழுநெறி யடைச்சிப்
பெரும்புனல் வந்த விருந்துறை விரும்பி
யாமஃ தயர்கஞ் சேறும். குறுந். 80 : 1—3.

மணல் பரந்த முன்றில்களில் ஆடப்படும் கழங்கு மகளிரின் இன்னொரு விளையாட்டாகும். இவ்விளையாட்டிற் பெண்கள் சிறிய உருண்டையான கற்களை மேலே எறிந்து புறங்கைகளில் ஏந்துவர். கழங்கு, பயறு உழுந்து போன்ற ஒருவகைச் செடி ஆகும். அதன் விதை இவ்விளையாட்டிற் பயன்படும். இப்பொழுது இவ்விளையாட்டு ஈழத்தின் வடக்குக் கிழக்குப் பகுதிகளிற் கொக்கான் என வழங்கும். இக்காலத்திலும் சிறுமிகளும் முதுமகளிரும் இதனை விரும்பி விளையாடுவர். அவர் பெரும்பாலும் ஏழு கற்களைக்கொண்டே ஆடுவர். இவ் வாட்டத்தைக் கொக்கான் வெட்டுதல் என்பர். முத்தை யொத்த வார்ந்த மணலிலே மெத்தென மெத்தெனக் கையிற் புனைந்த குறுந்தொடியசையப் பொன்னாற் செய்த கழங்கினைக் கொண்டு மகளிர் விளையாடுவர் எனப் பெரும்பாணாற்றுப்படை கூறும்.[34] செறிந்த உள்ளிடு பருக்கையையுடைய சிலம்பினையும் குறிய வளையினையுமுடைய மகளிர், வேதிகை போல உயர்ந்த எக்கர்க்கண்ணே இருந்து, பொன்னாற் செய்யப்பட்ட கழங்கினால் விளையாடுவர் என்பது புறநானூறு.[35]

## (3) அணி ஆடை முதலியன

மகளிர் பொதுவாகத் தம் கூந்தலை நீளமாக வளர்த்தனர். அதனை அவர் நெய் பூசி அழகாக வாரிப் பின்னலாக அல்லது கொண்டையாக முடிப்பர். ஐந்துவிதமாகக் கூந்தலை அமைக்கும் வழக்கம் அக்காலத்தில் சிறந்திருந்தது. ஐம்பால்

---

34. கைபுனை குறுந்தொடி தத்தப் பைபய
முத்த வார்மணற் பொற்கழங் காடும்.
பெரும்பாண். 334—335.

35. செறியரிச் சிலம்பிற் குறுந்தொடி மகளிர்
பொலஞ்செய் கழங்கிற் றெற்றியாடும்.
புறநா. 36 : 3—4.

என்ற சொல்லாட்சி இதற்குச் சான்ருகும்.[36] அசையும் இயல்பினையுடைய ஐம்பால் மயிரினை உடைய உப்பு வாணிகத்தியர் என்று சிறுபாணுற்றுப்டை கூறும்.[37] முதுமகளிர் சங்கின் நிறத்தையுடைய வாரிவிடப்பட்ட தம் கூந்தலை முடித்துக் கட்டியிருப்பர்.[38] திருமுருகாற்றுப்படையும் கூந்தலை முடித்துக் கட்டப்பெறுவதைக் குறிக்கும்.[39] சிறுபாணுற்றுப்படை வாழைப்பூவெனப் பொலிந்த ஓதியெனப் பாடும்.[40]

இளமகளிர் பெரும்பாலும் கூந்தலைக் கீழே தொங்க விட்டனர். தொடியை அணிந்த மகளிர் சிறு புறத்தின் மேலே தொங்கவிட்டிருக்கும் பின்னல் பிடியினது கை போன்றிருக்குமெனச் சிறுபாணுற்றுப்படையிலிருந்து அறியலாம்.[41] சிறு புறத்தை மறைக்கும் கூந்தலை முல்லைப்பாட்டுக் குறிக்கும்.[42] விரித்து விடப்படும் பெண்களின்

---

36. குழல், அளகம், கொண்டை, பனிச்சை, துஞ்சை
என்பன ஐம்பால் என நச்சினர்க்கினியர் கூறுவர்.
சீவகசிந்தாமணி 2437 உரை.

37. உளரியல் ஐம்பா லுமட்டிய ரீன்ற.
சிறுபாண். 60.

38. இருங்கடல் வான்கோடு புரைய வாருற்றுப்
பெரும்பின் னிட்ட வானரைக் கூந்தலர்.
மதுரை. 407—408.

39. கிளைக்கவின் றெழுதரு கீழ்நீர்ச் செவ்வரும்.
திருமுருகு. 29.

40. மால்வரை யொழுகிய வாழை வாழைப்
பூவெனப் பொலிந்த வோதி.
சிறுபாண். 21—22.

41. பிடிக்கை யன்ன பின்னுவீழ் சிறுபுறத்துத்
தொடிக்கை மகடூஉ மகமுறை தடுப்ப.
சிறுபாண். 191—192.

42. குறுந்தொடி முன்கைக் கூந்தலஞ் சிறுபுறத்து.
முல்லை. 45.

கூந்தல் அறல் மணலுக்கு உவமிக்கப் பெறுவது வழக்கம். தலைமகளின் வண்டுகள் தாவும் கூந்தல் வளப்பம் பொருந்திய நீர்த் துறைக்கண் உள்ள அறல் நீண்டு படிந்தாற் போன்ற நல்ல நெறிப்பை உடையதெனத் தலைமகன் பாராட்டுவன்.[43] சில நூல்களில் விரிக்கப்பெற்ற மயிலின் இறகுக்குக் கூந்தல் உவமிக்கப்படும். மெல்லிய தோளினையும், துகில் சூழ்ந்த அல்குலினையும், அசைந்த இயல்பினையுமுடைய மகளிர் அகிற் புகை உண்ணும்படியாக விரித்த அழகையுடைய மெல்லிய கூந்தலை நீலமணிபோலும் மயிலினுடைய விரிந்த தோகை ஒக்கும் எனச் சிறுபாணாற்றுப்படை பகரும்.[44] சிறந்த ஆரவாரிக்கும் மயிலினது மெல்லிய பீலியைப் போன்ற தழைத்த மெல்லிய கூந்தலைப்பற்றிக் குறுந்தொகையும் கூறும்.[45]

நீராடியதன் பின்னர் மகளிர் கூந்தலுக்கு அகிற்புகை ஊட்டுவர். மணம் வீசுகின்ற அகிற்புகையும் சந்தனப் புகையும் நாறும் கருமணலைப் போன்ற கரிய கூந்தல் எனக் குறுந்தொகையும்,[46] சந்தனத்தின் நறிய மணத்தை வீசும் நன்னெடுங் கூந்தல் என மதுரைக்காஞ்சியும்[47] கூறும்.

---

43. யானயந் துறைவோள் தேம்பாய் கூந்தல்
வளங்கெழு சோழ ருறந்தைப் பெருந்துறை
நுண்மண லறல்வார்ந்து அன்ன.
குறுந். 116 : 1—3.

44. மென்றோள்
துகிலணி யல்குல் துளங்கியன் மகளிர்
அகிலுண விரித்த வம்மென் கூந்தலின்
மணிமயிர் கலாபம். சிறுபாண். 261—264.

45. கலிமயிற் கலாவத் தன்ன விவள்
ஒலிமென் கூந்தல். குறுந். 225 : 6—7.

46. கமழகில்
ஆரநாறு மறல்போற் கூந்தல். குறுந். 286 : 2—3.

47. நன்னெடுங் கூந்தல் நறுவிரை குடைய.
மதுரை. 552.

நரந்தம்,[48] வேங்கை,[49] வெட்சி,[50] குவளை,[51] அடும்பு[52] மல்லிகை முதலிய பூக்களை இவர்கள் கூந்தலில் அணிவர். தண்மையும் அழகும் மணமும் மிக்க மலர்களாலாய மாலைகளை இவர் அணிவர்.[53] மகளிர் உச்சியில் விளங்கும் மெல்லிய கருமையான கொண்டைகளைச் சுற்றி அழகிய பூமாலைகள் கட்டப்பெறுவனவெனக் குறிஞ்சிப்பாட்டுக் கூறும்.[54]

நெய் பூசப்பெற்ற பாடல் மகளிரின் கூந்தலை ஐதாக விழும் மழைத்துளிக்குப் புலவர் உவமிப்பர்.[55] கூந்தலில் உள்ள எண்ணெய்ப்பசை, சிக்கு முதலியன போகும் பொருட்டுக் களிமண்ணைத் தேய்த்துக்கொண்டு மகளிர் நீராடும் வழக்கு அக்காலத்தில் இருந்தது ; இதனைச் சிற்றூர்

---

48. நரந்த நாறுங் குவையிருங் கூந்தல்.
குறுந். 52 : 3.

49. பூதந் தந்த பொரியரை வேங்கைத்
தண்கமழ் புதுமலர் நாறு
அஞ்சில் ஓதி ஆய்மடத் தகையே.
அகநா. 365 : 13—15.

50. கடற்றிற் கலித்த முடச்சினை வெட்சி
தளையவிழ் பல்போது கமழும்
மையிருங் கூந்தல். குறுந். 209 : 5—7.

51. குவளை நாறுங் குவையிருங் கூந்தல்.
குறுந். 300 : 1.

52. மாக்கொடி யடும்பின் மாயித ழலரி
கூந்தன் மகளிர் கோதை. நற். 145 : 2—3.

53. வியல்விசும்பு கமழ
நீர்திரண் டன்ன கோதை பிறக்கிட்டு;
மதுரை. 561—562.

54. பல்வே றுருவின் வனப்பமை கோதையெம்
மெல்லிரு முச்சிக் கவினை பெறக் கட்டி.
குறிஞ்சி. 103—104.

55. ஐதுவீ ழிகுபெய லழகுகொண் டருளி
நெய்கனிந் திருளிய கதுப்பின். சிறுபாண். 13—14.

களில் இன்றும் காணலாம். பெண்கள் தமது கூந்தலுக்கு இட்டுப் பிசைவதற்குக் களிமண்ணைக் கொண்டுவரும் பொருட்டுப் பொழிலுக்குச் செல்வர் எனக் குறுந்தொகையி லிருந்து தெரிந்துகொள்ளலாம்.[56]

பெண்கள் தம்மை அழகுபடுத்திக் கொள்வதிலும் சிறந்து விளங்கினர். அவர் மணம் மிக்க வாசனைத் திரவியங்களையும் மற்றும் அழகு பண்ணுதற்குரிய பொருட்களையும் பயன்படுத் தினர். மகளிர் வழங்கிய புழுகு முதலியன நாறும் நாற்றம் தெருக்களெல்லாம் மணக்கும்.[57] உடம்பின் மேற்பாகத்தில் சந்தனம் குங்குமம் முதலியவற்றைக் குழம்பாகப் பூசி, அதன் மேலே இலை பூ முதலிய சித்திரங்களை வரைவர். இச் சித்திரம் தொய்யில் எனப்படும்.[58] இச்சித்திரங்களுக்குப் பதிலாக வேங்கைத் தாது பரப்புவதுமுண்டு. தோற்றம் செய்து எழுந்த தலைமகளின் அழகிய முலை நிறம் பெறத் தலைமகன் அதில் தொய்யில் எழுதுவான்.[59] தொய்யில் எழுதிய மகளிரின் முலை சுணங்கு தோற்றியிருப்பதை மதுரைக்காஞ்சி கூறும்.[60]

---

56. பொழிலே யாமெம்
கூழைக் கெருமண் கொணர்கஞ் சேறும்.
குறுந். 113 : 4—5.

57. பூந்தொடி மகளிர்
மணங்கமழ் நாற்றந் தெருவுடன் கமழ.
மதுரை. 446—447.

58. இரந்தோ ருளர்மகா ரேழி திருந்திழைத
தொய்யல் வனமுலை. நற். 225 : 6—7.

59 உருத்தெழு வனமுலை யொளிபெற வெழுதிய
தொயயில். குறுந். 276 : 3—4.

60. சோர்ந்துகு வன்ன வயக்குறு வந்திகைத்
தொய்யில் பொறித்த சுணங்கெதி ரிளமுலை.
மதுரை. 415—416.

திண்ணிய வயிரம் பொருந்திய நறிய சந்தனத்தை உரைத்த பொலிவு பெற்ற நிறத்தைக்கொண்டகுழம்பைக் கோங்கினது குவிந்த அரும்பையொத்த இளமுலையிலே மருதப்பூவை அப்பினாற்போல அப்புவர். அப்பி, அவ்வீரம் புலர்வதற்குமுன் விரிந்த மலரையுடைய வேங்கைப் பூவினது நுண்ணிய தாதையும் அதன்மேல் அப்புவர்.[61] சுணங்கு மிக்க அழகிய முலையிலே பொரியை ஒத்த பூக்களையுடைய புன்கினது அழகு மிக்க ஒள்ளிய தளிரை அப்புவர்.[62] காமனது வில்லாகிய கரும்பின் உருவத்தைக் குங்குமக் குழம்பால் மகளிர் தோளில் எழுதும் வழக்கமும் இருந்தது. கரும்பெழுதிய தொய்யிலையுடைய பருத்த தோளைப்பற்றிக் குறுந்தொகை கூறும்.[63]

பொன், வெள்ளி, மணி, பவளம், சங்கு, முத்து முதலிய வற்றால் இழைத்த அணிகளை அக்கால அரிவையர் அணிந்தனர் விழாக் கண்டுகளிக்கும் மகளிர், ஒலிக்கும் மணிகள் பொருந்திய பொற்சிலம்புகளையும் மற்றும் இழைகளையும் அணிந்திருந்தனரென அறிகின்றோம். அவர் அணிந்த இழைகள் தீயினாற் சுடப்பட்டு மிளிரும் பொன்னாலாயவை ; வளைகள் சித்திர வேலைப்பாடு அமைந்தவை.[64] அரத்தினாற்

61. நுண்பூ ணாகந் திளைப்பத் திண்காழ்
நறுங்குற டுரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை
தேங்கமழ் மருதிணர் கடுப்பக் கோங்கின்
குவிமுகி ழிளமுலைக் கொட்டி விரிமலர்
வேங்கை நுண்டா தப்பிக் காண்வர.
திருமுருகு. 32—36.

62. பொரிப்பூம் புன்கி னெழிற்றகை யொண்முறி
சுணங்கணி வனமுலை யணங்குகொளத் திமிரி.
நற். 9 : 5—6.

63. உழுந்துடைக் கழுந்திற் கரும்புடைப்
பணைத்தோள். குறுந். 384 : 1.

64. நாண்மகி ழிருக்கை காண்மார் பூணொடு
தெள்ளரிப் பொற்சிலம் பொலிப்ப வொள்ளழற்
றுவற விளங்கிய வாய்பொ னவிரிழை
அணங்குவீழ் வன்ன பூந்தொடி மகளிர்.
மதுரை. 443— 446

போழ்ந்து அறுக்கப்பட்டவை.[65] காதணிகளும் மகளிர் திருமுகங்களைச் சிறப்பிக்கும் பண்பினவாய் விளங்கின. ஆய்மகளிரின் துயல் வரும் சிறு குழையைப்பற்றிப் பெரும் பாணாற்றுப்படை பாடுகின்றது.[66] பொலிவுற்ற மகரக் குழையின் அசைவினைப் பொறுக்கும் காது என்று பொருநராற்றுப்படை குறிக்கின்றது.[67]

நூலாற் கட்டாத நுண்மையையுடைய பொன்னரி மாலையை வெள்ளிதாகிய ஒளியையுடைய முத்தத்தோடு பாடினி சூடுவள்.[68] முத்துமாலையைப் பற்றிய செய்திகள் நெடுநல்வாடையிற் காணலாம்.[69] அரும்பு மிகுந்த கொன்றையில் இலங்கும் பனித்துளியென ஒளிசிறந்த மணிகள் விளங்கும் மேகலைகளை மகளிர் தம் இடையில் அணிவர். பொன்னாற் செய்த கொடியினை முன்கையில் அணிவர்.[70] கணவரைப் பிரிந்த மகளிர் வலம்புரியை அறுத்துப் பண்ணின வளையை இடுவர்.[71] வாளை மீனினது பகுவாயை ஒத்த சிவந்த நிறத்தையுடைய மோதிரத்தை

---

65. அரம்போழ்ந் தறுத்த கண்ணேர் இலங்குவளை.
மதுரை. 316.

66. சிறுகுழை துயல்வருங் காதில். பெரும்பாண். 161.

67. பூங்குழை யூசற் பொறைசால் காதின்.
பொருந. 30.

68. நூலின் வலவா நுணங்கரின் மாலை
வாலொளி முத்தமொடு பாடினி யணிய.
பொருந. 161—162.

69. ஆரந் தாங்கிய வலர்முலை யாகத்து. நெடுநல். 136.

70. பொலந்தொடி நின்ற மயிர்வார் முன்கை.
நெடுநல். 141.

71. வலம்புரி வளையொடு கடிகை நூல் யாத்து.
நெடுநல். 142.

விரலிடத்தே இடுவர்.[72] பொன்னாலும் மணிகளாலும் இழைக்கப்படும் அணிகளைக் குறிப்பதற்கு வழங்கும் 'குழை' 'தோடு' முதலிய சொற்கள் இலைகளையும் பூக்களையும் அணிகளாகப் பூணும் பழந்தமிழ் மரபை நினைவு ஊட்டுகின்றன. குழை என்பதற்கு 'இலை' 'தளிர்' என்றும், தோடு என்பதற்கு 'இதழ்' என்றும் கருத்துக் கூறலாம்.

உடையிலும் பார்க்க இழைகளே சிறப்புப் பெற்றனவெனினும் தமிழ்ப் பெண்கள் அணிந்த உடைகளைப்பற்றியும் சங்க நூல்களிற் குறிப்புக்கள் உண்டு. வேறு வேறு நிறங்களையும் வேறு வேறு பண்புகளையுமுடைய நூற்சேலைகளையும் பட்டுச் சேலைகளையும் அக்காலப் பெண்கள் அணிந்தனர். நூல் நூற்போரைப் பற்றிக் கூறிய பகுதியில் பூச்சித்திரங்களாலாய கரைகளையுடைய சேலைகளைப் பற்றிக் கூறியுள்ளோம்.

## (4) பொது மகளிர்

நகரமும் நாகரிகமும் வளர்ந்து வளர்ந்து வர, விரைவில் மகளிரின் வரம்பில்லாத வாழ்வும் செழித்து வரும். சிறந்த ஆடையுடன் கவர்ச்சியான இழைகளை அணிந்து, ஆடலிலும் பாடலிலும் சிறந்து விளங்கினர் அக்காலத்துப் பொது மகளிர். அவர் விழாக்கள் நடக்கும் இடங்களிலேயே மிகுதியும் காணப்படுவர். அவர் தம்மை அழகு செய்யும் முறையையும் இசைக் கருவிகளில் இசையெழுப்புமாற்றையும் மதுரைக்காஞ்சி பின் வருமாறு கூறும்: "மான் நோக்கினை உடைய அழகு மிக்க மகளிர் விளக்கினை ஏற்றித் தம்மை அழகு செய்து, நயப்பவர் எவருடனும் இன்பம் துய்ப்பர்; அவர் தண்மையும் அழகும் மணமும் மிக்க இதழ்கள் சிறந்த கழுநீர் மாலைகளை அணிவர்; கூந்தலை விரித்துச் சந்தனத்தின் நறுமணத்தை ஏற்றுவர்; அகிற் புகையினால் ஆடைகளை மணம் பெறச்

---

72. வாளைப் பகுவாய் கடுப்ப வணக்குறுத்துச்
செவ்விரற் கொளீஇய செங்கேழ் விளக்கத்து.
நெடுநல். 143—144.

செய்வர் ; நகரத்தின் ஆரவாரம் மிக்க அரவம் நீங்கியபின் இன்பம் அயர்வர்; ஏழிசை பயிலப்படும் இனிமையான ஓசையை எழுப்பும் நரம்பினையுடைய யாழை எடுத்து இன்பமாகப் பாடுவர் ; நறுமணம் வீசும் ஒண்மையும் தண்மையும் மிக்க பூங்கொத்துக்களைக் கூந்தலில் அணிந்து கொள்வர் ; கைகளை அசைக்கும்போது அவர் வளைகள் மின்னும். நிலை குலைந்த அணிகளைத் திருத்தி அமைப்பர்."[73]

இப் பொதுமகளிரின் வஞ்சகத்தையும் தொழிலையும் அதே நூல் விரிவாக எடுத்துக் கூறும் : "தூரத்திலிருந்து தம்மைத் தேடி வரும் இளமையும் செல்வமும் மிக்க மைந்தரை மாயப்பொய் பலகூறி மயங்க வைப்பர். காதலும் ஆதரவும் உள்ளவர் போலக் காட்டி, நுண்பூண் ஆகம் வடுக்கொள முயங்கி, அவரின் வளத்தை வாங்கிக்கொள்வர். தேனை உண்டு பூவினைத் துறக்கும் வண்டினம் போலத் தம்மிடம் வந்த மைந்தரைத் துறந்து அவரை வருத்தும் இயல்பினர். ஆராய்ந்த பொன்னாற் செய்யப்பட்ட பிரகா

---

73. பகலுரு வுற்ற விரவுவர நயந்தோர்
காத லின்றுணை புணர்மா ராயிதழ்த்
தண்ணறுங் கழுநீர் துணைப்ப விழைபுனையூஉ
நன்னெடுங் கூந்த னறுவிரை குடைய
நரந்த மரைப்ப நறுஞ்சாந்து மறுக
மென்னூற் கலிங்கங் கமழ்புகை மடுப்பப்
பெண்மகிழ் வுற்ற பிணைநோக்கு மகளிர்
நெடுஞ்சுடர் விளக்கங் கொளீஇ நெடுநகர்
எல்லை யெல்லா நோயொடு புகுந்து
கல்லென்மாலை நீங்க நாணுக் கொள
ஏழ்புணர் சிறப்பி னின்றொடைச் சீறியாழ்
தாழ்பயற் கனைகுரல் கடுப்பப் பண்ணுப்பெயர்த்து
வீழ்துணை தழீஇ வியல்விசும்பு கமழ
நீர்திரண் டன்ன கோதை பிறக்கிட்டு
ஆய்கோ லவிர்தொடி விளங்க வீசி.

மதுரை. 549—563.

சிக்கும் தொடியையும், பாசிழையையும் அணிந்த பொது மகளிரிடம் பழத்தினை நாடும் பறவைகள் போலச் செல்வரும் பிறரும் வருவர். தம்மைக் கண்டோருடைய நெஞ்சை வருத்தம் உறுவித்துப் பொருளைப் பறிக்கும் பண்பினர் இப் பொது மகளிர்; இவர் தண்மையும் ஆழமும் உள்ள நீர்த் துறை மணலிலே ஆண்களுடன் சேர்ந்து ஆடுவர். தம்முடனுடிய ஆடவரை விட்டுச்சென்று தளிரையும் குவளை மொட்டுக்களையும் மாலையாகத் தொடுப்பர். மீண்டும் தம் ஏமாற்றுத் தொழிலைத் தொடங்குவதற்குத் தம் இல்லங்களை நோக்கிப் பெயர்வர்."[74]

---

74. நுண்பூ ணாகம் வடுக்கொள முயங்கி
மாயப் பொய்பல கூட்டிக் கவவுக்கரந்து
சேயரு நணியரு நலனயந்து வந்த
இளம்பல் செல்வர் வளந்தப வாங்கி
நுண்டா துண்டு வறும்பூத் துறக்கும்
மென்சிறை வண்டின மானப் புணர்ந்தோர்
நெஞ்சே மாப்ப வின்றுயி றுறந்து
பழந்தேர் வாழ்க்கைப் பறவை போலக்
கொழுங்குடிச் செல்வரும் பிறரு மேஎய
மணம்புணர்ந் தோங்கிய வணங்குடை நல்லில்
ஆய்பொன் னவிர்தொடிப் பாசிழை மகளிர்
ஒண்சுடர் விளக்கத்துப் பலருடன் றுவன்றி
நீனிற விசும்பி லமர்ந்தன ராடும்
வானவ மகளிர் மானக் கண்டோர்
நெஞ்சு நடுக்குறூஉக் கொண்டி மகளிர்
யாம நல்யாழ் நாப்ப ணின்ற
முழவின் மகிழ்ந்தன ராடிக் குண்டுநீர்ப்
பனித்துறைக் குவவுமணன் முனைஇ மென்றளிர்க்
கொழுங்கொம்பு கொழுதி நீர்நனை மேவர
நெடுந்தொடர்க் குவளை வடிம்புற வடைச்சி
மணங்கமழ் மனைதொறும் பொய்தல் அயர.

மதுரை. 569—589.

## (5) காதல் ஒழுக்கத்தைப்பற்றிய கவிதை மரபு

சமூக அமைப்பினைப் பற்றிய பகுதியில் நில இயற்கைக்கும் மக்கள் வாழ்வுக்குமுள்ள நெருங்கிய தொடர்பைக் கண்டோம். பழந் தமிழர் கண்ட கவிதை மரபிலே காதலுறவும் நிலத்தின் இயற்கைக் கேற்ப அமைந்திருந்தது. திருமணத்திற்கு முந்திய காதலுறவு குறிஞ்சி நிலத்தோடு தொடர்பு படுத்தப்பட்டது. பிரிவு, கால அளவையால் முல்லை, நெய்தல், பாலை என்னும் நிலங்களுடன் தொடர்பு படுத்தப்பட்டது. இல்லறக் காதல் மருதத்துடன் தொடர்பு படுத்தப்பட்டது.

மக்கள் செய்யும் தொழிலை அடிப்படையாகக் கொண்டே முல்லை நெய்தல் பாலை ஆகிய நிலங்கள் பிரிவு ஒழுக்கத்துடன் தொடர்பு பெற்றன. முல்லை நிலத்திற் பிரிவு சிறிது காலத்திற்குத்தான் நிகழும். அங்கு ஆவினங்களை மேய்ப்பதற்கும் வேட்டையாடுவதற்குமே பெரும்பாலும் தலைவன் பிரிவான். தலைவி தலைவன் வரும்வரையும் பொறுமையுடன் ஆற்றியிருப்பாள். நெய்தல் நிலத்திலே பிரிவு அதனினும் சிறிது நீண்ட காலத்திற்கு நிகழும். கடல்மேற் செல்லும் பரதவர் திரும்பிவரக் காலந்தாழ்ப்பது இயல்பே. இந் நிலத்துப் பிரிவு தலைவியின் நலம் கெடுமளவுக்கு நீண்டது. பாலைநிலத்திற் பிரிவு இவ்விரு நிலங்களிலும் நிகழும் பிரிவிலும் மிகவும் நீண்டிருக்கும். அங்கு பல துன்பங்களைக்கொண்ட சுரத்தின் வழியாகச் சென்ற தலைவனின் வரவுக்காகத் தலைவி வருந்துவாள்.

களவொழுக்கம் குறிஞ்சியில் நிகழ்வதாகவே கூறப்படும். மலைவாழ்நர் திருமணத்துக்கு முன்னரேயே காம நுகர்ச்சியில் ஈடுபட்டமையை இது குறிப்பதாக இருக்கலாம். பருவ மங்கையர் வீட்டில் அடைபட்டுக் கிடப்பது பிற்கால வழக்கமாகும். ஆனுற் சங்க காலத்திலே களவொழுக்கம் மிகவும் பரவியிருந்தது. காதலர் களவொழுக்கத்தில் ஈடுபட்ட போதிலும் வரைவு கடாவித் திருமணம் முடித்துக்கொள்

வதிலும் கவனமாக இருந்தனர். "உன் கையை நுமர்பற்றித் தரும் நாடறி நன்மணம் விரைவில் முடிந்துவிடும்" என்று தலைவன் கூறுவதாகக் குறிஞ்சிப் பாட்டிற் காண்கின்றோம்[75] மேலும் அவர்கள் களவொழுக்கத்தில் ஈடுபட்டபோதும் தாய் தந்தையர் விருப்பத்தையும் பொருட்படுத்தினர் என அறிந்துகொள்ளலாம்.

## (6) திருமணம்

வரைவு கடாவுதல் முதலியன நிகழ்ந்த பின்னர் திருமணம் நடைபெறும். பழந்தமிழரின் மணவினை பிற்காலத்தில் ஆரியர் புகுத்திய மணவினையிலிருந்து முற்றிலும் வேறுபட்டது. சிலப்பதிகாரத்தில் வரும் மணவினை ஆரியர் முறைக்கேற்ப அமைந்ததாகும். பழந் தமிழர் திருமண வினையில் ஆரியச் சடங்குகள் கிடையா. அதில் தீயை வளர்ப்பது, தீயினை மணமகனும் மணமகளும் சுற்றிவருவது ஆகிய சடங்குகள் இல்லை; மணவினைக்குத் தலைமை பூண்டு நடத்தும் பார்ப்பானும் இல்லை.

அகநானூறு 86-ம் பாடல் திருமணவினையை விளக்கமாக எடுத்துக் கூறும்: "உழுத்தம் பருப்புடன் கூட்டிச் சமைத்த செவ்விய பொங்கலொடு பெரிய சோற்றுத்திரள் ஆக்கி வைத் திருக்கின்றனர். மரத்தூண்கள் நிறுத்திச் செய்த அழகிய பந்தரின்கீழ் புதுமணல் பரப்பியுள்ளனர். மனையின்கண் விளக்கினை ஏற்றி மாலைகளைத் தொங்கவிட்டிருக்கின்றனர். தீய கோள்களின் தொடர்பு நீங்கப்பெற்ற திங்களைக் குற்றமற்ற சிறந்த புகழினையுடைய உரோகிணி என்னும் விண்மீன் சேர்ந்த இருள் நீங்கிய விடியற்காலையில், முது பெண்டிர் உச்சியிற் குடத்தினை யுடையரும் கையினிற் புதிய அகன்ற கலத்தினையுடையருமாகி, அவற்றை முறை

---

75. நேரிறை முன்கை பற்றி நுமர்தர
நாடறி நன்மண மயர்கஞ் சின்னாள்
கலங்க லோம்புமி னிலங்கிழை யீரென
ஈர நன்மொழி தீரக் கூறி. குறிஞ்சி. 233—234.

முறையாகத் தரத்தர ஆரவாரம் மிகுந்தது. மகனைப் பெற்ற தூயமகளிர் நால்வர் கூடி நின்று, "கற்பின் வழாது, பல பேறுகளையும் பெற்று, நின்னை எய்திய கணவனை விரும்பிப் பேணும் விருப்பத்தை உடையையாக" என்று நீர் தெளிக்கப் பெற்ற குளிர்ந்த இதழ்களையுடைய பூக்களை, மிக்க கரிய கூந்தலில் நெல்லுடன் தூவி மணமக்களை வாழ்த்தினர். இவ் வினைகள் யாவும் முடிந்த பின்னர் சுற்றத்தார் "சிறந்த இல்லறக் கிழத்தியாக விளங்குவாய்" எனக் கூறிப் பெண்ணை உரியவனிடம் கொடுத்தனர்."[76]

இம்மணவினைகள் வேறொரு அகநானூற்றுப் பாட்டிலே பின்வருமாறு கூறப்பட்டுள்ளன : "இறைச்சியுடன் கூட்டி ஆக்கிய நெய்மிக்க வெண்சோற்றை வரைதல்

---

76. உழுந்துதலைப் பெய்த கொழுங்களி மிதவை
பெருஞ்சோற் றமலை நிற்ப நிரைகால்
தண்பெரும் பந்தர்த் தருமணல் ஞெமிரி
மனைவிளக் குறுத்து மாலை தொடரிக்
கனையிருள் அகன்ற கவின்பெறு காலைக்
கோள்கால் நீங்கிய கொடுவெண் டிங்கள்
கேடில் விழுப்புகழ் நாடலை வந்தென
உச்சிக் குடத்தர் புத்தகன் மண்டையர்
பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்
முன்னவும் பின்னவும் முறைமுறை தரத்தரப்
புதல்வற் பயந்த திதலையவ் வயிற்று
வாலிழை மகளிர் நால்வர் கூடிக்
கற்பினின் வழாஅ நற்பல உதவிப்
பெற்றோற் பெட்கும் பிணையை யாகென
நீரொடு சொரிந்த ஈரிதழ் அலரி
பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க
வதுவை நன்மணம் கழிந்த பின்றைக்
கல்லென் சும்மையர் ஞெரேரெனப் புகுதந்து
பேரிற் கிழத்தி யாகெனத் தமர்தர.

அகநா. 86 : 1—19.

இல்லாத வள்ளன்மையுடன் சுற்றத்தார் முதலியோர்க்கு அளித்தனர். புள் நிமித்தம் சிறந்திருந்தது. தெள்ளிய ஒளியையுடைய அழகிய இடமகன்ற பெரிய வானம் களங்கமற விளங்கிற்று. திங்களை உரோகிணி கூடிய குற்றமற்ற நன்னாளிலே மணமனையை அழகுறுத்திக் கடவுளை வழிபட்டனர். முரசு முழங்கியது; மணமகளுக்கு மண நீராட்டிய மகளிர் தமது கூரிய கண்களால் அவளை இமையாது நோக்கினர். அழகிய கவர்த்த இலைகளையுடைய வாகைப் பூக்களும், கழுவிய நீல மணியையொத்த கரிய இதழையுடைய அறுகம் புல்லின் கிழங்கின் கண்ணுள்ள தண்ணிய நறிய அரும்புகளும் வெண்ணூலிலே கட்டப்பட்டுப் பந்தலில் தொங்கவிடப் பட்டிருந்தன. தூய உடையாற் பொலிந்த இப் பந்தலிலே மேகம் ஒலித்தாலொத்த மணவொலி மிகுந்தது. இப்பந்தலின் கீழ் மணமகள் இருந்தாள். அணிகலங்களின் பாரத்தினுல் மணமகளுக்கு ஏற்பட்ட வியர்வையை ஆற்றிச் சுற்றத்தார் அவளை உரியவனிடம் கொடுத்தனர்.''[77]

---

77. மைப்பறப் புழுக்கி னெய்க்கனி வெண்சோறு
வரையா வண்மையொடு புரையோர்ப் பேணிப்
புள்ளுப்புணர்ந் தினிய வாகத் தெள்ளொளி
அங்க ணிருவிசும்பு விளங்கத் திங்கட்
சகட மண்டிய துகடீர் கூட்டத்துக்
கடிநகர் புனைந்து கடவுட் பேணிப்
படுமண முழவொடு பருஉப்பணை யிமிழ
வதுவை மண்ணிய மகளிர் விதுப்புற்றுப்
பூக்கணு மிமையார் நோக்குபு மறைய
மென்பூ வாகைப் புன்புறக் கவட்டிலை
பழங்கன்று கறித்த பயம்பம லறுகைத்
தழங்குரல் வானின் றலைப்பெயற் கீன்ற
மண்ணுமணி யன்ன மாயிதழ்ப் பாவைத்
தண்ணறு முகையொடு வெண்ணூல் சூட்டித்
தூவுடைப் பொலிந்து மேவரத் துவன்றி
மழைபட் டன்ன மணன்மலி பந்தர்
இழையணி சிறப்பிற் பெயர்வியர்ப் பாற்றித்
தமர் நமக்கீத்த தலைநா ளிரவின்.

அகநா. 136 : 1—18.

மேலே காட்டிய அகநானூற்றுப் பாடற் பகுதிகளிலிருந்து பழந்தமிழர் மணவினையைப் பின்வருமாறு தொகுத்துக் கூறலாம்.

(1) நன்னுளையும் நன்னிமித்தத்தையும் குறித்தல். திங்களும் சகடமும் சேர்ந்த காலை நேரமே பெரும்பாலும் கைக்கொள்ளப்பட்டது.

(2) பந்தல் அமைத்து அலங்கரித்தல்.

(3) முரசம் முழங்குதல்.

(4) சுற்றத்தார்க்கும் மற்றவர்க்கும் உணவளித்தல்.

(5) பெண்ணை அலங்கரித்து விதானத்தின்கீழ் இருத்தல்.

(6) முதுபெண்டிர் மணமளுக்குக் குடங்களும் கலங்களும் வழங்குதல்.

(7) முருகனை வணங்குதல்.

(8) புதல்வர்ப் பயந்த பெண்டிர் மணமக்களை வாழ்த்துதல்.

(9) இராக்காலத்தில் மணமகளை மணமகனுக்குச் சுற்றத்தார் அளித்தல்.

ஆரியரின் மணவினைகள் சங்க காலத் தமிழரிடையே புகவில்லை. அக்கினியின் முன்னிலையில் மணவினை நடைபெற வேண்டுமென்பது பிற்காலத்திற்குரிய கொள்கையாகும். அக்கொள்கையினுலேயே மணப்பந்தரில் நெய்யை ஊற்றி எரியை இடையருது வளர்த்தனர். மணமகனும் மணமகளும் எரியைச் சுற்றி வருவதினுல் மணவினை முற்றுப்பெற்றது. சிலப்பதிகாரத்தில் இவ்வினையே கூறப்படும். மணமக்கள் தீவலம் செய்வதைக் காண்போரைப்பற்றி அந்நூல் பாடுகின்றது.[78] சங்க காலத்தில் இவ்வழக்கம் இருக்கவில்லை. மணச் சடங்கிற்குத் தலைமையாகப், பார்ப்பானும் அங்கு இருக்கவில்லை. மந்திரம் ஓதுதல், பார்ப்பனர்க்குத் தானம்

---

78. தீவலம் செய்வது காண்பார்கண்ணேன் பெண்ணே.

மங்கலவாழ்த்துப் பாடல். 53.

வழங்குதல் போன்ற வழக்கங்களும் இருக்கவில்லை. எனவே சங்க காலத்தில் வழக்கிலிருந்த மணச்சடங்கு தமிழருக்கே சிறப்பாக உரியது; ஆரியப் பண்பாட்டின் தாக்குதலினுல் மாற்றமடையாததொன்று.

## (7) இல்லற வாழ்க்கை

திருமணம் முற்றுப்பெற்று ஆணும் பெண்ணும் இல்லற வாழ்க்கை நடத்துவர். இல்லத்தை ஆட்சி செய்யும் இல்லாளைப் பெற்றுத் தமிழன் மகிழ்ந்தான். மனைவி சமூகத்தின் அச்சாணியாக இருந்தாள். 'மனைக்கு விளக்காகிய வாணுதல்' எனப் புறநானூறு அவளைக் குறிப்பிடும்.[79] அக்காலத்தில் ஆண் பொம்மையாக இருக்க, பெண் ஆட்சி பீடத்திலிருந்து அகவாழ்வை நடத்தி வரவில்லை. அன்பே அகவாழ்வின் அடிப்படையாகத் திகழ்ந்தது. அன்பு சென்ற வழிதான் உள்ளமும் செல்லும். அப்போதுதான் உள்ள ஒற்றுமையும் பல நன்மைகளும் ஏற்படும். நெருஞ்சிமலர் சூரியனையே நோக்கி நிற்கும். சூரியன் எப்பக்கமாக இயங்குகின்றதோ அதே பக்கமாக நெருஞ்சிப் பூவும் திரும்பித் திரும்பி நிற்கும். அவ்வாறே இல்லாளும் கணவன் முகம் நோக்கி நிற்பள்.[80]

உயிர், ஆணும் பெண்ணுமாய்ப் பிறந்து வேறு வேருய்த் தோன்றும். ஆனுல் ஒன்றையொன்று அவாவியபடியே இருக்கும். இதனுல், ஆண் உயிரும் பெண் உயிரும் தொன்றுதொட்டே தொடர்புடையனவாய்க் காணப்படும், உண்மையான கணவனும் மனைவியும் ஓர் உயிர் உடையராகவே

---

79. மனைக்குவிளக் காகிய வாணுதல் கணவன்.
புறநா. 314 : 1

80. எழுதரு மதியங் கடற்கண் டாஅங்
கொழுகுவெள் ளருவி யோங்கு மலைநாடன்
ஞாயி றனையன் றோழி
நெருஞ்சி யனையவென் பெரும்பணைத் தோளே.
குறுந். 315.

கருதப்படுவர். ஆண் பெண் இயைபுபற்றிய இவ்வுண்மை யினைக் குறுந்தொகைப் பாடலொன்று பின்வருமாறு விளக்கும் :—"இன்பம் துய்ப்பதற்கும் இல்லற காரியங்களைச் செய்வதற்கும் இருவராகப் பிரிந்து நின்றே கடனாற்ற வேண்டி யிருத்தலின், அக்கடனறிந்து இவ்வுலகத்தில் ஆணும் பெண்ணும் இருவராய் பிறக்கின்றனர். காரியங்களைப் பொறுப்புடன் செய்யும்போது இடையிடையே ஆணும் பெண்ணும் ஒருவரை ஒருவர் பிரிந்து ஒருவராய்த் தனித்து நிற்பர். ஆனால் ஒரு பூ இடையே குறுக்கிட்டாலும் அங்ஙனம் குறுக்கிடும் காலம் பல ஆண்டு கழிந்தாற்போன்ற தன்மையை யுடைய நீரில் உறையும் மகன்றில் பறவையின் பிரிவறியாச் சேர்க்கையைப் போலக், காமமும் பிரிவு அரிதாகி இருக்கும். இது காமத்தின் இயல்பு. எனவே, தனித்து ஒருவராய் நிற்கும் தன்மையிலிருந்து தப்பும் பொருட்டு, இப்பிறப்பில் இருவருக்கும் ஒன்றாக உயிர் பிரிவதாகுக என்னும் விருப்பம் தோன்றும். ஏனெனில், உயிர் பிரியும்போது கொள்ளும் எண்ணமே மறு பிறவியில் நிகழும் என்ற காரணத்தால், அவ்வாறு இருவர் உயிரும் ஒன்றாய்ப் பிரிந் தால், அடுத்த பிறவியில் இருவரும் எப்போதும் இணைபிரியா திருக்கலாமென்பது பெறப்படும்.[81] எனவே ஆணும் பெண் ணும் என்றும் ஒரு தன்மையான அன்பினை உடையவராக இருத்தல் வேண்டும். பழகப் பழகப் பால் புளிக்கும் குணம் அவரிடம் இல்லை. அதியமான் நெடுமானஞ்சியின் புகழை இசைப்பாட்டில் நிறுத்தும் பொருட்டுப் பாண்மகன் அளவு செய்து நிறுத்தும் பண்ணிலும் புதியதாக அமைத்த இன்னிசையிலும் பார்க்கக், கணவன் திருமணஞ் செய்து

---

81. பூவிடைப் படினும் யாண்டுகழிந் தன்ன
நீருறை மகன்றிற் புணர்ச்சி போலப்
பிரிவரி தாகிய தண்டாக் காமமொடு
உடனுயிர் போகுக தில்லகடனறிந்து
இரு வேமாகிய உலகத்
தொருவே மாகிய புன்மைநா முயற்கே.
குறுந். 57.

கொண்ட நாளிலும் மேலும் மேலும் இனியவனுய் விளங்கி அன்பு செய்துவருவான்.[82]

மணமக்களுக்குள் உண்மையான அன்பில்லாவிட்டால் அவர் வாழ்க்கையிற் பயனில்லையென்பதைப் பண்டைத் தமிழர் உணர்ந்திருந்தனர். அன்பின் மனைவியைப் பிரிய முடியாமற் பிரிந்துசென்ற கணவன் சில நாட் கழிந்தபின் திரும்பி வருகின்ருன். வரும் வேளையில் அவனுடைய உள்ளம் அவன் மனைவியின் சாயல், சிறப்பு, பெண்மை முதலிய நல்லியல்புகளில் ஈடுபட்டுக்கொண்டிருக்கின்றது. மயில் ஆடும்போதும், முல்லை மணக்கும்போதும், மான் மருளும் போதும் அவை மனைவியின் சாயலையும் சிறப்பையும் பெண்மையையும் நினைவு கூர்விக்கின்றன. அதனுல் மேலும் மேலும் உள்ளம் அன்பு பெருகி மேகத்திலும் விரைவாக வருகின்ருன். அவன் கண்களிலேயே அவள் அசைந்துகொண் டிருப்பதனுற்ருன் அவை யாவும் அவனுக்கு அவன் மனைவி யைப் போலத் தோற்றின.[83]

இத்தகைய அன்பு வாழ்க்கையை நடத்தும் குடும்ப மொன்றனைப்பற்றிக் குறுந்தொகையில் சிறந்த சித்திரம் ஒன்று உண்டு. செல்வம் மிகுந்த குடும்பமெனினும் மனைவி

---

82. கடும்பரிப் புரவி நெடுந்தேர் அஞ்சி
நல்லிசை நிறுத்த நயவரு பனுவல்
தொல்லிசை நிறீஇய உரைசால் பாண்மகன்
எண்ணுமுறை நிறுத்த பண்ணி னுள்ளும்
புதுவது புனைந்த திறத்தினும்
வதுவை நாளினும் இனியனுல் எமக்கே.
அகநா. 352. 12—17.

83. நின்னே போலு மஞ்ஞை யாலநின்
நன்னுத னூறு முல்லை மலர
நின்னே போல மாமருண்டு நோக்க
நின்னே யுள்ளி வந்தனென்
நன்னுத லரிவை காரினும் விரைந்தே. ஐங் : 492.

கணவன் மேலுள்ள அன்பினுல் தானே சமைக்கின்ருள். தயிரைப் பிசைந்து புளிச் சுவையாகத் தயிர்க்குழம்பு ஆக்குகின்ருள். தயிர் முற்றிப் பாறைபட்ட தயிராய்க் கெட்டியாய் இருக்கின்றது. அவள் கை விரல்களோ காந்தள் மலரைப் போல மென்மையாய் இருக்கின்றன. எனினும் தயிரை விரல் நோவப் பிசைந்து, அடுப்பில் வைத்துப் பாகம் செய்கின்ருள். இடுப்பில் அணிந்திருக்கும் மாசற்ற தூய ஆடை சமையல் செய்யும் சுறுசுறுப்பில் இடையிலிருந்து நெகிழ்கின்றது ; இந் நிலையில் விரல்களைக் கழுவிக் கொள்ளாமலே நெகிழும் ஆடையை இடுப்பிற் செருகுகின்ருள். தாளிக்கும் பொழுதும் குழம்பையும் துழாவவேண்டும். அவள் கண்களோ குவளை மலர் போலக் குளிர்ச்சியானவை. சிறிது திரும்பினுலும் பாகம் கெடுமென்று அஞ்சிக் குழம்பைப் பார்த்தவண்ணம் துழாவிக்கொண்டு நிற்கின்ருள். இதனுல் தாளிப்பின் புகை கண்களிற் பரக்கின்றன. இவ்வாறு துன்பத்தைப் பொருட்படுத்தாது ஆக்கிய குழம்பை அவளுடைய கணவன் இனிதாக இருக்கின்றதென்று சுவைத்து உண்கின்ருன். கணவன் வியந்து கூறுவதைக் கேட்டு அவள் நாணத்தினுல் முகம் கவிந்து ஒரு பக்கம் ஒதுங்கி நிற்கின்ருள் ; அவள் முகம் மகிழ்ச்சியால் நிறைவு அடைகின்றது.[84] இத்தகைய இல்லற வாழ்க்கை இன்பம் அக் காலத்தில் நிலவியது.

இல்லற ஒழுக்கம் அன்பினுல் நிகழாது விட்டால் பெருங் கேடு உண்டாகுமெனப் பண்டைத் தமிழர் கொண்டனர். ஏனெனில் ஓர் ஆண்மகனும் ஒரு பெண்மகளும் தம்மில்

---

84. முளிதயிர் பிசைந்த காந்தண் மெல்விரல்
கழுவுறு கலிங்கங் கழாஅ துடீஇக்
குவளை யுண்கண் குய்ப்புகை கமழத்
தான்றுழந் தட்ட தீம்புளிப் பாகர்
இனிதெனக் கணவ னுண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன் ருெண்ணுதன் முகனே.
குறுந். 167.

ஒருவரையொருவர் உயிர்போலக் கருதி மிகுந்த அன்பினுல் ஒழுகிஞலன்றிப் பெண் பாலார்க்குக் கற்பொழுக்கம் நிலை பெருது; கற்பொழுக்கம் நிலைபெருதுவிட்டால் நன்மக்களைப் பெறுதல் உளதாகாது; உலகில் ஒருவரோடு ஒருவர் அமைதியாயிருந்து வாழாமற் பகைமையும் சினமும் கொண்டு அல்லல் உழப்பர். எனவே இல்லற வாழ்க்கை உயர்ச்சிபெறப் பெண்கள் கற்பினை கடைப்பிடித்து ஒழுகினர். சங்ககாலப் பெண்ணெருத்தி தன் கணவனை நோக்கித் தனது நிலை தளராத அன்பின் உறுதியைப் பின்வருமாறு புலப்படுத்துகின்ருள்: "தலைவ! இந்தப் பிறப்பு நீங்கி வேறு எத்தனை பிறப்புப் பிறந்தாலும், என் கணவன் நீயே ஆகுக. நின் நெஞ்சு பொருந்திய மனைவி யானே ஆகுக!"[85] இவள் கூற்றிலிருந்து அக்காலப் பெண்களின் கற்புறுதியும் பெருந் தன்மையும் இனிது புலனுகின்றன.

இவ்வாறு கற்பிற்சிறந்த பெண்கள் சமுதாய வாழ்க் கைக்கு வரந்தரும் பிள்ளைகளைப் பெற்றுக் கணவனுடனும் பிள்ளைகளுடனும் இன்புற்று வாழ்ந்தனர். ஒரு குடும்பத்தின் இல்லற வாழ்க்கை எப்படியிருக்கின்றதெனப் பார்ப்பதற்குத் தாயொருத்தி பகலெல்லாம் வழி கடந்து மாலை நேரம் அவர்கள் வீட்டை அடைகின்ருள். அடைந்து ஆர்வத்துடன் உள்ளே நுழைகின்ருள். முற்றத்தில் ஒரு மலர்த்தோட்டம் உண்டு. அங்கே ஓர் அகலமான மேடையும் உண்டு. அம் மேடையின் மூலையில் கொடிப்பந்தல் ஒன்று இருந்தது. அப் பந்தலில் முல்லைக்கொடிகள் அடர்த்தியாகப் படர்ந்திருந்தன. மலர்கள் மிகுதியாகப் பூத்து எங்கும் நறுமணம் வீசின. அவ் வேளையில் அங்கு பாணர் முல்லையாழில் முல்லை நிலத்து இன் னிசையை மீட்டி இனிமையாக இசைத்துக் கொண்டிருந் தனர்.

---

85. இம்மை மாறி மறுமை யாயினும்
நீயா கியரென் கணவனை
யானு கியர்நின் னெஞ்சுநேர் பவளே.

குறுந். 49 : 3—5.

கணவன் அம்மேடையின் மேலிருந்த ஓர் இருக்கையில் முகமலர்ச்சியுடன் அமர்ந்து, எதிரேயிருக்கும் தன் மகனை எடுத்துத் தன் தொடையின் மேலே இருத்தி, அக் குழந்தையின் இரு கைகளையும் தன்னுடைய இருகைகளாலும் பிடித்து, யாழின் இசைக்கு ஏற்பத் தாளங்கொட்டுமாறு செய்து, மகிழ்ந்துகொண்டு இருந்தான். வேறொரு புறத்திலே மனைவி முல்லை மலரைப் பறித்து அவற்றை மாலையாகத் தொடுத்துக் கொண்டிருந்தாள். பின்பு தான் தொடுத்த மாலைகளில் ஒன்றைக் கணவன் மடிமேலிருந்து தாளம் கொட்டிக் கொண்டிருக்கும் மகனின் தலைமேற் சூடி, மற்றொரு மாலையைத் தனது கூந்தலில் வளைவாக வைத்துச் சூடிக் கொண்டிருந்தாள். கணவன் மனைவியின் அழகைத் தன் கண்களாற் பருகிக்கொண்டிருந்தான். அந்நேரத்தில் உள்ளே நுழைந்தாள் தாய். நுழைந்து இக்காட்சியைக் கண்ணுரக் கண்டு மகிழ்ந்தாள். இவ்வாறு கணவனும் மனைவியும் குழந்தையுடன் இன்பமாக வாழ்ந்தனர் அக் காலத்தில்.[86]

இன்னுமோர் அழகிய காட்சி ஐங்குறு நூற்றில் வருகின்றது. ஒரு நாள் வெளியே போயிருந்த கணவன் வீட்டுக்குத் திரும்பி வந்தான். அவன் கை கால் அலம்பிக்கொள்வதற்குள், அப்பா அப்பா என்று அவன் அருமைப் புதல்வன் ஓடிவந்து அவன் கால்களைக் கட்டிக்கொண்டான். மகனை ஆர்வத்துடன் எடுத்து மார்பில் அணைத்து, காற்றோட்டமான இடத்திலிருந்த கட்டிலின் மேல் அமர்ந்து, அம் மகனுடன் கொஞ்சி விளையாடிக் கொண்டிருந்தான் தகப்பன். இதற்குள் தாயானவள் சிற்றுண்டி ஆக்கிக்கொண்டு அங்கே சென்றாள். சிற்றுண்டிக் கலத்தை ஒரு பக்கமாக வைத்துவிட்டு, கட்டிலின் ஓரமாய்ச் சிறிது சாய்ந்து அமர்ந்தாள். மகனுடன்

---

86. பாணர் முல்லை பாடச் சுடரிழை
வாணுத லரிவை முல்லை மலைய
இனிதிருந் தனனே நெடுந்தகை
துனிதீர் கொள்கைத்தன் புதல்வனொடு பொலிந்தே.

ஐங். 408.

விளையாடிக்கொண்டிருந்த கணவன் காதல் மேலீட்டால் மகனை மார்பில் அணைத்து இறுகத் தழுவிக்கொண்டான். அருகில் அமர்ந்து கணவன் மேற் சிறிது சாய்ந்திருந்த மனைவி அதுவே நேரமாகத் தன் கணவன்மேல் நன்கு சாய்ந்து, அவனையும் மகனையும் ஒருங்கே தன் இரு கைகளாலும் அணைத்துக்கொண்டாள்.[87] இத்தகைய அன்பின் அடிப்படையான வாழ்க்கையின்பங்களைச் சங்ககாலத் தமிழர் அனுபவித்தனர்.

மக்கட் பேற்றினால் வாழ்க்கை சிறப்புறுவதைப் பாண்டியன் அறிவுடைநம்பி என்னும் அறிஞர் புறநானூற்றிலே திறம்பட விளக்கியுள்ளார். பலருடன் இருந்து உண்ணும் உயர்நிலையை அடைவதே உலக வாழ்க்கைக்கு வேண்டிய பல அமைப்புக்களும் அமைந்துவிட்டன என்பதற்கு அடையாளமாகும். இவ்வாறு படைக்கப்படும் செல்வம் பலவற்றையும் படைத்துப் பலருடன் கூடவுண்ணும் உடைமை மிக்க செல்வத்தை யுடையோராயினும், குறுகக் குறுக நடந்து, சிறிய கையை நீட்டிக், கலத்தின்கட் கிடந்ததனைத் தரையிலே யிட்டும், கூடப் பிசைந்து தோண்டியும், வாயாற் கவ்வியும், கையால் துழாவியும், நெய்யையுடைய சோற்றை உடம்பின்கண் படச் சிதறியும் இவ்வாறு அறிவை இன்பத்தால் மயக்கும் மக்களைப் பெறுதவர் வாழ்க்கை குறைவுடைய வாழ்க்கையேயாகும்.[88] எனவே, பெருவாழ்விற்குரிய மக்களைப் பெற்றுக் குடும்பத்துடன் இன்பமாக வாழ்ந்தனர் பழந்தமிழ் மக்கள்.

---

87. புதல்வற் கவைஇயினன் றந்தை மென்மொழிப்
புதல்வன் றாயோ விருவருங் கவையினள்
இனிது மன்றவவர் கிடக்கை
நனியிரும் பரப்பினிவ் வுலகுடனுறுமே. ஐங். 409.

88. படைப்புப்பல படைத்துப் பலரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்
நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத் தாம்வாழு நாளே.
புறநா. 188.

———

## பதினான்காம் இயல்

# கல்வியும் கலைகளும்

### (1) கல்வி

சங்க காலத்தில் வழக்கிலிருந்த கல்வி அமைப்பைப் பற்றியும் கல்வி முறைகளைப் பற்றியும் அறிவதற்குப் போதிய சான்றுகள் இல்லை. எனினும், சங்க காலத்திலிருந்த தமிழ்ச் சங்கங்களைப் பற்றியும் அக்காலத்து எழுந்த நூல்களைப் பற்றியும் மேலே கூறியவற்றிலிருந்து அக்காலத்திற் கல்வி சிறந்திருந்ததென அறிந்து கொள்ளலாம்.

பண்டைக்காலத்திற் பல துறைகளிலும் மிக்க கல்வியுடையார் பலர் இருந்தனர். ஞாயிறு செல்லும் வான வழியையும், அதன் இயக்கத்தையும், காற்று இயங்கும் திசையையும், ஓர் அடிப்படையுமின்றி நிலைபெற்றிருக்கும் ஆகாயத்தையும் அவ்வவற்றின் எல்லையளவுஞ் சென்று நேரில் அளந்து அறிந்தவரைப்போல ஒவ்வொரு நாளும் இவ் விவ்வளவு அளவுடையன என்று ஆராய்ந்து திட்டமாகச் சொல்லும் ஆழ்ந்தகன்ற கலை அறிவு படைத்தோர் இருந்தன ரென உறையூர் முதுகண்ணன் சாத்தனார் கூறுவர்.[1]

கல்வி அக்காலத்திற் சிறப்புற்று விளங்கியது என்பதற்குப் பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்

---

1. செஞ்ஞாயிற்றுச் செலவுமஞ் ஞாயிற்றுப்
பரிப்பும் பரிப்புச் சூழ்ந்தமண் டிலமும்
வளிதிரிதரு திசையும்
வறிது நிலைஇய காயமு மென்றிவை
சென்றளந் தறிந்தோர் போல வென்றும்
இனைத்தென் போரு முளரே. புறநா. 30 : 1—6.

என்னும் முடியுடைப் பேரரசன் கல்வியின் மாட்சியைப் பற்றிப் பாடிய பாட்டுச் சான்ருக உள்ளது. "தன் ஆசிரியர்க்கு ஓர் ஊறுபாடு உற்றவிடத்து அது தீர்த்தற்கு உதவியும், மிக்கபொருளைக் கொடுத்தும், வழிபாட்டு நிலைமையை வெருது கற்றல் சிறப்புடையது. அதற்குக் காரணம் என்னவோவெனின், பிறப்பு ஒரு தன்மையாகிய ஒரு வயிற்றுப் பிறந்தோருள்ளும், கல்வி விசேடத்தால் தாயும் மனம் வேறுபடுவாள் ; ஒரு குடியின்கட் பிறந்த பலருள்ளும் மூத்தோன் சென்ற வழியைப் பின்பற்ருது அறிவுடையோன் சென்ற வழியே அரசனும் செல்வான் ; வேறுபாடு தெரியப் பட்ட நாற்குலத்துள்ளும், கீழ்க்குலத்துள் ஒருவன் கற்பின், மேற்குலத்துள் ஒருவனும் இவன் கீழ்க்குலத்தான் என்று பாராது கல்விப் பொருட்டு அவனிடத்துச் சென்று வழிபடுவான்" என அப்பாண்டியன் மொழிகின்ருன்.[2]

சங்க காலத்தில் மக்கள் கல்வி அறிவு படைத்தவராய் விளங்கினர் என்பது மேலே கூறியவற்றிலிருந்து பெறப்பட்ட போதும் அக்காலக் கல்வி முறைகளைப்பற்றிய செய்தியொன்றும் கிடைக்கவில்லை. எனினும், வரிவடிவில் நூல் எழுதும் வழக்கத்தைப் பழந்தமிழர் அறிந்திருந்தனரென்பதற்குச் சான்றுகள் உள்ளன. தமிழ் நாட்டில் அசோக மன்னனின் கல்வெட்டுக்கள் சில கண்டெடுக்கப்பட்டிருக்

2. உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும்
பிற்றை நிலை முனியாது கற்ற னன்றே
பிறப்போ ரன்ன வுடன்வயிற் றுள்ளும்
சிறப்பின் பாலாற் ருயுமனந் திரியும்
ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக வென்னு தவருள்
அறிவுடை யோனு றரசுஞ் செல்லும்
வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனு மவன்கட் படுமே.

புறநா. 183.

கின்றன. சமண பௌத்த துறவிகள் வாழ்ந்த குடையப்பட்ட குகைகளில் பிராமி (*Brahmi*) எழுத்தில் எழுதப்பட்ட கல்வெட்டுக்கள் உள்ளன.[3] இக் கல்வெட்டுக்கள் பிராமி எழுத்தில் அமைந்திருந்தபோதும் இவற்றிற் பொறிக்கப்பட்டிருக்கும் மொழி தமிழ் மொழியேயாகும். பொதுமக்கள் இவற்றைப் படித்து அறிவதற்குரிய தமிழ்மொழிப் பயிற்சி படைத்தவராய் இருந்திருத்தல் வேண்டும்.

சங்க காலத்தில் தமிழகத்தில் வரிவடிவில் எழுதும் முறை வழக்கிலிருந்தது என்பதற்கு நேரான சான்றுகள் இருக்கின்றன. 'எழுத்து' என்ற தமிழ்ச் சொல் 'எழுது' என்ற வினையினடியாகப் பெறப்பட்டதாகும். 'எழுது' என்றால் 'வரை' என்பது பொருள். இச்சொல் சங்க இலக்கியங்களிற் பல இடங்களில் வரும். தொல்காப்பியத்திலும் எழுத்து வழக்கைப்பற்றிய குறிப்புக்கள் உள. மெய்யினுடைய தன்மை புள்ளியோடு நிற்றல் என எழுத்ததிகாரம் கூறும்.[4] உயிரெழுத்து அளபெடுக்குங்கால் நெட்டெழுத்துக்குப் பின்னர் வேண்டிய மாத்திரைக்கு அளவான குற்றெழுத்துக்களை எழுதல் வேண்டும் எனவும் அது கூறும்.[5] இவ்வாறு எழுதல் மற்றைய ஆசிரியர் கருத்தெனவும் இச் சூத்திரம் நுவலும். எழுத்ததிகாரத்தின் பதினுன்காவது

---

3. *K. V. Subrahmaniya Ayyar : The Earliest Monuments of the Pandya Country and their Inscriptions. See Proceedings and Transactions of the Third Oriental Conference. Madras (1924), Pages 275 - 300.*

4. மெய்யி னியற்கை புள்ளியொடு நிலையல்.
தொல். எழுத்து. 15.

5. நீட்டம் வேண்டி னவ்வள புடைய
கூட்டி யெழூஉத லென்மனார் புலவர்.
தொல். எழுத்து. 6.

சூத்திரம் மகரம் எழுதப்படும் முறையையும்,[6] பதினேழாவது சூத்திரம் அகரம் பெற்ற மெய் புள்ளியில்லாத வரிவடிவைப் பெறும் என்பதையும்[7] கூறும். இவற்றிலிருந்து தொல்காப்பியர் காலத்திற்கு முன்னரேயே எழுதும் வழக்குத் தமிழகத்தில் இருந்ததென அறியலாம்.

பொருதுபட்ட வீரரின் பெயரை உலகமறிய நடுகல்லில் எழுதும் வழக்கத்தை மலைபடுகடாம் குறிக்கின்றது.[8] பதிற்றுப்பத்தில் வரும் 'ஒண்பொறிக் கழற் கால்' என்னும் தொடரிலிருந்து அக்காலத்திற் காலிலே அணியப்படும் கழலில் வீரச் செயல்களைப் பொறித்து வைப்பரென அறியலாம்.[9] குட ஓலையிலே பெயரை எழுதிப் பானைக்குள் இட்டு, ஆளும் பெருமக்களைத் தெரிவு செய்யும் முறையினை அரசியல் அமைப்பு என்னும் இயலிற் கூறினோம்.[10] இதிலிருந்தும் எழுதும் முறை அக்காலத்தில் இருந்ததெனத் தெரிகின்றது.

மேலும், அக்காலத்திலே தமிழகத்திற்கும் மேலைத்தேச நாடுகளுக்கு மிடையே செழித்த வணிகம் நடைபெற்றது. இதிலிருந்தும் அக்காலத்தில் எழுதும் வழக்கம் இருந்திருக்க வேண்டுமென ஊகிக்கலாம். மேலே கூறியன யாவும் சங்ககாலத் தமிழரிடையே எழுதும் முறை வழக்கில் இருந்தது

---

6. உட்பெறு புள்ளி யுருவா கும்மே.

தொல் எழுத்து. 14.

7. புள்ளி யில்லா வெல்லா மெய்யு
முருவுரு வாகி யகரமோ டுயிர்த்தலும்.

தொல். எழுத்து. 17.

8. பெயர்மருங் கறிமார்
கல்லெறிந் தெழுதிய நல்லரை மராஅத்த.

மலைபடு. 394—395.

9. பதிற். 34 : 2.

10. இந்நூல் 67ம் பக்கத்தைப் பார்க்க.

என்பதை நிறுவுகின்றன. மக்கள் எழுதவும் படிக்கவும் அறிந்திருந்தன ரென்பதும் தெளிவாகின்றது. இவற்றைத் தவிரச் சங்ககாலக் கல்வி அமைதியைப்பற்றி ஒன்றும் கூற இயலாது.

## (2) வான நூல்

நுண்பெருங்கலையாகிய வானநூலும் சங்க காலத்தில் ஒப்புயர்வற்ற நிலைமையில் இருந்தது. வானின்கண் மின்னு வன யாவும் மீன்கள். 'வானத்தின்கண்ணுள்ள மீன்,'[11] 'வானம் பல மீனையும் பூக்கும்,'[12] 'பல விண்மீன்கள் திகழும் உயர்ந்த வானம்,'[13] 'வானத்தில் விளங்கித் தோன்றும் விண் மீன்'[14] எனப் புறநானூறு கூறும். இவ் வான்மீன் நாள்மீன் கோள்மீன் என இரு பிரிவில் அடங்கும். ஒருவர் பிறக்கும் நாளில் விண்ணின்கண் சந்திரன் நின்ற இடத்திலிருந்த மீனே நாள்மீன் எனப்படும். பொன்னாற் செய்த சிறு கலங்கள் திங்களைச் சேர்ந்த நாள் மீனை ஒத்திருப்பன.[15] பாண்டியன் நெடுஞ்செழியனைப் பாடிய மாங்குடி கிழார், "நின்று நிலைப்ப தாக நினது நாளாகிய மீன்; நில்லாது பட்டுப்போவதாக நின் பகைவருடைய நாளாகிய மீன்" எனக் கூறுவர்.[16]

---

11. ................வானத்து
    மீன். புறநா. 109 : 9–10.
12. வான மீன்பல பூப்பின். புறநா. 129 : 7.
13. பன்மீ னிமைக்கு மாக விசும்பு. புறநா. 270 : 1.
14. ............வானத்து
    வயங்கித் தோன்று மீன். புறநா. 367 : 15—16.
15. மதிசேர் நாண்மீன் போல நவின்ற
    சிறுபொ னன்கலம். புறநா. 160 : 8—9.
16. நின்று நிலைஇயர்நின் னாண்மீ னில்லாது
    படாஅச் செலீயர்நின் பகைவர் மீனே.
    புறநா. 24 : 24—25.

இயற்கை ஒளியையுடைய நாண்மீன்களின் ஒளியைக் கொண்டு விளங்குவன கோள்மீன்கள். அகன்ற இடத்தையுடைய மன்றில் ஆட்டுக்கிடாய்களும் சிவலைப் பறவைகளும் விளையாடுவது, நீல நிறத்தையுடைய ஆகாயத்தே வலமாக எழுந்து திரியும் நாண்மீன்களுடன் கோள்மீன்கள் கலந்திருத்தலை ஒக்கும்.[17] பொற்கலத்தின் தோற்றம், ஆகாயத்தில் ஒளி பொருந்திய நிறத்தினையுடைய கோள்மீன்கள் சூழ்ந்த இளைய கிரணங்களையுடைய ஞாயிற்றின் தோற்றத்தை ஒக்கும்.[18]

கோள்மீனாகிய திங்கள் ஞாயிற்றோடு பொருந்துவதும், பிரிந்து நேர் எதிர்ப்பக்கத்தை அடைவதும் வழக்கம். அவ்வாறு நடக்கும்போது அதன் ஒளி நாளுக்குநாள் வளர்ந்து முழு வட்டமாகக் காணப்படும். இவ்வாறு இது முற்றுவதனை "மாகமாகிய விசும்பின்கண் நிலவும் வெண் மதியம் பதினைந்து நாள் முறையே முதிர" எனக் கோவூர் கிழார் குறிப்பிடுவர்.[19] எட்டாம் நாட் பிறை 'எண்ணாட் டிங்கள்' எனப்படும்.[20] ஒளி பொருந்திய முழுப்பக்கமும் தெரிய இருக்கும் திங்கள் உவவுமதி எனப்படும். உயர்ந்த வெண் கொற்றக்குடையின் வடிவு உவா நாளின் மதியினது

---

17. நீனிற விசும்பின் வலனேர்பு திரிதரு
நாண்மீன் விராய கோண்மீன் போல
மலர்தலை மன்றத்து........................
..........................................................
மேழகத் தகரொடு சிவல்விளை யாட.
பட்டினப். 67—77.

18. வாணிற விசும்பிற் கோண்மீன் சூழ்ந்த
விளங்கதிர் ஞாயி றெள்ளுந் தோற்றத்து
விளங்குபொற் கலம். சிறுபாண். 242—244.

19. மாகவிசும்பின் வெண்டிங்கள்
மூவைந்தான் முறைமுற்ற. புறநா. 400 : 1—2.

20. எண்ணாட் டிங்கள். புறநா. 118 : 2.

வடிவு போன்றது.[21] உவா வந்து கூடிய பெரிய நாளில் ஞாயிறும் திங்களும் தம்முள் எதிராக நிற்கும். திங்கள் தோன்றும்போது ஞாயிறு மறையும்.[22]

வெள்ளை நிறமுடைய கோள் வெள்ளி எனப்படும். இது மாலையில் அல்லது காலையிலேதான் காணப்படும். காலையிலே தோன்றும் வெள்ளிதான் விடிவெள்ளியாகும். இராக்காலம் விடிதற்குக் காரணமாகிய மீன் என இதனைப் பெரும்பாணாற்றுப்படை குறிக்கும்.[23] இரவுப் பொழுது புலரும் விடியற் காலத்தில் வெள்ளியாகிய மீன் வானத்தே தோன்றும் எனவும், புள்ளினங்கள் எழுந்து ஒலிக்கும் எனவும் கல்லாடனார் பாடுவர்.[24] "வெள்ளியாகிய மீன் வானத்தில் எழுந்தது ; பறவைகள் மரத்தின் உயர்ந்த கொப்பிற் கட்டியிருந்த கூட்டிலிருந்து தம்முடைய ஓசையைச் செய்தன" என எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார் கூறுவர்.[25] "திங்களின் நிலாவொளி மறைய, வெள்ளியாகிய விண்மீன் எழுந்து விளங்க" என்பது திருத்தாமனார் கூற்று.[26]

---

21. உவவுமதி யுருவின் ஓங்கல் வெண்குடை.
புறநா. 3 : 1.

22. உவவுத்தலை வந்த பெருநா ளமயத்
திருசுடர் தம்மு ளோக்கி யொருசுடர்
புன்கண் மாலை மலைமறைந் தாங்கு.
புறநா. 65 : 6—8.

23. வைகுறும் மீன். பெரும்பாண். 318.

24. வெள்ளி தோன்றப் புள்ளுக்குர லியம்பப்
புலரி விடியல். புறநா. 385 : 1—2.

25. வெள்ளியு மிருவிசும் பேர்தரும் புள்ளும்
உயர்சினைக் குடம்பைக் குரற்றோற் றினவே.
புறநா. 397 : 1—2.

26. மதிநிலாக் கரப்ப வெள்ளி யேர்தர.
புறநா. 398 : 1.

வற்கடத்தில் வெண்மீன் தான் நிற்றற்குரிய வட திசையில் நில்லாமல் தென் திசைக்கண்ணே போகும்.[27] மழைக் கோளாகிய வெள்ளி வடக்கிறைஞ்சின் மழை உண்மையும் தெற்கெழுந்தால் மழை இன்மையும் நேருவதைப் பதிற்றுப் பத்துக் குறிப்பிடும்.[28] விளை வயல்களும் நீர் நிலைகளும் வற்றிய பயனில்லாத காலமாகிய வற்கடத்தில் வெள்ளியாகிய மீன் நிற்குமென மதுரை அளக்கர் ஞாழலார் மகனார் மள்ளனாரும் கூறுவர்.[29]

வெண்மீன் வடதிசைக்கண் நில்லாது தென்திசைக்கண் செல்வது எவ்வாறு வற்கடத்திற்கு அடையாளமாகக் கருதப் பட்டதோ அவ்வாறே வால்வெள்ளி தோன்றுவதும் சனிமீன் புகைவதும் தீயகுறிகளாகக் கொள்ளப்பட்டன. "சனிமீன் புகைகளோடு கூடிப் புகையினும், எல்லாத்திசையினும் புகை தோன்றினும், தென்திசைக்கண்ணே வெள்ளி போக்குறினும்" எனப் புறநானூறு கூறுவது இதற்குச் சான்றாகும்.[30]

ஞாயிறு வேறுபடத் தோன்றுதலும், எரிகொள்ளி விழுதலும் தீமையின் அறிகுறியாகக் கொள்ளப்பட்டன. "விளங்கிய சுடரையுடைய ஞாயிறு நான்கு திக்கினும் தோன்றிலும், விளங்கிய கதிரையுடைய வெள்ளிமீன் தென்

27. வசையில்புகழ் வயங்குவெண்மீன்
திசைதிரிந்து தெற்கேகினும். பட்டினப். 1—2.

28. வறிதுவடக் கிறைஞ்சிய சீர்சால் வெள்ளி
பயங்கெழு பொழுதோ டாநிய நிற்ப.
பதிற். 24 : 24—25

29. வெள்ளி தென்புலத் துறைய விளைவயற்
பள்ளம் வாடிய பயனில் காலை.
புறநா. 388 : 1—2.

30. மைம்மீன் புகையினுந் தூமந் தோன்றினும்
தென்றிசை மருங்கின் வெள்ளி யோடினும்.
புறநா. 117 : 1—2

திசைக்கண் செல்லினும்'' எனவும்,[31] "எட்டுத்திசையும் எரிகொள்ளி எரிந்து வீழவும், பெரிய மரத்தின்கண்ணே இலை யில்லாத நெடிய கோடாகிய வற்றல் பற்றவும், வெய்ய சுட்ரையுடைய ஞாயிறு பல இடத்தும் செறிந்து தோன்ற வும்'' எனவும்,[32] "வெதுப்புகின்ற கதிரையுடைய ஞாயிறு கீழ்த்திசை மாறித் தென் திசையிலே தோன்றுங்காலம் வரினும் யாங்கள் இதற்குச் செய்வது என்னேவென்று அஞ்சு வேமல்லேம்'' எனவும்,[33] "அகன்ற நிலவுலகம் மழையின்றி மிக்க வெம்மையுற்று வாடினும், வானகத்தே எரிமீன் மிகுதி யாகத் தோன்றிடினும், குளமீனும் தாள்மீனுமாகிய விண் மீன்கள் புகைந்து தோன்றினும்'' எனவும்[34] வரும் புறநானூற்றுப் பகுதிகள் இதனை நன்கு விளக்கும்.

சிவந்த நிறத்தையுடைய செவ்வாய் செம்மீன் எனச் சங்க இலக்கியத்திற் குறிக்கப்படும். கடல் நடுவே தோன்றும் திமிலின்கண் இடப்பட்ட விளக்குப்போல மாகமாகிய விசும் பின்கண் செம்மீன் விளங்கும்.[35] வானநூற் கணக்கில் வல்ல

---

31. அலங்குகதிர்க் கனலி நால்வயிற் றோன்றினும்
இலங்குகதிர் வெள்ளி தென்புலம் படரினும்.
புறநா. 35 : 6—7.

32. திசையிரு நான்கு முற்க முற்கவும்
பெருமரத் திலையி னெடுங்கோடு வற்றல் பற்றவும்
வெங்கதிர்க் கனலி துற்றவும். புறநா. 41 : 4—6.

33. தெறுகதிர்க் கனலி தென்றிசைத் தோன்றினும்
என்னென் றஞ்சலம் யாமே. புறநா. 397 : 24—25.

34. அகன்ஞாலம் பெரிதுவெதும்பினும்
மிகவானு ளெரிதோன்றினும்
குளமீனொடுந் தாட்புகையினும்.
புறநா. 3 5 : 33—35.

35. முந்நீர் நாப்பட் டிமிற்சுடர் போலச்
செம்மீ னிமைக்கு மாக விசும்பின்.
புறநா. 60 : 1—2.

புலவர் பலர் அக்காலத்தில் வாழ்ந்தனர். கணியன் பூங்குன்றன் என்ற பெயர், அப்பெயரையுடைய புலவர் பின் நிகழ்வனவற்றைக் கண்ணி உரைக்கும் பெருமை வாய்ந்தவர் என்பதை விளக்கும். ஆவூர் மூலங்கிழார், ஐயூர் மூலங்கிழார் என்ற புலவர்கள் மூலம் என்ற நாளிற் பிறந்தமையால் அப் பெயரைப் பெற்றனர் போலும்.

புறநானூற்றிலுள்ள 229-ம் பாடல் அக்காலக் கணியரின் திறனை நன்கு புலப்படுத்தும். பங்குனி மாதம் முதற் பதினைந் தில், கார்த்திகை நாளில், நிறைந்த இருட்டில் உத்தரம் உச்சியிலிருந்து சாய, மூலம் எழ, மிருகசீரிடம் மறைய, ஒரு மீன் வடக்கும் கிழக்கும் போகாமல் இடைநடுவே தீ பரக்க விழுந்தது. இதனைக் கண்ணுற்ற கூடலூர்கிழார் என்னும் புலவர், யானைக் கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை அதன் ஏழாம் நாள் இறப்பான் என எண்ணினர். அவர் எண்ணியவாறே அரசன் இறந்தான்.[36] இதிலிருந்து அக்

36. ஆடிய லழற்குட்டத்
தாரிரு ளரையிரவின்
முடப்பனையத்து வேர்முதலாக்
கடைக்குளத்துக் கயங்காயப்
பங்குனியுய ரழுவத்துத்
தலைநாண்மீ னிலைதிரிய
நிலைநாண்மீ னதனெதி ரேர்தரத்
தொன்னாண்மீன் றுறைபடியப்
பாசிச் செல்லா தூசி முன்னா
தளக்கர்த்திணை விளக்காகக்
கனையெரி பரப்பக் காலெதிர்பு பொங்கி
ஒருமீன் விழுந்தன்றால் விசும்பி னானே
அதுகண் டியாமும் பிறரும் பல்வே றிரவலர்
..........................................
அஞ்சின மெழுநாள் வந்தன் றின்றே
..........................................
மேலோ ருலக மெய்தினனாகலின்.
புறநா. 229 : 1—22.

காலத் தமிழரின் வானநூல் அறிவின் மேம்பாட்டினைத் தெரிந்துகொள்ளலாம்.

## (3) சிற்பமும் ஓவியமும்

சங்க காலத்திற் சிற்பக்கலையும் ஓவியக்கலையும் வளர்ச்சியுற்றிருந்தன. கோயில்களையும் அரசரின் மாளிகைகளையும் மண்டபங்களையும் சிற்பநூல் வல்லுநர் நாள் குறித்து, நாழிகை பார்த்து, நேரறி கயிறிட்டுத் திசைகளையும் அத்திசைகளிலுள்ள தெய்வங்களையும் நோக்கி வகுத்தனர்.[37] அக்காலக் கோயில்களையும் மாட மாளிகைகளையும் செங்கற்களினுல் அமைத்து உலோகத் தகட்டினுலும் சாந்தினுலும் வேய்ந்தனர். மேலும், உயர்ந்த மாடங்களில் அடுக்கு வீடுகளையும் நிலாமுற்றங்களையும் அமைத்தனர். "ஆகாயத்தே திரியும் தேவருலகுக்கு முட்டுக்காலாக ஊன்றிவைத்த ஒரு பற்றுக்கோடுபோல விண்ணைத் தீண்டும்படி ஓங்கின மாடம்; தன்னிடத்துச் சாத்திய ஏணியால் ஏறுதற்கரிய உச்சியை உடைய சாந்தினுல் வேயப்பட்ட மாடம்" எனவும்,[38] "செங்கல்லாற் செய்யப்பட்டு உயர்ந்த நெடுநகர்" எனவும்[39] பெரும்பாணுற்றுப்படை கூறும். "ஒழுங்குபட்ட நிலைமையினையுடைய மாடங்களும் நிலா முற்றங்களும்" என

---

37. இருகோற் குறிநிலை வழுக்காது குடக்கேர்
பொருதிறஞ் சாரா வரைநா ளமயத்து
நூலறி புலவர் நுண்ணிதிற் கயிறிட்டுத்
தேஎங் கொண்டு தெய்வ நோக்கிப்
பெரும்பெயர் மன்னர்க் கொப்ப மனைவகுத்து.
நெடுநல். 74—78.

38. வான மூன்றிய மதலை போல
வேணி சாத்திய வேற்றருஞ் சென்னி
விண்பொர நிவந்த வேயா மாடத்து.
பெரும்பாண். 346—348.

39. சுடுமண் ணோங்கிய நெடுநகர். பெரும்பாண். 405.

மதுரைக்காஞ்சி பகரும்.[40] கோபுரங்களையுடைய வாயில் களையும் இரும்புக் கதவுகளையும் அக்காலச் சிற்பிகள் திறனுக அமைத்த முறையினை இந்நூலில் தச்சரைப்பற்றிக் கூறிய பகுதியில் தந்துள்ளோம் [41]

ஓவிய வல்லுநர் சுவர்களிற் சித்திரம் வரைந்தனர். வெள்ளியை ஒத்த விளங்குகின்ற சாந்து பூசப்பெற்ற கரிய திரண்ட திண்ணிய தூண்களையுடைய சுவரிலே, அழகு பொருந்திய பல பூக்களையுடைய வல்லி சாதியாகிய ஒப்பற்ற கொடியை எழுதுவரென நெடுநல்வாடையிலிருந்து அறிய லாம்.[42] பலவகைப்பட்ட கூரிதாக வுணர்ந்த தொழில் களையும் ஒப்புக்காட்டி வரையும் அறிவினையுடைய சித்திர காரர் மதுரையில் இருந்தனர்.[43] கோயில்களில் ஓவியங்கள் வரையப்பட்டன. பல தேர்களும் ஓடுவதால் சேறுபட்ட தொழில் பொருந்திய சித்திரங்களையுடைய வெள்ளிய கோயில்கள் தூசுபட்டுக் கிடக்கும்.[44]

---

40. நிரை நிலை மாடத் தரமியந் தோறும்.
மதுரை. 451.

41. பன்னிரண்டாம் இயலைப் பார்க்க.

42. வெள்ளி யன்ன விளங்குஞ் சுதையுரீஇ
மணிகண் டன்ன மாத்திரட் டிண்காழ்ச்
செம்பியன் றன்ன செய்வுறு நெடுஞ்சுவ
ருருவப் பல்பூ வொருகொடி வளைஇக்
கருவொடு பெயரிய காண்பி னல்லில்.
நெடுநல். 110—114.

43. எவ்வகைச் செய்தியு முவமங் காட்டி
நுண்ணிதி னுணர்ந்த நுழைந்த நோக்கிற்
கண்ணுள் வினைஞரும் பிறருங் கூடி.
மதுரை. 516—518.

44. தேரோடத் துகள்கெழுமி
நீறுடிய களிறுபோல
வேறுபட்ட வினையோவத்து
வெண்கோயின் மாசூட்டும். பட்டினப். 47—50.

'சித்திரத்தை ஒத்த அழகு வாய்ந்த வீடுகள்' எனச் சங்க நூல்கள் பலவிடத்திற் கூறுவதால் தமிழர் ஓவியக் கலையை நன்கு அறிந்திருந்தனர் என்பது பெறப்படும். ஓவியம் வீட்டைப் போல இருக்கின்றது என்று கூறக்கூடிய காலம் போய், வீடு ஓவியத்தைப் போல இருக்கின்றது என்று கூறக் கூடிய காலம் தோன்றுவதற்கு நீண்டகால இடையீடு வேண்டும். ஓவியத்திற் பழகிப் பழகிப் பயிற்சி பெற்று, அதனைச் சுவைக்கும் நிலை ஏற்பட்ட பின்பே ஓவியத்தைப் போல வீடு இருக்கின்றது எனக் கூறமுடியும். 'சித்திரத்தைப் போல அழகையுடைய அரண்மனை' எனப் பதிற்றுப்பத்தும்,[45] 'ஓவியம் போலும் அழகினையுடைய இல்' எனப் புறநானூறும்,[46] ஓவியத்தை ஒத்த புனைந்த தொழிற்றிறங்களை யுடைய நல்ல மனை' என அகநானூறும்[47] கூறும். இவற்றி லிருந்து சங்ககாலத் தமிழர் ஓவியக்கலையில் மிக்க தேர்ச்சி பெற்றிருந்தனர் எனத் தெளிவாக அறியலாம்.

## (4) நடனம்

சங்ககாலப் பகுதியில் நடனமும் இசையும் மிக்க வளர்ச்சி யுற்றிருந்தன. நடனத்தைக் குறிப்பதற்குப் பெரும்பாலும் 'கூத்து', 'ஆடல்' என்ற சொற்களையே வழங்கினர். மக்கள் வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் ஆடல் விரவி இருந்தது. சமயச் சடங்குகளில் ஆடல் தனியிடம் பெற்றி ருந்தமையை மேலே நோக்கினோம்.[48] சங்ககால நடனக்கலை வரலாற்றினை நான்கு பிரிவில் அமைத்துக் கூறலாம்.

---

45. ஓவத் தன்ன வுருகெழு நெடுநகர்.
பதிற். 88 : 28.

46. ஓவத் தன்ன விடனுடை விரைப்பின்.
புறநா. 251 : 1.

47. ஓவத் தன்ன வினைபுனை நல்லில்.
அகநா. 98 : 11.

48. ஐந்தாம் இயலைப் பார்க்க.

**நாட்டுக் கூத்து :**

வாடுங் கொடியினையுடைய வள்ளியல்லாத வள்ளிக் கூத்தின் வளம் பலவற்றையும் பெற்ற பட்டணங்களைப்பற்றிப் பெறும்பாணாற்றுப் படை கூறும்.[49] இக்கூத்து இழிந்தோர் காணுங் கூத்து எனப்படும். இஃது ஆண்பாற்கும் பெண் பாற்கும் பொதுவாயினும் இதனைப் பெண்களே பெரும் பாலும் ஆடுவர். ஆடும்பொழுது நாட்டுக்கு வளமும் கொற்றமும் கொணர்ந்த வள்ளியின் பெருமைகளைப் பாடுவர்.

பொதுமக்கள் வாழ்விற் சிறப்பான இடம்பெற்ற இன்னொரு கூத்து குரவையாகும். இதனை மலைவாழ்நரே அதிகமாக ஆடுவர். ஆண்களும் பெண்களும் இவ்வாட்டத்தில் பங்கு பற்றுவர். வானையளாவும் மலை உச்சிகளிலே கட்குடித்த குறவர் மான்தோற் சிறுபறையின் ஒலிக்கேற்பத் தம் பெண்டிரொடு குரவை அயர்வர்.[50] பெரிய மலையின் கண்ணே தோன்றி வளைந்த மூங்கிலால் ஆக்கிய குழாயில் நிரப்பி முற்ற வைத்த கள்ளைப் பருகி, வேங்கை மரத்தை யுடைய முன்றிலிலே குரவை அயர்வர்.[51] குறிய இறப்பை உடைய சிறிய மனையின்கட் குற மக்கள் வளைந்த மூங்கிற் குழாயின்கண் வார்த்திருந்து முதிர்ந்த மதுவை நுகர்ந்து,

---

49. வாடா வள்ளியின் வளம்பல தரூஉ
நாடுபல கழிந்த பின்றை.
பெரும்பாண். 370—371.

50. நறவுநாட் செய்த குறவர்தம் பெண்டிரொடு
மான்றோற் சிறுபறை கறங்கக் கல்லென
வான்றோய் மீமிசை யயருங் குரவை.
மலைபடு. 320—322.

51. பெருமலை
வாங்கமைப் பழுனிய நறவுண்டு
வேங்கை முன்றிற் குரவையுங் கண்டே.
நற். 276 : 8—10.

வேங்கை மரத்தையுடைய முற்றத்தின்கட் குரவைக் கூத்தாடுவர் எனப் புறநானூறும் கூறும்.[52]

இக்குரவைக் கூத்து நெய்தல் நில மகளிரின் பொழுது போக்காகவும் இருந்தது. நீல மணிபோலும் பூக்களையுடைய கழிமுள்ளி செறிந்த மணற் குன்றுகள் மிக்க கடற்றிரையி லிருக்கும் பரதவரின் மகளிர் ஆடும் குரவைக் கூத்தின் ஓசையை மதுரைக்காஞ்சி குறிப்பிடும்.[53] தெளிந்த கடற்கரை யின் மேலே பாயும் திண்ணிய திமிலையுடைய வலிய நுளையர் வெம்மையையுடைய மதுவை உண்டு மெல்லிய குரவைக் கூத்திற்கு ஏற்ற தாளத்தை ஆடுவர்.[54] நெய்தல் மலர்போலும் மையுண்ட கண்ணும் நுண்ணிய சந்தையுடைய பருத்த தோள்களும் பொருந்திய மகளிர் வெண்மணற் குவியற் கண்ணே குரவைக் கூத்தை நிறுவுவர்.[55] இக்குரவை வரிக் கூத்துறுப்பினுள் ஒன்ருகக் கருதப்படும். இஃது எழுவரேனும் எண்மரேனும் ஒன்பதின்மரேனும் சமநிலையில் மண்டிலமாக நின்று, கடகக்கை கோத்துக், குறிக்கப்பட்டவரது அழகு

---

52: குறியிறைக் குரம்பைக் குறவர் மாக்கள்
வாங்கமைப் பழுனிய தேறன் மகிழ்ந்து
வேங்கை முன்றிற் குரவை யயரும்.
புறநா. 129 : 1—3.

53. மணிப்பூ முண்டகத்து மணன்மலி கானற்
பரதவர் மகளிர் குரவையொ டொலிப்ப.
மதுரை. 96—97.

54. தென்கடற்றிரை மிசைப்பாயுந்து
திண்டிமில் வன்பரதவர்
வெப்புடைய மட்டுண்டு
தண்குரவைச் சீர்தூங்குந்து. புறநா. 24 : 3—6.

55. நெய்தலுண்கணேரிறைப்பணைத்தோட்
பொய்தலாடிய பொய்யா மகளிர்
குப்பை வெண்மணற் குரவை நிறூஉம்.
ஐங். 181 : 1—3.

புகழ் வீரம் முதலிய பாடி, குரல் முதலாகிய நரம்பின்கண் அவ்வெழுவரை நிறுத்தி, குரலிடத்துக் குறிக்கப்பட்ட தலைவரை நிறுத்தி, மற்றுள்ள நரம்பின்கண் தலைவியையும் ஏனையோரையும் நிறுத்தி, அவரவர் அடையாளப் பூவையும் அணிந்து நின்றாடுவது. நடுவிரலும் அணிவிரலும் முன்னே நின்று மடிந்து மற்றை இரண்டு விரல்களும் கோத்தல் கடகக்கை எனப்படும்.

முருகனால் ஏற்படும் தீமைகளைப் போக்குவதற்குப் பெண்கள் குரவைக் கூத்தை ஆடுவர். கார்காலத்து மலரை யுடைய குறிஞ்சியைச் சூடி, கடம்பமாலை அணிந்து அழகு பெற்று விளங்கும் முருகனை உள்ளத்திற் செவ்விதாக நிறுத்தி வழிபட்டு, தம்முட் டழுவிக் கைகோத்து மன்றுகள் தோறும் பெண்கள் குரவைக் கூத்தாடுவர்.[56]

விழாக்காலங்களில் இக் கூத்துக்கள் ஆடப்பெறுவன. விழா நாட்களில் ஆடல் மகளிர் உடற்பயிற்சி வித்தைகள் பல வற்றைச் செய்வர். விழவு மேம்பட்ட ஊரில் நடைபெறும் அத்தகைய வித்தைகளில் ஒன்று கயிற்று நடனமாகும். இது, விழா மேடையில் அரித்தெழும் ஓசையையுடைய இனிய வாத்தியம் ஒலிப்பக் கயிற்றின்மேல் ஆடப்பெறுவதாகும்.[57] ஆடல் தொழிலையுடைய மகளிர் தாமே இசைக் கருவிகளை இயக்கும் வன்மையுடையவர். தாம் பாடும் பாட்டினை யாழ் தன்னிடத்தே கொள்ளும்படி நரம்பைக் கூட்டுதற்குக்,

---

56. கார்மலர்க் குறிஞ்சி சூடிக் கடம்பின்
சீர்மிகு நெடுவேட் பேணித் தழூஉப்பிணையூஉ
மன்றுதொறு நின்ற குரவை. மதுரை. 613—615.

57. சாறுகொ ளாங்கண் விழவுக்கள நந்தி
யரிக்கூட் டின்னியங் கறங்க வாடுமகள்
கயிறூர் பாணியிற் றளருஞ் சாரல்.
குறிஞ்சி. 192—194.

குளிர்ச்சியாலே நிலைகுலைந்த யாழ்நரம்பைப் பெரிய முலையின் வெப்பத்தே தடவி, இசைக்குரிய சுருதியைச் சேர்ப்பர்.[58]

ஆடு களம் மதுரைக்காஞ்சியிற் குறிக்கப்பட்டுள்ளது. தெளிந்த நீரையுடைய நெகிழ்ந்த பள்ளத்தில் நீலமணி யென்று மருளும் நெய்தலும் தொய்யிற் கொடியும் மலர்தல், தொழிலில் வல்லவன் அமைத்த வெறிக் கூத்தையுடைய களத்தை ஒக்குமென அந்நூல் கூறும்.[59] அரசரின் மாட மாளிகைகளில் ஆடல் மகளிர் நியமிக்கப்பட்டிருந்தனர். இரண்டாவது கரிகாலன் புலவர்க்கு விருந்தளிக்க, அவ் விருந்தினைப் புலவர் நுகர, அவ் வேளையில் சிறிய யாழை யுடைய ஒண்ணுதல் மகளிர் மண்ணமை முழவுக்கேற்ப ஆடுவர்.[60]

பாலைநில மக்களிடையே பரவியிருந்த ஆடலைப்பற்றிப் பெரும்பாணாற்றுப்படையிலிருந்து அறியலாம். தமது வீட்டிலே சமைத்த கள்ளுக்களில் இனிதாகிய நெல்லாற் செய்த கள்ளை உண்டு, வளப்பத்தினையுடைய மன்றிலே வலியையுடைய ஏற்றை அறுத்துத் தின்று, தோலை மடித்துப்

---

58. ஆடன் மகளிர் பாடல்கொளப் புணர்மார்
தன்மையிற் றிரிந்த வின்குரற் றீந்தொடை
கொம்மை வருமுலை வெம்மையிற் றடைஇக்
கருங்கோட்டுச் சீறியாழ் பண்ணுமுறை நிறுப்ப.
நெடுநல். 67—70.

59. மணிமரு ணெய்த லுறழக் காமர்
துணிநீர் மெல்லவற் றொய்யிலொடு மலர
வல்லோன் றைஇய வெறிக்களங் கடுப்ப.
மதுரை. 282—284.

60. வேறுபல் லுருவின் விரகுதந் திரீஇ
மண்ணமை முழவின் பண்ணமை சீறியா
ழொண்ணுதல் விறலியர் பாணி தூங்க.
பொருந. 108—110.

போர்த்த வாயையுடைய மத்தளம் தங்களுக்கு நடுவே முழங்கா நிற்ப, வில்லுப் பயின்ற வலிபொருந்திய இடத் தோளை வலப்பக்கத்தே அசைத்துப் பகற்பொழுதில் மகிழ்ச்சி யுடன் ஆடுவர்.[61]

**சமயச்சடங்குக்குரிய ஆடல்**

தமிழருக்குச் சிறப்பான வழிபாட்டு முறைகளைப்பற்றிய இந்நூற்பகுதியில் சமயச்சடங்குகளுடன் தொடர்புடைய வெறியாட்டு முதலிய கூத்துக்களைப்பற்றிக் கூறியுள்ளோம்.[62] சங்க நூல்களிற் பல இடங்களில் இவ்வாடல்களைப் பற்றிய குறிப்புக்களைக் காணலாம். முருக வழிபாட்டைப்பற்றிக் கூறும் பகுதிகளிலேயே இவற்றைப்பற்றிய செய்திகள் பெரும் பாலும் இடம் பெறுகின்றன.[63] சங்ககாலத்தில் இத்தகைய ஆடல்களே மிகவும் சிறந்து விளங்கின. வேலன் ஏறிய பெண்கள் முரசத்தின் ஒலிக்கேற்ப ஆடும் வெறியாடல் தனிச் சிறப்புற்றிருந்தது. இவ்வாடலைப்பற்றிக் கூறும் நூற் பகுதிகள் ஐந்தாம் இயலிற் காட்டப்பட்டுள்ளன.

**பேய்ஆடல்**

இவ்வாடலைப்பற்றியும் முருகனைப்பற்றிய இந்நூற்பகுதி யிற் கூறியுள்ளோம்.[64] வீரர் பட்ட களங்களில் பேய் மகளிர் துணங்கைக் கூத்து ஆடுவதாகக் கூறப்படும். இக்கூத்தை

---

61. இல்லடு கள்ளின் சேரப்பி பருகி
மல்லன் மன்றத்து மதவிடை கெண்டி
மடிவாய்த் தண்ணுமை நடுவட் சிலைப்பச்
சிலைநவி லெறுழ்த்தோ ளோச்சி வலன்வளையூஉப்
பகன்மகிழ் தூங்குந் தூங்கா விருக்கை.
பெரும்பாண். 142—146.

62. 119-ம் பக்கத்தைப் பார்க்க.

63. இந்நூல் 130-ம் பக்கத்தைப் பார்க்க.

64. ஆறும் இயல்.

ஆடுபவர் தம்முடைய முடக்கிய கைகளினால் இடுப்பை அடித்துக் கொள்வர். சான்றோராற் கைவிடப்பட்ட பெரிய அம்பலங்களிலே இரட்டையான அடியையும் கடிய பார்வையையுமுடைய பேய் மகளிர் உலாவி ஆடுவர்.[65]

விழா முரசம் கேட்கும் மறுகுகளில் துணங்கைக் கூத்து நிகழும்.[66] இளம் மங்கையர் இக்கூத்துக்களிற் பங்குபற்றுவர். நெடுஞ்செழியனின் பகைவர் நாட்டிலே, விளங்குகின்ற வளையினையும் மடப்பத்தினையுமுடைய மகளிர் துணங்கைக் கூத்தாடுவதை மறந்திருந்தனரென மதுரைக் காஞ்சி கூறும்.[67] மகளிர் தம்முள் தழுவி ஆடும் துணங்கைக் கூத்தெனக் குறுந்தொகையும் பாடும்.[68] இவ்வாறு அவர்கள் ஆடும்பொழுது ஆடவர் அவர்கட்கு முதற்கை கொடுத்தலும் வழக்கம். முழவு ஒலிக்கேற்ப மகளிர் ஆடும் துணங்கைக் கூத்திற்குத் தழுவுதலையுடைய தெப்பமாக, முழங்குதலில் வல்ல ஏற்றைப்போல முதற் கையைக் கொடுத்து அரசன் ஆடுவானெனப் பதிற்றுப்பத்திலிருந்து அறியலாம்.[69]

---

65. அவையிருந்த பெரும்பொதியிற்
கவையடிக் கடுநோக்கத்துப்
பேய்மகளிர் பெயர்பாட. மதுரை. 161—163.

66. முழவிமிழு மகலாங்கண்
விழவுநின்ற வியன்மறுகிற்
துணங்கை. மதுரை. 327—329.

67. இலங்குவளை மடமங்கையர்
துணங்கையஞ்சீர் தழூஉமறப்ப.
மதுரை. 159—160.

68. மகளிர் தழீஇய துணங்கை. குறுந். 31 : 2.

69. முழாவிமிழ் துணங்கைக்குத் தழூஉப்புணை யாகச்
சிலைப்புவல் லேற்றிற் றலைக்கை தந்துநீ
நளிந்தனை வருத லுடன்றன ளாகி.
பதிற். 52 : 14—16.

**போர்க்கள ஆடல்**

போரிற் பெறும் வெற்றிக்காக ஆடப்படும் இக்கூத்துச் சங்க காலத்துக்குச் சிறப்பாக உள்ளதொன்றாகும். போர்க்களத்தில் துணங்கை, குரவை முதலிய ஆடல்கள் ஆடப் பெறுவன. கதவுகளைக் காக்கும் திரண்ட கணையமரத்தைப் போன்ற திணிந்த கையை உயர வீசிப் பிணங்கள் நிறைந்த போர்க்களப் பரப்பில் துணங்கைக் கூத்தாடுவர்.[70] தம் பகை வரது பகை கெட்டோடவும், அரசர் போர்க்களத்தில் இறப்பவும் கொன்று கையை வீசித் துணங்கைக் கூத்தாடிய வீரரைப் பற்றிப் பதிற்றுப்பத்துக் கூறும்.[71] வெற்றி உண்டாதற்குக் காரணமான முரசம் ஒலிப்ப வாளை உயர வீசி, விளங்குகின்ற ஆபரணங்களை அணிந்து, பொன்னாற் செய்த உழிஞைப் பூவைச் சூடிப் பகைவர் அழிந்து கெட்ட போர்க்களத்தில் அரசன் ஆடுவான்.[72] தேரின்கண் வந்த அரசர் பலரையும் வென்ற வேந்தன் வெற்றிக்களிப்பாலே தேர்த் தட்டில் நின்று போர்த்தலைவரோடு கைபிணைந்தாடும் குரவைக் கூத்தைப்பற்றித் தொல்காப்பியர் கூறியிருப்பதும் கவனிக்கத்தக்கது.[73]

---

70. கதவங் காக்குங் கணையெழு வன்ன
நிலம்பெறு திணிதோ ளுயர வோச்சிப்
பிணம்பிறங் கழுவத்துத் துணங்கை யாடி.
பதிற். 45 : 10—12.

71. மன்பதை பெயர வரசுகளத் தொழியக்
கொன்றுதோ ளோச்சிய வென்றாடு துணங்கை.
பதிற். 77 : 3—4.

72. வலம்படு முரசந் துவைப்ப வாளுயர்த்
திலங்கும் பூணன் பொலங்குடி யுழிஞையன்
மடம்பெரு மையி னுடன்றுமேல் வந்த
வேந்துமெய்ம் மறந்த வாழ்ச்சி
வீந்துகு போர்க்களத் தாடுங் கோவே.
பதிற். 56 : 4—8.

73. வென்ற கோமான் முன்றேர்க் குரவை.
தொல். பொருள். 76 : 5.

சங்க காலத்தில் உலக இன்பங்களிலே திளைத்து இயற்கையான வாழ்விலே சிறந்திருந்தனர் தமிழ் மக்கள். அதனுல் அவர் வாழ்விலே ஆடலும் செழித்து வளர்ந்தது. சங்க காலத்தின் பின்னர் சமண சமயக் கொள்கைகளின் தாக்குதலினுல் நடனக்கலை வளர்ச்சி குறையத் தொடங்கியது. கூத்துக்களைப் பார்த்து மகிழ்வதினுல் மக்களுக்கு இச்சைகள் கூடுகின்றனவெனச் சமணர் கருதினர். அதனுல் மக்கள் தவருன ஒழுக்க முறைகளைக் கடைப்பிடிக்கவுங் கூடுமெனக் கொண்டனர். "மகளிர் பாடும் இடத்தில் அணுகாதொழிக; அவர் விரும்பி ஆடும் நாடகத்தைச் சேராதொழிக ; ஆராயுங்கால், பாடும் இடத்தையும் நாடகத்தையும் அணுகினுற் பகையும் பழியும் கடுஞ்சொல்லும் சாவும் இல்லாதன போலிருந்து ஒழியாமல் வரும்" என்று ஏலாதிப் பாட்டொன்று கூறும்.[74] ஆடும் மேடையின்கண் மாறி மாறிப் புனையுங் கோலத்தினையுடைய ஆடுநர் போல மாறி மாறிப் பிறப்பதைவிடத் துறவு ஒழுக்கம் மேலானது என அந்நூல் மேலும் கூறும்.[75] கல்வியும் அதற்குத் தக்க ஒழுக்கமும் உடைய சான்ருேர் கூத்தாடுமிடத்திலும் திருவிழா நடக்குமிடத்திலும் போகார் என்றும், அங்ஙனம் போவாராயின் அவருக்குத் தாழ்வும் பொருள் அழிவும் ஏற்படும் என்றும் இன்னொரு பாட்டுப் பகரும்.[76] இத்தகைய கொள்கைகள்

---

74. பாடகஞ் சாராமை பாத்திலார் தாம்விழையும்
நாடகஞ் சாராமை நாடுங்கால்—நாடகம்
சேர்ந்தாற் பகைபழி தீச்சொல்லே சாக்காடே
தீர்ந்தாற்போற் றீர வரும். ஏலாதி. 25.

75. ........................................
.....................................அணியின்
அரங்கின்மேல் ஆடுநர்போல் ஆகாமல் நன்ரும்
நிரம்புமேல் வீட்டு நெறி. ஏலாதி. 42.

76. கூத்தும் விழவு மணமும்............
..................................ஒத்தும்
ஒழுக்கும் உடையவர் செல்லாரே. ஏலாதி. 62.

சங்ககாலத்திற் பரவாமையால் அக்காலத்தில் நடனக்கலை ஓங்கி வளர்ந்தது.

## (5) இசை

பழைய தமிழ் மக்களின் வாழ்க்கையுடன் இசை இரண்டறக் கலந்திருந்தது. இசை என்னும் சொல்லிற்கு 'இசைவிப்பது' 'வசப்படுத்துவது' எனப் பொருள் கொள்ளலாம். மரம், செடி, கொடி முதலிய ஓரறிவு உயிர்கள் முதலாக மக்கள் என்னும் ஆறறிவு உயிர்கள் வரையுமுள்ள எல்லா உயிர்களையும் இசை வசப்படுத்தும் என்பதை அவர் அறிந்திருந்தனர். உயிரில்லாத கல், மண், காற்று, நீர் முதலிய பொருள்களையும் பாடுவோரின் எண்ணக் கருத்தோடு இசைத்து இயங்கச் செய்யும் ஆற்றல் இசைக்கு உண்டு என்பதையும் தமிழர் உணர்ந்திருந்தனர்.

வரிவண்டுகளின் இசையினாற் புதல்களிலுள்ள பூங்கொத்துக்கள் கட்டு நெகிழ்ந்து மலர்வன என்னும் செய்தியைக் குறுந்தொகை அறிவிக்கும்.[77] குறிஞ்சிநில மகள் ஒருத்தி, தழைத்து நீண்ட தனது கூந்தலைக் கையாற் பெயர்த்துக் கோதிக்கொண்டு, பெரிய மலையின் பக்கத்தே குறிஞ்சிப் பண்ணைப் பாடிக்கொண்டு நிற்கின்றாள். தினைக்கதிரினைத் தின்றுகொண்டு நின்ற யானை ஒன்று அப்பாட்டைக் கேட்டதும் தான் கொண்ட தினைக்கதிரினையும் உட்கொள்ளாது, நின்ற நிலையினின்றும் அகலாது, துயில் வரப்பெறாத கண்கள் துயில் வரப்பெற்று விரைந்து தூங்கும்.[78] பாலை நில வழியே

---

77. புதலும்
வரிவண் டூத வாய்நெகிழ்ந் தனவே.
குறுந். 260 : 1—2.

78. ஒலியல் வார்மயிர் உளரினள் கொடிச்சி
பெருவரை மருங்கில் குறிஞ்சி பாடக்
குரலுங் கொள்ளாது நிலையினும் பெயராது
படாஅப் பைங்கண் பாடுபெற் றொய்யென
மறம் புகல் மழகளி றுறங்கும். அகநா. 102: 5—9.

செல்பவரை வழி மறித்து அவர் செல்வங்களைப் பறிக்கும் கள்வர் கொலைக்கஞ்சாத கொடிய மனமுடையவர். ஆனால் அவர்களுக்குப் பாலைப் பண்ணில் அதிக விருப்பம் உண்டு. இதனை அறிந்து, பாலை வழியே செல்பவர் பாலைப் பண்ணைச் சிறப்புறப் பாடுவர். வழிப்பறி கள்வர் இவ்விசையினைக் கேட்டு உள்ளம் உருகி, தம் கையிலுள்ள படைகளும் நழுவிக் கீழேவிழத் தம்முடைய கொடிய தொழிலை அறவே மறந்து, அருளுடையவர் போலக் கனிந்து நிற்பர்.[79]

இன்னிசை இயக்கிப் பேய்களை வெருட்டிக் கலைத்தனர் மக்கள். ஒரு வீரன் போர்முனையில் மார்பிற் புண்பட்டுக் கிடக்க, அப்புண்ணை உண்ணவரும் பேய்களைத் தடுக்கும் நோக்கத்துடன் காஞ்சிப் பண்ணைப்பாடி யாழையும் குழலையும் இயக்குவோமெனத் தலைவி பாடியதாகப் புறநானூற்றுப் பாட்டொன்று அமைந்துள்ளது.[80] இன்னொரு படைத் தலைவன் கரந்தைசூடிப் போருக்குச் சென்று, மார்பிற் புண்பட்டு மாண்டான். பருந்து முதலிய புள்ளினங்கள் அவனைச் சூழ்ந்துகொண்டிருந்தன. காட்டில் குறுநரிகளும் ஊளையிட்டன. அக்காட்சியைக் கண்ட வீரனின் மனையோள், சிறுவரையும் துடியரையும் பாடுதலில் வல்ல பிற மக்களையும் நோக்கித் தலைவனைப் பறவைகளினின்றும் பாதுகாக்குமாறு வேண்டி, விளரி என்னும் இரங்கற் பண்ணைப் பாடி, அங்கே வரும் நரிகளை விரட்டி ஓட்டுகின்றாள்.[81]

---

79. ஆறலை கள்வர் படைவிட வருளின்
மாறுதலை பெயர்க்கு மருவின் பாலை.
பொருந. 21—22.

80. இசைமணி யெறிந்து காஞ்சி பாடி
நெடுநகர் வரைப்பிற் கடிநறை புகைஇக்
காக்கம் வம்மோ காதலந் தோழி
வேந்துறு விழுமந் தாங்கிய
பூம்பொறிக் கழற்கா னெடுந்தகை புண்ணே.
புறநா. 281 : 5—9.

81. சிறுஅர் துடியர் பாடுவன் மகாஅர்
தூவெள் ளறுவை மாயோற் குறுகி

இசைவாணரை அரசர் முதலியோர் நன்கு ஆதரித்தனர். பாணர் பொன்னாலாகிய தாமரைப் பூவையும் விறலியர் பொற்கலன்களையும் பெற்றுச் சிறப்புடன் விளங்கினர். பொன்னாற் செய்த தாமரையைப் பாணனது கரிய மயிரிலே பொலிவு பெறச் சூட்டி, பொன்னரி மாலையை வெள்ளிதாகிய ஒளியையுடைய முத்தத்தோடே பாடினி சூட அளிப்பான் சோழன் கரிகாற் பெருவளத்தான்.[82] கூத்தருள் தலைவனானவன் பொற்றாமரையைச் சூடவும், விறலியர் அழகு பொருந்திய சிறப்பினையுடைய பேரணி கலங்களைப் பூணவும் நன்னன் சேய் நன்னன் அளிப்பான்.[83] எரியால் ஆக்கப்பட்ட தகடாகச் செய்த தாமரைப் பூவுடனே ஐதாகத் தட்டிக் கம்பியாகச் செய்த நூலின்கண்ணேயிட்டு அலங்கரித்த பொன்மாலையைப் பாண்சுற்றம் பாறிய மயிரையுடைய கரிய தலை பொலிவுபெறச் சூடுமென உறையூர் முதுகண்ணன் சாத்தனார் பாடுவர்.[84]

---

இரும்புட் பூச லோம்புமின் யானும்
விளரிக் கொட்பின் வெண்ணரி கடிகுவென்.

புறநா. 291 : 1—4.

82. எரியகைந் தன்ன வேடி ருமரை
சுரியிரும் பித்தை பொலியச் சூட்டி
நூலின் வலவா நுணங்கரின் மாலை
வாலொளி முத்தமொடு பாடினி யணிய.

பொருந. 159—162.

83. தலைவன் ருமரை மலைய விறலியர்
சீர்கெழு சிறப்பின் விளங்கிழை யணிய.

மலைபடு. 569—570.

84. அழல்புரிந்த வடர்தாமரை
ஐதடர்ந்த நூற்பெய்து
புனைவினைப் பொலிந்த பொலநறுந் தெரியல்
பாறுமயி ரிருந்தலை பொலியச் சூடிப்
பாண்முற் றுகநின் னுண்மகி ழிருக்கை.

புறநா. 29 : 1—5.

பாடலில் வல்லுநருக்கு நாடும் ஊரும் பரிசிலாகப் பலர் வழங்கினர். இவர்களுள் தலை சிறந்தவன் பாரி. பாரியை எதிர்த்துப் போர்தொடுத்த மூவேந்தரும் ஆடல் வல்லாராய்ப் பாடல் வல்லாராய்ச் சென்றால் பாரியின் பறம்பு நாட்டைப் பெறுதல் எளிது என்று கபிலர் கூறுவது இதற்குச் சான்றாகும்.[85] பாடுநர்க்கும் ஆடுநர்க்கும் வரையாது கொடுத்த கோப்பெருஞ் சோழன் இறந்தான் என்ற செய்தியைக்கேட்ட பொத்தியார், அவனுயிரைக் கொண்டுசென்ற கூற்றுவனை வைதற்பொருட்டுப் புலவரை ஒன்று கூடுமாறு அழைக்கின்றார்.[86] 'பாணர் உவப்ப அவருடைய பசியை ஆற்றியவன்' என்ற சிறப்புடையவன் நம்பி நெடுஞ்செழியன்.[87] சேரமான் வஞ்சன், பொருநனைக் கண்டதும் பேருவகைகொண்டு அன்பால் மலர்ந்த முகத்துடன் எதிரே சென்று, பொருநன் அரையில் மாசு படிந்து கிழிந்து கிடந்த ஆடையை நீக்கி, தான் உடுத்திருந்த பூந்துகிலைக் கொடுத்துப் பொருநனை உடுக்கச்செய்வான். பின்பு, அப்பொருநனிடத்திருந்த உண்கலம் நிறைய இனிய கட்டெளியை நல்கி உண்பித்து, தான் உண்ணும் கலத்தில் தனக்கென இடப்பட்டிருந்த மானிறைச்சிப் பொரியலையும் நெற்சோற்றையும் பொருநனும் பொருநனோடு சேர்ந்த சுற்றமும் இனிது

---

85. ஆடினிர் பாடினிர் செலினே
நாடுங் குன்று மொருங்கீ யும்மே.
புறநா. 109 : 17—18.

86. பாடுநர்க் கீத்த பல்புக ழன்னே
ஆடுநர்க் கீத்த பேரன் பினனே
..........................................
அனையனென்னா தத்தக் கோனை
நினையாக் கூற்ற மின்னுயி ருய்த்தன்று
பைத லொக்கற் றழீஇ யதனை
வைகம் வம்மோ வாய்மொழிப் புலவீர்.
புறநா. 221 : 1—10.

87. பாணுவப்பப் பசிதீர்த்தனன். புறநா. 239 : 17.

உண்ணுமாறு கொடுப்பான். பின்பு, தான் அணிந்திருந்த விலையுயர்ந்த மாலையையும் பிற அணிகலன்களையும் கொடுத் தருளுவன்.[88]

பாணர், பொருநர், கூத்தர், வயிரியர், கோடியர், விறலியர் எனப் பலவகை இசைவாணர் சங்ககாலத்தில் இருந்தனர். 'பாணன், பறையன், துடியன், கடம்பன் என்றிந் நான்கல்லது குடியுமில்லை' என்று புறநானூறு கூறும்.[89] இதி லிருந்து பழந்தமிழ்க்குடியினருள் தலைசிறந்து விளங்கியவர் பாண் மரபினரே என்பது புலப்படும். பாணர் என்பதற்கு இசை பாடுவோர் அல்லது பண்பாடுவோர் என்பது பொரு ளாகும். பாணரில் இசைப்பாணர், யாழ்ப்பாணர், மண்டைப் பாணர் எனப் பல பிரிவினர் இருந்தனர். அவருள் யாழ்ப்பா ணர் சிறுபாணர் பெரும்பாணர் என இருவகைப்படுவர். இவர் கள் சிறிய யாழையும் பெரிய யாழையும் உடைமையால் இப் பெயர் பெற்றனர். பத்துப்பாட்டில், சிறுபாணாற்றுப்படை சிறுபாணரை ஆற்றுப் படுத்தியதாகவும், பெரும்பாணாற்றுப் படை பெரும்பாணரை ஆற்றுப் படுத்தியதாகவும் இயற்றப் பட்டன.

---

88. விரும்பிய முகத்த னாகி யெனதரைத்
துரும்புபடு சிதாஅர் நீக்கித் தன்னரைப்
புகைவிரிந் தன்ன பொங்குதுகி லுடீஇ
அழல்கான் றன்ன வரும்பெறன் மண்டை
நிழல்காண் டேற னிறைய வாக்கி
யானுண வருள லன்றியுந் தானுண்
மண்டைய கண்ட மான்வறைக் கருனை
கொக்குகிர் நிமிர லொக்க லார
வரையுறழ் மார்பின் வையகம் விளக்கும்
விரவுமணி யொளிர்வரு மரவுற ழாரமொடு
புரையோன் மேனிப் பூந்துகிற் கலிங்க
முரைசெல வருளி யோனே. புறநா. 398 : 18—29.

89. புறநா. 335 : 7.

தமிழ் அகப்பொருள் இலக்கணத்தின்படி கற்பினுட் கூற்றிற்குரியவருள் பாணரும் அடங்குவர். பாணன் தலைமகளது ஊடலைத் தீர்க்கும் வாயில்களுள் ஒன்றுவான். வையாவிக்கோப் பெரும்பேகன் தனது மனைவி கண்ணகியைத் துறந்திருந்தபொழுது, அவனாலே துறக்கப்பட்ட கண்ணகி காரணமாக அவனைப் பாடிய பரணரும், அரிசில்கிழாரும், பெருங்குன்றூர் கிழாரும் அகத்திணை மரபின்படி தம்மைப் பாணராக வைத்துச் செய்யுள் செய்தமை[90] மேலே குறித்த உண்மையை வலியுறுத்தும். அத்தகைய பாடல்கள் ஒன்றில் "யாம் பசித்து வருவேமல்லேம்; எம்மாற் காக்கப்படும் சுற்றமும் உடையே மல்லேம்" எனப் பரணர் பாடுவர்.[91] ஏனெனில், உண்மைப் பாணராயின் இவ்விரண்டும்—பசியும் காக்கப்படும் சுற்றமும்—உடையராகவே இருப்பர். "உடும் புரித்தாற் போன்ற எலும்பெழுந்த விலாப்புடையைக் கொண்ட சுற்றத்தின் மிகுந்த பசியைத் தீர்ப்பாரைக் காணாது திரியும் பாணன்" எனக் கோவூர் கிழார் இதனைப் புலப்படுத்துவர்.[92] "உன் கையகத்தது இலக்கண முறைமை நிரம்பிய யாழ்; உன் உடம்பின் கண்ணது, கொடுப்போர் இல்லாமையாற் பசி; வேற்றிழை ஊடுபோன வேர்வையால் நனைந்த சீரையை அரையிலே அற்றம் மறைத்து உடுத்த வருத்தத்தையுடைய பாணனே!" என ஆலத்தூர் கிழார் பாணன் ஒருவனை விளிப்பதும் இதற்குச் சான்றாகும்.[93]

---

90. புறநா. 144—147.

91. பசித்தும் வாரேம் பாரமு மிலமே.
புறநா. 145 : 4.

92. உடும்புரித் தன்ன வென்பெழு மருங்கிற்
கடும்பின் கடும்பசி களையுநர்க் காணாது.
புறநா. 68 : 1—2.

93. கையது கடனிறை யாழே மெய்யது
புரவல ரின்மையிற் பசியே யரையது
வேற்றிழை நுழைந்த வேர்நனை சிதாஅர்
ஓம்பி யுடுத்த வுயவற் பாண.
புறநா. 69 : 1—4.

வேறொருவர் போல வேடம் கொள்பவர் பொருநர்.[94] பொருநர் ஏர்க்களம் பாடுவோர், போர்க்களம் பாடுவோர், பரணி பாடுவோர் எனப் பலர். அவருள் போர்க்களம் பாடும் பொருநரே சங்க நூல்களிற் பெரும்பாலும் குறிக்கப்படுவர். பத்துப்பாட்டிலொன்றாகிய பொருநராற்றுப்படை இப் பொருநனைக் கரிகாற்பெருவளத்தானிடம் ஆற்றுப்படுத்திய தாகப் பாடப்பட்டது. ஆடல் மாக்கள் கூத்தர் எனப்படுவர். பத்துப்பாட்டில் ஒன்றாகிய மலைபடுகடாம் (கூத்தராற்றுப் படை) கூத்தன் ஒருவனை நன்னன்சேய் நன்னனிடத்து ஆற்றுப்படுத்தியதாகப் பாடப்பட்டது. வயிரியரும் ஒரு வகை ஆடல்மாக்கள். பண் அமைந்த நரம்பினையுடைய தோலாற் போர்க்கப்பட்ட யாழையும் மார்ச்சனை நிறைந்த மத்தளத்தினையுமுடைய வயிரியர் என இவரைப் புறநானூறு குறிக்கும்.[95] கோடியரும் கூத்தராவர். விழாவின்கண் ஆடும் கோடியரின் வேறுபட்ட கோலம்போல, அடைவடைவே தோன்றி இயங்கி இறந்து போகின்ற இயல்பையுடையது இவ்வுலகமென உறையூர் முதுகண்ணன் சாத்தனார் பாடுவர்.[96]

## இசைக்கருவிகள்

இசையை எழுப்பும் கருவிகள் பலவகைப்படும். இக்கருவி களைப் பசிய நிறமுள்ள பைகளுக்குள்ளே போட்டு, கார்காலத் திலே பழுக்கும் பலாக்காய்க் கொத்துக்களைப் போன்று, தோளில் வைத்துச் சுமக்கும் கம்பின் இருபக்கத்திலும் பாரம்

94. நன்னூல் சூத்திரம் 208: சங்கர நமச்சிவாயர் உரை.

95. பண்ணமை நரம்பின் பச்சை நல்யாழ்
மண்ணமை முழவின் வயிரியர்.
புறநா. 164 : 11—12.

96. விழவிற்
கோடியர் நீர்மை போல முறைமுறை
ஆடுநர் கழியுமிவ் வுலகத்து.
புறநா. 29 : 22—24.

ஒத்திருக்கும்படி கட்டித்தூக்கிச் செல்வர் பாணர்.[97] இவ் விசைக்கருவிகளை நான்கு பிரிவில் அடக்கலாம். அவையாவன தோற்கருவிகள், துளைக்கருவிகள், நரம்புக்கருவிகள், மிடற்றுக் கருவிகள் என்பன. இவற்றுள் நரம்புக்கருவியாகிய யாழே சங்ககாலத்தில் சிறப்புப்பெற்று விளங்கியது.

## யாழ்.

சங்கநூல்களில் வில்யாழும், சீறியாழும், பேரியாழும் குறிக்கப்பட்டிருக்கின்றன. "குமிழினது கொம்பிடத்தே மரல் நார்க்கயிறுகிய நரம்பினை வளைத்துக்கட்டின வில்யாழ்" எனப் பெரும்பாணாற்றுப்படை கூறும்.[98] கரிய தண்டினை யுடைய சிறிய யாழ் என்றும்,[99] இசை ஏழும் தன்னிடத்தே கூடின தலைமையினையுடைய இனிய நரம்பினைக்கொண்ட சிறிய யாழ் என்றும்[100] சீறியாழ் கூறப்படும். பெரிய இசை யினையுடைய பேரியாழ் எனவும்,[101] தனக்குரிய இலக்கணங் களை முற்றுகக்கொண்ட பேரியாழ்[102] எனவும் பேரியாழ் கூறப்படும்.

யாழின் உருவ அமைப்பினைப்பற்றிப் பத்துப்பாட்டில் நான்கு பாடல்கள் விரிவாக விளக்குகின்றன. அவற்றைக் கொண்டு யாழின் உறுப்புக்களைப்பற்றி அறிந்துகொள்ள

---

97. கார்கோட் பலவின் காய்த்துணர் கடுப்ப
நேர்சீர் சுருக்கிக் காய கலப்பையிர்.
மலைபடு. 12—13.

98. குமிழின்
புழற்கோட்டுத் தொடுத்த மரற்புரி நரம்பின்
வில்யாழ். பெரும்பாண். 180—182.

99. கருங்கோட்டுச் சீறியாழ். நெடுநல். 70.

100. ஏழ்புணர் சிறப்பி னின்றொடைச் சீறியாழ்.
மதுரை. 559.

101. வள்ளுயிர்ப் பேரியாழ். மலைபடு. 37.

102. இடனுடைப் பேரியாழ். பெரும்பாண். 462.

லாம். பொருநராற்றுப்படை யாழினைப் பின்வருமாறு சித்திரிக்கும் :—"பாடினியின் கையிலுள்ளது பாலை யாழ். அது மானின் குளம்பு அழுத்திய இடம்போல இரண்டு புறமும் தாழ்ந்து நடுவுயர்ந்த பத்தலினை உடையது. இளைய சூலையுடைய சிவந்த நிறம் பொருந்திய பெண்ணின் வயிற்றி லுள்ள ஐதாகிய மயிர் ஒழுங்குபோல, இருபுறமும் சேர்த்துக் கட்டப்பெற்ற தோற் போர்வையை உடையது. முழை யிலே வாழும் நண்டினது கண்போன்ற துளைகளின் வாயை மறைத்தற்குரிய ஆணிகளை உடையது. எட்டாம் நாட்டிங் களின் வடிவுகொண்ட வறுவாயினை உடையது. அந்த யாழின் கரிய மருப்பு (தண்டு) தலையெடுத்த பாம்பினைப் போன்றது. அத்தண்டில் ஒன்றோடொன்று இறுகக் கட்டப் பட்டு அமைந்த திவவுகள் (வார்க்கட்டுக்கள்) கரிய நிறத்தை யுடைய ஒரு பெண்ணின் முன்கையில் அணியப்பட்ட தொடிகளை ஒக்கும். அழகிய தினையின் குத்தலரிசியை யொத்த விரலாலசைக்கும், குற்றம் நீங்கிய நரம்புகளை யுடைய அவ்யாழ் அழகில் மணமகளை ஒக்கும்."[103]

---

103. குளப்புவழி யன்ன கவடுபடு பத்தல்
விளக்கழ லுருவின் விசியுறு பச்சை
மெய்யா விளஞ்சூற் செய்யோ ளவ்வயிற்
றைதுமயி ரொழுகிய தோற்றம் போலப்
பொல்லம் பொத்திய பொதியுறு போர்வை
யளைவா ழலவன் கண்கண் டன்ன
துளைவாய் தூர்ந்த துரப்பமை யாணி
யெண்ணாட் டிங்கள் வடிவிற் றாகி
யண்ணா வில்லா வமைவரு வறுவாய்ப்
பாம்பணந் தன்ன வோங்கிரு மருப்பின்
மாயோண் முன்கை யாய்தொடி கடுக்குங்
கண்கூ டிருக்கைத் திண்பிணித் திவவி
னாய்தினை யரிசி யவைய லன்ன
வேய்வை போகிய விரலுளர் நரம்பிற்
கேள்வி போகிய நீள்விசித் தொடையன்

இங்கு கண்ட யாழின் உறுப்புக்கள் பின்வருமாறு:— பத்தல், தோற்போர்வை, ஆணி, வறுவாய், மருப்பு, திவவு, நரம்பு.

சிறுபாணாற்றுப்படையிலுள்ள யாழ் வருணனை பின் வருமாறு:—"பசிய கண்களையுடைய கரிய குரங்கு பாம்பின் தலையைப் பிடித்த காலத்து அப்பாம்பு ஒருகால் இறுகவும் ஒருகால் நெகிழவும் அதன் கையைச் சுற்றுமாறு போல, யாழின் கரிய தண்டிடத்தே செறியச் சுற்றியுள்ள திவவு நெகிழ வேண்டுமிடத்து நெகிழவும் இறுகவேண்டுமிடத்து இறுகவுங் கூடிய முறையில் அமைந்துள்ளது. இரு விளிம்புகளையும் சேரத் தைத்துள்ளன ஆணிகள். அவ் யாழ், ஒழுங்குபட்ட தொழில்வகை யமைந்த அகளத்தினை (பத்தரினை) உடையது. துவருட்டின கைத்தொழிலாற் பொலிவுபெற்ற போர்வை, காட்டிலுள்ள குமிழம் பழத்தின் நிறத்தை உடையது. தேனொழுகும் தன்மை பொருந்தி முறுக்கடங்கின இனிய நரம்புகளை உடையது அவ்யாழ்."[104]

இங்கு திவவு, ஆணி, அகளம் (பத்தர்), பச்சைப் போர்வை, நரம்பு ஆகிய உறுப்புக்கள் கூறப்பட்டுள்ளன.

பெரும்பாணாற்றுப்படை யாழினைப் பின்வருமாறு சித்திரிக்கும்: "இவ்யாழ், பசிய இலைகளை உதிர்த்த தாளினை

---

மணங்கமழ் மாதரை மண்ணி யன்ன
வணங்குமெய்ந் நின்ற வமைவரு காட்சி.

பொருந. 4—20:

104. பைங்க ணூகம் பாம்புபிடித் தன்ன
வங்கோட்டுச் செறிந்த வவிழ்ந்துவீங்கு திவவின்
மணிநிரைத் தன்ன வனப்பின் வாயமைத்து
வயிறுசேர் பொழுகிய வகையமை யகளத்துக்
கானக் குமிழின் கனிநிறங் கடுப்பப்
புகழ்வினைப் பொலிந்த பச்சையொடு தேம்பெய்
தமிழ்துபொதிந் திலிற்று மடங்குபுரி நரம்பிற்
பாடுதுறை முற்றிய பயன்றெரி கேள்விக்
கூடுகொ ளின்னியம். சிறுபாண். 221—229.

யுடைய பாதிரிப்பூவின் உள்ளிடத்தையொக்கும் தோற் போர்வையை உடையது. நன்றாக இறுக்கிக் கட்டப்பட்ட இப்போர்வை உருக்கு ஒன்றாக வார்த்தாற்போன்ற தோல் களின் வேறுபாடு தோன்றாமல் அமைந்துள்ளது. சுனை வற்றி உள் இருண்டாலொத்த இருள் செறிந்த வறுவாயினை உடையது. முதற்பிறை பிறந்து ஏந்தியிருந்தாற்போன்ற ஏந்திய கவைக்கடையினை உடையது. நெகிழவேண்டிய இடத்து நெகிழ்ந்து இறுக வேண்டிய இடத்து இறுகும் திவவு, நெடிய மூங்கிலையொத்த திரண்ட தோளினையுடைய பெண்ணின் முன்கையிலுள்ள குறிய தொடியை ஒக்கும். யாழின் மருப்பு நீலமணி ஒழுகினாற் போன்ற கருமை நிறமுடையது. முறுக்கடங்கின நரம்பின் கட்டு அமைந்த யாழ் அது.''[105]

இங்கு குறித்த யாழின் கூறுகள் போர்வை, வறுவாய், கவைக்கடை, திவவு, மருப்பு, நரம்பு என்பன.

மலைபடுகடாத்திற் கூறப்படும் பேரியாழ் பின்வருமாறு:—
''பெரிதும் சிறிதுமாகவுள்ள திவவுகள் ஒன்பது உள்ளன. வார்த்து முறுக்கிக்கட்டின நரம்புகள் சிறிதும் கொடுமுறுக்கு இன்றி ஓசையை ஓர்ந்து இனிமையாக அமைக்கப்பட்டவை. நேர்மையான அழகிய வரகின் கதிரில் வரகுகள் வரிசையாக

---

105. பாசிலை யொழித்த பராஅரைப் பாதிரி
வள்ளிதழ் மாமலர் வயிற்றிடை வகுத்தத
னுள்ளகம் புரையு மூட்டுறு பச்சைப்
பரியரைக் கமுகின் பாளையம் பசும்பூக்
கருவிருந் தன்ன கண்கூடு செறிதுளை
யுருக்கி யன்ன பொருத்துறு போர்வைச்
சுனைவறந் தன்ன பின்னேந்து கவைக்கடை
நெடும்பணைத் திரடோள் மடந்தை முன்கைக்
குறுந்தொடி யேய்க்கு மெலிந்துவீங்கு திவவின்
மணிவார்ந் தன்ன மாயிரு மருப்பிற்
பொன்வார்ந் தன்னபுரியமடங்கு நரம்பின்
றொடையமை கேள்வி. பெரும்பாண். 4—16.

ஒழுங்குபட்டு அமைந்திருப்பதுபோல யாழின் நீளத்தில் நெருங்கிய வரிசையாகச் சிறிய துளைகளை அமைத்து, அவற்றில் சுள்ளாணிகள் இறுகத் தைக்கப்பட்டுள்ளன. யாழின் பத்தலின் குறுக்கே யானைக் கொம்பினாற் புதிதாகச் செய்யப்பட்ட யாப்பு செருகப்பட்டுள்ளது. அப்பத்தல் பிசினோடு கூட்டி இணைத்த பொன்னிறமானதோற் போர்வையாற் போர்க்கப்பட்டுள்ளது. அழகிய பெண்ணின் அடிவயிற்றிலிருந்து மேனோக்கி வளர்ந்து படிந்த மயிரின் ஒழுங்கு எவ்வாறு அமைந்திருக்குமோ, அவ்வாறே யாழைப் போர்த்துள்ள தோலினை இணைத்துத் தைத்த தையலின் ஒழுங்கு அமைந்துள்ளது. யாழின் உந்தியிலுள்ள தையலின் ஒழுங்கு பெண்ணின் உந்தியின் மேலெழுந்த மயிரின் ஒழுங்குக்கு உவமையாகும். அரத்தினால் நுண்ணிதாக அராவி அமைக்கப்பெற்ற யாழின் மருப்பு வளைந்து நிமிர்ந்து களாம் பழத்தின் நிறம்போலக் கருமையாக உள்ளது.[106]

---

106. தொடித்திரி வன்ன தொண்டுபடு திவவிற்
கடிப்பகை யனைத்துங் கேள்வி போகாக்
குரலோர்த்துத் தொடுத்த சுகிர்புரி நரம்பி
னரலை தீர வுரீஇ வரகின்
குரல்வார்ந் தன்ன நுண்டுளை யிரீஇச்
சிலம்பமை பத்தல் பசையொடு சேர்த்தி
யிலங்குதுளை செறிய வாணி முடுக்கிப்
புதுவது புனைந்த வெண்கை யாப்பமைத்துப்
புதுவது போர்த்த பொன்போற் பச்சை
வதுவை நாறும் வண்டுகம ழைம்பான்
மடந்தை மாண்ட நுடங்கெழி லாகத்
தடங்குமயி ரொழுகிய வவ்வாய் கடுப்ப
வகடுசேர்பு பொருந்தி யளவினிற் றிரியாது
கவடுபடக் கவைஇய சென்றுவாங் குந்தி
நுணங்கர நுவறிய நுண்ணீர் மாமைக்
களங்கனி யன்ன கதழ்ந்துகிள ருருவின்
வணர்ந்தேந்து மருப்பின் வள்ளுயிர்ப் பேரியாழ்.
மலைபடு. 21—37.

இப்பாட்டிற் கூறப்பட்ட உறுப்புக்கள் திவவு, நரம்பு, ஆணி, யாப்பு, பச்சைப் போர்வை, உந்தி, மருப்பு என்பன.

மேலே காட்டிய நான்கு நூற்பகுதிகளிலும் குறிக்கப் பட்ட யாழ் உறுப்புக்களைப் பின்வருமாறு வகுத்துக் கூற லாம் :—

**பத்தர் :** யாழின் அடி உறுப்பு. சிறுபாணாற்றுப்படை யில் அகளம் என்று குறிக்கப்படும் உறுப்பும் இதுவே. மான் குளம்பு அழுந்திய இடம் நடுவு உயர்ந்து இருபுறமும் தாழ்ந் திருக்கும் தோற்றம் போலப் பத்தரின் கீழ்ப்புறம் அமைந் திருக்கும்.

**வறுவாய் :** ஓசை சிறப்பதற்காகப் பத்தரின் ஒரு பாதி வறுவாயாக்கப்படும். இது இருள்தூங்கு வறுவாய் எனப் படும். மேலும், இவ்வறுவாய் எண்ணாட்டிங்கள் வடிவிற்றாய் இருக்கும்.

**பச்சைப் போர்வை :** வறுவாயை மூடியிருப்பது பச்சைப் போர்வை. யாழின் இருதலையையும் சேர்த்துப் பொத்துதல் போர்வைத் தோலின் ஒரு பகுதியில் அமையும். வறுவாயை மூடும் பாதியே அப்பகுதியாகும். இவ்வாறு பொல்லம் பொத்திய போர்வையின் தோற்றம், பெண்ணின் மார் பிடத்தை அணுகிப் பின்பு இல்லையான மயிர் ஒழுங்குபட்டுக் கிடக்கும் அழகிய வயிற்றிடத்தின் தோற்றம் போன்றது. போர்வைக்குரிய தோலாகிய பச்சை துவரூட்டப்பெற்று அழகிய சிறந்த தோற்றத்தை உடையது.

**ஆணி :** போர்வைத் தோலைப் பத்தரோடு பொருத் துவது. இவ்வாணிகளின் தலை, நண்டின் கண்ணைப் போலப் புறப்பட்டுத் தோன்றும். நேர்மையான அழகிய வரகின் கதிரில் வரகுகள் வரிசையாக ஒழுங்குபட்டு அமைந்திருப்பது போல, யாழின் நீளத்தில் நெருங்கிய வரிசையாகச் சிறிய துளைகளை அமைத்து, அவற்றிற் சுள்ளாணிகளை இறுகத் தைப்பர்.

**யாப்பு:** பத்தரினுள்ளே, சிறுவிரற் பருமனாக, நீளமாகச் செறிக்கப்படும் உறுப்பு. இது யானைத் தந்தத்தினாற் செய்யப்படுமென மலைபடுகடாம் கூறும். நரம்பு தொடுப்பதற்கும் நரம்பின் அசைவினைப் பத்தரிலே தாக்கி ஒலியைப் பெருக்குவதற்கும் இது பயன்படும்.

**உந்தி:** போர்வைத் தோலுக்கும் யாப்புக்குமிடையே அமைந்த ஓர் உறுப்பு. இது உயர்ந்து வளைந்து, பொல்லம் பொத்தலின் கீழே போர்வைத் தோலினைத் தாங்கி நிற்குமென மலைபடுகடாத்திலிருந்து அறியலாம். இதன் ஒரு பகுதி பகுக்கப்பட்டிருக்குமெனவும் அந்நூல் கூறும். யாப்பிற் கட்டிய நரம்புகள் இதனூடாகச் சென்றமையால் இவ்வாறு பகுக்கப்பட்டிருந்தது.

**மருப்பு:** யாழின் கோடு. பாம்பு படம் எடுத்தாற் போன்று தலை தூக்கி நிற்கும் உருவத்தை உடையது. அரத்தினால் நுண்ணிதாக அராவி அமைக்கப்பெற்ற இவ்வுறுப்பு களாம்பழத்தின் நிறம்போலவும் நீலமணி போலவும் கருமையை உடையது.

**திவவு:** வார்க்கட்டுக்கள். இவை நரம்புகளை மருப்போடு சேர்த்துக் கட்டுவதற்கு உதவுவன. இவை நரம்புகளை வலித்தல், மெலித்தல் செய்தற்கும் பயன்பட்டன. கரிய நிறத்தையுடைய மருப்பிற் கட்டபட்ட திவவு, கரிய மகளிரின் கையில் விளங்கும் வளையல் போலவும், கருங் குரங்கின் கையினைச் சுற்றிய பாம்பு போலவும் இருக்கும்.

**நரம்பு:** வெண்சிறுகடுகளவும் குற்றமின்றிக் கொடுமுறுக் கில்லாது அமைவுறத் திரித்துச் செய்யப்பட்டது; இசை இனிமை பொருந்தியது. இத்தகைய நரம்புகள் ஒன்பதினைக் கொண்ட பேரியாழைப்பற்றி மலைபடுகடாம் பாடும்.

**கவைக்கடை:** பெரும்பாணாற்றுப்படையிற் கூறப்படும் இவ்வுறுப்புப் பேரியாழை நிறுத்துவதற்கு ஏற்றதாய் அதன் பின்னே அமைக்கப்படுவது.

## பறை

ஆடலிலும் போரிலும் இசை விழாக்களிலும் பறைக்கருவி சிறந்த இடம் பெற்றிருந்தது. பறையின் சீர்க்கு ஏற்ப மக்கள் ஆடினரென முன்பு கூறினோம். பலவகைப் பறைகளைச் சங்க நூல்கள் குறிப்பிடுகின்றன. அவை யாவும் பெரும் பறை, சிறு பறை என்ற இரு பிரிவில் அடங்கும். பெரும் பறைகள் முழவு எனவும் முரசு எனவும் வழங்கும். இவ்விரண்டில் முழவு சிறப்பாக விழாக்காலங்களிலேயே முழங்கியது. முரசம் போர்ப் பறையாக வழங்கியது.

### முழவு :

விழாக்கொண்டாடும் அகன்ற தெருவில் முழவு இமிழ்வதை மதுரைக்காஞ்சி குறிக்கும்.[107] நன்னனுடைய அகன்ற இடத்தையுடைய மலை, பல நிறம் பொருந்திய மாலைகளையுடைய மகளிரின் ஆடலுக்கு ஏற்ப ஓயாது முழங்கும் முழவின் ஓசை சிறக்கும் விழாமலிந்த நாளை ஒத்திருக்கும்.[108] சில இடங்களில் முழவின் ஓசைக்கேற்ப யாழில் இசை எழுப்புவர்.[109] முழவு வாரினால் வரிந்து கட்டப்பட்டிருக்கும். "பண்கள் அமைத்துத் திண்ணிய வாராலே இறுகக் கட்டப்பட்ட முழவு" என மலைபடுகடாமும்,[110] "வாரினால் வலித்துக்

---

107. முழவிமிழு மகலாங்கண்
விழவுநின்ற வியன்மறுகு. மதுரை. 327—328.

108. குரூஉக்கட் பிணையற் கோதை மகளிர்
முழவுத்துயி லறியா வியலு ளாங்கண்
விழவி னற்றவன் வியன்கண் வெற்பே.
மலைபடு. 349—351.

109. குரல்புணர் நல்யாழ் முழவோ டொன்றி.
மதுரை. 605.

110. பண்ணமைத்துத்
திண்வார் விசித்த முழவொடு.
மலைபடு. 2—3.

கட்டுதலைப் பொருந்திய மார்ச்சனைசெறிந்த முழவு'' எனப் புறநானூறும் கூறும்.[111] ஓசை அமைதிக்காக முழவின் பக்கங் களிற் பூசப்பெறும் பசை மண் எனப்படும்.[112]

புலவர் ஆடவரின் தோள்களுக்கு முழவினை உவமையாகக் கொள்வர். "முழவு போலும் தோளினை உடையவர்'' என மதுரைக்காஞ்சியும்,[113] "முழாப்போலும் தோளினையுடைய தலைவன்'' எனப் புறநானூறும்[114] கூறும். பரிசிலர் முழாக் களைச் சுமந்து செல்வதுமுண்டு.[115] முழவு மன்றின்கண் தூங்கும்.[116] இதனை மணவீட்டுப் பறையாகவும் வழங் கினர்.[117] முழவு உருவத்திற் பலாப்பழம் போலிருக்குமெனப் புறநானூற்றிலிருந்து அறியலாம்.[118] பனைமரத்தின் அடிக்கு முழவு உவமிக்கப்படும். "முழவினைப் போன்ற அடிமரத்தினை யுடைய வளைந்த பனை'' எனக் குறுந்தொகை கூறும்.[119] "முழாப்போன்ற அடியினையுடைய பனை" எனப் புறநானூறு இதனைக் குறிக்கும்.''[120]

---

111. விசிபிணிக் கொண்ட மண்கனை முழவு.
புறநா. 15 : 23.
112. மண்ணமை முழவு. பொருந. 109.
113. முழவுத்தோள். மதுரை. 99.
114. முழவுத்தோ ளென்னை. புறநா. 88 : 6.
115. இரவலர் நாற்றிய விசிகூடு முழவின்.
புறநா. 128 : 2.
116. பொதுவிற் றூங்கும் விசியுறு தண்ணுமை.
புறநா. 89 : 7.
117. ஈர்ந்தண் முழவின் பாணி தூங்க.
புறநா. 194 : 2.
118. கலையுணக் கிழிந்த முழவுமருள் பெரும்பழம்.
புறநா. 236 : 1.
119. முழவுமுத லரைய தடவுநிலைப் பெண்ணை.
குறுந். 301 : 1.
120. முழாவரைப் போந்தை. புறநா. 375 : 4.

முரசம் :

இஃது உருவத்தாற் பெரியது. கொல்லும் தொழிலே யுடைய ஏற்றின் பசிய தோலே மயிர் சீவாமற் போர்ப்பர்.[121] "வாரால் விசிக்கப்பட்டுத் தொழில் மாட்சிமை பொருந்தி மயிர்சீவாது போர்க்கப்பட்ட கண்ணேயுடைய முரசம்" எனப் புறநானூறு கூறும்.[122] இந்திர விற்போலும் மாலையை முரசத்திற்கு அணிவர்.[123] முரசின் முழக்கம் இடி முழக்கத் திற்கும்,[124] கடலொலிக்கும்,[125] அருவி ஒலிக்கும் உவமிக்கப் படும்.[126]

முரசம் கறங்க வீரர் களத்திற் புகுந்து போர்புரிவர்.[127] அரசர் பகைவரை வென்றதன் அறிகுறியாக முரசத்தை

---

121. கொல்லேற்றுப் பைந்தோல் சீவாது போர்த்த
மாக்கண் முரசம். மதுரை. 732—733.

122. விசித்துவினே மாண்ட மயிர்க்கண் முரசம்.
புறநா. 63 : 7.

123. சிலேத்தார் முரசம். புறநா. 36 : 12.

124. முரசதிர்ந் தன்ன வின்குர லேற்றொடு.
குறிஞ்சி. 49.
படுமழை யுருமி னிரங்கு முரசு. புறநா. 350 : 4.

125. புணரி
குணில்வாய் முரசி னிரங்கும். குறுந். 328 : 2—3.

126. அருவி முழவின். நற். 176 : 9.
அருவி
தண்ணென் முரசி னிமிழிசை காட்டும்.
குறுந். 365 : 3—4.

127. இன்னிசை முரச மிடைப்புலத் தொழியப்
பன்மா ரேட்டிப் பெயர்புறம் பெற்று.
மதுரை. 349—350.

அறைவர்.[128] வெற்றிக் களிப்புத் தோன்ற முரசம் முழங்கும் பாசறையை முல்லைப் பாட்டுக் குறிக்கும்.[129] பகைவரின் முரசைக் கொள்வது கொற்றத்தின் அறிகுறியாகும். பாண்டிய மன்னனாகிய தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பகைவர் நாட்டை அழித்து, அப்பகைவரின் தலைவரைக் கொன்று, முரசங்களையும் கைப்பற்றினான்.[130]

அரசகோட்டங்களில் முரசம் வைக்கப் பெறுவதற்கு எண்ணெயினது நுரையை முகந்தாற் போன்ற மெல்லிய பூவையுடைய கட்டில்கள் இருந்தன.[131] வீர முரசத்தை நீராட்டும் வழக்கும் அக்காலத்தில் இருந்தது. இவ்வழக்கத்தினைப் புறநானூறு பின் வருமாறு சித்திரிக்கும் :—குற்றந் தீர வலித்துப் பிணித்து வாரப்பட்ட வாரை உடையது முழவு. அதன் பக்கம் கருமரத்தாற் செய்யப்பட்டு இருட்சி பொருந்தி இருக்கின்றது. மயிலினது நெடிய பீலியால் தொடுக்கப்பட்ட, நீல மணிபோலும் நிறத்தையுடைய மாலையும் பொற்றளிரையுடைய உழிஞையும் சூடப்பெற்று, குருதிப்பலிகொள்ளும் விருப்பத்தையுடைய அச்சம் பொருந்திய இவ்வீர முரசம் நீராடிவரும்.''[132] நீராட்டப்

---

128. வேந்தர்
வென்றெறி முரசி னன்பல முழங்கி.
குறுந். 380 : 1—2.

129. அரசிருந்து பனிக்கு முரசுமுழங்கு பாசறை.
முல்லை. 79.

130. அரசுபட வமருழக்கி
முரசுகொண்டு களம்வேட்ட. மதுரை. 128—129.

அரைசுபட வமருழக்கி
உரைசெல முரசுவெளவி. புறநா. 26 : 6—7.

131. எண்ணெய்
நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை.
புறநா. 50 : 6—7.

132. மாசற விசித்த வார்புறு வள்பின்
மைபடு மருங்குல் பொலிய மஞ்ஞை
ஒலிநெடும் பீலி யொண்பொறி மணித்தார்

பெற்ற முரசத்தைப். பதிற்றுப்பத்துக் குறிக்கும்.[133] இம் முரசத்தின் பக்கங்கள் பேயின் கண்கள் போன்றவை; முழக்கம் பாசறையை கலங்கச்செய்யும் தன்மை யுடையது.[134] மக்களைத் துயில் எழுப்புவதற்கும் முரசம் பயன்பட்டது. "ஒலிக்கின்ற கண்ணையுடைய பள்ளி யெழுச்சி முரசம் நாட்காலத்தே இயம்ப" என்றும்,[135] "ஒலிக் கின்ற பள்ளியெழுச்சி முரசு ஒலிப்ப" என்றும்[136] மதுரைக் காஞ்சி கூறுவது இதற்குச் சான்றாகும். முரசம் காலையில் இயம்புதலைப் புறநானூறும் ஐங்குறுநூறும் கூறும்.[137]

**பதலை:**

ஒருகண் மாக்கிணை என்னும் பறை. புறநானூறு 152ம் பாடலில் பாணன் விறலியைப் பார்த்துப் பின்வருமாறு கூறுகின்றான் :—" பதலையின் ஒரு முகத்தை மெல்லெனக் கொட்டுமின்."[138] மாத்திரையைச் சொல்லும் தாளத்தை

---

பொலங்குழை யுழிஞையொடு பொலியச் சூட்டிக்
குருதி வேட்கை யுருகெழு முரசம்
மண்ணி வாரா வளவை. புறநா. 50 : 1—6.

133. மண்ணுறு முரசம். பதிற். 19 : 7.

134. பேய்க்க ணன்ன பிளிறுகடி முரச
மாக்க ணகலறை யதிர்வன முழங்க.
பட். 236—237.

135. படுகண் முரசங் காலை யியம்ப. மதுரை. 232.

136. இமிழ்முர சிரங்க. மதுரை. 672.

137. நாண்முர சிரங்கு மிடனுடை வரைப்பு.
புறநா. 161 : 29.

தழங்குரன் முரசங் காலை யியம்ப. ஐங். 448 : 1.

138. பதலை யொருகண் பையென வியக்குமின்.
புறநா. 152 : 17.

யுடைய பதலையென மலைபடுகடாம் கூறும்.[139] பதலையை இயக்கும் தாளத்தையுடைய பாணரைப்பற்றிக் குறுந் தொகை கூறும்.[140]

**தொண்டகம் :**

குறிஞ்சி நிலத்திற்குரிய சிறிய பறை. இது தொண்டகப் பறையெனவும் வழங்கும். இரவில் விலங்குகள் அணுகா திருத்தற் பொருட்டு இதனை முழக்குவர். சிறிய தினை விளைந்த அகன்ற இடத்தையுடைய புனத்தில் இராக்காலத்தில் காவலாளர் தூங்காமையினால் தொண்டகப்பறை ஒலிக்கு மெனக் குறுந்தொகை கூறுவது இதற்குச் சான்றாகும்.[141] குறவர், மலையின் பெரும்பாறையின் உச்சியிலே மனச்செருக் கோடு ஏறித் தமது கையிலுள்ள சிறிய தொண்டகப் பறையை ஒலிப்பிக்கும் ஓசையானது பக்கத்திலுள்ள பசிய அடித் தண்டினையுடைய செவ்விய தினைக்கதிரைக் கொய்ய வந்திறங்கும் கிளிகளை அச்சுறுத்தி ஓட்டா நிற்கும்.[142] ஒலிக்கும் அருவிகள் விளங்கும் மலைச்சாரற் கண்ணே தேன் கமழும் கொத்துக்களையுடைய வேங்கைப் பூக்களைச் சூடி, தொண்டகப் பறையின் தாளத்திற்கிசைய ஆடவர் பெண்டி ரொடு கலந்து தெருக்களில் ஆடுவர்.[143]

---

139. நொடிதரு பாணிய பதலை. மலைபடு. 11.
140. பதலைப் பாணிப் பரிசிலர். குறுந். 59 : 1.
141. சாரற்
சிறுதினை விளைந்த வியன்க ணிரும்புனத்
திரவரி வாரிற் றொண்டகச் சிறுபறை
பானாள் யாமத்துங் கறங்கும்
யாமங் காவல ரவியா மாறே. குறுந். 375 : 2—6.
142. குறக்குறு மாக்கள் புகற்சியின் எறிந்த
தொண்டகச் சிறுபறைப் பாணி அயலது
பைந்தாள் செந்தினைப் படுகிளி ஓப்பும்.
நற். 104 : 4—6.
143. கலங்குவெள் ளருவி பிறங்குமலைக் கவாஅன்
தேன்கம ழிணர வேங்கை சூடித்
தொண்டகப் பறைச்சீர் பெண்டிரொடு விரைஇ
மறுகிற் றூங்கும். அகநா. 118 : 1—4.

**ஆகுளி :**

மதுரைக்காஞ்சி, மலைபடுகடாம், புறநானூறு முதலிய நூல்களிற் கூறப்படும் சிறு பறையாகும்.[144] மெல்லிதான ஓசையையுடைய இச்சிறு பறை பெரும்பறைகளோடு ஆட்டல் அமைதிக்கேற்ப ஒலிக்கப்படும். பேராந்தைப் பேடும் சேவலும் மாறி மாறிக் கூப்பிடும் ஓசை விரல் தீண்டும் சிறு பறையின் ஓசையை ஒக்கும்.[145]

**தட்டை :**

மகளிர் தினைப்புனத்திற் கிளி முதலியவற்றைக் கடிவதற் குரிய பறை. "மூங்கிலைக் கண்ணுக்குக் கண் உள்ளாக நறுக்கிப் பலவாகப் பிளந்து ஓசையுண்டாக ஒன்றிலே தட்டுவ தோர் கருவி" என்றும்,[146] தட்டப் படுதலிற் றட்டை யென்னும் பெயர் உண்டாயிற்று என்றும்,[147] நச்சினார்க் கினியர் கூறுவர். தட்டைப் பறையின் ஒலி, பிளந்த வாயை யுடைய தேரைகளின் ஒலியை ஒக்குமெனக் குறுந்தொகை கூறும்.[148] மூங்கிற் கண்களுக்கு நடுவே நின்றொலித்து அரித் தெழும் ஓசையையுடைய தட்டையைப்பற்றி மலைபடுகடாம் கூறும்.[149] இதனைக் கரடிகையெனவும் நச்சினார்க்கினியர்

---

144. மதுரை. 606 ; மலைபடு. 3 ; புறநா. 371 : 18.

145. முழவோ டொன்றி
நுண்ணீ ராகுளி யிரட்ட. மதுரை. 605—606.
ஆகுளி கடுப்பு
குடிஞை யிரட்டு நெடுமலை யடுக்கத்து.
மலைபடு. 140—141.

146. குறிஞ்சிப்பாட்டு. 43, நச்சினார்க்கினியர் உரை.

147. மதுரை காஞ்சி. 305, நச்சினார்க்கினியர் உரை.

148. பகுவாய்த் தேரை
தட்டைப் பறையிற் கறங்கு நாடன்.
குறுந். 193 ; 2—3.

149. நடுவுநின் றிசைக்கு மரிக்குரற் றட்டை.
மலைபடு. 9.

கொள்வர்.[150] கரடியின் கனைப்பை ஒத்திருந்தமையால் இப் பெயர் பெற்றது போலும்.

**எல்லரி:**

மலைபடுகடாம் குறிப்பிடும் சிறுபறையொன்று. விளக்கம் பொருந்திய தாளத்தைக் கைக்கொண்டு ஒலிக்கும் வலிய வாயையுடையது எல்லரி.[151] இதனை நச்சினார்க்கினியர் சல்லி யென அழைப்பர்.[152] சல்லென்ற ஓசை உடைத்தாதலால் இப்பெயர் பெற்றிருக்கக்கூடும்.

**தடாரி :**

கிணைப்பறை. அரித்தெழும் ஓசையையுடைய தடாரிப் பறை என்றும்,[153] யாமை போன்ற முகத்தையுடைய தடாரி என்றும்,[154] முழுமதி போன்ற வடிவினதாகிய அரித்த ஓசையையுடைய தடாரி என்றும்[155] புறநானூறு கூறும். பாம்பினது பொறியை ஒப்பக் கையினது வடுப்பட்டுக் கிடந்த கண்ணகன்ற தடாரி என முடத்தாமக்கண்ணியார் பாடுவர்.[156]

**குழல்**

சங்க கால இசைக்கருவிகளில் ஒன்று. தாளவறுதியை யுடைய குழலோசையின் தாளத்திற்கேற்ப மகளிர்

---

150. மலைபடு. 9, நச்சினார்க்கினியர் உரை.

151. கடிகவர் பொலிக்கும் வல்வா யெல்லரி.
மலைபடு. 10.

152. மலைபடு. 10, நச்சினார்க்கினியர் உரை.

153. அரிக்குரற் றடாரி. புறநா. 390 : 8.

154. அரிக்குரற் றடாரியின் யாமை மிளிர.
புறநா. 249 : 4.

155. மதியத் தன்னவென் னரிக்குரற் றடாரி.
புறநா. 398 : 12.

156. பைத்த பாம்பின் றுத்தி யேய்ப்பக்
கைக்கச டிருந்தவென் கண்ணகன் றடாரி.
பொருந. 69—70.

ஆடுவர்.[157] பாட்டைச் சுருதி குன்றுமற் கைக்கொண்டு நிற்கும் தன்மை வாய்ந்தது குழல்.[158] வங்கா என்னும் பறவையின் பேடை ஆண் பறவையைக் காணுது ஒலித்தல் குழலின் இசையைப் போன்றது.[159] பெண்களின் அழுங்க குழல் இரங்கி ஒலிப்பதுபோல் இருக்கும்.[160] சில பண்களுக் கென்றே சில குழல்கள் அமைந்தன. இடையர் ஆம்பற் பண்ணைக் குழலிலே ஊதுவர்.[161] ஆம்பற்பண்ணையுடைய இனிய புல்லாங்குழல் நற்றிணையிலும் ஐங்குறுநூற்றிலும் கூறப்படும்.[162] குழலால் எழுப்பிய பாலைப் பண்ணைப் பெரும் பாணுற்றுப்படை குறிப்பிடும்.[163] தீக்கடை கோலால் அழகிய நுண்ணியதாய் விளங்கும் புகை முற்படப் பிடிக்கும்படி கையாலே கடைந்துகொண்ட, சிவந்த நெருப்பினையுடைய கடைக்கொள்ளியால் துளையிட்ட, கரிய துளையினையுடைய குழல் என அந்நூல் இதனைச் சித்திரிக் கும்.[164]

---

157. அறற்குழற் பாணி தூங்கி யவரொடு.
சிறுபாண். 162.

158. விளிப்பது கவருந் தீங்குழல். மலைபடு. 8.

159. வங்காக் கடந்த செங்காற் பேடை
எழாலுற வீழ்ந்தெனக் கணவற் காணுது
குழலிசைக் குரல். குறுந். 151 : 1—3.

160. குழலினை வதுபோ லழுதனள் பெரிதே.
புறநா. 143 : 15.

161. கோவல
ராம்பலந் தீங்குழற் றெள்விளி பயிற்ற.
குறிஞ்சி. 221—222.

162. ஆம்பலங் குழல். நற். 113 : 11.
தீங்குழ லாம்பல். ஐங். 215 : 4.

163. குழலி
னின்றீம் பாலை. பெரும்பாண். 179—180.

164. அந்நு ணவிர்புகை கமழக் கைம்முயன்று
ஞெலிகோற் கொண்ட பெருவிறன் ஞெகிழிச்
செந்தீத் தோட்ட கருந்துளைக் குழலி
னின்றீம் பாலை. பெரும்பாண். 177—180.

### வயிர்

இது ஊதுகொம்பு என்று இக்காலத்து வழங்கும் இசைக் கருவி. போர்க்காலத்திலே இக்கருவியைச் சங்குடன் ஒலித்தனர். தலையாலங்கானப் போரில் வளைகளும் வயிர்களும் இசைத்தன.[165] வெற்றி தோன்ற வயிரும் சங்கும் முழங்கின வென முல்லைப்பாட்டிலிருந்தறியலாம்.[166] போர்க்களத்தில், ஒளிபொருந்திய வயிரும் வலம்புரிச் சங்கும் ஒலிக்கும்.[167] வளைந்த வாயையுடைய அன்றிற் பறவையின் ஓசை ஊதுகின்ற வயிரின் ஓசையைப் போன்றது.[168] நீண்ட கால்களையுடைய நாரை வயிரின் ஓசைபோல ஒலிக்கும்.[169] காட்டிலுள்ள மயிலின் பெடை ஊதுகொம்பென ஒலிக்கும்.[170]

### பாண்டில்

கஞ்சதாளம். இக்கருவி சங்க நூல்களில் மிகச் சிலவிடங்களிலேயே கூறப்படும். கரைய உருக்கிய விளங்கின தகடாகத் தட்டின பாண்டிலைப்பற்றிப் பெருங்கௌசிகனுர் பாடுவர்.[171]

---

165. வளைநரல வயிரார்ப்ப. மதுரை. 185.
166. வயிரும் வளையு மார்ப்ப. முல்லை. 92.
167. வயங்குகதிர் வயிரொடு வலம்புரி யார்ப்ப.
பதிற். 67 : 6.
168. ஏங்குவயி ரிசைய கொடுவா யன்றி
லோங்கிரும் பெண்ணை யகமட லகவ.
குறிஞ்சி. 219—220.
169. தடந்தாள் நாரை
செறிமடை வயிரிற் பிளிற்றி.
அகநா. 40 : 14—15.
170. கான மஞ்ஞைக் கமஞ்சூன் மாப்பெடை
அயிரியாற் றடைகரை வயிரின் நரலும்.
அகநா. 177 : 10—11.
171. நுண்ணுருக் குற்ற விளங்கடர்ப் பாண்டில்.
மலைபடு. 4.

## சங்கு

இதுவும் அக்காலத்தில் இசைக் கருவியாக விளங்கியது. ஊதுகொம்பைப் பற்றிக் கூறிய பகுதியில் இதைப்பற்றிய செய்திகளைக் கண்டுகொள்க.

## பண்

நான்கு அடிப்படையான பண்கள் சங்க நூல்களில் கூறப்படுகின்றன. மருதம், செவ்வழி, பாலை, குறிஞ்சிஎன்பன அவை.

### மருதம் :

இது மருத நிலத்திற்குரிய காலைப்பண். யாழோர் தாளவறுதியை இனிதாக உட்கொண்டு நரம்பை இனிதாகத் தெறித்து மருதத்தை வாசிக்க, இருள் மாய்ந்து கதிர்விரியும் விடியற்காலம் தோன்றும்.[172] நன்னனுக்குரிய மருத நாட்டில் எருதையோட்டும் உழவரோதையுடன்கூட யாழிலே மருதத்தை வாசித்துப் பாணர் தங்கிப்போவர்.[173] மருதத்தை வாசித்த கரிய தண்டினையுடைய சிறிய யாழின் நரம்பினோசைக்கு மேற் போகாது அவ்வோசையுடனே கூடி ஓரோசையாய் இனிதாகிய பாட்டினைப் பாடுவர் விறலியர்.[174]

---

172. சீரினிது கொண்டு நரம்பினி தியக்கி
யாழோர் மருதம் பண்ண............
.........................................
புலர்ந்துவிரி விடிய லெய்த. மதுரை. 657—664.

173. கடும்புட னருந்தி
யெருதெறி களமா ரோதையொடு நல்யாழ்
மருதம் பண்ணி யசையினிர் கழிமின்.
மலைபடு. 468—470.

174. மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ்
நரம்புமீ திறவா துடன்புணர்ந் தொன்றிக்
கடவ தறிந்த வின்குரல் விறலியர்.
மலைபடு. 534—536.

**செவ்வழி:**

இது நெய்தல் முல்லை நிலங்களுக்குரிய மாலை நேரப் பண். மகளிர், முழவு ஆகுளி என்னும் கருவிகளின் ஓசைக்கு ஒத்து ஒலிக்கும் யாழிலே செவ்வழிப் பண்ணை எழுப்புவர். பின்னர் ஒள்ளிய சுடர் விளக்கு முற்பட, பூசைக்கு வேண்டும் பொருளுடன் கோயிலுக்குச் செல்வர். இராக் காலத்தின் முற்பகுதி இவ்வாறு கழியும்.[175] வையாவிக்கோப் பெரும் பேகன் என்னும் குறுநில மன்னனும் அவனுடைய மனைவியும் பிரிந்திருந்த காலத்துப் புலவர் அவரை மீண்டும் ஒன்று சேர்க்க முயன்றனர். அப்பொழுது பரணர் அம்மன்னனை விளித்துக் கூறுவர் : “ எங்கள் உரைகளைக்கேட்டு நீ வாளா விருப்பது மிகவும் கொடூரமானது. கதிரவன் மறைய நாம் சீறியாழை எடுத்து மழை தவறாத உன்னுடைய முல்லை நிலங்களைப் பாடினோம்.”[176] இதிலிருந்து செவ்வழி இரக்க உணர்ச்சியை எழுப்பும் ஒரு பண்ணென அறியலாம். பிரிந்தார்க்குத் துன்பத்தினைத் தரும் யாழின் கண்ணே செவ் வழிப் பண்ணைப் பாட, அரிய உயிர்களை வருத்தும் அவ்வோசையை, மாரிக்காலத்து மாலைப்பொழுதில் தமியளா யிருக்கும் தலைவி கேட்டு உள்ளம் சோர்வாள்.[177]

---

175. திவவுமெய்ந் நிறுத்துச் செவ்வழி பண்ணிக்
குரல்புணர் நல்யாழ் முழவோ டொன்றி
நுண்ணீ ராகுளி யிரட்டப் பலவுட
னொண்சுடர் விளக்க முந்துற மடையொடு
.................................................
முந்தை யாமஞ் சென்ற பின்றை.
மதுரை. 604—620.

176. அருளா யாகலோ கொடிதே யிருள்வரச்
சீறியாழ் செவ்வழி பண்ணி யாழநின்
காரெதிர் கானம் பாடினே மாக.
புறநா. 144 : 1—3.

177. பையுள் நல்யாழ் செவ்வழி வகுப்ப
ஆருயி ரணங்குந் தெள்ளிசை
மாரி மாலையுந் தமியள் கேட்டே.
அகநா. 214 : 13—15.

**பாலை :**

இது பாலை நிலத்திற்குரிய பண். நண் பகலில் இப் பண்ணினை எழுப்புவர். பாணனது கையிலுள்ள பேரியாழைப் பாலைப் பண்ணாக அமைத்து 'மிடற்றுக்குரலோடு ஒன்று பட்ட இனிய இசையிலே தழிஞ்சி என்னும் துறைப்பொருள் அமைந்த பாடல்களைப் பாடுவர்.[178] இனிய நரம்புக் கட்டை யுடைய பாலை யாழை வாசித்தலில் வல்லோன் பண்கள் எல்லா வற்றிலும் துன்பத்தைச் செய்யும் உறுப்பையுடைய பாலைப் பண்களை மாறி மாறி வாசிப்பான். இத்தகைய பாலைப்பண் வெவ்வேறான சுவையையுடைய மதுவிற்கு உவமையாகும்.[179] வழியை அலைக்கும் கள்வர் தம் கையிலுள்ள படைக்கலங்களைக் கைவிடும்படி செய்து மறத்தினை அவர்களிடத்து நின்று பெயர்க்கும் தன்மையது பாலைப்பண்ணைக்கொண்ட யாழ்.[180] இப்பண் குழலிலும் எழுப்பப்படும்.[181]

**குறிஞ்சி:**

நடுயாமத்தில் இசைக்கப்படும் இப்பண் குறிஞ்சி நிலத் திற்குரியது. அதிசயம் பொருந்திய இனிய யாழினையுடைய விறலியர் நறிய கரிய பக்கமலையிலே குறிஞ்சிப் பண்ணைப்

---

*178.* பாணர் கையது பணிதொடை நரம்பின்
விரல்கவர் பேரியாழ் பாலை பண்ணிக்
குரல்புண ரின்னிசைத் தழிஞ்சி பாடி.
பதிற். 57 : 7—9.

*179.* தீந்தொடை நரம்பின் பாலை வல்லோன்
பையு ளுறுப்பிற் பண்ணுப் பெயர்த்தாங்குச்
சேறுசெய் மாரியி னளிக்குநின்
சாறுபடு திருவி னனைமகி ழானே.
பதிற். 65 : 14—17.

*180.* இவ்வியல் 79-ம் அடிக்குறிப்புரையைப் பார்க்க.

*181.* இவ்வியல் 163-ம் அடிக்குறிப்புரையைப் பார்க்க.

பாடுவர்.[182] வில் யாழில் குறிஞ்சிப் பண்ணை இசைப்பரெனப் பெரும்பாணாற்றுப்படை கூறும்.[183] பெரிய மலைப்பக்கத்தே கொடிச்சியர் குறிஞ்சிப்பண்ணைப் பாடுவர் என அகநானூற்றிலிருந்து அறியலாம்.[184]

மேலே குறித்த நான்கு பண்களைத் தவிர வேறு கிளைப் பண்களும் சங்க நூல்களிற் கூறப்படும். அவற்றுள் நைவளம் காமரம் ஆம்பல் என்பன மூன்று. நைவளம் பாலையின் கிளையாக அமைந்த ஒரு பண். வண்டின் ஓசை, பாலை யாழில் வல்லோன் எழுப்பும் நைவளப்பண்ணுக்கு உவமையாகும்.[185] நைவளம் என்னும் பண் முற்றுப்பெற்ற இனிய பாலை யாழைப் பாணன் வாசிப்பான்.[186] நைவளத்தை நட்டபாடையென்னும் பண் என்று நச்சினார்க்கினியர் உரை எழுதுவர்.[187] காமரம் மருத நிலத்திற்குரிய ஒரு பண். காம விருப்

---

182. இறும்பூது கஞலிய வின்குரல் விறலியர்
நறுங்கா ரடுக்கத்துக் குறிஞ்சி பாடி.
மலைபடு. 358—359.

183. வில்யா ழிசைக்கும் விரலெறி குறிஞ்சி.
பெரும்பாண். 182.

184. கொடிச்சி
பெருவரை மருங்கில் குறிஞ்சி பாட.
அகநா. 102 : 5—6.

185. நைவளம் பழுநிய பாலை வல்லோன்
கைவர் நரம்பி னிம்மென விமிரு
மாதர் வண்டொடு சுரும்புநயந் திறுத்த.
குறிஞ்சி. 146—148.

186. நைவளம் பழுநிய நயந்தெரி பாலை
கைவல் பாண்மகன் கடனறிந் தியக்க.
சிறுபாண். 36—37.

187. சிறுபாண். 36, நச்சினார்க்கினியர் உரை.

புடைய தும்பி துயிலெழுந்து மருத நிலஞ் சேர்ந்த குடியிருப்பிலே காமரம் என்னும் பண்ணைப் பாடும்.[188] இப்பண்ணினைச் சீகாமரம் என நச்சினார்க்கினியர் குறிப்பிடுவர்.[189] ஆம்பற் பண் குழலிலே ஊதப்படுவது. கோவலர் இனிய ஆம்பற் பண்ணைக் குழலிலே ஊதுவர்.[190] இத்தகைய பண்கள் பல அக்காலத்தில் இருந்தன.

## (6) இலக்கியம்

சங்கங்களைப் பற்றியும் புலவர்களைப் பற்றியும் இந்நூலிற் கூறியவை அக்கால இலக்கியக்கலை வளர்ச்சிக்குச் சான்றாக உள்ளன. இப்பொழுது நமக்குக் கிடைத்துள்ள நூல்களில் சங்க நூல்களெனக் கொள்ளத்தக்கவை பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம், புறநானூறு, அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை, பதிற்றுப் பத்து, ஐங்குறுநூறு ஆகிய பதினைந்து நூல்களே என மேலே கூறினோம். இந்நூல்களை நோக்குமிடத்துச் சங்க காலத் தமிழ் இலக்கியம் வடமொழி இலக்கியத்திலிருந்து முற்றிலும் வேறுபட்டதென்பது புலனாகும்.

தமிழ் மக்களின் வாழ்க்கைக் குறிக்கோளும் அவர் வாழ்வு நடத்தும் நெறிகளும் சங்க இலக்கியத்தின் பொருளாக அமைந்தன. தமிழரின் காட்சிக்கு அகப்பட்டு நின்ற இயற்கை, முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் என

---

188. ஏம வின்றுணை தழீஇ யிற குளர்ந்து
காமரு தும்பி காமரஞ் செப்புந்
தண்பணை தழீஇய தளரா விருக்கை.
சிறுபாண். 76—78.

189. சிறுபாண். 6—78, நச்சினார்க்கினியர் உரை.

190. இவ்வியல் 161-ம் 162-ம் அடிக்குறிப்புரைகளைப் பார்க்க.

ஐந்து வகையாகப் பிரித்துக் காட்டப்பட்டது. இப்பகுதிகளில் விலங்குகளும், பறவைகளும், மக்களும், பிறவும் தம்மிற் கூடியிருந்து வாழ்வு நடத்தும் அழகு கவிஞர் உள்ளத்தினைக் கவர்ந்தது. இவ்வுயிர்களுள், மக்கள் ஆணும் பெண்ணுமாய்க் கூடி இன்புற்று வாழும் ஒழுக்கம் அக ஒழுக்கம் எனப்பட்டது. இன்பம் பெறுவதற்கு வாயிலாக நின்ற பொருள், தொழில், கல்வி, போர் முதலியனவற்றை அடிப்படையாகக் கொண்ட ஒழுக்கம் புற ஒழுக்கம் எனப்பட்டது. இவற்றைச் சுருங்கிய வாய்பாட்டால் அகம் புறம் எனக் கூறினர். பல வகையிலும் ஒத்த ஒருவனும் ஒருத்தியும் கூடும் காலத்துப் பிறப்பதும் அக உணர்வினுல் மட்டும் அறியப்படுவதுமாகிய இன்பத்தை அகம் என்றனர்; ஏனையவற்றைப் புறமென்றனர்.

அகமும் புறமுமே சங்க இலக்கியத்தின் பொருளாக அமைந்தன. 'பொருள்' தமிழர் இலக்கியத்திற்கே சிறப்பாக உரியது. பழைய வடமொழி இலக்கியங்கள் சமயப்பண்பு வாய்ந்தவை. அதுவும் வேத இலக்கியங்கள் முற்றிலும் சமயப் பண்புள்ளவை. இதிகாசங்களும் சமயச் சார்பானவையே. வடமொழிப் புராணங்கள் கடவுளர் தேவர் முதலியோரின் வரலாற்றைக் கூறுவனவாக அமைந்தன. எனவே பழைய வடமொழி இலக்கியம் சமயம், தத்துவம், பௌராணிகம் ஆகிய மூன்றையும் அடிப்படையாகக் கொண்டு எழுந்தவை எனலாம். ஆனுற் பழந்தமிழ் இலக்கியம் காதலையும் வீரத்தையும் அடிப்படையாகக் கொண்டது. சங்க நூல்களில் இடையிடையே சமயச் செய்திகளும் ஆரியக் கதைகளும் வருவதுண்டு. ஆனுல் அவை கவிதையின் பொருளுக்கு அடிப்படையாக வேண்டப்படுவனவல்ல. தமிழ் நாட்டில் ஏழாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் ஏற்பட்ட சைவ வைணவ சமய எழுச்சியுடனேயே தமிழ் இலக்கியமும் சமயச் சார்பு பெற்றது.

பழந்தமிழ் இலக்கியத்திற்கும் சங்க இலக்கியத்திற்கும் இன்னெரு வேற்றுமை உண்டு. சங்க இலக்கியம் பண்டைத்

தமிழ் மக்களிடையே அவர்தம் வாழ்க்கையில் இயற்கையாக நிகழ்ந்த ஒழுக்கங்களைப் பாராட்டிச் சென்றன. பொது மக்கள் வாழ்க்கைக்கும் சங்க இலக்கியத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. அரசரின் வீரம் சிறிது உயர்வு நவிற்சி யுடன் பேசப்பட்டிருப்பினும் மக்களின் சமுதாய வாழ்வின் எல்லாக் கூறுகளும் தெளிவாகவும் உண்மையாகவும் விளக்கப் பட்டுள்ளன. என்றும் எங்கும் நிகழாதனவாகிய செயல் களைச் சங்க நூல்கள் மக்கள் தலையில் ஏற்றிச் சொல்லவில்லை. கவிஞர் தாம் உண்மையில் அனுபவித்தவற்றையே பொறித் தனர். காதாற் கேட்டதையும் மரபாக வந்ததையும் அவர்கள் எழுதி வைக்கவில்லை. சங்ககாலப் புலவர் தெளிந்த அறிவிற்கு அப்பாற்பட்ட மயக்கப் பொருள்களில் தம் உள்ளத்தைச் செல்லவிட்டு மக்களைத் திகைக்க வைக்கவில்லை. மக்கள் வாழ்வைப் பண்படுத்துவன எவையோ அவற்றையே பாக்களில் அமைத்தனர்.

மேலே குறித்த பண்பு பழைய வடமொழி இலக்கியத் திலும் பிற்காலத் தமிழ் இலக்கியத்திலும் காணப்படாத தொன்று. அவற்றின் வாழ்க்கைக்கு ஏற்காத—வாழ்க்கையிற் காணமுடியாத—பொருள்களையே காணலாம். சுருங்கக் கூறின் சங்க காலத் தமிழ் நூல்கள் பிராமணருக்காக எழுதப் பட்ட வெறுஞ் சாத்திர நூல்களல்ல; மக்களின் வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டு பல்வேறு வகைப் பட்ட உணர்ச்சிகளைப் புலப்படுத்தும் கவிதை நூல்கள் அவை.

தமிழ் மக்களின் வாழ்வு இயற்கையோடு இயைபுடைய தாக இருந்தமையால், மக்கள் ஒழுக்கத்தைக் கூறுமுகத் தால் இயற்கைக் காட்சிகளை அழகுற வரைந்தனர் புலவர், பொருளைத் தெளிவுறுத்துவதற்கு உவமையே சிறந்த கருவியாகையால், சங்க காலப் புலவர் உவமை அணியையே கையாண்டனர். பிற்காலத்துப் புலவர் வடமொழியிலுள்ள விபாவனை, விலக்கு முதலிய அணிகளில் தமது ஆற்றலைக் கழித்தனர். ஆனால் சங்கத்துச் சான்றோர் வெறும் அலங்

காரத்தில் ஈடுபடவில்லை. அவர்கள் கையாண்ட உவமைகள் பொருளோடு ஒத்த தன்மையவாய், நெருக்கமுடையனவாய் நின்று உணர்வுக்கு இன்பம் செய்வன. மேலும், அகப் பொருளைப்பற்றிப் பாடும்போது புலவர் கருத்தினை உள்ளுறைப் பொருளாக அமைத்துக் குறிப்பினாற் புலப் படுத்தினர். வெளிப்படையான பொருளிலும் குறிப்புப் பொருளே இன்பம் செய்வனவாகையால், தமிழ்ச் சங்கத்துச் சான்றோர் பாடல்கள் பெரும்பாலும் குறிப்புப் பொருளை உடையனவாய்த் திகழ்ந்தன.

மேலும், சங்க நூல்களிற் பிறமொழிச் சொற்கள் மிகக் குறைவு. நூற்றுக்கு இரண்டு மூன்று சங்கத பாகதச் சொற்கள் காண்பதே அருமை. இது சங்க இலக்கியத்திற் குரிய சிறந்த ஒரு பண்பு. ஆரியர் ஆதிக்கம் அதிகம் பரவா மையால் ஆரியச் சொற்கள் சிறு பகுதியினவாகவே அக் காலத்தில் தமிழிற் புகுந்தன. மேலும், ஆரியம் முதலிய பிற மொழிச் சொற்கள் பல எழுத்துக்களாலானவை. சங்க கால இலக்கியச் சொற்கள் மூன்று அல்லது நான்கு எழுத்துக்களா லேயே பெரும்பாலும் ஆக்கப்பட்டன. அத்துடன் சொற்கள் பல ஒன்றோடொன்று தொடர்ந்து செல்லும்பொழுது உருபு விரியாது தொக்கு நின்றன. சங்க மருவிய காலம் முதலிய பிற்காலப் பகுதிகளில் நீண்ட சொற்றொடர்களால் விரித்துக் கூறியவற்றை அவர்கள் தொகை செய்தும் அடை சேர்த்தும் சுருங்கிய மொழியில் அமைத்தனர். சொற் சுருக்கத்திற்கும் பொருட் செறிவுக்கும் தொகைகளே பயன்பட்டன. உதாரணமாக 188 அடிகள் கொண்ட நெடுநல்வாடையில் 46-க்கு மேற்பட்ட வினைத்தொகைகள் காணப்படுகின்றன.

தொகைகளைச் சங்ககாலப் புலவர் பெரிதும் கையாண் டமையாலேயே பாக்களிற் கருத்துக்கள் முறிவின்றி ஒன்றன் பின் ஒன்றாகச் சென்றுகொண்டிருந்தன. இதனால், பலருக்கு உரையின் உதவியில்லாது சங்க நூல்களை விளங்கிக்கொள்வது கடினமாக இருக்கக்கூடும். இக் கவிதைகளிற் பொருள் முடிவு காண்பது மிகக் கடினம். அடிப்படையான கருத்தை

உணர்ந்த பின்னரே பாட்டுக்களைத் தெளிவாக உணர முடியும். கருத்துக்கள் எச்சங்களினால் தொடுக்கப்பட்டிருப்பதும் இதற்கு ஒரு காரணமாகும். மேலும் சங்க இலக்கியத்திலுள்ள சில சொற்களும் சொற்றொடர்களும் இக் காலத்தில் வழக்கொழிந்து விட்டன; சில இலக்கண அமைதிகள் விளங்குவதற்கு வில்லங்கமானவை. இக்காலப் பேச்சு வழக்கிலுள்ள சில சொற்களையும் சொல்லுருவங்களையும் சங்க நூற்களிற் காணலாம். பிற்காலத்திலே தமிழ் இலக்கியத்தில் இடம் பெற்ற வினையெச்ச வாய்பாடுகள், பிறவினை, செயப்பாட்டுவினை, துணைவினை, நிகழ்காலம், பன்மை உணர்த்தும் கள் விகுதி முதலியவற்றைச் சங்க நூல்களிற் காண்பதரிது.

சங்க நூல்களிற் கையாளப்பட்ட யாப்பு வகைகள் தமிழுக்கே சிறப்பாக உரியன. ஆசிரியமும் வஞ்சியுமே அக் காலத்தில் வழக்கிலிருந்தன. சங்க நூல்களிற் சிறுபாணாற்றுப் படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப் பாட்டு, நெடுநல் வாடை, குறிஞ்சிப் பாட்டு, மலைபடுகடாம், அகநானூறு, புறநானூறு, பதிற்றுப்பத்து, நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறு நூறு ஆகிய பன்னிரண்டும் ஆசிரியத்தால் அமைந்தவை. பொருநராற்றுப்படை, மதுரைக்காஞ்சி, பட்டினப்பாலை ஆகிய மூன்று நூல்களிலும் ஆசிரியமும் வஞ்சியும் கலந்து வருகின்றன. பட்டினப்பாலையில் வஞ்சியடிகள் மிகுதியாக வருவதினால் அது வஞ்சி நெடும்பாட்டெனவும் வழங்கும். சங்க நூல்கள் ஆசிரியத்தால் அமைந்திருப்பதை நோக்குமிடத்து, பெரும் புலவரால்—ஆசிரியரால்—இப்பா கையாளப்பட்டமையால் இஃது ஆசிரியம் என்ற பெயர் பெற்றது எனக் கூறலாம். அகவல் ஓசை உடைமையால் அகவல் எனவும் இப்பா வழங்கும்.

ஆசிரியத்திற்கு ஈற்றயலடி முச்சீரடியாக இருக்கவேண்டுமெனத் தொல்காப்பியர் கூறுவர்.[191] பிற்காலத்து யாப்பு

---

191. ஈற்றயல் அடியே ஆசிரிய மருங்கிற்
றோற்ற முச்சீர்த் தாகு மென்ப.
தொல். பொருள். 380.

இலக்கண நூலாசிரியர் இவ்வாறு வரும் பாவை நேரிசை ஆசிரியப்பா என்பர். பத்துப்பாட்டிலுள்ள எல்லாப் பாக்களிலும் ஈற்றயலடி முச்சீரினால் ஆயதே. நற்றிணைப் பாக்களும் முச்சீராலாய ஈற்றயலடியைக் கொண்டன. மற்றைய எட்டுத் தொகை நூல்களிலும் பெரும்பாலான பாக்கள் இவ்வாறு வருவனவே. சில பாக்களில் ஈற்றயலடி நாற்சீரால் அமைந்திருக்கும். இத்தகைய பாக்கள் சங்க நூல்களில் ஏறக்குறைய நூற்றுக்கு ஆறு வீதமே உள்ளன. சங்க காலத்திற்குப்பின் சங்க மருவிய காலத்தில் இயற்றப்பட்ட பாட்டுக்களில் பெரும்பாலானவை நாற்சீரைக்கொண்ட ஈற்றயலடியால் ஆனவை. சிலப்பதிகாரத்திலுள்ள காதைகளிற் பல நாற்சீராலாய ஈற்றயலடியைக் கொண்டவை. மணிமேகலையிலும் பெருங்கதையிலும் உள்ள எல்லாக் காதைகளும் இவ்வாறமைந்தவையே. இத்தகைய ஆசிரியத்தைப் பிற்கால இலக்கண நூலாசிரியர் நிலைமண்டில ஆசிரியப்பா என்பர்.

பிற்கால யாப்பிலக்கண ஆசிரியர் ஆசிரியத்தின் இறுதியிற் சில குறிப்பிட்ட எழுத்துக்கள்தான் வரவேண்டுமென விதி வகுத்தனர். தொல்காப்பியத்தில் இத்தகைய விதியொன்றும் இல்லை. யாப்பருங்கல ஆசிரியர் ஏ, ஓ ஈ, ஆய், என், ஐ என்பவற்றுள் யாதேனும் ஒன்றுடன் முடியவேண்டும் என்பர்.[192] பத்துப்பாட்டிலுள்ள எல்லாக் கவிதைகளும் ஏ என்ற எழுத்தையே இறுதியில் உடையன. சங்க காலத்திற்குரிய ஆறு எட்டுத்தொகை நூல்களுள் நற்றிணை குறுந்தொகை பதிற்றுப்பத்து ஆகிய நூல்களிலுள்ள எல்லாப் பாக்களும் ஏ எழுத்தையே இறுதியிலுடையன. அகநானூற்றிலும், புறநானூற்றிலும் ஓ இறுதியையுடைய ஒவ்வொரு பாட்டைத் தவிர மற்றைய யாவும் ஏ இறுதியையே கொண்டவை. ஐங்குறுநூற்றிலுள்ள பாக்களில் தொண்ணூற்று நான்கு வீதம் ஏ இறுதியை உடையன; நான்கு வீதம் ஆய் இறுதியை

---

192. அகவல் இசையன அகவல் மற்றவை
ஏ ஓ ஈ ஆய் என் ஐ என் றிறுமே.

யாப்பருங்கலம். 69.

உடையன. எனவே சங்க காலத்தில் ஆசிரியப்பா ஏ என்னும் எழுத்துடன் முடிவதே மரபாக இருந்திருக்கவேண்டும். காலப்போக்கில் இவ்வெழுத்திற்குப் பதிலாக என் ஆசிரியத்தின் இறுதியில் வரத் தொடங்கியது. சிலப்பதிகாரத் திலுள்ள காதைகளிற் பத்தொன்பது காதைகள் என் முடிபை உடையன. மணிமேகலையிலும் பெருங்கதையிலும் என் முடிபே வருகின்றது.

மேலும் சங்க காலப் புலவர் எதுகை மோனைகளாற் கட்டுப்படவில்லை. எதுகை மோனை இல்லாத பல அடிகள் சங்க நூல்களில் உண்டு. வனப்புக்காகவும், ஓசை வேற்றுமைக் காகவுமே எதுகை மோனைகளை வழங்கினர். பிற்கால ஆசிரியர்கள் எதுகைகளை ஒழுங்காக அமைத்தனர். அடிகளாகப் பாக்களைப் பிரிப்பதற்குப் பிற்காலத்தில் எதுகை உதவியது. சிலப்பதிகார மங்கல வாழ்த்துக் காதையில் எல்லா அடிகளிலும் எதுகை அமைந்திருப்பதைக் காணலாம். இத்தகைய வெறும் அலங்காரங்களைச் சங்க காலப் புலவர் நாடவில்லை. இதனாலேயே சங்க இலக்கியம் தமிழ் மொழியிற் சிறந்த இடம் வகிக்கின்றது; தமிழ் மொழி உலக மொழிகளுள் தலைசிறந்த ஒரு மொழியாக விளங்குகின்றது; தமிழரும் தொன்மை வாய்ந்த அரிய உயிருள்ள இலக்கியச் செல்வம் படைத்தவராகத் திகழ்கின்றனர்.

முற்றும்

———

# இந்நூலாக்கத்திற்கு உதவிய நூல்கள்

---

அகநானூறு : கம்பர் விலாஸ் புத்தகசாலை, மயிலாப்பூர், *1920*.

அகநானூறு : *(1)* களிற்றியானை நிரை. ந. மு. வேங்கடசாமி நாட்டார் உரை. வெ. பெரி. பழ. மு. காசி விசுவநாதன் செட்டியார் வெளியீடு, சென்னை, *1943*.

*(2)* மணிமிடை பவளம். ந. மு. வேங்கடசாமி நாட்டார் உரை. வெ. பெரி. பழ. மு. காசி விசுவநாதன் செட்டியார் வெளியீடு, சென்னை, *1944*.

*(3)* நித்திலக் கோவை. ந. மு. வேங்கடசாமி நாட்டார் உரை. வெ. பெரி. பழ. மு. காசி விசுவநாதன் செட்டியார் வெளியீடு, சென்னை, *1944*.

இலக்கிய தீபம் : எஸ். வையாபுரிப் பிள்ளை, முதற் பதிப்பு, *1952*.

இறையனூர் அகப்பொருள் உரை :–கோவிந்தராஜ முதலியார் பதிப்பு, சென்னை, *1939*.

ஏலாதி : தி. சு. பாலசுந்தரம் பிள்ளை உரை, சென்னை, *1939*.

ஐங்குறுநூறு : உ. வே. சாமிநாதையர் குறிப்புக்களுடன். *S*. கலியாண சுந்தரையர் பதிப்பு, மூன்ரும் பதிப்பு, சென்னை, *1944*.

ஐங்குறுநூறு : தி. சதாசிவ ஐயர் பதிப்பு, யாழ்ப்பாணம், *1943*.

கலித்தொகை : நச்சினூர்க்கினியர் உரை. இரண்டு பாகம். இ. வை. அனந்தராமையன் பதிப்பு, சென்னை, *1925*.

குறுந்தொகை : உ. வே. சாமிநாதையர் பதிப்பு, சென்னை, 1937.

சிலப்பதிகாரம் : அடியார்க்குநல்லார் உரை. உ. வே. சாமிநாதையர் பதிப்பு, மூன்றாம் பதிப்பு, சென்னை, 1927.

செந்தமிழ் : தொகுதி 40. 1942—1943.

தமிழ்ச் சுடர்மணிகள் : எஸ். வையாபுரிப் பிள்ளை, இரண்டாவது புதுக்கிய பதிப்பு, 1952.

தொல்காப்பியம் : (1) எழுத்ததிகாரம், நச்சினார்க்கினியர் உரை. சைவ சித்தாந்தக்கழகப் பதிப்பு, 1927.

(2) பொருளதிகாரம், முதலாம் பாகம், நச்சினார்க்கினியர் உரை. கனகசபாபதிப் பிள்ளை பதிப்பு.

(3) பொருளதிகாரம், இரண்டாம் பாகம், பேராசிரியர் உரை. சி. கணேசையர் பதிப்பு, சுன்னாகம், 1943.

நற்றிணை : அ. நாராயணசாமி உரை. சைவ சித்தாந்தக் கழக வெளியீடு, சென்னை, 1952.

பத்துப்பாட்டு : நச்சினார்க்கினியர் உரை. உ. வே. சாமிநாதையர் பதிப்பு, மூன்றாம் பதிப்பு, சென்னை, 1931.

பத்துப்பாட்டு : மூலம். உ. வே. சாமிநாதையர் பதிப்பு, முதற் பதிப்பு, சென்னை, 1931.

பதிற்றுப்பத்து : பழைய உரையும் சாமிநாதையர் குறிப்புரையும். S. கலியாணசுந்தரையர் பதிப்பு, ஐந்தாம் பதிப்பு, 1949.

பரிபாடல் : பரிமேலழகர் உரை. உ. வே. சாமிநாதையர் பதிப்பு, இரண்டாம் பதிப்பு, சென்னை, 1935.

புறநானூறு : முதலாம் பாகம். ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை உரை, சென்னை, Reprint, 1952.

புறநானூறு: இரண்டாம் பாகம். ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை உரை, சென்னை, 1951.

புறநானூறு : உ. வே. சாமிநாதையர் பதிப்பு, மூன்றாம் பதிப்பு, சென்னை, 1935.

பெருங்கதை : உ. வே. சாமிநாதையர் பதிப்பு, சென்னை, 1924.

பேரகத்தியத் திரட்டு: *S.* பவானந்தம் பிள்ளை வெளியீடு, சென்னை, 1924.

மணிமேகலை : உ. வே. சாமிநாதையர் பதிப்பு, மூன்றாம் பதிப்பு, சென்னை, 1931.

யாப்பருங்கலக் காரிகை: குணசாகரர் உரை. பூவை கலியாண சுந்தர முதலியார் பதிப்பு, சென்னை, 1905.

*Ancient India* : *A Bullettin of the Archaeological Survey of India, Calcutta.*

*Arthasastra* : *Ed. Dr. R. Shama Sastri, Mysore,* 19 4.

*Bulletin of the School of Oriental and African Studies, London.*

*Caldwell Robert* : *A Comparative Grammar of the Dravidian Languages. Third Edition, London,* 1913.

*Corpus Inscriptionum Indicarum Vol. I. New Edition by Hultzsch, Oxford,* 1925.

*Dubois Claudie Marcel* : *Les Instruments de Musique de l' Inde. Ancienne, Paris,* 1941.

*Elworthy, E. T* : *The Evil Eye, London,* 1895.

*Epigraphia Indica, Calcutta.*

*Indian Antiquary, Bombay.*

*Institutes of Hindu Law or the Ordinace of Manu* : *Ed. by S. G. Grady.*

*Kanakasabai Pillai V* : *The Tamils Eighteen Hundered Years Ago, Madras,* 1904.

*Madras Epigraphical Reports.*

*Madras Tamil Lexicon* : *Madras,* 1926-1936.

*Max Muller, F* : *The Sacred Books of the East, Oxford.*

*Mc. Crindle, J. W* : *Ancient India as described by Ptolemys London,* 1885.

*Nilakanta Sastri, K. A* : *(1) The Colas. Vols. I and II, Madra,* 1935.

*(2) The Pandyan Kingdom, Madras,* 1929.

*(3) Studies in Cola History and Administration, Madras,* 1932.

*Plinius Secundus (Caius)* : *Natural History, Translation by J. Bostock aud H. T. Riley—Six Vols. London,* 1855.

*Proceedings and Transactions of the First Oriental Conference, Poona, 1919.*

*Proceedings and Transactions of the Third Oriental Conference, Madras, 1924.*

*Purnalingam Pillai, M. S* : *Tamil Literature, Revised and Enlarged Edition, Tinnevely,* 1929.

*Ramachandra Dikshitar, V. R* : *Studies in Tamil Literature and History, Madras,* 1936.

*Ramaswami Aiyangar, M. S* : *Studies in South Indian Jainism, Madras,* 1922.

*Rapson, E. J* : *Cambridge History of India, Vol. I. Cambridge,* 1922.

*Sanskrit English Dictiokary* : *Sri Monier Monier Williams. New Edition, Oxford* 1899.

*Schoff, W. H* : *The Periplus of the Erythraen Sea, Longman Green & Co., New York, London, Bombay and Calcutta* 1912.

*Seshagiri Sastri:* *Essays on Tamil Literature, Madras,* 1897.

*Sivaraja Pillai, K. N:* *(1) The Chronology of the Early Tamils, Madras,* 1936.

*(2) Agastya in the Tamil Land.*

*South Indian Inscriptions.*

*Srinivasa Aiyangar, P.T:* *History of the Tamils, Madras,* 1927.

*Tacitus (Publius Cornelius):* *The Annals. English Translation by G. G. Ramsay, London,* 1904—1909.

*Thurston, E:* *Ethnographic Notes in South India, Madras.* 1905.

*University of Ceylon Review:* *Vol. VI. Ceylon,* 1948.

*Warmington, E. H:* *The Commercc between the Roman Empire and India, Cambridge,* 1928.

———

# அட்டவணை

வ

## A



## B



## C

———

